உ

சிவமயம்

# பட்டினத்துப்பிள்ளையார்

திருப்பாடற்றிரட்டும்

1358

# பத்திரகிரியார்

புலம்பலும்




―◇◇―

'நவசக்தி' பத்திரிகாசிரியர்

திரு. வி. கலியாணசுந்தரமுதலியார்

இயற்றிய

## விருத்தியுரையும்

---

அ. முத்துவடிவேல் முதலியாரால்

தமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றன.

சென்னை

---

ஐந்தாம் பதிப்பு

All Rights Reserved] 1940 [விலை ரூபா 2




# முகவுரை

*தெய்வச் செந்தமிழ்த் திருநாட்டில் தோன்றித் துறவறம் வளர்த்த பெரியாருட் சிறந்தவர் இருவர். ஒருவர்* **பட்டினத்துப் பிள்ளையார்;** *மற்றொருவர் அன்னார் சீடர்* **பத்திரகிரியார்.** *பட்டினத்தார் என்னும் பெயரைச் சிலர் பட்டணத்தார் என்று சொல்கிறார்; எழுதுகிறார். அது தவறு. இவ்விருபெரியார் துறவுநிலையை ஸ்ரீ தாயுமானசுவாமிகள் "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல் - ஆருந் துறக்கை யரிதரிது" என்றும், "ஒட்டுடன் பற்றின்றி யுலகைத் துறந்தசெல்வப் - பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ" என்றும் வித்தோதி யிருத்தல் காண்க. இத்துறவறத்தார் இருவரும் தமிழ்நாட்டில் பத்தாம் நூற்றாண்டில் வதிந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சிக்காரர் கூறுப.*

*இவ்விருவருள் பட்டினத்தடிகள் அருளிய பிரபந்தங்களுள்* **கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபது** *என்னும் இவ்வைந்தும் பதினொராந்திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன; ஏனைய பிரபந்தங்கள்* **பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு** *எனனும் பெயரால் வழங்கப்பட்டு வருகின்றன. மற்றப் பத்திரகிரியார் திருப்பாடல்கள* **மெய்ஞ்ஞானப் புலம்பல்** *எனவும்,* **பத்திரகிரியார் புலம்பல்** *எனவும் வழங்கப்பட்டு வருகின்றன. பத்திரகிரியாரே விநாயக வாழ்த்துள் "முத்தி தருஞான மொழியாம் புலம்பல் சொல" என்றோதியிருத்தல் காண்க.*

பட்டினத்தடிகள் அருளிச்செய்த பிரபந்தங்களுள் பதினோராந் திருமுறையில் அடங்கியுள்ள பாடல்களையும், திருப்பாடற்றிரட்டில் அடங்கியுள்ள பாடல்களையும் ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்கின், இரண்டையும் ஒருவர் பாடி யிருப்பரோ என்ற ஐயம் ஆராய்வோருக்கு நிகழ்ந்தே தீரும். அவ்வைய நிகழ்ச்சிகொண்டு இரண்டு பட்டினத்தார் வாழ்ந்திருக்கவேண்டுமென்று சிலர் கூறுகிறார். அன்னார் கூற்றை வலியுறுத்தப் போதிய சான்றுகள் இந்நாள்வரை கிடைக்கவில்லையாயினும், சொற்பொருள் நடைகளை உற்று நோக்குழி ஐய நிகழ்ச்சிக்கு வழி உண்டென்றே தோன்றும். அதைக் குறித்து ஈண்டு ஆராய நான் புகவில்லை.

இப்பட்டினத்தார் திருப்பாடற்றிரட்டுக்கும், பத்திரகிரியார் புலம்பலுக்கும் பொழிப்புரையும் விருத்தியுரையும் வரையுமாறு, இற்றைக்குச் சுமார் பத்தாண்டுகளுக்கு முன்னர் அமரம்பேடு-அரங்கசாமிமுதலியார் அவர்கள் குமாரர்-சென்னைப் பூமகள்விலாச அச்சுக்கூடத்தலைவர்-ஸ்ரீமான் முத்துவடிவேல் முதலியார் என்னைக் கேட்டனர். அவர் கேட்டவாறே விரைவாக உரை வரைந்தளித்தேன். அப்பொழுது மிக விரைவாக எழுதப்பட்ட உரையடங்கிய இந்நூல், பத்தாண்டு உறங்கி, இப்பொழுது முதன்முறை அச்சுவிமான மேற்று. இதற்குக்காரணம் ஐரோப்பாயுத்தத்தால் நேர்ந்த காகித விலையேற்றமென்று வெளியிட்டோரால் சொல்லப்பட்டது.

பூமகள்விலாச அச்சுக்கூடத்தார் பத்தாண்டு கழிந்து, அந்நாளில் நான் எழுதிய உரை கொணர்ந்து அதைத் திருத்திக் கொடுக்குமாறு எனக்குப் பெரிதும் ஓய்வில்லா இந்நாளில் கேட்டனர். அந்நாளெழுத்தை நான் கண்டபோது எனக்கே மகிழ்ச்சி யுண்டாயிற்று. 'பத்தாண்டில் கருத்தில் எவ்வளவு மாறுதல் ஏற்பட்டது' என்று மனிதர் மனோநிலையின் பான்மை நினைந்து நினைந்து மனிதன் அறிவைச் சிந்தியாது அறியாமையைச் சிந்தித்தேன்.

இந்நாளில் இத்தகை உரை வரையும் வேலையில் தலைப்படப் போதிய ஓய்வுமில்லை; பெரிதும் தலைப்படவுமாட்டேன்; ஒருவேளை தலைப்படினும் கருத்துக்கள் பல மாறுபட உரை வரைவேன். எனது பழைய எழுத்தில் பெருமாறுதல் ஒன்றுஞ் செய்தேனில்லை. பத்திரகிரியார் புலம்பலில் உரை வரையாது முன்னே விடப்பட்டிருந்த சில பாகங்களுக்குமட்டும் பழைய சம்பிரதாயத்தை யொட்டி உரை வரைந்து கொடுத்தேன்.

பொழிப்புரை பெரிதும் மூலத்தைத் தழுவியே எழுதப்பட்டது. விருத்தி பாடல்களிலுள்ள பல ஐயங்களைப் போக்கும் குறிப்போடு எழுதப்பட்டது. இந்நூலை வெளியிடுவோர் கோலிய வரம்புக்குள் நின்று உரை எழுதப்பட்டது என்பதைத் தமிழ்மக்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். உரையில் தெரிந்தும் தெரியாமலுங் குறைகள் நிகழ்ந்திருக்கலாம். அவைகளை மன்னிக்குமாறு தமிழ்ப் புலவர்களை வேண்டுகிறேன்.

இத்தகை நூல்களையும் உரைகளையும் அச்சிட்டு வெளியிடும் அன்பர் பலர் வியாபாரத்திலும் பொருளீட்டுவதிலும் கருத்தைப் பெரிதுஞ் செலுத்துகின்றாரன்றி, மொழிமீதும் எழுத்துப் பிழைகள் மீதுங் கருத்தைச் செலுத்துகின்றாரில்லை. காலஞ்சென்ற வித்துவமணிகள் எழுதிய பல உரைகள் சில குஜிலிக்கடைக்காரர்களிடத்தில் அகப்பட்டுத் தவிக்கின்றன. அதை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறுங் கண்ணீர் பெருகுகிறது. தமிழ்வளமும் தமிழ்ப்புலமையும் அருகிவரும் இந்நாளில் எழுத்துப் பிழையின்றியாதல் நூல்களை அச்சிடுவோர்க்கு மனமார்ந்த நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்.

மேல்நாடுகளில் வெளியிடப்படும் நூல்களில் அச்சுப் பிழை உறுதல் அரிது. முதற் பதிப்பில் ஒருவேளை பிழையுற்றாலும் இரண்டாம் பதிப்பில் அப்பிழை களைவதில் வெளியிடுவோர் பெருங்கவலை

செலுத்துவர். நமது நாட்டில் முதற்பதிப்பில் உறும் பிழைகளைப் பார்க்கிலும் பின்வரும் பதிப்புக்களில் புகும்பிழைகள் மலிந்து வரு கின்றன. நூல்களை வெளியிடுங் கூட்டத்தார் கவலையீனத்தை என் னென்று கூறுவது? இக்குறை நீக்கத் தமிழ்ப்பற்றுடையார் ஒரு வழி கோலலாகாதா?

இந்நூலை அச்சிட்ட பூமகள்விலாச அச்சுக்கூடத்தார் ஒல்லும் வகை நூல்களை அச்சுப் பிழையின்றி வெளியிட அவாக்கொண் டிருப்பது காண உள்ளம் உவகை யெய்துகிறது. இப்பதிப்பை எனக்குப் போதிய ஓய்வில்லா இவ்வேளையில் பெரிதும் எனது உதவி நாடாது தாமே அச்சுப்பிழை பார்த்து வெளியிட்டதற்குப் பூமகள்விலாச அச்சுக்கூடத்தார்க்கு எனது நன்றியறிதலான வணக் கத்தைச் செலுத்துகிறேன். அவர் இனிவரும் பதிப்புக்களையும் பிழை யுறாது அச்சிட்டு வெளியிடுவர் என்று நம்புகிறேன். இதுவே எனக்கு இவர்கள் செலுத்தவேண்டிய கைம்மாறு. தமிழ்நாட்டார் இந்நூலை ஆதரிப்பாராக.

இராயப்பேட்டை,<br>30-3-1923.

திரு. வி. க.

# மூன்றும் பதிப்பு



இந்நூல், பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு மூலமும், பத்திரகிரியார் புலம்பல் மூலமும் இவ்விரண்டிற்கும் முன்னே சென்னை இராயப்பேட்டை வெஸ்லிகலாசாலைத் தலைமைத் தமிழாசிரியராகவும், தமிழ்நாட்டில் சுதந்திர வேட்கையெழுப்பிய "தேசபக்தன்" பத்திரிகை ஆசிரியராகவு மிருந்தவரும், இப்பொழுது "நவசக்தி" பத்திரிகை ஆசிரியராக இருப்பவருமாகிய ஸ்ரீமான்-திரு. வி. கலியாணசுந்தரமுதலியார், யாம் விரும்பியவாறு, எழுதிய பொழிப்புரையும், விருத்தியுரையும் அடங்கப்பெற்றது. இந்நூல் முதற்பதிப்பு 1923-ம் ஆண்டு வெளியிடப்பட்டது. அப்பதிப்பு வெளிவந்த சிலமாதகாலத்துள் முற்றுஞ் செலவாகிவிட்டது. தமிழ் மக்களுக்கு இந்நூலின்மீதுள்ள அவாவை நோக்கி, இரண்டாம் பதிப்பை மிக விரைந்து விரைந்து அச்சிட்டு 1924-ம் ஆண்டு வெளியிடலானோம்.

இரண்டாம்பதிப்பில சிற்சிலவிடங்களில், உரையாசிரியரைக் கொண்டே கூட்டல் பெருக்கல் திருத்தல் முதலியன செய்வித்து, இதனை வெளியிட்டது கவனிக்கத்தக்கது. தேசத்துக்கும் தொழிலாளர்க்கும் இரவு பகல் ஓயாது உழைத்து உழைத்துத் தேகக் கட்டுக் குலையப்பட்டு மெலியராய் வருந்திவரும் இவ்வேளையில், எமது வேண்டுகோட்கிணங்கி, எவ்வித கைம்மாறுங் கருதாது, இப்பதிப்பில் சில பல திருத்தஞ்செய்ய உடன்பட்டு உதவிபுரிந்த ஸ்ரீமான் முதலியார்க்கு எனசெய்ய வல்லேம்! அவர்க்கு நோயற்ற வாழ்வு நல்கியருளுமாறு தமிழ்க்கடவுளை வேண்டுகிறோம்.

முகவுரையில் உரையாசிரியராகிய ஸ்ரீமான் முதலியார், ' , , , , , , நூல்களையும் உரைகளையும் அச்சிட்டு வெளியிடும் அன்பர் பலர் வியாபாரத்திலும் பொருளீட்டுவதிலும் கருத்தைப் பெரிதுஞ் செலுத்துகின்றனரேயன்றி, மொழிமீதும் எழுத்துப் பிழைகள்மீதும் கருத்தைச் செலுத்துகின்றாரில்லை, காலஞ்

சென்ற வித்துவமணிகள் எழுதிய பல உரைகள் சில குஜிலிக் கடைக்காரர்களிடத்தில் அகப்பட்டுத் தவிக்கின்றன. அதை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறுங் கண்ணீர் பெருகுகிறது. தமிழ் வளமும் தமிழ்ப்புலமையும் அருகிவரும் இந்நாளில் எழுத்துப் பிழையின்றியாதல் நூல்களை அச்சிடுவோர்க்கு மனமார்ந்த நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்."

"மேல்நாடுகளில் வெளியிடப்படும் நூல்களில் அச்சுப்பிழை உறுதல் அரிது. முதற்பதிப்பில் ஒருவேளை பிழையுற்றாலும் இரண்டாம்பதிப்பில் அப்பிழை களைவதில் வெளியிடுவோர் பெருங்கவலை செலுத்துவர். நமது நாட்டில் முதற்பதிப்பில் உறும் பிழைகளைப் பார்க்கிலும் பின்வரும் பதிப்புக்களில் புதுப்பிழைகள் மலிந்து வருகின்றன. நூல்களை வெளியிடுங் கூட்டத்தார் கவலையீனத்தை என்னென்று கூறுவது? இக்குறை நீக்கத் தமிழ்ப்பற்றுடையார் ஒருவழி கோலலாகாதா? * * * * * * அவர் இனிவரும் பதிப்புக்களையும் பிழையுறாது அச்சிட்டு வெளியிடுவர் என்று நம்புகிறேன். இதுவே எனக்கு இவர்கள் செலுத்தவேண்டிய கைம்மாறு" என்று செய்த எச்சரிக்கை எமது மனதில் பசுமரத்தாணிபோல் பதிந்து கிடக்கிறது. அது காரணமாக 'எந்நூலையும் சுத்த பதிப்பாக வெளியிட வேண்டும்' என்று எமது உள்ளத்தில் எழுந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள முயன்று, இம்மூன்றாம்பதிப்பை வெளியிட்டிருக்கிறோம். முக்குணமுடைய மனிதருக்கு அபுத்திபூர்வகமாகவும், புத்திபூர்வகமாகவும் பிழை நிகழ்வது இயல்பு. அதுகுறித்துப் பிழை பாராட்டாது பொறுத்தருள்வதோடு மன்னிக்குமாறுந் தமிழ்ச்செல்வர்களை வேண்டுகிறோம்.

முதலிரண்டு பதிப்புகளுக்கும் ஆதரவளித்த தமிழ்மக்கள், இப்பதிப்புக்கும் ஆதரவளித்து எமக்கு ஊக்கமூட்டுவார்களாக.

அ. முத்துவடிவேல் முதலியார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்




# பட்டினத்துப்பிள்ளையார் வரலாறு



சுத்த சாட்குண்ய பரமாப்தபதியாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யவேண்டிக் கைம்மாறற்ற பெருங்கருணையான் திருவருளையே திருமேனியாகக் கொண்டு, உமாதேவியாரோடு என்றும் எழுந்தருளியுள்ள மலை ஸ்ரீகைலாயமலை. அஃது ஊழிதோறும் ஓங்கி வளரும் பெருமை யுடையது; வெள்ளிமயமாய் விளங்குவது; தன்னைச் சார்ந்தாரைத் தன் வண்ணமாக்கும் இயல்பினது; ஐங்கரத் தண்ணலும், அறுமுகக்கடவுளும் போற்றி வாழ்த்தும் புகழினை வாய்ந்தது. அத்திருமலையைப் புகலாத வேதங்களில்லை; ஆகமங்களில்லை; புராணங்களில்லை. நந்தியெம்பெருமான் திருக்கரத்திற் பிரம்பு தாங்கி அவ்வரையின் திருவாயில் காத்துவருவர். தேவர்களும், முனிவர்களும், ஏனைய அன்பர்களும் நந்தியெம்பெருமான் கட்டளை பெற்று அச்சிவமலை யடைவார்கள்.

இத்துணைச் சிறப்புவாய்ந்த திருக்கயிலாயமலையில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைத் தரிசிக்கவேண்டி, முன்னொருநாள், அளகைவேந்தனும், ஐயன் தோழனுமாகிய குபேரன் வெள்ளிமலையின் திருவாயிலணுகி, நந்தியெம்பெருமானைப் பணிந்து, அவர் தம் ஆணைபெற்றுத் திருச்சந்நிதி யடைந்து, சிவபிரான் தேவியாரோடு எழுந்தருளியுள்ள திருக்கோலங்கண்டு, ஆனந்தபரவசனாய் "ஆண்டவனே! இத்திருக்கோலக் காட்சியை மண்ணுலகிலுள்ள பல திருப்பதிகளிலுங் கண்டின்புற அடியேன் விரும்புகிறேன். அருள் செய்ய

வேண்டும்" என்று வேண்டிநின்றான். அடியவர்கள் வேண்டியவற்றை வேண்டியாங் களிக்குந் தடங்கருணைப் பெருங்கடலாகிய கண்ணுதற் பெருமான், குபேரன் வேண்டுகோட் கிரங்கிப் பார்வதிதேவியாருடன் இடப வூர்தியின்மேல் ஆரோகணித்து தேவர்களும், முனிவர்களும், கணநாதர்களுந் தம்மைப் புடைசூழ்ந்துவர; காசி, காளத்தி, காஞ்சி முதலிய திவ்விய க்ஷேத்திரங்களி லெழுந்தருளி, ஆங்காங்கே குபேரனுக்குத் திருக்கயிலாயத் திருக்கோலக் காட்சி வழங்கியருளி, ஸ்ரீசிதம்பர மடைந்தருளினார். குபேரனுங் கடவுளடி தொடர்ந்து சென்று, ஒவ்வொரு தலத்திலுந் தான் விரும்பியவாறு உமாமகேசுரனைக் கண்டு பேரானந்த முற்றுச் சிற்றம்பலத்திற் கேகினான். அளகேசன் ஆண்டுச் சின்னாள் தங்கி அம்மையப்பரைத் தொழுதுவருகையில், ஒருநாள், இறைவனை வணங்கி "என்னுள்ளங் கோயில்கொண்ட எம்பெருமானே! இச்சோழநாட்டிலுள்ள திருவெண்காட்டிலே தேவரீரைத் தரிசிக்கச் சிறியேன் விரும்புகிறேன்" என்று விண்ணப்பித்தான். அன்பினில் விளைந்த ஆரமுதாகிய சிவபெருமான் அங்ஙனே திருவெண்காட்டிற் கெழுந்தருளினார். பின்னர்க் குபேரனும் அத்திருப்பதி சேர்ந்து, அம்பிகைபாகனைத் தரிசித்து இன்புற்றிருந்தனன்.

குபேரன் ஆங்கே இருந்துவருநாளில், அத்திருப்பதிக்கு அருகேயுள்ள காவிரிப்பூம்பட்டினத்தை அன்னோன் கண்ணுற்றான். அப்பட்டினத்தின் இயற்கை வளப்பும், செயற்கை வனப்பும், ஐவகை மன்ற அமைப்பும், பிறவும் அளகேசனது உள்ளத்தைக் கவர்ந்தன. அளகாபுரி அரசனாகிய குபேரனே காவிரிப்பூம்பட்டினத்தைக் கண்டு மயங்கி, அதனை நீங்க மனமெழாது, அதன்கண் வதிய விரும்பினானெனில், அப்பட்டினத்தின் வளத்தையும் செழுமையையும் அளவிட்டுரைக்க எவரால் இயலும்? திருவெண்காட்டில் எழுந்தருளியுள்ள கைலாயபதி, குபேரனது உள்ள நிலையை யுணர்ந்து; அவனைத் திருநோக்கஞ்செய்து "தோழனே! உன்

உள்ளம் காவிரிப்பூம்பட்டினத்தைப் பற்றிநிற்கிறது. நீதாங்கியுள்ள தேசம் போக பூமியின் வாழ்க்கைக்குரியது, மானுடர் வாழும் இக் கர்மபூமிக் குரியதன்று. ஆனதுபற்றி, நீ யிக் காவிரிப்பூம்பட்டினததிற் பிறக்கக்கடவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினர். அது கேட்ட அளகேசன், மெய்ந்நடுங்கி, உள்ளங்கலங்கி "ஐயனே! தேவரீர் ஆணையை மறுக்க எவராலும் இயலாது. அதன்வழி நிற்க வேண்டுவதே அடியேன் கடமை. சிறியேன் மானுடப் பிறவியெடுதது, இவ்வுலக இன்பநுகர்ச்சியில் நிலைத்து, அழுநதுங் காலத்து, ஏழையேனைத தடுத்தாட்கொண் டருளல்வேண்டும்" என்று பிரார்த்திததான். சிவபெருமான் குபேரனை நோக்கி "அங்ஙனே செய்தருள்வோம்" என்றருளிச்செய்து, அம்மையாரோடு திருக்கயிலைக் கெழுந்தருளினர்.

காவிரிப்பூம்பட்டினத்திலே, வேளாள மரபிலே, சிவநேசர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் ஞானகலாம்பை யென்னுங் கற்புக்கரசியாரை மணந்து, இல்லறநடாத்திவந்தார். வருநாளில், அவருக்கொரு பெண்மகவு பிறந்தது. பின்னர் நீண்டகாலஞ் சிவநேசர் தமக்கு ஆண்மகவு பிறவாமை குறித்துத் தாந்தம் மனைவியாருடன் தவஞ்செய்வாராயினர். அத்தவப்பேறாகக் குபேரன் சிவாஞ்ஞைப்படி ஞானகலாம்பையார் கருவிலுற்றான். அவ்வம்மையாருக்குக் கருக்குறிகள் புலப்பட்டன. அதுகண்ட சிவநேசரும், உறவினரும் இன்பக்கடலில் அழுந்தினர். ஒவ்வொருதிங்களாகக் கழிந்து, பததுத் திங்களாக, ஞானகலாம்பையார் சுபவோரையிலே, ஓராண் குழவி யீன்றார். தந்தையாராகிய சிவநேசர் அக்குழவிக்குத் திருவெண்காடர் என்னும் நாமஞ்சூட்டி, அப்பிள்ளைப் பெருமானைப் பொன்னேபோற் போற்றிவளர்தது வந்தனர். திருவெண்காடர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, ஐந்தாம் வயது எய்தப்பெற்றார்.

அக்காலையில் சிவநேசர் சிவபெருமான் திருவடிநீழ லடைந்தனர். அடையவே திருவெண்காடர் தந்தையார்க்கு ஈமக்கடன் முதலியவற்றைக் குறைவறச் செய்து, அற்புதத திருவிளையாடல்களால் அன்னையார் அயரம் போக்கிக்கொண்டிருந்தார். அறிவிற்சிறந்த அன்னையாராகிய ஞானகலாம்பையார் தக்க ஆசிரியரைக்கொண்டு பிள்ளைப்பெருமானார்க்குக் கல்வி கற்பித்தனர். திருவெண்காடர் சகலகலைஞானங்களையும் இளமையிலேயே கேட்டுச் சிந்தித்துக் "கல்வியினாலாயபயன் கங்காதரன் திருவடிகளைப் பூசித்தலே" யென்று தெளிந்து, அப்பூசனையைக் குருமுகத்தாற் பெற வேண்டுமென உறுதிகொண்டு, உணவுங்கொள்ளாது, குருத்தியானமே செய்திருந்தனர். ஒருநாள் சிவபிரான் ஓரந்தணராகத் திருவெண்காடற் கனவிற் றோன்றி "அருமைக் குழந்தாய்! திருவோண நட்சத்திரங் கூடிய சோமவாரப் பிரதோஷதினம் நாளை நேர்கின்றமையால், நீ திருவெண்காடு செல்வாயாக. அங்கு ஒரு வேதியர் உனக்குச் சிவதீக்ஷை செய்து சிவபூசை முறையினையுங் கற்பிப்பர்" என்று அருளிச்செய்து மறைந்தனர். உடனே திருவெண்காடர் விழித்தெழுந்து தாங் கண்ட கனவினைத் தாயாருக்குக் குறிப்பாக உணர்த்தி, அவ்வம்மையாரோடு திருவெண்காடு சேர்ந்து, சிவதரிசனஞ்செய்து, குருநாதனை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது கனவிற்றோன்றிய அந்தணரே அங்குக் குருமூர்த்தியாக எழுந்தருளினார். திருவெண்காடர் வியப்புற்றுக் குருநாதன் திருவடிகளில் விழுந்து வணங்கினின்றார். குருமூர்த்தி பிள்ளைப் பெருவள்ளலைத் திருநோக்கஞ்செய்து "குழந்தாய்! நம்மூர் வியாக்கிரபுரம். நேற்றிரவு இங்கு வந்தோம். எமது கனவில் ஒரு மறையவர் தோன்றி 'நீ நாளை காலையில் திருவெண்காடு போந்து, அங்குள்ள திருவெண்காடன் என்னுஞ் சிறுவனுச்குத் தீக்ஷை செய்வாயாக' என்று கூறி, இச்சம்புடத்தைக் கொடுத்து 'இச்சம்புடத்தையும் அவனிடஞ் சேர்ப்பாயாக. இதனுள்ளே ஒரு சிவலிங்கம்

இருக்கிறது. அஃது அவனால் முற்பிறப்பில் பூசிக்கப் பெற்றது. அவன் கைப்பட்டதும் இச்சம்புடந் தானாகத் திறந்து கொள்ளும். நீ அவனோடு ஒரு மண்டலம் உறைவாயாக' என்று மொழிந்து திருவுருக்கரந்தார். அப்பெரியார் உரைப்படி மீண்டுப் போந்து, விசாரித்து உன்னைக்கண்டேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அச்சொல்லமிழ்தைச் செவிமடுத்த திருவெண்காடர குருமூர்த்தியின் திருவடிகளிற பன்முறை விழுந்து விழுந்து வணங்கிப் போற்றி நின்றார். குருமூர்த்தியாக எழுந்தருளிய பெருமான் திருவெண்காடருக்குச் சிவதீக்ஷை செய்து, கனவிற் பெற்ற சம்புடத்தைக் கொடுத்தருளினார். திருவெண்காட்டடிகள், அச்சம்புடத்தையேற்றதும், அது திறநதுகொண்டது. அதனுள்ளே சிவலிங்கமும் விநாயக மூர்த்தமு மிருந்தன. அவைகளை ஆசிரியர் கற்பித்த முறைப்படி அன்பர் பூசித்து வருவாராயினர். குருமூர்த்தி பிள்ளைப்பெரியாரோடு நாற்பதுநாளிருந்து பின்னர்த் தம்மிச்சை வழிச் சென்றார்.

பிள்ளைப்பெருமான் திருவெண்காட்டி லிருந்துகொண்டே சிவபூசையும் மாகேசுரபூசையுஞ் செய்து வந்தனர். வரவே முன்னோர் உரிமைப்பொருளெல்லாஞ் செலவாயின. சிவபூசையினையும் மாகேசுரபூசையினையும் முறையாக முட்டின்றி நடத்தப் போதிய பொருளின்மை குறித்து அடிகள் வருந்தினார். அவரது அன்னையாரும் தமக்குற்ற வறுமை குறித்துப் பெரிதுந் துக்கித்தார். ஒருநாளிரவு சிவபெருமான் திருவெண்காட்டடிகள் கனவிற் றோன்றி "அன்பனே! வருநதற்க. உன் இல்லமுழுவதும் பொன்னும் மணியும் திரள்திரளாக மலியச் செய்தோம்" என்று திருவருள் செய்தனர். உடனே ஞானவள்ளலார் விழித்தெழுந்து தாயாருக்குத் தாங்கண்ட கனவைத் தெரிவித்தார். பொழுது விடிந்ததும் அடிகள் காவலாளர் மூலமாகத் தம் வீடுமுற்றிலும் பொன்னும் மணியும் திரம்பியிருததலைக் கேள்வியுற்று, அவைகளைக்கொண்டு, சிவபூசை குரு

பூசை அடியவர்பூசை முதலிய பதி புண்ணியங்களைச் செய்து காவிரிப்பூம்பட்டின மடைந்து, தாம் மேற்கொண்ட அறச்செயல்களை மகிழ்ச்சியோடு நிகழ்த்திவந்தார்.

வருநாளில், திருவெண்காடருக்குத் திருமணப்பருவமுற்றது. உறவே ஞானசிகாமணியைப் பெற்ற ஞானகலாம்பையார், அப்பட்டினத்திலே வேளாண்மரபிலே தோன்றிச் சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்து விளங்கிய சிதம்பரசெட்டியார் மனைவியாராகிய சிவகாமியம்மையார் ஈன்ற அருந்தவப் புதல்வியாராகிய சிவகலையென்னும் பெருமாட்டியாரை மணம்பேசித் திருவெண்காடருக்குத் திருக்கலியாணஞ் செய்து முடித்தார். அடிகள் சிவகலையம்மையாரோடு இல்லறத்தை ஒழுங்காகவும் முறையாகவும் நடாத்தி வந்தனர். இங்ஙனம் இல்லறமேற்று வாழ்ந்து வருங்கால், தமக்கு முப்பத்தைந்து வயதாகியும் புத்திரப்பேறுண்டாகாமை குறித்துச் சிறிது வருந்தி, மருதவாணர் திருவடிகளை இடையறாது பூசித்து வந்தார்.

திருவிடைமருதூரில் சிவசருமரென்னும் ஒரு வேதியரிருந்தார். அவர் சுசீலையென்னும் அம்மையாரைத் திருமணஞ்செய்து, இல்லற வொழுக்கத்தில் நின்று, தமக்குள்ள உரிமைப்பொருளெல்லாவற்றையுஞ் சிவபூசையிலும், அடியவர் பூசையிலுஞ் செலவு செய்து, வறுமையாஞ் சிறுமையிலழுந்தியிருந்தார். அந்நாளில் மருதப்பர் அவர் கனவிலும், அவர் மனைவியார் கனவிலுந்தோன்றி "அன்புடையீர்! நமது தீர்த்தக்கரையிலே ஒரு வில்வமா மிருக்கிறது. அதனடியில் நாம் ஒரு குழந்தை வடிவமாகக் கிடப்போம். அக்குழந்தையை யெடுத்துக்கொண்டுபோய்க் காவிரிப்பூம் பட்டினத்திற் புத்திரபேறின்றி அருந்தவஞ் செய்யுந் திருவெண்காடரிடங் கொடுத்து, அக்குழந்தையளவு எடையுள்ள பொன்பெற்று, உங்கள் வறுமை போக்குவீர்களாக" என்றருள்செய்து மறைந்தனர். சிவானுக்கிரகத்தின்படி மறுநாள் சிவசருமர் அவ்வில்வமரத்தடியிற்



சிசுமூர்த்தி சிவசருமருக்குஞ் சுசீலைக்குங் காட்சியளித்தல்.

ஒரு குழந்தை யிருக்கக்கண்டு, அதனை எடுத்துக்கொண்டுவந்து மனைவியாரிடஞ் சேர்த்தனர். அம்மையார் அக்குழந்தையின் திரு மேனிப் பொலிவு கண்டு "அந்தோ! தோன்றி நின்றழியும் பொருட்செல்வத்தின் பொருட்டோ இவ்வருட்செல்வத்தை மற் றவர்க்கு விற்பது? என் மனஞ்சிறிது மெழவில்லையே!" என்று வருந்தியிருக்கையில், சிவசருமர், சிவபிரான் திருவருள் காட்டிய வழியே சென்று, காவிரிப்பூம்பட்டினஞ் சேர்ந்து, அங்குள்ள ஒரு சோலையிற் றங்கியிருந்தனர். அவ்வேளையில் சிவபெருமான் திரு வெண்காடர் கனவிலும், அவர் மனைவியார் சிவகலையார் கனவிலுந் தோன்றி "அன்பர்களே! உங்கள் வீட்டிற்குப் புறத்தேயுள்ள சோலையிற் சிவசருமரென்னும் வேதியரொருவர் மனைவியாரோடும் ஒரு குழந்தையோடும் வந்து தங்கியிருக்கின்றனர். நீங்கள் அவர் பால் அணுகி அவரை உபசரித்து, இல்லத்திற் கழைத்து வந்து அவர் மனைவியார் கரத்துள்ள குழந்தையளவு எடையுள்ள பொன் கொடுத்து, அக்குழந்தையைப் பெற்றுக்கொள்ளுங்கள். அக்குழந் தையே உங்களுக்கு இருமைப்பயனையும் அளிப்பதாகும்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர். அங்ஙனமே திருவெண் காடரும், அவர் இல்லக்கிழத்தியாரும் புறக்கடையிலிருந்த சிவசரு மரையுஞ் சுசீலையாரையுங்கண்டு சிவாஞ்ஞைப்படி அவர்க்கு வேண் டுவசெய்து குழந்தையைப் பெற்றுக்கொண்டார். சிவசருமரும் அவர் மனைவியாருஞ் சிவதியானத்துடன் திருவிடைமருதூர் நோக்கிச் சென்றனர்.

சிவபிரான் திருவருளால் கிடைக்கப்பெற்ற அருமைக் குழந் தைக்குத் திருவெண்காடர், **மருதப்பிரான்** என்னுந் திருப்பெய ரிட்டு, அச்சிவபாஞ்சுடரைத் தம்முயிரெனப்போற்றி வளர்த்து உரிய பருவத்தில் வித்தியாப்பியாசஞ் செய்வித்தனர். பட்டினத்தடி களை வாழ்விக்க எழுந்தருளிய செல்வப்புதல்வராகிய மருதப் பிரான் உலகத்தார் வியக்கத்தக்க அற்புதத் திருவிளையாடல்கள்



சுவேசாசாரியர்பால் குழந்தையையீந்து பொன்பெறல்.

பல செய்தனர் அவ்வாடல்கள் தாய்தந்தையர்களை இன்பக்கடலில் திளைப்பித்தன. மருதப்பிரான் வளர்பிறைபோல் வளர்ந்து பதினாறுவது வயது எய்தப்பெற்றார். ஒருநாள் தந்தையாரிடஞ்சென்று "ஐயனே! நான் தீவாந்தரங்கட்குச் சென்று வாணிபஞ்செய்ய விரும்புகிறேன" என்றார். அதுகேட்ட தந்தையார் மருதப்பிரானை வெளிநாடுகளுக் கனுப்பச் சிறிதும் விரும்பவில்லை யாயினும், புதல்வரின் மனவெழுச்சியையும், குலமுறைமையையும் ஓர்ந்து "அப்பா! உன் கருத்துப்படியே செய்வாயாக" என்று விடை கொடுத்து அனுப்பினர். மருதப்பெருமான நண்பர்களோடு கப்பலேறி, ஒரு தீவினையடைந்து, தாங்கொண்டுசென்ற பண்டங்களை விற்றுக கிடைத்த பொருளால் திருப்பணிகள் பல செய்து, எஞ்சிய சிறுபொருளைக்கொண்டு வரட்டிகளையும் அவல்கடலையையும் மூட்டை மூட்டையாக வாங்கிக் கப்பலில் நிரப்பிக் காவிரிப்பூம் பட்டினத்துக்குத் திரும்பினர். பெருமான் செயல்களைக்கண்ட தோழர்களும், மற்றவர்களும் "மருதப்பிரானுக்குப் பித்தேறியிருக்கின்றதுபோலும்" என நினைத்து உடன் புறப்பட்டார்கள். இடையில் மருதவாணர் திருவருளால் காறறுமழை யுண்டாகக் கப்பல் திசைமாறிப்போயிற்று. உணவுப்பொருள் ஒழியுமட்டும் நேர்வழி புலனாகவில்லை. கப்பலில் இருந்தவர்கள் மருதப்பெருமானை நோக்கி "ஐயா! பசியாற்ற அவல் கொடுங்கள்; குளிர்காய எருமுட்டை கொடுங்கள்" என்று கேட்டார்கள். அதற்குப் பெருமான் "நண்பர்களே! நாம பட்டினஞ்சேர்ந்ததும் இப்பொழுது என்னால் அளிக்கப்படப்போகிற எருமுட்டைகள் எவ்வளவோ அவ்வளவு எருமுட்டைகளைத் தரவேண்டும்" என்று கூறி உறுதிப் பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டு, தப்பாலுள்ள வரட்டிகளை வழங்கி யருளினர். கப்பல் திசைகண்டு காவிரிப்பூம்பட்டினஞ் சேர்ந்தது. கலததுள்ளிருநதா ரெல்லாரும கப்பலினின்று மிறங்கி ஊரையடைந்து, திருவெண்காடரைக்கண்டு "அண்ணலே! உமது குமாரனுக்கு அறிவு மயங்கி யிருக்கிறது;

சித்தப்பிரமைபோலும்" என்று கூறித் தத்தம் இல்லஞ்சென்றனர். திருவெண்காடர் தம் புதல்வர் கொணர்ந்த வரட்டி மூட்டைகளையும், அவல் மூட்டைகளையும் அவிழ்த்துப்பார்த்தார். எருமுட்டைகள் மாணிக்கக் கற்களாக எரிகின்றன. அவலோடு சிறு சிறு பொற்கட்டிகள் பொலிகின்றன. அவைகளிடையில் கடல் மத்தியில் மருதப்பிரானோடு சென்றவர்கள் எழுதிக்கொடுத்த பத்திரம் திருவெண்காடர் கையிலகப்பட்டது. அதுகண்ட மருதப்பிரான் நண்பர்களும் மற்றவர்களும் "அந்தோ! இஃதென்ன மாயம்? நாம் எருமுட்டைகளுக்காகப் பத்திரம் எழுதி யீந்தோம். இப்பொழுது அவையாவும் அரதனங்களாக ஒளிக்கின்றனவே? என் செய்வோம்! என செய்வோம்!!" என்று துயராழியிலழுந்தி நின்றார்கள், திருவெணகாடர் மைந்தரது வாணிபத் திறமையை வியந்து அவரைக் காண அவரது இருக்கை சென்றனர். ஆண்டு அவரைக் காணாது தேடித தேடித திரிந்து மனம் வருந்தியிருந்தார். மருதப்பிரான் திருவிடைமருதூரில் தம்மை மறவாது போற்றிப் பூசித்துவந்த சிவசருமருக்கும், அவரது குடும்பத்தாருக்கும் அத்துவிதமுத்தி யருளித் தாம் மகாலிங்கத்தில் சாநித்தியமாயினர்.

இங்ஙனமாக, திருவெண்காடர் நெஞ்சங் கலங்கி வாடினமுகத்தினராய் வருந்திநிற்கும் வேளையில், மனைவியார் ஒரு சிறிய பெட்டி கொண்டுவந்து "நாதா! நமது புதல்வன் இப்பெட்டியைத் தேவரீரிடஞ் சேர்க்கும்படி சொல்லிப் போய்விட்டனன" எனறு கூறி அப்பெட்டியைப் பட்டினததார் திருமுன்வைத்தார். திருவெண்காடர் பேராவலோடு அப்பெட்டியைத் திறநதார. அதில் காதற்ற ஊசி யொன்றும் ஓலைச்சீட்டொன்றுமிருநதன. பட்டினததுப்பிள்ளையார் ஓலையையெடுத்து வாசித்தார். அவ்வோலையில் "காதற்ற வூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே" என்று எழுதப்பட்டிருநதது. அநத ஞான உரையைக் கண்டதும பட்டினததார் துறவற

மேற்கொண்டார். தமது தலைமைச் சம்பிரதியாகிய சேந்தனரை அழைத்துத் தமது பொருள்கள் எல்லாவற்றையுங் கொள்ளையிடச் செய்யுமாறு கட்டளையிட்டுத் தாயாரின் பொருட்டு வெளியூர்க் கேகாது, அவர் அப்பட்டினத்தின் ஒரு பாங்கரிலுள்ள ஒரு பொது மண்டபத்திற்றங்கி வீடுகடோறும் நுழைந்து பிச்சையேற்று, உண்டு, ஞானநிஷ்டை செய்துகொண்டிருந்தார். அவரது செயல் சுற்றத் தார்க்கு வெறுப்பைத் தந்தது. தமக்கையார் "நம்மெதிரிற் பல வீடுகடோறுஞ் சென்று, பிச்சையேற்று, நமது மானத்தை யழிக் குந் திருவெண்காடனைக் கொல்லல்வேண்டும்" என உறுதிகொண்டு, நஞ்சுகலந்த அப்பத்தினை உண்ணும்படி பட்டினத்தடிகளுக்கு அனுப்பி வைத்தார். அவ்வஞ்சனையைப் பட்டினத்துப் பிள்ளையார் திருவருளால் உணர்ந்து, அவ்வப்பத்தினைப் பிட்டு ஒரு பகுதியைத் தமக்கையார் வீட்டிறப்பிற் செருகினார். செருகினதும் வீடு தீக்கிரை யாயிற்று.

சின்னாள் கழிந்தபின்னர் அடிகள் அன்னையார் சிவபதமடைந் தனர் அவரது உடலைச் சுற்றத்தார் வழக்கம்போல மயானஞ்சேர்த் தனர். அதுகாலைத் தாயார்க்கு ஈமக்கடன் செய்யவேண்டிச் சிவ பெருமான் ஆணைப்படி வெளியூர்க்குச் செல்லாது காத்துக்கொண் டிருந்த பட்டினத்துப்பிள்ளையார் சுடலை நண்ணினார். நண்ணின தும் உறவினரும் மற்றவர்களும் ஒதுங்கிவிட்டார்கள். திருவெண் காடர் ஆண்டு அடுக்கப்பெற்றிருந்த சிறுவிறகுகளை யகற்றிப் பச்சை வாழைப்பட்டைகளை யடுக்கி, அவ்வடுக்கல்மீது அன்னையாரைக் கிடத்திச் சிலபாக்கள் பாட, அனல்மூண்டு கொழுந்துவிட் டெரிந் தது. அதற்குமேல் பிள்ளையார் செய்யவேண்டிய கடன்களைச் செய் வனே செய்து, திருவிடைமருதூரடைந்து, சுவாமி தரிசனஞ் செய்து, அத்திருப்பதியினின்றும் நீங்கிப் பல க்ஷேத்திரங்கட்குச் சென்று, சிவபெருமானைத் தொழுது, திருவாரூர் சேர்ந்தார்.

அங்கே பிள்ளையார் சிலநாள் தங்கிவருகையில் ஒருவன் பிள்ளையாருக்குத திருவடித் தொண்டனுகத் திருவருளால் கிடைக்கப்பெற்ருன். அவன் எண்ணெய்தேய்த்துத் தலைமுழுகிய ஒருநாள் முன்னேரத்தில் உறங்காது, காமவேகத்தால் அருகேயிருநத மனைவியை வலிந்து புணர்நதான். உடனே அனனுன் சந்நிநோயால் பீடிக்கப்பெற்று மரணமடைந்தான். பட்டினததுப் பெருந்தகையார் அச்செய்தி கேள்வியுற்று, அவன்பா லணுகித் திருவருட்டுணையால் அவனை யெழுப்பினுர்.

பின்னர்ப் பிள்ளையார் திருவாரூரைவிடுதது கொங்குநாட்டையடைந்து மௌனவிரதம் மேறகொண்டு நிஷ்டைகூடி வருகையில், ஒருநாள் நள்ளிரவில் பசிமேலீட்டான் ஒருமூர்க்கன் வீட்டுவாயிலிலே நின்று கைதட்டினுர். அக்கயவன் சுவாமிகளினருமை யுணராதவனுய்த தடிகொண்டு பிள்ளையாரைப் புடைத்தனன். அன்றுதொட்டு அடிகள் தாமிருக்குமிடந்தேடி அன்னங் கொண்டுவநதாலன்றி உணவு கொள்வதில்லையென உறுதிகொண்டு, கொங்குநாட்டினின்றும் நீங்கித துளுவநாட்டை அடைநது, பல திவ்விய க்ஷேத்திரங்களை வணங்கி உஞ்சேனைமாகாளஞ் சென்று, கடவுளைத் தொழுது ஒரு விநாயகராலயததில் நிஷ்டையி லமர்நதிருநதனர்.

அமர்ந்திருக்குநாளில் ஒருநாளிரவு சில திருடர்கள் அக்கணபதி ஆலயததில் நுழைநது, தும்பிமுகக்கடவுளை வணங்கி, அவ்வூரையாளும் பத்திரகிரி மனனருடைய மாளிகையிற் புகுநது, பட்டாடைகளையும், அணிகலனகளையும், பிற பொருள்களையுந் திருடிக்கொண்டு திரும்புகையில், மீண்டும் அவவிநாயக ராலயமடைந்து, யானைமுகததண்ணலுக்கு ஒரு மணிப்பதக்க மணியவேண்டுமெனக் கருதி, ஒரு விலையுயர்ந்த பதககத்தை யெடுத்து, இருட்டில் மயங்கி, அங்கே சிவஞான நிஷ்டைகூடியிருந்த பட்டினத்துப்பிள்ளையாரைப்

பிள்ளையாரெனக்கொண்டு அப்பதக்கத்தை அவர் கழுத்திலணிந்து சென்றார்கள். மறுநாள் காவலாளர் சோதனை செய்து வருங்கால் சுவாமிகள் திருக்கழுத்தில் மன்னரது மாணிக்கப்பதக்கம் மிளிர்வது கண்டு, எம்பெருமானைப் பலவாறு துன்புறுத்தினர். அதனால் திருவெண்காடர் நிஷ்டை கலையப்பெற்றார். காவலாளர் ஞானமூர்த்தியை அரசமன்றமேற்றினர். மன்னன் உண்மை தேராது பிள்ளையாரைக் கழுமரத்தி லேற்றுமாறு ஆணைதந்தான். தண்டவினைஞர்கள் சிவஞானச்செல்வரைக் கழுமரத்தருகே அழைத்துச்சென்றார்கள். திருவருள்வழியே யொழுகும் பெருமான் "என்செய லாவது யாதொன்று மில்லை" என்னும் திருப்பாடலோத, உடனே கழுமரம் தீப்பற்றி யெரிந்து சாம்பராயிற்று. அதுகேட்ட பத்திரகிரியார் விரைந்து ஓடிக் குருநாதன் திருவடிகளில் விழுந்து வணங்கியெழுந்துநின்று தம்மை மறந்தார். ஞானாசிரியராக எழுந்தருளிய பட்டினத்தடிகள் பத்திரகிரியார்க்கு ஞானோபதேசஞ் செய்து அரசர் பெருமானைத் திருவிடைமருதூருக் கேகுமாறு பணித்துத் தாமும் பல க்ஷேத்திர யாத்திரைசெய்து திருவிடைமருதூரை யடைந்தருளினர். அங்கே பெருமான் பத்திரகிரியார் பிச்சையேற்றுக்கொண்டு வந்தளிக்கும் அன்னமுண்டுவந்தனர். பத்திரகிரியார் அவ்விடத்தில் ஒரு நாயை வளர்த்து வந்தார். அது திருவருளால் இறந்து காசி மன்னன் தவப்புதல்வியாகப் பிறந்து வளர்ந்து மீண்டுந் திருவிடைமருதூரிலுள்ள பத்திரகிரியாரையே குருவாகக்கொண்டு, அவரையடைந்து, அவரது திருவடிகளில் விழுந்து வணங்கிற்று. அதுகாலை அவர்களெதிரில் ஒரு பெருஞ் சோதி தோன்றிற்று. அதிலே அவர்கள் கலந்தருளினர்கள். அவ்வற்புதத்தைக் கண்ட பட்டினத்தடிகள் சிவசந்நிதி யடைந்து "அருட்கடலே! அடியேனை இவ்வுலகத்தில் இருத்தியிருப்பதன் குறிப்பு என்னவோ அறிகிலேன்" என்று முறையிட்டனர். அதுபோழ்து "திருவெண்காடா! ஒற்றியூர் வருக" என்றோர் அசரீரி எழுந்தது. அவ்வருளொலியைச் செவி

மடுத்த பிள்ளையார் இறைவன் திருவுளக் குறிப்புணர்ந்து திரு வெண்காடு சேர்ந்தனர். பட்டினத்தடிகள் திருவெண்காடு வந்துள்ள செய்தியைச் சேந்தனர் மனைவியாரும், மைந்தனுருங் கேள்வியுற் றுச் சுவாமிகளிடம் போந்து, திருவடிகளில் விழுந்து வணங்கி நின் றனர். அவர்களைத் திருவெண்காடர் நோக்கி, "நீங்கள் யாவர்?" என்று வினவினர். சேந்தனர் மனைவியார் "சுவாமி! அடியேன் தேவரீர்பால் கணக்குப்பிள்ளையா யிருந்த சேந்தனரின் மனைவி. இவன் என் குமாரன். சுவாமிகளாணைப்படி சேந்தனர் சுவாமிகள் பொருள்கள் எல்லாவற்றையுங் கொள்ளையிட வைத்தனர். அரசன் அறியாமையினல் ஐயங்கொண்டு அவரை விலங்கிட்டுச் சிறையி லடைப்பித்தான். அவரது சிறையை நீக்கியருளவேண்டுஞ் சுவாமி" என்று வேண்டி நின்ருர். திருவெண்காடர் சிவபிரானைத் தியானஞ் செய்ய, விநாயகர் திருவருளால் சேந்தனர் விலங்கு இரியப்பெற் றுச் சிறை நீங்கி வெளியேபோந்து பட்டினத்தடிகளைக் கண்டு பணிந்து, "அடியேன் ஆதத்தும சிறையையும் நீக்கி யருளல்வேண் டும்" என்று பணிந்து நின்ருர். திருவெண்காடர் சேந்தனரது அதிதீவிர நிலையை யோர்ந்து "நீ சிதம்பரத்தை யடைந்து விறகு விற்று அதனுற பெறும் ஊதியங்கொண்டு சிவபூசை மாகேசுரபூசை முதலிய பதிபுண்ணியங்கள் செய்து குடும்பத்தோடு வாழ்வாயாக" என்று திருவருள் செய்தார்.

பின்னர்ப் பட்டினத்தடிகள் சீகாழி, சிதம்பரம், திருவேகம் பம், திருக்காளத்தி, திருவாலங்காடு முதலிய திருப்பதிகளைத் தரி சித்துப் பதிகம் பாடித் திருவொற்றியூரை யடைந்தருளினர். அத திருப்பதியில் அவர் சிலநாள் தங்கிப் பலவகைத திருப்பாடல்கள் பாடிச் சிலவேளைகளிற் கடலோரஞ்சென்று, அங்கே விளையாடிக் கொண்டிருக்குஞ் சிறுவர்களோடுகூடி அதியற்புத ஆடல்கள் பல ஆடுவாராயினர். ஒருநாள் சிவநேயர் ஒரு குழியிலிறங்கி மறைந்தார். அவரோடு விளையாடிக்கொண்டிருந்த பிள்ளைகள் "அந்தோ! இஃ

தென்ன? நம்முடன் கலந்து பல அற்புதச் செயல்கள் புரிந்து கொண்டிருந்த பெரியவர் இக்குழியில் மறைந்தார். அவரைக் காணோம். எங்குச் சென்றார்" என்று தேடுகையில் சுவாமிகள் ஒரு மணற்குன்றின்மேல் தோன்றினார். சிறுவர்கள் அவரை யணுகிய போது சுவாமிகள் குழியிற் குதித்து மறைந்தார். இங்ஙனம் அடிகள் பன்முறை இளையவர்கட்கு ஆடல்காட்டி ஒருமுறை குழியிலிறங்கி உட்கார்ந்து சிறுவர்களை நோக்கி "நண்பர்களே! என்மீது ஒரு சாலைக் கவிழுங்கள்" என்றருளிச்செய்தார். ஒன்றும் அறியாச் சிறுபிள்ளைகள் அங்ஙனே செய்து சிறிதுநேரங் கழித்துச் சாலைப் புரட்டிப் பார்த்தார்கள் அவர்கள் சுவாமிகளைக் காணாது அவ்விடத்தில் ஒரு சிவலிங்கப்பெருமான விளங்கக்கண்டு வியந்து ஊரிலுள்ள பலர்க்குத் தாங்கள் கண்ணுற்ற அற்புதச்செயலைத தெரிவித்தார்கள். ஊரவர் கடலோரம் போந்து சுவாமிகளது சிவலிங்க வடிவத்தைத் தரிசித்துப் பேரானந்த மெய்தினர். தமிழ்நாட்டிலுள்ள அன்பர் பலர் திருவொற்றியூர்சென்று சுவாமிகள் திருமேனியை வழிபடலாயினர். பட்டினத்துப்பிள்ளையார் மனைவியாராகிய சிவகலையம்மையார் சுவாமிகட்கு முன்னரே அவர்களது திருவடித்தாமரைகளை இடையறாது தியானஞ் செய்துகொண்டிருந்து சிவலோகபதவியடைந்தார். சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

## பட்டினத்துப்பிள்ளையார் திருநட்சத்திர தினம்

ஆடியுத்தி ராட மருட்சிவத்திற் பட்டினத்தார்
நாடி யறக்கலந்த நாள்.

திரு. வி. க.

---


SRI VENKATESWARA ORIENTAL INSTITUTE
LIBRARY
* TIRUPATI. *

உ
சிவமயம்

பட்டினத்துப்பிள்ளையார்
அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டும்

விருத்தியுரையும்



## கோயிற்றிருவகவல் - 1



*நினைமின் மனனே! நினைமின் மனனே*
*சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை*
*நினைமின் மனனே! நினைமின் மனனே!*

(பொழிப்புரை) நெஞ்சே! தியானஞ் செய்வாய்; நெஞ்சே! தியானஞ் செய்வாய்; சிவபெருமானை; சிவந்த பொன்மயமான சபையிலே நடஞ் செய்கின்ற நாதனை; நெஞ்சே! தியானஞ் செய்வாய்; நெஞ்சே! தியானஞ் செய்வாய்.

நெஞ்சே இறைவனை நினைவாயாக என்பது கருத்து.

(விருத்தியுரை) சிவபெருமானை யென்றமையான் இறைவனுக்குரிய நிட்கள வடிவத்தினையும், அம்பலவனை யென்றமையான் அவனது சகள வடிவத்தினையுங் குறிப்பித்தவாறும். நிட்கள மென்பது வாக்கு மனங்கட் கெட்டாததாய், கருவி கரணங்க ளில்லாததாய் விளங்குங் கடவுளினது சொரூபம். சகளமாவது பெருமான் ஆன்மாக்கள் பொருட்டுத் திருவருளையே திருமேனியாகக்கொண்டு காசா

ஞதிகளைத் தாங்கிய வடிவம். ஈண்டு இனம்பற்றி நிட்கள சகள வடிவத்தினையுங்கொள்க. இம்முத்திறத் திருமேனியும் இறைவனுக்குரிய வடிவமே யாகும். இதனை "உருமேனி தரித்துக்கொண்ட தென்றலு முருவிறந்த, அருமேனி யதுவுங் கண்டோம் அருவுரு வானபோது, திருமேனி உபயம் பெற்ருேஞ் செப்பிய மூன்று நந்தங், கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே" என வருஉஞ் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தானுணர்க.

சிவநாமத்திற் பரம்பொருளுக்குரிய இலக்கணங்கள் யாவும் அடங்கி நிற்றலால், வேத வேதாந்தங்கள் கடவுளை அந்நாமத்தாற் போற்றுகின்றன. "சிவனெனுநாமந் தனக்கேயுடைய செம்மேனி யெம்மான்" என்ருர் திருநாவுக்கரசரும். அதுபற்றியே ஈண்டு அடிகளும் ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் என்னும் முத்திறத தத்துவக்கூட்டங்களையுங் கடந்தொளிரும் இன்பப்பொருளைக் கூறுமிடத்துச் "சிவபெருமானை" என்ருர்.

அம்பலவன் - அம்பலத்தில் நடிக்கின்றவன்; அம்பலம் - சபை-வெளி. பொன்னம்பலம் - கனகசபை. செம்பொன் - சுத்தபொன். முழுமுதற்பொருள் - சிருட்டி திதி சம்மாரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் பஞ்சகிர்த்தியங்கள் நடைபெற நடித்தருளுமிடங் கனகசபை.

"எடுதத மொழியினஞ் செப்பலு முரிததே" என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி நினைத்தலாகிய மனததொண்டொன்றைக் கொண்டு ஏனையவாழ்த்தலாகிய வாக்குத்தொண்டினையும், வணங்கலாகிய காயத்தொண்டினையுங் கொள்க. "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச், சூழ்தத மாமலர் தூவித் துதியாதே, வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே" என்ருர் அப்பரும்.

பிறவிக்கு வித்தாயிருப்பது அவா. அவ்வவாவினைப் புலன்கள் வழிச்சென்று எழுப்புவது மனம். அவ்வெழுச்சி மனம் பிறபொருள்

களைப் பற்றுங்காலத்து நிகழ்வது. அந்நிகழ்ச்சியை விளையவொட்டாது தடுக்கவேண்டுமாயின் மனதைப் புலன்கள்வழி யுழலச்செய்யாது பிறப்பிறப்பில்லாப் பரம்பொருளினிடத்துப் பதிதல் வேண்டும். அதுவே தியானம் எனப்படும். இக்கருத்துப்படவே சுவாமிகள் "நினைமின் மனனே! நினைமின் மனனே! சிவபெருமானை; செம்பொனம் பலவனை * * * * " என்றருளிச் செய்தார்கள். இதனை "பனைக்கை மும்மத வேழமுரித்தவன், நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன், அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனை, தினைத்தனைப்பொழுதும் மறந்துய்வனோ" என்னுந் தமிழ்வேதம் வலியுறுத்தல் காண்க.

மனம்-மனன்; னகரம்போலி. மனனே எனபதிலுள்ள ஏகாரம் விளியுருபு. மனனே நினைமின் - இழிவிற் சிறப்பாக வந்த ஒருமையிற் பன்மை மயக்க மென்ப. "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி; பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே, ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்" என வரூஉந் தொல்காப்பியச் சூத்திரத்தையும், அதற்கு ஆசிரியர் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் கூத்தராற்றுப்படையுள் "கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ * * * * * * இருப்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்" எனப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் கூறியிருத்தலை எடுத்துக்காட்டி, வரைந்துள்ள உரைகளையுங் காண்க.

நினைமின் மனனே நினைமின் மனனே நினைமின் மனனே நினைமின் மனனே-இவ்வடுக்கு இசைநிறை. "இசைநிறைபொருளே நான்கு வரம்பாகும்" என்றார் தொல்காப்பியனார். "பேசுவாழி பேசுவாழி ஆசையொடு மயங்கி, மாசறு மனமே பேசுவாழி பேசுவாழி" எனச் சுவாமிகள் பிறண்டும் அருளிச்செய்திருத்தல் காண்க.

சிவபெருமானை நினைமின் மனனே நினைமின் மனனே என்றுஞ் செம்பொ னம்பலவனை நினைமின் மனனே நினைமின் மனனே என்றுங் கொண்டு கூட்டிப் பொருள் கூறுநரு முளர்.

அலகைத தேரி னலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை யுடலையோம் பற்க

(பொ-ரை) கானற் சலம்போலவும், சுழலுங் காற்றுப்போலவு முள்ள அநித்திய உலக வாழ்வினையும் உடம்பினையும் நித்தியமாக வெண்ணிப் பாதுகாவா திருப்பாயாக.

(வி-ரை) ஈண்டு உலகம் வாழ்வு உடம்பு என்றவை தநுகரண புவன போகங்களை யெனக. அவைகள் உயிர்கட்கு இறைவனுல் கொடுக்கப்பெற்ற மாயாகாரிய உடைமைகள். மாயை ஆன்மாக்களின் ஆணவமல நீக்கத்துக்கும், அறிவு விளக்கத்துக்குங் கடவுளாற் ருெழிற் படுத்தப்படும் ஒரு கருவி. எனவே உலகமும் உடலும் உயிர்களின் அறிவு விளக்கதநுக்குப் பெருங் கருவிகளென்பது பெறப்படுகின்றது. இதுபற்றியே உண்மை கண்ட பெரியோர் உடலை யோம்புவதிலும், அநுநிமித்தம் உலகவாழ்வை மேற்கொள்வதிலும் வெறுப்புறுகின்ருரில்லை. சிவஞானச்செல்வராகிய திருமூலர் "உடம்பா ரழியில் உயிரார் அழிவர், திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார், உடம்பை வளர்க்கும் உபாயம் அறிநதே, உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே" என்றும், "உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன், உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன், உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென, உடம்பினை யானிருந் தோம்புவன் யானே" என்றும் உலகத்தார்க்கு அறிவுறுத்தி யிருதுதல் காண்க.

கடவுளுண்மையினையும் உயிருண்மையினையும் மறுத்து உடலுண்மை யொன்றனையே கொணடு, அதனை யோம்புவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து, கண்டதே காட்சி கொண்டதே கோலமென இறுமாந்து திரியும் நாத்திகர்கட்கு நல்லறிவுச் சுடர்கொளுத்த வேண்டி ஞானிகள் "உடல் மாயா காரியம். அஃது அறிவில்லாப் பொருள்; தோன்றி நின்றழிவது. அதனை யோம்பற்க" எனப் பல விடங்களிற் பலவாறு திருவாய்மலர்ந்தருளி யுள்ளார்கள்.

உடலை யோம்புக உடலை யோம்புக என்ற திருவாக்குகள் ஆத்தி கர்க்காக எழுந்தன வென்றும், உடலை யோம்பற்க உடலை யோம்பற்க என்ற திருவாக்குகள் நாத்திகர்க்காக வெழுந்தன வென்றுங்கொள்ள வேண்டுவது அறிவுடையோர் கடனும்.

சண்டுச் சுவாமிகள் "உலகப்பொய் வாழ்க்கையை உடலையோம் பற்க" என்றருளிச்செய்தது நாததிகரை வழிப்படுத்த வேண்டி யென்க.

உலகமும் உடலும் மாயா காரிய மாகலானும் அவை நீரிற்குமிழி போற்றோன்றிநின்று ஒடுங்குகின்றமையானும், அவையிற்றை (காரியத்தை) அலகைத் தேரெனவும் அலமரு காலெனவுங் கூறினர். காரணமாகிய மாயை உள்பொருளேயாம். "பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப் - பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே" என்றார் மாணிக்கவாசகனாரும்.

பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்குந்
தோன்றின மறையு மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்குஞ் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கு மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்
அருந்தின மலமாம் புனைந்தன வழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்து முணர்ந்தனை யன்றியும்

(பொ-ரை) பிறந்த உயிர்கள் யாவும் இறக்கும்; (அங்ஙனம்) இறந்த உயிர்கள் யாவும் (மீண்டும்) பிறக்கும்; (நாமரூபத்தோடு) தோன்றிய பொருள்கள் ஒடுங்கும்; ஒடுங்கிய பொருள்கள் (மீண்டும் நாமரூபததோடு) தோன்றும்; பெருத்த பொருள்கள் சிறுக்கும்; சிறுத்த பொருள்கள் பெருகும்; தெரிந்தன யாவும் மறந்துபோம்;

மறந்தனவெல்லாம், உணர்வில்வரும், கூடினவைகள் பிரிதலுறும்; பிரிந்தவைகள் (மீண்டுங்) கூடும்; உண்டன வெல்லாம் மலமாகமாறும்; தரித்தவைகள் அழுககடையும்; விரும்பப்படுபவைகள் வெறுக்கப் படும்; வெறுக்கப்படுபவைகள் விரும்பப்படும் என்று இவைகளெல்லா வற்றையுஞ் செவ்வனே அறிந்து கொண்டாய். அல்லாமலும்,

(வி-ரை) பிறந்தன என்றது அண்டசம் சுவேதசம் சராயுசம் உற்பிசம் என்னும் நான்கு வழியாகத் தோன்றும் உயிர்களை. தோன் றின என்றது பிறவற்றை. பெருத்தன-தூலப் பொருள்கள்; சிறுத் தன-சூக்குமப் பொருள்கள்; இவை முறையே பருப்பொருள் நுண் பொருள் எனவும்படும். "உணர்ந்தன மறக்கும் மறந்தன உணரும்" என்றது நினைப்பு மறப்பை-விழிப்புறக்கத்தை-சகல கேவலத்தை.

இதனால் உலகங் காரிய காரண முற்றுக்கொண்டே யிருக்கு மென்பதும், காரிய காரணப்படும் பொருள்கள் என்றும் ஒருபடித் தாய் நிலைபேறாக உள்ளனவாகா என்பதும், அவைகளை நினைப்பதாற் பயன விளையாதென்பதும் பிறவும் பெறப்படுகின்றன. இக் கருத் தையே சுவாமிகள் "கண்டன மறையும் உண்டன மலமாம்-பூசின மாசாம் புணர்ந்தன பிரியும்-நிறைந்தன குறையும் உயர்ந்தன பணியும்- பிறந்தன இறக்கும் பெரியன சிறுக்கும்-ஒன்றொன் றொருவழி நில்லா அன்றியும்" எனக் கோயில் நான்மணி மாலையினும் விளங்க உரைத் தருளியது காண்க.

பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்து மனைத்துநினைக் கொன்றன
தின்றனை யனைத்து மனைத்துநினைத் தின்றன
பெற்றன யனைத்து மனைத்துநினைப் பெற்றன
ஓம்பினை யனைத்து மனைத்துநினை யோம்பின

செல்வத்துக் களித்தனை தரித்திரத் தழுங்கினை
சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை
இன்பமுந் துன்பமு மிருநிலத் தருந்தினை
ஒன்றொன் றொழியா துற்றனை யன்றியும்

(பொ-ரை.) நீ பலவாக எடுத்த பிறவிகளெல்லாம் பல உயிர்களைக் கொன்றாய்; அவைகளும் உன்னைக் கொன்றன; அவ்வுயிர்களை நீயுண்டாய்; அவைகளும் உன்னையுண்டன; எல்லாவற்றையும் நீ யீன்றாய்; அவைகளும் உன்னை யீன்றன; யாவற்றையும் வளர்த்தாய், அவைகளும் உன்னை வளர்த்தன; செல்வம்வந் துற்றகாலத்து இன்புற்றாய்; வறுமை நேர்ந்த காலத்துத் துன்புற்றாய்; தெய்வலோகத்தில் இருந்தாய்; நரகத்திற் கிடநதாய், இப்பரந்த உலகத்தில் சுகததையும் அனுபவிததாய்; துக்கத்தையும் அனுபவித்தாய்; (இக்கூறியவற்றுள்) ஒவ்வொன்றினையும்விட்டு நீங்காது அதனதன்கண் பொருந்தி அனுபவித்தாய்; அல்லாமலும்,

(வி-ரை) பிறந்தன பிறந்தன-அடுக்குமிகுதி. களிப்பு-மயக்கத்தால் வரும் இனபம். சுவர்க்கம்-புண்ணியஞ் செய்வோர் போகுமிடம். அதுபற்றியே "சுவர்க்கத திருந்தனை" என்றார். கிடந்தனை - களித்திருந்தனை யென்றபடி. நரகம்-பாவஞ் செய்வோர் செல்லுமிடம். அது குறித்தே "நரகிற் கிடந்தனை" என்றார். கிடந்தனை-துக்கித்திருந்தாய் என்றபடி. இப்பிறப்பிற் கொலை செய்யப்பட்ட ஒருவனே மறுபிறப்பில் தன்னை முற்பிறப்பில் கொலை செய்தவனைக் கொலை செய்வன என்பதுபோன்ற கருத்துக்களே யீண்டுக் கூறப்பட்டன. கரும நிகழ்ச்சியை விளங்கியவாறு காண்க.

புற்புதக் குரம்பைத் துச்சி லொதுக்கிடம்
என்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்வினும் வலிதாக் கருதினை யிதனுள்

(பொ-ரை) நீர்க்குமிழிபோன்ற (நிலையில்லாச்) சிறுகுடிசை போலவும், அருவருக்கத்தக்க ஒதுக்கிடம் போலவும் நிலவியுலவும் புண்ணிய பாவத்தாலாகிய கூட்டினை (உடலை)க் கல்லைப் பார்க்கிலும் வலியதாக எண்ணினாய்; இவ்வுடம்பிலே,

(வி-ரை) "நீரி லெழுத்தாகும் யாக்கை" என்றார் குமரகுருபரர். துச்சிலொதுக்கிடம்-ஒருபொருட் பன்மொழி. துச்சில்-ஒதுக்கிடம். அடவி காடே என்பது போல. "புக்கிலமைந் தின்று கொல்லோ உடம்பினுள் - துச்சிலிருந்த உயிர்க்கு" என்றார் திருவள்ளுவர். நீரிற்குமிழிபோன்ற உடலைக் கல்லாக்கருதல் அறியாமை என்றபடி. வினைக் கூடு-வினையாலாகிய கூடு. "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது" என்பது மணிமேகலை. இருவினை-புண்ணிய பாவம். புண்ணியம்-நல்வினை; பாவம்-தீவினை. உள்-ஏழனுருபு.

பீளையு நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
சளியு நீருந் தவழு மொருபொறி
உமிழ்நீர் கோழை யொழுகு மொருபொறி
வளியு மல்லும் வழங்கு மொருவழி
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டக முடிவிற் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை யுள்ளுறத் தேர்ந்து

(பொ-ரை) ஒருபொறியில் (கண்ணில்) பீளையும் நீரும் வெளிப்படும்; ஒருபொறியில் (காதில்) வெளிததோன்றுங் குறும்பி புறப்படும்; ஒருபொறியில் (மூக்கில்) சளியும் நீருங் கசியும்; ஒருபொறியில் (வாயில்) எச்சிலும் கோழையுஞ் சிந்தும்; ஒருவழியில் (குதத்தில்) அபானவாயுவும் மலமும் வெளிவரும்; ஒருவழியில் (குறியில்)

ரும் சீயும் ஒழுகும்; (இவ்வாறு) நீநாற்றம் உள்ளே தொடங்கி யாவர்க்கும் புலனாக வெளியிலே வந்து வீசும். உடலானது இறுதியில் சுடப்பட்ட எலும்பாகிறது. (இத்தகைய அற்ப) உடலிலே பொருந்திய வாழ்க்கையை நன்கு ஆழ விசாரித்துத் தெளிந்து,

(வி-ரை) இதனால் உயிரின் பொருட்டு உடலை யோம்பாது, அவ்வுடலையே பெருமையாகக் கருதி அதனை யோம்பி வாழும் நாத்திகரை நோக்கி உடலின் சிறுமை தெரித்தவாறும். மெய் வாய் கண் மூக்கு செவி-ஞானேந்திரியங்கள். வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் - கன்மேந்திரியங்கள். "என்பினாற் கழிநிறைச்சி மண்சுவரெறிந்து நம்மில்லம், புன்புலால் நாறுதோல் போர்த்துப் பொல்லாமையான் முகடுகொண்டு, முன்பெலா மொன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடத்தே, அன்பனா ரூர்தொழு துய்பலா மையல்கொண்டஞ்சனெஞ்சே" என ஞானசம்பந்தரும், "பொருத்திய குரம்பை தன்னைப் பொருளெனக் கருதவேண்டாம்" எனவும், "புழுப்பெய்த பண்டிதன்னைப் புறமொரு தோலால்மூடி, ஒழுகுகரு வொன்பதுவா யொற்றுமை யொனறுமில்லைச், சழக்குடை யிதனுளைவர் சங்கடம் பலவுஞ்செய்ய, அழிப்பனாய் வாழமாட்டே னாரூர்மூ லட்டனீரே' எனவும் அப்பரும், "ஊண்மிசை யுதிரக்குப்பை ஒருபொரு ளிலாத மாயம்" எனச் சுந்தரரும் அருளிச்செய்தமை யோர்க.

கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற விருவினை மலமற
வரவொடு செலவற மருளற விருளற
இரவொடு பகலற விகபர மறவொரு
முதல்வனைத தில்லையுண் முளைதெழுஞ் சோதியை
அம்பலத தரசனை யானந்தக் கூத்தனை

நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!.

(பொ-ரை) வாசனை பொருந்திய கொன்றை மாலை தரித்த சடாமுடியுடைய பரம்பொருளை, நீங்குதலில்லாத சிவபோகப் பேரானந்தத்தை (மரத்தைவிட்டு நீங்காத) நிழலைப்போல நீங்காத தன்மையுடன் பொருந்தி, எனது என்னும் பற்று அற, நினைவுகெட, இருவினைக் கேதுவாயுள்ள மலம் அழிய, பிறப்பு இறப்பு ஒழிய, மயக்கம் ஓட, ஆணவம் நசிக்க, இரவு பகல் இரிய, இம்மை மறுமை தொலைய; ஒப்பபற முதல்வனை; தில்லை வனதநிற் சுயம்புவாகத் தோன்றிய சோதி சொரூபனை; சபாநாதனை; ஆனந்த நடராஜனை; சிதாகாசத்தில் விளங்குஞ் சங்கரனை; அழலிடைப்பட்ட மெழுகைப்போலக் குழைநது குழைந்து உருகித் தியானஞ் செய்வாய் நெஞ்சே! தியானஞ் செய்வாய்; நெஞ்சே! சிவபெருமானை; சிவந்த பொன்மயமான சபையில் நடஞ் செய்கின்ற நாதனை; தியானஞ் செய்வாய் நெஞ்சே! தியானஞ் செய்வாய் நெஞ்சே!

(வி-ரை) "ஒழிவருஞ் சிவபெரும் போகவின்பத்தை" என்னுங் கருத்தைச் சுவாமிகள் "அடிசார்ந் தவர்க்கு முடியா இன்பம் நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வ" எனப் பிறண்டும் அருளிச்செய்துள்ளதைக் காண்க. மரத்தினைவிட்டு நிழல் பிரிந்திருப்பதில்லை. அதுபோலச் சிவனைவிட்டுச் சீவனும் பிரிந்து நிற்றலில்லை. பிரிந்து நிற்பதுபோலத தோற்றுவதே அஞ்ஞானம். இக்கருத்துப் பற்றியே "பிரியாது வணங்குவன் எப்பொழுதும்" என்றும் "ஒன்றியிருந்து நினைமின்கள்" என்றும் அப்பர்சுவாமிகளும் அருளிச்செய்துள்ளார்கள். எனது என்றமையான் இனம் பற்றி யான் என்பதை

யுங் கொள்க. எனது-புறப்பற்று; யான்-அகப்பற்று. "யான் என தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு, உயர்ந்த உலகம்புகும்" என்றார் திருவள்ளுவர். நினைவு எனறமையான் மறப்பினையுங் கொள்க. "நினைப்பும் மறப்பும் அற்றவர் நெஞ்சில், வினைப்பற்றறுக் கும் விமலன் இருப்பன்" என்பது திருமந்திரம். இருவினைமலம்-கன்மமலம்; மருள்-மாயாமலம்; இருள்-ஆணவமலம். இரவுபகலில்லா விடமே இன்ப இடம். இகபரம் ஆசையின்மேற்று. இறைவன் புரியுந் திருக்கூத்துக்களுக்குள் ஆனந்தக்கூத்து என்பது மொன்று. விரிவைத் திருமந்திரத்திற்காண்க. இதனாற் கூறியது சிவததையே தரிசிததுக்கொண் டிருக்கவேண்டு மென்பது.

---

## கோயிற்றிருவகவல் - 2

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுடனுடுங்
காதலுங் கருத்துமல் லானின் னிருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிருந்து

(பொ-ரை) காது அளவு நீண்ட கலகமாகிய பாதகத்தை விளைக்குங் கண்களையுடைய பெண்களின் இடையிலே துன்பத துடன் செல்லும் விருப்பமும் எண்ணமுமே அல்லாமல், தேவரீ ருடைய இரண்டு திருவடித்தாமரைகளையும் (சிரசில்) அணியப் புண் ணியஞ் செய்யாத பாவ மிகுந்த அடியேன் பக்கத்துணை நின்று,

(வி-ரை) ஓடிய கண்ணென்க: ஓடிய-பெயரெச்சம். கலகப் பாதகம் - கலகத்தைச் செய்யும் பாதகம். கலகமாவது - காமப்போர்.

இடை - காமத்தை யெழுப்பும் உறுப்புக்களுளொன்று. கன்னியர் மருங்கில் - பெண்களிடத்தில் எனலுமாம். புண் - அல்குலுமாம். "வேனில்வேண் மலர்க்கணைக்கும் வெண்ணகைச் செவ்வாய்க்கரிய, பானலார் கண்ணியர்க்குப் பதைத்துருகும் பாழ்நெஞ்சே, ஊனெலா நின்றுருகப் புகுந்தாண்டா னின்றுபோய், வானுளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே" என்றார் மாணிக்கவாசகனாரும்.

அங்கோ டிங்கோ டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை யிருவினைப் பெட்டகம்
வாதபித் தங்கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப் பாண்ட நான்முழத் தொன்பது
பீற்றறற் றுண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்
ஓயா நோய்க்கிட மோடு மரக்கலம்
மாயா விகார மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தம்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை
சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை
ஈமக் கனலி லிடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமம்
பவக்கொழுந் தேறுங் கவைக்கொழுக் கொம்பு
மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற்

பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமே
லூரிற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிரெதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கு மிந்திர சாபம்
அதிரு மேகத் துருவி னருநிழல்
நீரிற் குமிழி நீர்மே லெழுதது
கண்டுயில் கனவிற் கண்ட காட்சி
அதனிலும் பொலலா மாயக் களங்கம்

(பொ-ரை) அங்கும் இங்குமாக ஓடிச் சுழலுகின்ற திருடர்களாகிய ஐவர்கள் கலகஞ்செய்து வருத்துங்காடு; சலமும் மலமும் நிரம்பிய பெட்டி; நல்வினை தீவினை தங்கும் பொய்வீடு; வாதம் பித்தம் சிலேத்மம் என்னும் மூன்றும் வாழுஞ் சிறிய ஊர்; அழுக்கோடு கூடிய புல்லிய தோலும் இரத்தமுஞ் சேர்ந்த கருவி; தீநாற்றம் வீசும் பானை; நான்கு முழ நீளத்தில் ஒன்பது துவாரமுள்ள ஒரு மாதத்துண்டு; பேய்ச்சுரை படர்ந்த தோட்டம்; சாம்பல் மிகுந்த பாழ்ந்த சுடுகாட்டு மேடு; ஆசையாகிய கயிற்றூற் சுழலும் பம்பரம்; நீங்காத நோய்களுக்கு இருக்கை; ஓடுகிற கப்பல்; மாயையாகிய அவலட்சணம்; மரணக் கூடு; சோறு அடை துருத்தி; (காற்றில்) தூற்றப்படும் பதர்; காற்றிற் பறக்குங் காற்றாடி; கர்மத்துக்குத தக்கபடி யமன் தரிக்குங் கட்டை; நான்முகன் என்னுந் தையற்காரன் தைக்குஞ் சட்டை; சுடுகாட்டி விடப்படுஞ் சிறுவிருந்து; காமாக்கினியிற் கருகுஞ் சருகு; புழுக்கள் கிண்டுங் கிழங்குத் தோல்; பாவமாகிய தளிர் ஏறுஞ் சிறு கிளைகளையுடைய கொழுக்கொம்பு; இளமையில் திருமணக்கோலந் தாங்கி நடக்கும் பிண்டம்; இறுதியில் பிணமாகி அசைவின்றிக் கிடக்கும் பிண்டம்; பிணமான பிறகு ஊரில் நிலைக்க ஒட்டாத துன்ப நோய்; காற்றுக்கு முன்னே குவிந்த

பூளைமலர், காலையில் எழுஞ் சூரியன் முற்பட்ட கொடிய பனிக் கூட்டம்; வானததிற் றோன்றும் இந்திரவில்; இடிக்கின்ற மேகத்தி னது உருவின் அருநிழல்; நீரிற் றோன்றுங் குமிழி; நீர்மேல் எழு தும் எழுத்து; உறக்கத்துச் சொப்பனத்திற்றோன்றிய தோற்றம்; அத்தோற்றத்திலும் நிலையுதலில்லாத மாயைக் குறி;

(வி-ரை) ஈண்டு ஐம்புலக்கொடுமையைச் சுவாமிகள் குறித்த வாறே "அழிவுடைத்தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்டுக் கழியிடைத தோணிபோன்றேன்" என்றும், "முடுகுவர் இருந்துள் ஐவர் மூர்க்கரே யிவர்களோடும், அடியனேன் வாழமாட்டேன்" என்றும், "புள்ளுவர் ஐவர்கள்வர் புனத்திடைப் புகுந்துநின்று, துள் ளுவர் சூறைகொள்வர் தூநெறி விளையலொட்டார்" என்றும் அப் பர் சுவாமிகளும் அருளிச் செய்திருத்தல் காண்க. பெட்டகம்-பெட்டு+அகம். பெட்டு-பொய்; அகம்-வீடு; பெட்டியுமாம். தலை முதல் கால்வரை நான்கு முழ அளவு. பீற்றல்-கிழியல்; ஈண்டுத் துவாரம். "ஒருமுழம் உள்ள ஒன்பது ஆளையுடைத்தாய் அரைமுழம் அதனகலம்" என்றார் தாண்டகவேந்தர். பேய்ச்சுரை யென்றது பேய்ச்சுரைக கொடிபோன்ற கருவிகளை. அவை குடர் முதலியன. பிண்டம்-சடம்; உடல்; மாமிசம். வடிவின்மணமாய் நடக்கும் பிண் டம் எனக் கூட்டுக. உடல் திருமணக் காலத்தும் பிண்டமேயாம்; ஆயினும் அதுகாலை உயிரோடுகூடி யுலவுகின்றமையான் 'நடக்கும் பிண்டம்' என்றார். பிணம் அசைவின்றிக் கிடத்தலான் 'கிடக்கும் பிண்டம்' என்றார். இக்கருததுக்களைச் சுவாமிகள் பதினொராந்திரு முறையில் நன்கு விளக்கி யோதி யுள்ளனவற்றைக் காண்க.

அமையு மமையும் பிரானே யமையும்
இமய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கைநின் னருளினுக் கழகே

(பொ-ரை) (இததகைய உடலானது) வந்து பொருந்தும் பொருந்தும் ஆண்டவனே! பொருந்தும்; மலையரையன் புதல்வியாகிய உமாதேவியார் வாழ்க வாழ்க வென்று துதிக்க, ஆனந்தத் திருக்கூத்தினைக்காட்டி அடியேனைத் தடுத்தாட்கொண்டருள வேண்டுவது தேவரீர் திருவருளினுக்கு அழகாம்.

(வி-ரை) 'பிரானே அங்கோ டிங்கோ டலமருங் கள்வர் * * * களங்கம் அமையும்; தமியேன் பாங்கிருந்து தாண்டவங் காட்டி ஆண்டருள்கை அருளினுக்கழகு' எனக்கொண்டு கூட்டிப்பொருளுரைக்க. 'யாக்கை நிலையுதலில்லாதது. அத்தகைய யாக்கையை நிலையுள்ள பொருளாகக்கொண்டு மகளிரின்பத்தி லழுந்துகிறேன். அதனால் துன்பத்தைக் கொடுக்கும் பிறவி மாறி மாறி வந்துகொண்டே யிருக்கும். தேவரீர் திருவருளால் அடியேனை ஆட்கொள்ளவேண்டும்' என்பதே இத்திருவகவலிற்போந்தகருதது. உலக ஆசைகள் பலவற்றுள்ளும் பெண்ணாசை யொன்றே இறைவனையும் மறக்கச் செய்யும் ஆற்றலுடையது. அவ்வாசைக் கடலில் அழுந்திய ஒருவன் தன்முயற்சியால் கரையேற இயலாதவனாய் வருந்துவன். அதுகாலை அவனுக்குக் கடவுளின் திருவருட்டுணையே பெரிதும் வேண்டும். "மனமெனுந் தோணிபற்றி மதியெனுங் கோலையூன்றிச், சினமெனுஞ் சரக்கையேற்றிச் செறிகட லோடும்போது, மதனெனும் பாறைதாக்கி மறியும்போ தறியொணாது, உனையுனும் உணர்வைநல்காய் ஒற்றியூ ருடையகோவே" என்றார் திருநாவுக்கரசர். இமயவல்லி-தாய்; அருள். இவளே ஆன்மாக்களாகிய பிள்ளைகட்காக இறைவனை வேண்டி அவர்களை அவனிடத்திற் சேர்ப்பவள். "ஒளியாம் பரமும் உளதாம் பரமும், அளியார் சிவகாமி ஆகுஞ் சமயக், களியார் பரமுங் கருதது றை யநதத், தெளிவாஞ் சிவானந்த நட்டததின் சிததியே"—திருமூலர்.

## கோயிற்றிருவகவல் - 3



*பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்*
*திருமிடற் றடக்கிய சிவனே யடைக்கலம்*

(பொ-ரை) திருப்பாற்கடலைக்கடைய அதில் உண்டான விஷமாகிய வெண்ணெயை அழகிய கண்டத்தில் அடக்கிய சிவபெருமானே அடைக்கலம்.

(வி-ரை) தேவர்களும் அசுரர்களும் சிவபெருமானை மறந்து திருப்பாற்கடல் கடைந்தமையான், அவர்கள் விரும்பிய அமுதம் பெறாது ஆலம் பெற்றார்கள். பின்னர் அவ்வாலத்தின் கொடுமை யாற்றாது சிவபெருமானைச் சரண்புக, அப்பெருமான் ஆலத்தை அமுதாக உட்கொண்டு தேவர்களைக் காத்தருளினதுமன்றி அவர்கள் விழைந்த அமுதத்தையும் பெறச் செய்தனர். ஈண்டு அவ்வரலாற்றைக் குறிப்பிட்டது தமது ஆலமனைய ஆன்ம போதத்தை யேற்று அமுதனைய திருவருளைத் தமக்குதவுமாறு சிவபெருமானை நோக்கிக் குறையிரந்தவாறென்க. "ஏசினும் யானுன்னை யேத்தினும் என்பிழைக் கேகுழைந்து, வேசறு வேனை விடுதி கண்டாய் செம்பவள வெற்பில், தேசுடையாய் என்னை யாளுடையாய் சிற்றுயிர்க் கிரங்கிக், காய்சின ஆலமுண்டாய் அமுதுண்ணக் கடையவனே"—மாணிக்கவாசகர். அடைக்கலம்-சரண்புகல்; தஞ்சம்.

*அடங்கலு மடக்கிடுங் கடுங்கொலைக் காலனைக்*
*காலெடுத் தடக்கிய கடவுணின் னடைக்கலம்*

(பொ-ரை) எல்லா உயிர்களையும் ஒடுங்கச் செய்யுங் கொடிய கொலைத் தொழிலையுடைய யமனைத திருவடி தூக்கி யுதைத்து ஒடுங்கச்செய்த கடவுளே நினது அடைக்கலம்.

(வி-ரை) இயமனை உதைத்தருளியது மார்க்கண்டேயர் பொருட்டென்க. 'சிவமே! மார்க்கண்டேயரைப்போல யானும் அடைக்கலம் புகுகின்றேன். என்னை யமவாதனை அணுகவொட்டாதபடி செய்தருள்க' என்று வேண்டியவாறும். "மார்க்கண்டர்க்காக மறலிபட்ட பாட்டையுன்னிப், பார்க்கினன்பர்க் கென்னபயங்காண் பராபரமே" என்றார் தாயுமானாரும்.

உலகடங் கலும்படைத் துடையவன் றலைபறித்
திடக்கையி லடக்கிய விறைவநின் னடைக்கலம்

(பொ-ரை) எல்லா உலகங்களையும் படைத்தலையுடைய பிரமதேவனது தலையைக் கிள்ளி, அதனை இடது திருக்கரத்தில் தாங்கிய இறைவனே! நினது அடைக்கலம்.

(வி-ரை) ஈண்டு உலகடங்கலு மென்றது-பிரகிருதி புவனங்களை, பிரமன் தானே பிரமம் என்று செருக்குற்றபோது சிவபெருமான் அவன் தலையைக் கொய்து அவனுக்கு ஞானம் பிறக்கச் செய்தனர்.

செய்யபொன் னம்பலச் செல்வநின் னடைக்கலம்
ஐயநின் னடைக்கல மடியனின் னடைக்கலம்

(பொ-ரை) சிவந்த பொன்மயமான சபையிலே நடனஞ்செய்கின்ற திருவருட் செல்வனே! நினது அடைக்கலம்; ஐயனே! நினது அடைக்கலம்; அடியேன் நினது அடைக்கலம்.

(வி-ரை) அம்பலச் செல்வன் - நடராஜன். "செல்வன் கழலேதருஞ் செல்வஞ் செல்வமே" என்றார்-ஞானசம்பந்தரும். ஐயன்-அழகன்.

மனவலே யலேத்திடுங் கனவெனும் வாழ்க்கையும்
விழுப்பொரு ளறியா வழக்குறு மனனும்
ஆணவ மலத்துதித் தளேந்ததி லுளேந்திடு

நிணவைப் புழுவெனா நெளித்திடு சிந்தையும்
படிறும் பாவமும் பழிப்புறு நினைப்பும்
தவறு மழுக்கா றிவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சின
இகலுங் கொலையு மிழிப்புறு புன்மையும்
பகையு மச்சமுந் துணிவும் பனிப்பும்
முக்குண மடமையு மைம்பொறி மயக்கமும
இடும்பையும் பிணியு மிடுக்கிய வாக்கையை
உயிரெனுங் குருகுவிட் டோடுங் குடம்பையை
எலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலைச்
செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தைப் புலவுடற் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீறற் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் றுருத்தியை
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தைப்
புலராக் கவலை விளைமரப் பொதும்பை
ஆசைக் கயிற்றி லாடும்பம் பரத்தைக்
காசிற் பணத்திற் சுழலுங்காற் றாடியை
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்
கடுவெளி யுருட்டிய சகடக் காலைப்
பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்

காமக் காற்றெறடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கொடுமரக் கலதனை
இருவினை விலங்கொடு மியங்குபுற் கலனை
நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலத்துக் கபயநின் னடைக்கலம்
வெளியிடை யுருமிடி யிடிதனென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்
இமையா நாட்டத் திறையே யடைக்கலம்
அடியார்க் கெளியா யடைக்கல மடைக்கலம்
மறையவர் தில்லை மன்றுணின் றாடிக்
கருணைமொண் டலையெறி கடலே யடைக்கலம்
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் னிணையடிக் கபயம்
அம்பலத் தரசே யடைக்கல முனக்கே.

(பொ-ரை) மனம்போன வழியே சென்று (என்னை) வருத்தும் கனவுபோன்ற இவ்வுலக வாழ்வும், உயர்ந்த பொருளை யுணராத குற்றம்பொருந்திய மனமும், சகசமலத்திற்றோன்றி அதிலே கலந்து வேதனைப்படுங் கொழுப்பிலே யுள்ள புழுவைப் போல நெளியுஞ் சிந்தையும், வஞ்சமும், பாவமும், பழிப்பிற் கேதுவான எண்ணமும், குற்றமும், பொறாமையும், மிகுந்த மறதியும், கபடமும், பொய்யும், மூரணும், பெருங்கோபத்தால் உண்டாகும் போரும், கொலையும், ஈனத்தைப் பயக்குஞ் சிறுமைத் தொழில்களும், பகையும், பயமும், துணிவும், நடுக்கமும், மூன்று குணத்தால் தோன்றும் அறியாமையும், பஞ்சேந்திரியங்களின் சேர்க்கை

டும், துன்பமும், நோயும் நிறைந்த உடலை; உயிர் என்னும் பறவை யானதுவிட்டு ஓடுங்கூட்டை; எலும்புடனே நரம்பையுங்கொண்டு (கட்டவேண்டிய) இடங்களிற் கட்டிக் கொழுமை பொருந்திய தோலால் மூடியும் ஒழுகும்படியான குடிசையை; செழுமை மிகுந்த சிறிய உதிரப்புழுக்களுடைய கூட்டை; மலம்பொதிந்த உட லென்னும் பாண்டத்தை; மாமிசத்தால் ஆக்கப்பட்ட உடம்பாகிய கூடையை; ஒழிவின்றிச் சோற்றால் நிரப்பப்படுந் துன்பமயமான சிறு பள்ளத்தை; கொலை செய்தற்குரிய ஆயுதங்கள் அநேகமுள்ள தூணியை; வெறுப்பை யுண்டாக்குங் கருமங்களாகிய பலசரக்குச் சேர்ந்த குப்பையை; பொய்ப்பொருள்கள் சிந்துங் கந்தற் கோணியை; கோபமாகிய நெருப்பை யெழுப்புங் கொல்லன் துருத்தியை; பஞ்சேந்திரியமெனனும் பறவைகள் சேர்கின்ற கூட்டை; தொலை யாத கவலை விளையும் மரங்கள் அடர்ந்த சோலையை; ஆசையாகிய கயிற்றினாற் சுழலும் பம்பரத்தை; காசினாலும் பணத்தினாலுஞ் சுழ லுங் காற்றாடியை; பிள்ளைகள் என்னும் வினையிலே மயங்குஞ் சக் கரத்தை; உலகமென்னும் பெரும்பரப்பிலே உருட்டிவிட்ட தேர் உருளையை; பாவமாகிய பண்டங்களுடன் பிறவியாகிய கடலில் நுழைந்து, காம மென்னுங் காற்று மோதி வருத்த, துன்மார்க்க மெனனுங் கரையை அடையும்படியான கொடிய கப்பலை; இரண்டு வினைகளாகிய விலங்குகளுடன் நடமாடும் சிறுகலத்தை; யமன் வந்து கூப்பிட நடுக்கங்கொள்ளும் (இத்தகை) தேகத்தினை; பிண மெனத்தள்ளி யான் வெளிப்படுங்காலை:—தேவரீர் ஸ்ரீ பாதகமலங் களுக்கு அபயம்; நினது அடைக்கலம்; ஆகாயத்திலே உறுத்து இடியிடித்தாற்போல ஆவேசித்து எழும் வேகமான நடையையுடைய வெள்ளிய இடபத்தினை (வாகனமாகக்)கொண்ட கடவுளே! நினது அடைக்கலம்; இமையாத திருவிழிகளை யுடைய இறைவனே! அடைக்கலப்; திருவடித் தொண்டர்கட்கு எளியவனே! அடைக் கலம்; அடைக்கலம்; வேதியர்கள் வாழும் தில்லைச் சிற்றம்பலத்

திலேநின்று திருத்தாண்டவம் புரிந்து, திருவருளை முகந்து அலைக ளாக வீசுங் கடலே! அடைக்கலம்; தேவர்களும் முனிவர்களுஞ் சென்று திருமுன்னர் நின்று தோத்திரஞ் செய்ய, பசும்பொன் னாபரணங்களைத் தரித்த சிவகாமவல்லியோடு இரங்கித் திருவருள் புரியும் எம்பெருமானே! தேவரீரது இரு திருவடிகளுக்கும் அபயம்; சிற்சபையில் நடிக்கின்ற அரசே! தேவரீருக்கே அடைக்கலம்.

(வி-ரை) முக்குணம் - ரஜோகுணம், தமோகுணம், சத்துவ குணம். ஐம்பொறி-மெய் வாய் கண் மூக்கு செவி. இடும்பை-தரித் திரமுமாம். "உயிரெனுங் குருகுவிட் டோடுங் கூம்பையை" என் னுங் கருத்தை "குடம்பை தனித்தொழி யப்புட் பறந்தற்றே, உடம்போ டுயிரிடை நட்பு" எனத் திருவள்ளுவநாயனாரும் விளங்கக் கூறியுள்ளார். "எலும்பு * * * * குடிலை"- இதனை "கால்கொடுத் தெலும்புமுட்டிக் கதிர்நரம்பாக் கையார்த் தத், தோலுடுத் திரமட்டித் தொகுமயிர் வேய்ந்தகூரை, யோலெ டுத் துழைஞர்குடி யொளிப்பதற கஞ்சுகின்றேன், சேலுடைப் பழ னஞ்சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்துளானே" என்று அப்பர் சுவா மிகள் அருளிச் செய்தவாறு காண்க. மெழுக்கு எனவும் பாடம். மெழுக்கு - பீளை முதலியன. கோள் - பழமொழியுமாம். ஐம்புலம்- சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம்; சுவை ஒளி ஊறு ஓசை நாற் றம் எனத் தமிழர் கூறுப. பொதும்பை-பொந்துமாம், ஈண்டு மக்க ளென்றது பிள்ளைகளை யென்க. "மனைவிதாய் தந்தை மக்கள் மற் றுள சுற்றமென்னும், வினையுளே விழுந்தழுந்தி" என்றும் "மக் களே மணந்த தாரம்" என்றும் அப்பர் சுவாமிகள் கூறினமை காண்க. கெடுமாக்கலம் எனவும் பாடம். நடுவன்-யமன்.

தோனறி நின்றழியும் மாயா காரியமாகிய உடலைப் பொருளெ னக் கொள்ளாது சிவத்தையே பொருளெனக்கொண்டு அதனைச் சரண்புகுவதே மக்கள் கடமை யென்பது விளக்கியவாறு காண்க.

## கச்சித்திருவகவல் - 4

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும்
மானுடர்க் கெலலாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்

(பொ-ரை) நாராயணமூர்த்தி யீன்ற நான்முகன் படைப்பினால் உண்டாகும் எழுவகைப் பிறவிகளிலும் மக்கள் பிறவியில் தோன்றி, மலையரசன் புதல்வியாராகிய உமாதேவியாரின் நாயகராஞ் சிவபெருமான் திருவடித்தாமரைகளைத் தொழுது (என்றும்) விளங்காநின்ற சிவபதவியை அடையாமல், வீணைகப் பெண்களை நோக்கிக் களித்து, விருப்பங்கொண்டு உலாவும் மனுஷர்களுக்கு யான் சில உரைகளை யெடுத்துக் கூறுவேன். அழியும் பொய்த் தோற்றத்தையுடைய மாக்களே! தெளிவுபெறக் கேளுங்கள்.

(வி-ரை) எழ்பிறவி - தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. பிறவிகள் பலவற்றுள்ளுஞ் சிறந்தது மானுடப்பிறவியாகலான் "மானுடத்துதித்து" என்றார். "மனித்தப் பிறவியும் வேண்டுவதேயிந்த மாநிலத்தே" "வாய்த்தது நந் தமக்கு ஈதோ பிறவி மதித்திடுமின" என அப்பரும், "அரிது அரிது மானுடராத லரிது" என ஔவையாருங் கூறிப்போந்தமை காண்க. அத்தகைய பெறுதற்கரிய பிறவியைப் பெற்றோர் கடன் சிவனடி தொழலே என்பார். "மலைமகள் * * * * அவமே"

என்றார். "பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும், பெறுதற் கரிய பிரானடி பேணார், பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம், பெறுதற் கரிய பேறிழந் தாரே" என்றார் திருமூலரும். இறைவனைப் போற் றாது ஏந்திழையாரை யேத்துவோர், ஆறறிவுடைய மக்களாகா ரென்பார் "மாக்கள்" என்றார். "மாவு மாக்களும் ஐயறி வினவே, மக்கள் தாமே ஆறறி வுயிரே" என வரூஉந் தொல்காப்பியச் சூத் திரத்தால் தெளிக.

முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்செனவுரைத்தும்
வெள்ளெ லும்பாலே மேவிய கணைக்கால்
துள்ளும் வராலெனச் சொல்லித் துதித்தும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்
நெடுமுட லுங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்

(பொ-ரை) முள்ளிலுங் கல்லிலும் வருந்தி நடக்கின்ற உள் ளங்காலைப் பஞ்சென்று சொல்லியும், வெள்ளிய எலும்புகளாலே காக்கப்பெற்ற கணைக்காலைத் துள்ளும் வரால் மீனென்று கூறிப்

புகழ்ந்தும், மாமிசமும் எலும்பும் பொருந்திய அற்பத் தொடையைப் பொருந்தும் வாழைத் தண்டென்று வழங்கியும், நீண்ட உடம்பைச் சுமந்து நிற்கும் இடுப்பை உடுக்கை யென்றும், பிடி யென்றும் உரைத்துப் புகழ்ந்தும், மலமும் நீரும் கொழுப்பும் மடிப்பும் அசைகின்ற வயிற்றை ஆலிலையென்று சொல்லியும், பருப் போலக் கிளம்பி முன் வளர்ந்து திரண்டு பூரித்துச் சீப்பாய்ந்து பெருகி நகத்தாற் கீற உலர்ந்து உள்ளுருகிச் சிரிப்பவர்கட் கிடமாய்த் தொங்கி வாடுங் கொங்கையைத் தாமரை மொக்கென்று சாற்றியுங் குலைகின்ற, காமத்தாற் கண்ணிழந்த, குருடர்களுக்குச் சொல்லுவேன்.

(வி-ரை) ஈண்டுக் கூறிய மகளிர் உறுப்புக்கள் யாவுங் காமுகர்களை இன்புறுத்தி மகிழ்விக்கின்றமையான், அவை அவர்களாற் புகழப் பெறுகின்றன. காமிக்குக் கண்ணில்லை யென்னும் பழமொழி யுண்மையானும், அவர்கட்கு அகக்கண் விழிப்பின்மையானும் "குருடர்" என்றார்.

நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியிங் கியற்றும்
அங்கையைப் பார்த்துக் காந்தளென் றுரைத்தும்
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும
வெரிப்பு முத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றாய்மல ரென்றும்
அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முதலெனை மொழிந்தும்
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்

தண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்
உள்ளுறை குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்
கையு மெண்ணெயுங் கலவா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்

(பொழிப்புரை) நீட்டவும் முடக்கவும் மிகுந்த பொருள் வாங்கவும் உண்பிக்கவும் பிசையவும் துணைசெய்யும் உள்ளங் கையினைக் காந்தள்மலர் என்று கூறியும், வியர்வையும் அழுக்கும் பொருந்திய கழுத்தை உலகத்தில் இனிய பாக்குமாமென்று சொல்லியும், வெம்மையும் ஊத்தையும் பொருந்திய வாயைப் பவள மென்றும் முருக்கின் புனிதமல ரென்றும் புகன்றும், சோற்றையுங் கறியை யும் மென்று (வயிற்றில்) இறக்கும் முன்னேயுள்ள பற்களை முத் தென்று பேசியும், நீருஞ் சளியும் நின்று நின்று ஒழுகுகின்ற கூர் மையான மூக்கைக் குமிழம்பூ என்று பகன்றும், குளிர்ந்த சலமும் பீளையும் நீங்காது சிந்துங் கண்ணை நோக்கிச் செங்கழுநீர் மலரென் றும், உள்ளே யிருந்து குறும்பி கசியுங் காதை வள்ளைத் தண்டி னது செழுமை யென்று செப்பியும், கையின் சேர்க்கையும் எண் ணெயின சேர்க்கையும் இல்லாமற்போகுமானல், கொடிய புழுதி யும் (சுண்டும்) பேனும் தோன்றத்தக்க தலையோட்டில் முளைத்துக் கிளம்பிய சிக்கு மயிரைத திரண்ட மேகமென்றும் (இத்தகைச்) சொற்கள் பலபடப் பேசிப் போற்றி நீங்கள் விரும்பி நுழையும் நரகவாசலானது,

(வி-ரை) அகம்+கை=அங்கை. அங்கை - அழகிய கையுமாம். துப்பு-சிவந்தவெனினுமாம்.

தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெறு வாயில்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக னுய்கா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்
திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்
இதனை நீங்க லினிதென வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவர் முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமும்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை

ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

(பொ-ரை) தோலும் மாமிசமும் நிரம்பிச் சீவடியும் காமக் குகை; கரு உற்பத்தியாகும் வயல்; சூதகம் ஒழுகும் வழி; துவாரம் உள்ள வாசல்; எட்டுச்சாண் உடம்பு வெளிவரும் பெரியவழி; மண்ணுலகில் காமத்தைக் கழித்தற்குரிய மறைவிடம்; அவ்வி டத்தை விரும்பிக் காமுகன் என்னு நாய் எப்பொழுதும் ஆசை கொண்டு கிடக்குழ் இடைவாசல்; சந்திரனைச் சடையில் தரித்த சிவபெருமான் திருவருளைப் பெறாதவர்கள் தங்கி யுழலும் மெல் லிய பெருவழி; இது புண்ணென்று புடைவையால் மூடியும் உள் நீரூற்றும் ஓசையுடைய சிவந்த புண்; மருள்வாய்ப்பட்டு (திருவரு ளுண்மை) அறியாத மனிதர்கள் நுழையும் வழி; காம நோய்ப் பட்டு (அதினின்றும்) நீங்காத கீழ்மக்கள் போகும் வழி; (மாத ரின்பமே உயர்வுடைத்தெனத்) தருக்கிய காமுகர் அடையும் படுகுழி; செருக்குக் கொண்ட காமுகர்கள் கூடுஞ் சிறு குழி; பெண்களும் ஆண்களும் பிறக்கின்ற பெரியவழி; மலம்வழிந்து இறங்கும் வாயி லுக்கு அருகே சலமொழுக்கி இறங்குந் தண்ணீர்வாயில். இவ்வாயிலை (அல்குலை) நீங்கள் இன்பம் உடையதென்று விரும்பாமல், அவ் விலைமாதர்களை (மேற்கூறியபடி) துதித்தலினின்றும் விலகிப் பச் சிலையைக்கிள்ளி அருச்சித்தாலும் அன்பர்களாயின் அவர்கள்மேற் கருணைசெலுத்தி (அவர்களைக்) கொண்டாடிச் சிவபதமாகிய வீட் டினைத் தந்தருள்பவனும், மோட்சதத்துக்குத் தலைவனும், (தோற்ற வொடுக்கங்களாகிய) விகாரமில்லாத நித்தியனும், தேவலோகத்தை யும் மற்றுமுள்ள லோகங்களையும் படைத்த பெருமானும், திருக் காஞ்சியில் எழுந்தருளி யுள்ள கடவுளும் ஆகிய ஒப்பற்ற முதல்வ னுடைய இரண்டு திருவடிகளையும் வணங்குங்கள்.

(வி-ரை) வீடு அடைவதற்கு அல்குலாசையை அறவே யொழித் தல்வேண்டு மென்றவாறும். "அரவகல் அல்குலார்பால் ஆசைநீத்த

வர்க்கே வீடு, தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன்" என்றார் பரஞ்சோதிமுனிவர். எவராயினும் பச்சிலையிடின் அவர்க் கருள் செய்பவன் இறைவன் என்பதை "யாராலும் அளவிடுதற் கரியவொரு பரம்பொருளை, நீராலு மலராலு நெஞ்சுருகப் பணை லாமே" என வரூஉம் எல்லப்பர் உரையான் உணர்க. கண்ட - காரி யப்படுத்திய. போகமாதர் என்றது பொதுமகளிரை.

---

## திருவேகம்பமாலை

அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற் [னே.
றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம்ப

(பொ - ரை) திருக்காஞ்சியில் எழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! இல்லறத்தை நடாததுகின்றவனைப்பார்க்கிலும், இல்லத்தை விட்டு நீங்கி (புறப்பற்றை யொழித்து) துறவொழுக்க மேற் கொண்டவன் கோடிபங்கு மேம்பட்டவன்; அவனைப் பார்க்கிலும் அகத்துறவு கொண்டவன் நூறுகோடிபங்கு மேம்பட்டவன்; அதரு மந் தன்னை விட்டொழிய நன்னூற்களைப் பயின்று, சித்பொருளா கிய தேவரீருடன் விளங்கி; இருவகைத் துன்பங்களற்று, யான் என்னும் முனைப்பை அழித்தவனது மாண்பை யென்னென்று கூறுவேன்?

(வி-ரை) ஈண்டு முதற்கண் அறமென்றது இல்லறத்தை. என்னை? பின்னர் இல்லந்துறந்தான் என்றருளிச் செய்தமையான் என்க. "அறமெனப்பட்டதே யில்வாழ்க்கை" என்றார் திருவள்ளு வரும். இல்லம்-வீடு. இல்லந்துறந்தான்-புறப்பற்றுக்களை விட்டவன்;

புறப்பற்றுவது எனதென்பது. உள்ளத்துறவுடையோன் - சந்நியாசி. அறிவோடுள்ளவன்-யோகஞானி. அறிவுமயமாய் விளங்கும் ஞானியே சீவச்செயல் சிறிதுமின்றிச் சிவமாகி வீடு அடைவனாகலானும், அவன் பெருமையை அளவிடுதல் ஆண்டவன் பெருமையை யளவிடுதலோடு ஒக்குமாகலானும், பிறவானும் "பெருமையை யென் சொல்லுவேன்" என்றார். அப்பெருமை கூறொணாதது என்றபடி. பிறவற்றை யூகித்துக்கொள்க. மறம்-அதருமம். (அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் முதலியன) கற்றல்-அபரஞானம்; அறிவோடிருத்தல்-பரஞானம். "கல்லார் நெஞ்சில் நில்லா னீசன்" எனவும் "கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்" எனவும், "கற்றதனாலாய பயனென்கொல்வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்" எனவும் வரூஉம் ஆன்றோர் திருவாக்குகளை யோர்க.

ஈண்டுச் சுவாமிகள் ஆன்மாக்கட்கு இருநிலை குறிப்பித்துள்ளார்கள். ஒன்று ஆன்மா மறத்தோடிருத்தல்; மற்றொன்று அறிவோடிருத்தல். மறதோடுள்ள நிலை பெததநிலை யெனப்படும். பிறநிலைகள் சீவன்முதத நிலையும் முத்தநிலையுமாம். எனவே மறமென்றது தத்துவங்களை யென்க. அறிவெனறது சித்தாகிய சிவத்தை யென்க. ஆன்மா தத்துவங்களோடு கலந்துள்ள காலத்தில் தன்னிலை மறந்து தன்னைக் கண்டப் பொருளாகவும் அளவிடக் கூடியதாகவுங் கருது மென்க. இதுபற்றியே சில நூல்கள் ஆன்மாவுக்கு அணுத்தன்மை கற்பிக்கின்றன. ஆன்மா தத்துவங்களைக் களைந்து தத்துவாதீதமாகிய சிவத்தோடுகலநது விளங்குங்காலத்து அகண்டமாய் அளவற்றதா யொளிருவதென உண்மை நூல்கள் கூறுநிற்கும். "அவனையகன றெங்கின்று மாங்கவனு யெங்கும், இவனை யொழிந் துண்டாத லில்"—திருவருட்பயன. இருவாதனை-நல்வினை தீவினை, பிறப்பு இறப்பு-நினைப்பு மறைப்பு. இறந்தான-சீவபோகத்தைக் கொன்றவன். பெத்தநிலையில் மாண்டவன் என்றபடி. சீவபோத முள்ளமட்டுஞ் சிவந்தோன்றாதென்க. 1

கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலதச்சன்
வெட்டி முறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டாற்
கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால்
எட்டி யடிவைப் பரோவிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! யமனென்னுந் தச்சன், வெட்டி முறித்துத் தள்ளும் மரத்தைப்போல் உடலைக் கீழேதள்ளி வீழ்த்திவிட்டால், கட்டித் தழுவும் மனைவியரும், பிள்ளைகளும் பறைகளை யடிப்பித்து வாத்தியங்களை முழக்குவித்துப் புலம்புகின்றவர்களாய்ச் சுடுகாடு மட்டும் போந்து (திரும்பிவிடுவார்கள்) அதற்குமேல் ஓரடியாயினும் எடுத்துவைப்பார்களோ (வைக்கமாட்டார்கள்.)

(வி-ரை) இறைவன் - எங்குந் தங்குகிறவன் என்பர் அடியார்க்கு நல்லார். பெண்டிரையும் மக்களையுங் கட்டி அணைப்பது காதலால் என்க. "கட்டி யணைத்திடும்" என்னுங் குறிப்பு மிக நெருங்கிய உறவின் முறைமையை உணர்த்துவது. நெருங்கிய உறவினராகிய பெண்டிரும் மக்களுஞ் சுடுகாடுமட்டும்போந்து அதற்குமேல் உடனேகா தொழிவரெனில், ஏனைய உறவினர் எவ்வளவுதூரந் துணைபோவரென்பதையும், பிற அஃறிணைப்பொருள்கள் எதுணை உதவிசெய்யு மென்பதையும் ஆராய்ந்து தெளிக. காலன் - உயிர்களின் காலத்தை அளவிடுபவன். தச்சன மரத்தைவெட்டிச் சாய்ப்பதுபோலக் காலனுஞ் சரீரத்தைக் கொன்று சாய்க்கின்றமையான் அவன் தச்சனெனப்பட்டான். "எத்தாயார் எத்தந்தை எச்சுற்றத்தார் எம்மாடுஞ் சும்மாடாம் எவர் நல்லார், செத்தால் வந்து உதவுவார் ஒருவரில்லை சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்" என்றார் திருநாவுக்கரசுசுவாமிகளும், 2

கைப்பிடி நாயகன் தூங்கையி லேயவன் கையையெடுத்
தப்புறந் தன்னி லசையாமன் முன்வைத் தயல்வளவில்

னொப்புடன் சென்று துயினீத்துப் பின்வந் துறங்குவளை
எப்படி நானம்பு வேணிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! (கலியாணகாலத்திற் பலரறியக்) கையைப் பற்றிய (உரிமைக்) கணவன் உறங்குங் காலத்திலே, அவனுடைய கையினையெடுத்து அந்தப்பக்கத்தில் அசையாமல் விரைவாகவைத்து அப் பக்கத்து வீட்டிற்கு மனப்பூர்வமாகப் போய்த் தூக்கங் கழித்து, மீண்டுந் (தன் நாயகன் பக்கலில் வந்து) தூங்குபவளை நான் எவ்விதம் நம்புவேன்?

(வி-ரை) "கைப்பிடி" என்றமையான் அக்கினிசாட்சியாகத் தேவர்களறியப் பெரியோர் முன்னிலையில் விதிப்படி மணஞ்செய்த குலமகளென்பதும் விலைமகளிரல்லரென்பதும் நனி விளங்கும். தீயொழுக்கமுடைய வீட்டுப் பெண்கள் நாயகன் அயர்ந்து உறங்கும் வேளையை யூகித்தறிதல் முதலியவற்றை அதிவிரைவில் பயின்று தேர்வது இயல்பு. முன்-விரைவு; காலச்சுருக்கம். அயல்வளவில்-அண்டை வீட்டிலுள்ள சோரநாயகனிடத்தில்; ஆகுபெயர். ஒப்புடன்-இசைவுடன் (முன்னேற்பாட்டின்படி.) துயில்நீத்து-புணர்ந்து, இடக்கரடக்கல், "தாரு மாலையு மயங்கி" என்றார் இளங்கோவடிகள். இதனாற் பெண்களைப் பொருளாகக்கொண்டு அவர்களைப் போற்றி வழிபடும் உலகாயதர்களுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தியவாறும். மனைவியை மாத்திரங்கூறாது அவள் கொடுஞ் செயலையுங் கூறியது அவள்பாலுள்ள உறுதியை அறுக்கவேண்டியென்க. சுவாமிகள் தமது அனுபவத்தைக் கூறினாரெனச் சிலர் கூறுப. அக்கூற்று ஏற்றுக்கொள்ளற்பாலதன்று. ஈண்டுச் சுவாமிகள் நம்பற்குரிய பொருள் சிவமே என்று வலியுறுத்துவான் புகுந்து, ஒருவனுக்கு உலகில் உயிராயுள்ள மனைவியையும் நம்பலாகாதென்றும், அவள் தன்மாட்டு நம்புதலுடைய நாயகன் உறங்கும்வேளையில் அயல்வீடு சென்று பிறனோடு கலந்து இன்பந்துய்த்து

மீண்டும் இல்லான் பக்கல் போந்து ஒன்று மறியாதவள்போல உறங்கி அவனை ஏமாற்றும் நீர்மையுடையாளாகலின் அவளை எப்படி நம்புவதென்றும் உலகிற்கு அறிவுறுத்தினர். உயிர்க்குயிராயுள்ள இல்லாளையும் நம்பாது, சிவத்தையே நம்புதல் வேண்டுமென்பது கருத்து. 3.

நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினல்
தன்னாலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போல்
உன்னாலி யானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! நல்ல நாரினால் இணைக்கப்பெற்ற சூத்திரப் பதுமை, நல்லநார் அறுந்தால், தானே இயங்கிச் சலிப்புறுமோ (உறாது.) அதுபோலத் தேவரீர் திருவருட்டுணையால் அடியேன் நடமாடுவதல்லால், தேவரீரைப் பிரிந்து நின்றால் எளியேனால் இங்கே ஒருசெயல் நிகழ்வதுண்டோ (நிகழாது.)

(வி-ரை) சூத்திரப்பாவை - கயிற்றினாலாடும் பாவை. வேதாகமங்களாற் பிரதிபாதிக்கப்பட்ட பொருள் மூன்று - அவை உலகு உயிர் கடவுள் என்பன. இவையிற்றுள் கடவுள், உலகு உயிர்களில் நீக்கமற நிறைந்துநின்று அவைகளை யியக்குவது. கடவுளை விடுத்து உலகுயிர்கள் வேறாகத தனித்து நிற்றலில்லை இதுபற்றியே சிவஞானசித்தியும் "அரன்கழலை யகன்று நிற்பதெங்கேயாமே" என்று முழங்குகிறது. இறைவனையன்றிச் சீவர்கட்குச் செயலின்மையான் "உனைப் பிரிந்தால் என்னாலிங் காவதுண்டோ" என்றார். "ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே அடக்குவித்தா லாரொருவர் அடங்காதாரே, ஓட்டுவித்தா லாரொருவர் ஓடாதாரே உருகுவித்தா லாரொருவர் உருகாதாரே, பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே பணிவித்தா லாரொருவர் பணியாதாரே, காட்டுவித்தா லாரொரு

வர் காணுதாரே காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்றார் திருநாவுக்கரசுசுவாமிகள். "அவனன்றியோரணுவும் அசையாது" என்னும் பழமொழியுங் கருதத்தக்கது. 4

நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோவக மும்பொருளும்
இலலாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பும்
எல்லாம வெளிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! நல்லவர்களுடைய சேர்க்கையும், தேவரீரது பூசையில் விருப்பமும், ஞானமும் அல்லாமல் உறுதி நிலை வேறு உண்டோ? வீடும் சொத்துக்களும் மனைவியும் பந்துக்களும் பிள்ளைகளும் உலகவாழ்க்கையும் அழகிய உடம்பும் இவை யாவுங் (கயிற்றில் அரவு தோன்றுவது போல) வெளிமயக்கத் தோற்றமேயாம்.

(வி-ரை) நல்லாரென்றது - சாதுசங்கத்தை. மக்கள் அடைய வேண்டிய உறுதிப்பொருள் ஞானம். அந்த ஞானஞ் சிவபூசையால் விளங்குவது. சிவபூசையாவது சிவபிரானை இடையறாது தியானிப்பது. அப்பூசைக்கு இன்றியமையாதது அன்பு. பூசையினிடத்தன்பு நல்லாரிணக்கத்தால் நிகழும். இம்முறைபற்றியே "நல்லாரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே" என்றார். மக்கள் ஞானத்தைப் பெற முதலாவது தேடவேண்டுவது நட்பேயாம். இவ்வுண்மை நோக்கியே "செயற்கரிய யாவுள நட்பின்" என்றார் பெருநாவலரும். இதுகாலை நண்பு என்னுஞ் சொல் தன் உண்மைப் பொருளை யிழந்து நிலவுகிறது. திருவள்ளுவநாயனார் நட்பைப்பற்றி அருளிச்செய்த அதிகாரங்களை நோக்குக. நல்லாரிணக்கம்-நன்னட்பு. நன்னட்புடையோர் இறைவனுக்கு அடியாராவர். "அடியா ருறவும் அரன்பூசை நேசமும் * * * " எனப் பிறண்டும் சுவாமிகள் அருளிச்செய்துள்ளார்கள். "வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய்

வாழ்த்தவைத்து, இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்து" என்பது திருவாசகம். இச்செய்யுளான் கொள்ளற்பாலன இவை யென்பதும், தள்ளற்பாலன இவை யென்பதுங் குறிப்பிட்டவாறும். உயிர்ச்சார்பு பொருட்சார்புகளையே பொருளாக்கொண்டு அவைகள் மாட்டு இடையறுப் பற்றுவைப்போர் நல்லாரிணக்கம் முதலியவற் றைப் பெறுதலரிது. 5

பொல்லா தவனெறி நில்லா தவனைம் புலன்கடமை
வெல்லாத வன்கல்வி கல்லாத வன்மெய் யடியவர்பாற்
செல்லா தவனுண்மை சொல்லா தவனின் திருவடிக்கன்
பில்லா தவன்மண்ணி லேன்பிறந் தேன்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! (அடியேன்) கொடியவன்; சன்மார்க்கத்தில் ஒழுகாதவன்; பஞ்சேந்திரியங்களை ஜெயிக்காதவன்; ஞானநூல்களைப் படியாதவன்; உண்மை அடியவர்களிடஞ் சேராதவன்; மெய் பேசாதவன்; தேவரீர் திருவடிக்கு அன்பு இல்லாதவன். (இத்தகையயான்) பூமியில் ஏன் உடல் தாங்கினேன்?.

(வி-ரை) மக்கட் பிறவியைத் தாங்கினோர் கடைப்பிடித் தொழுகவேண்டிய நெறிகளை எதிர்மறை முகததான் விளக்கிய வாறு காண்க. "குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன் குற்றமே பெரிதுடையேன் கோலமாய, நலம்பொல் லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன் நல்லாரோ டிசைந்தி லேன் நடுவேநின்ற, விலங்கலேன் விலங்கல்லா தொழிந்தேனல் லேன் வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேசவல்லேன், இலம்பொல் லேன இரப்பதே ஈயமாட்டேன் என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே"—திருத்தாண்டகம். இதனால் பொல்லாதவன் இலக் கணங் கூறியவாறு காண்க. உண்மை சொல்லாதவன் திருவடிக் கன்பில்லாதவனுவன் என்றபடி. உண்மைக்கும் ஆண்டவன் திரு

வடி அன்புக்கும் உள்ள தொடர்பு கருதற்பாற்று. உண்மையில்லா தான் ஆண்டவன் திருவடிக்கு அன்பனுகான் என்பது குறிப்பு. உண்மையின் மாண்பு நோக்கியே ஆண்டவன் திருவடி அன்பிற்கு முன்னர் அதை அமைத்து ஓதினுர் என்க. உண்மையில்லாதவன் பொல்லாதவனுய், நன்னெறி நில்லாதவனுய், புலன்களை வெல்லாதவனுய், கல்வி கல்லாதவனுய், மெய்யடியவர்பால் செல்லாதவனுயிருப்பன் என்று சுவாமிகள் விளக்கியவாறு காண்க. 6

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்தந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லுவேன் கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! உலகத்தில் பிறக்குங்காலத்தில் ஒரு பொருளுங் கொண்டு வந்ததில்லை; பிறந்த பிறகு இறக்குங்காலத்திலும் ஒன்றுங்கொண்டு போவதில்லை. இடைக்காலத்தில் தோன்றும் பொருட்செல்வஞ் சிவபெருமானுல் அளிக்கப்பெற்றதென்று உறுதிகொண்டு (இரப்பவர்கட்கு) கொடுக்கத் தெரியாமல் வாளா மாண்டுபோகுங் கீழ்மக்களுக்கு என்ன உரைப்பேன்?.

(வி-ரை) பிறப்பு இறப்புக்கு இடையில் மக்கள் பெறும் பொருள் சிவனருளால் கொடுக்கப்படுவதாதலான் "குறிக்குமிச் செல்வம்' என்ருர். "எல்லாம் உன் உடைமையே" என்ருர் தாயுமானுர். "இப்பொன்னீ இம்மணிநீ" என்ருர் அப்பரும். அறிவுடையோர் பொருளை வறியோர்க் கீந்து பேறு பெறுவர். அல்லாதார் பொருளைப் பொருளாகக் கொண்டு இடர்ப்படுவர். "செல்வத்துப் பயனே ஈதல்" என்பது புறநானூறு. "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது-ஊதியம் இல்லை உயிர்க்கு" "ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை, வைத்திழக்கும் வன்கணவர்"—திருக்குறள். பிறப்பு

இறப்பு நினைவு தோன்றும் ஒருவனுக்கு இடை வாழ்வின் நிலையாமை யும், அவ்வாழ்விலுறும் பொருளாராய்ச்சியும், அவ்வாராய்ச்சியால் அது சிவனுடைமை என்ற உணர்வும், அவ்வுணர்வால் கொடைக்குண மும் உண்டாகுமென்க. ஆகவே மக்கட்குப் பிறப்பிறப்பு நினைவு இடையறாது தோன்றல் வேண்டும். அந்நினைவு தோன்றப்பெறாதார் பொருளைப் பொருளாக்கொண்டு கொடையின்பந் தெரியாது விலங்கு வாழ்வை நடாத்தித் துன்புறுவரென்க. 7

அன்ன விசார மதுவே விசார மதுவொழிந்தால்
சொன்ன விசாரந் தொலையா விசாரநற் றோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரமிப் பாவிநெஞ்சுக்
கென்னவி சாரம்வைத் தாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! (அடியேனுக்கு முதலில்) சோற்றுக்கவலையே பெருங்கவலையாகத் தோன்றுகிறது; அது நீங்கினால் பொருட்கவலை ஒழியாத கவலையாகிறது; அது கழிந்தால் அழகிய மயில்போன்ற சாயலுடைய மகளிரை நெருங்கிச் சேரவேண்டிய கவலை பலநாள் (துன்புறுத்தும்) கவலையாகிறது. இப்பாவி மனதிற்கு என்ன கவலையை உண்டாக்கிவிட்டாய்?.

(வி-ரை) மனிதன் கலியுகததில் அன்னத்தால் உயிர்பெற்று விளங்குவன் என்பது சரித்திரம். இதனை "உயிரானது முதலாம் யுகத்தில் என்பிலும், இரண்டாம் யுகத்தில் தசையிலும், மூன்றாம் யுகத்தில் இரத்தத்திலும், நாலாம் யுகத்தில் அன்னம் முதலியவற் றிலுமிருக்கும்" என்று பாராசரஸ்மிருதி ஆசாரகாண்டம் யுகதர்ம பேதத்தில் கூறியவாற்றானுணர்க. உயிர்வாழ்க்கைக்கு இன்றியமை யாது வேண்டற்பாலது அன்னமாகலான் முதற்கண் "அன்ன விசாரம்" என்றார். நல்வழியும் "சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்

ணீர்க் கடல்கடந்தும், பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் போவிப்பம், பாழி னுடம்பை வயிற்றின் கொடுமைக்கா, நாழி அரிசிக்கே நாம்" எனக் கூறுவது காண்க. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே" என்றார் சாததனாரும். அன்னமும் பொருளும் இல்வழி பெண் விசாரமு மில்லை யென்பதை விளக்க வேண்டுவ தில்லை. அன்னவிசாரக்கொடுமையை "அதுவேவிசாரம்" எனறும், சொர்ணவிசாரததை "தொலையாவிசாரம்" எனறும், தோகையர் விசாரத்தை "பலகால்விசாரம்" என்றும் சுவாமிகள் கூறியிருததல் கவனிக்கததக்கது.

8

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின் னஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையுந் துதியாப பிழையுந தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும பொறுததருள் வாய்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியில் எழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! (சிறியேன்) ஞானநூல்களைப் படியாத குற்றத்தையும், அவைகளைச் சிந்தியாத குறறததையும், மனமிளகி யுருகித திருச்சந்நிதிமுன்னர் நில்லாத குற்றத்தையும், திருவடியைத தியானஞ் செய்யாத குற்றத்தையும், தேவரீரது ஸ்ரீ பஞ்சாட்சரத்தைச் செபியாத குற்றததையும், தேவரீரைத் தோத்திரஞ் செய்யாத குற்றததையும், வணங்காத குற்றத்தையும், மற்றுமுள்ள எல்லாக் குற்றங்களையும் பொறுத்துத் திருவருள் செய்வாய்.

(வி-ரை) கல்லாப்பிழை முதலியன புததிபூர்வகமாக நிகழ்வன மற்றெல்லாமென்றது அபுத்திபூர்வகமாக நிகழ்வனவற்றை. ஞான நூல்களைப் பயிலாதிருத்தல் பிழையென்றார். என்னை? கல்வியில்லாதாருளத்தில் கடவுள் வீற்றிராமைகலான். இதுபற்றியே ஞானசம்பந்தரும் "கல்லார் நெஞ்சில் நில்லா னீசன்" என்றருளிச்செய்தனர். ஞானநூல்களைக் கற்றபின்னர் அவைகளின் சாரங்களைச் சிந்திக்க

வேண்டுமென்பார் "கருதாப்பிழையும்" என்றார். கல்வியினாலாயபயன் கடவுளை மறவாதேத்தல் என்பார் "கசிந்துருகி * * * * தொழாப்பிழையும்" என்றார், "கற்றதனா லாயபயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்"என்றார்பெருநாவலரும். கசிந்துருகி நிற்றல் முதலியன அடியாரிலக்கணங்களாம். நினைதல்-மனத்தொண்டு; சொல்லலுந் துதித்தலும்-வாக்குத்தொண்டு; தொழல்-காயத்தொண்டு; கசிந்துருகி நிற்றலும், அஃதுருதபோது ஆண்டவனைத் தியானித்தலும், அதற்குக் கேடு நேராதவாறு அஞ்செழுத்தோதலும், இம்மனத்தொண்டு ஆக்கம்பெறத் துதித்தலும்; இவ்வாக்குத்தொண்டும் முன்னைய தொண்டுகளும் இடையீடின்றி நிகழக் காயத்தொண்டாற் றொழுதலும் இன்றியமையாதன. எல்லாத் தொண்டுகளுக்கும் அடிப்படை காயத்தொண்டே. இதுபற்றி இறுதியில் அதை அருளினார் போலும்!. ௧.

மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூட்டிப்பின் றாயைமறந்
தேயுமதே நிட்டை யென்றா னெழிற்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) அழகிய திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! வஞ்சனையுடைய சினேகர்களையும், அழியாத மலமென்னும் பெண்களையுந் தன்னை விட்டுக் கெட்டொழியத் தூரத்தி (சர்வசங்க பரித்தியாகஞ் செய்து) துறந்து உண்மைத் திருவருளாகுந் தாயோடு தொடர்ந்து சென்று, பிறகு தந்தையாகிய சிவத்தைச் சேர்ந்து அதற்குமேல் தாயை மறந்து பொருந்தியிருப்பதே நிஷ்டையென்று உபதேசித்தருளினன் (எனது குருநாதன்.)

(வி-ரை) மாயநட்போரென்றது தத்துவங்களை; சகலாவத்தையை. மாயாமலமென்பது சகசமலமென்னும் ஆணவமலத்தை;

கேவலாவத்தையை. ஆன்மா-இருவினையொப்பு மலபரிபாகஞ் சததி னிபாதம் பெற்றுச் சிவத்தோடு இரண்டறக்கலந்து ஒன்றியிருப்பதே நிஷ்டையென விளக்கியது காண்க. தாய்-திருவருள், தந்தை-சிவம்; மாயாமலம்-கெடாதமலம்; ஆணவம். திருவருட்பயன் "பலரைப் புணர்ந்து மிருட்பாவைக்குண்டென்றும், கணவர்க்குந் தோன்றாத கற்பு" என ஆணவத்தைப் பெண்ணிற்கு உருவகித்துக் கூறியிருத்தல் காண்க. ஆணவம் முத்தியிலும் வலிகுன்றிக் கிடத்தலின் அதை மாயாமலம் என்றார். திருவருட் டுணையின்றிச் சிவத்தைக்கூடலொண் ணாது என்பது சித்தாந்த நூறறுணிபு, "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள், பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள், அன்னையையும் அத்தனையும் அன்றேநீத்தாள் அகன் றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத், தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"—தேவாரம். தாயை மறக்குமிலை தந்தையாகிய சிவத்தோடு கூடியிருக்குநிலை. அதுவே அதநுவிதநிலை என்பது. சுவாமிகள் தாம் பாடிவரும் தலக் கடவுளை வழக்கம்போல முன்னிலைப்படுத்தியும் அவரைக் குரு வாகக் கூறுமிடததுப் படர்க்கைப்படுததியும் ஈண்டுக் கூறியுள்ளது கவனிக்கததக்கது. 10

வரிக்கோல வேல்விழி யாரநு ராக மயக்கிற்சென்று
சரிக்கோது வேனெழுத தஞ்சுஞ் சொலேன்றமி யேனுடலம்
நரிக்கோ கழுகு பருந்தினுக் கோவெய்ய நாய்தனக்கோ
எரிக்கோ விரையெதுக் கோவிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! செவவரிபடர்ந்த அழகிய வேல்போன்ற கண்களை யுடைய பெண்களினது காமமயக்கத்திற் சிக்கி அவர்களுடன் விளை யாடும் பொருட்டு அவர்களைப் புகழ்ந்துரைப்பேன்; ஸ்ரீபஞ்சாட்சரத்

தைச் செபியேன். (ஆனபடியால்) எளியேன் உடம்பு நரியினுக்கோ கழுகினுக்கோ பருந்தினுககோ கொடிய நாயினுக்கோ நெருப்பி னுக்கோ மற்றெதனுக்கோ உணவாகும்.

(வி-ரை) அனுராகம்-காமம். ஓதுவேன் என்பதற்கு மதன நூல்களை யோதுவேன் எனக் கூறலுமொன்று. "வேலங்காடு தடங்கண்ணார் வலையுட்பட்டுன் னெறிமறந்து, மாலங்காடி மறந்தொழிந்தேன்" என்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகளும், அஞ்செழுத்தை யோதாது அணங்கைமா ரின்பததி லழுந்துவோர் சரீரசித்தி முதலியன பெறாது நாய்க்கும் நரிக்கும் இரையாவரென்பது. காமநினைவை அழிக்கவல்லது பஞ்சாட்சர ஜெபமாகலின், "எழுத்தஞ்சுஞ் சொலேன்" என்றார். "காம வான்சுற வின்வாய்ப் பட்டு இனி யென்னே உய்யுமா றென்றென றெண்ணி, அஞ்செழுத தின்புணை பிடித்துக் கிடக்கின்றேனை" என்றார் மாணிக்கவாசகரும். 11

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென்கண்ணெதி
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட [ரே
தூதென்றெண் ணமற் சுகமென்று நாடுமித் துர்ப்புத்தியை
ஏதென்ன றெடுதுரைப் பேனிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! என் கண்முன்னே செவிகளென்றும் மூக்கென்றும் விழிகளென்றுங் காட்டித் தன்னை 'மாது' என்று சொல்லிக் கொண்டுவரும் அவலட்சண வடிவை, யமன் விடுத்த தூது என்று எண்ணமல் இன்பவடிவமென்று கருதி விரும்பும் இக்கெடுமதியை எனனென்று எடுத்துச் சொல்வேன்?.

(வி-ரை.) மாது-பெண்; மாயை-மாயாவடிவம். அது காமிகட்கு இலட்சணமாகவும் ஞானிகட்கு அவலட்சணமாகவுந் தோன்றும். பெண்களிடத்தின்ப மிருப்பதாகத் தோன்றுவது அறியாமை யென்பார் "துர்ப்புத்தியை' என்றார். பெண்ணின்பத்திலேயே நிலைத்

திருப்போர் யமலோகஞ் செல்வாராகலானும், அதற்குக் கருவியா யிருப்போர் மாதராகலானும் அவர் மறலிவிட்ட தூதெனப்பட்டார். காது மூக்கு கண் முதலியன காமக்கிளர்ச்சிக்குக் கருவியாக நிற்றலின் அவைகளை வெறுத்துக் "காதென்று மூக்கென்று கண்ணென்று" கூறினர். 12

ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! (வசிக்கின்ற) ஊரும் நித்தியமன்று; (வினையால் நேர்ந்த) பந்துக்களும் நித்தியமன்று; தவங்கிடந்து ஈன்ற தாய் தந்தையர்களும் நித்தியமல்லர்; மனைவியரும் நித்தியமல்லர்; புத்திரர்களும் புகழும் நித்தியமல்ல; பொருளும் நித்தியமன்று; இவ்வுலகத்திலே எவரும் நித்தியமல்லர். தேவரீர் திருவடிகளே நித்தியமாம்.

(வி-ரை) உற்று பெற்றபேர்—தாய் தந்தையார். இச்செய்யுள் பலவகை நிலையாமைகளைக் கூறுகிறது. ஊர் முதலிய பொருட்சார்பும் உற்றார் முதலிய உயிர்ச்சார்பும் மாயாகாரியங்களாகலான் அவை தோன்றிநின் றழிவனவாகும். அவைகளைப் பொருளாகக் கொள்வோரும் அவைகளைப்போலத் தோற்ற நிலையொடுக்கங்களை யடைவ ரென்க. இறைவன் தோற்ற ஒடுக்கங்களில்லாதவன். அவனடியைப் பொருளாக் கொள்வோர் அவனைப்போலப் பிறப்பிறப்புத் துன்பங்களை யுறாரென்க. 13

சீறும் வினையது பெண்ணுரு வாகித் திரண்டுருண்டு
கூறு முலையு மிறைச்சியு மாகிக் கொடுமையினால்
பீறு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்
டேறுங் கரைகண்டி லேனிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! சிறுமை பயக்கும் வினையே பெண்வடிவந் தாங்கித் திரண்டு குவிந்து இரண்டாகப் பிரிவுபட்ட கொங்கைகளையும், மாமிசத்தையும் உடையதாகித் தன் கொடுஞ் செய்கையால் கிழிதது்க் கழியும் மலததையும் இரத்தத்தையுஞ் சொரியும். அததகைய பெருங்குழிவிட்டு வெளியேறுங் கரை காண்கிலேன்.

(வி-ரை) வினையது என்பதிலுள்ள ஏகாரந்தொக்கது. சீறும்-சிறுமைசெய்யும்; வருத்தும் எனினுமாம். கூறு-பிரிவு; கூறும்-புகழும் ஆம். பீறு-குமுதமுமாம் (பீறு-துவாரம்) சாயும் என்பதை யெச்சமாக்கிப் பெருங்குழி யென்னுஞ் சொல்லோடு கூட்டிப் பொருளுரைத்தலுமொன்று. சிறுகுழியைப் பெருங்குழி யென்றது அதன் கொடுமையை நோக்கி யென்க. கரையென்றது திருவருளை. "மண்ணுலகிலுள்ளவரம்பில் பெரும்பவததைப், பெண்ணுருவாகப் பிரமன் படைததனல், அண்ணல் அஃதுணர்தி அன்னவரைச் சிந்தைதனில், எண்ணவரும் பாவம் எழுமையிலு நீங்குவதோ"—கந்தபுராணம். 14

பொருளுடை யோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்துந்
தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல
அருளுடை யோரைத் தவத்திற் குணத்தி லருளிலனபில்
இருளறு சொல்லினுங் காணத தருங்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுளள ஏகாம்பரநாதனே! பொருட்செல்வமுடையோர்களை அவர்களுடையகொடையினும், வீரர்களை யுததகளத்தினும், தெளிந்த அறிவுடையோர்களை அவர்களது முகத்திலும் ஆராய்ந்து அறிநதுகொள்வதுபோலத் திருவருட்செல்வமுடையோர்களை அவர்களது தவததிலும் குணத்திலும் கிருபையிலும் அன்பிலும் மயக்கததைக் கெடுக்கும் மொழியிலுங் காணக்கூடும்.

(வி-ரை) பொருளிருந்துங் கொடைச்செயலில்லாதார் பொரு ளுடையோராகார். அதுபற்றியே "பொருளுடை யோரைச் செய லிலு" மென்றார். பிறவும் அங்ஙனே, "தெருளுடையோரை முகத்தி னும்" என்பதனை "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்-கடுத் தது காட்டு முகம்" என வரூஉந் திருக்குறளானுணர்க. திருவருட் செல்வங் கைவந்தோர் என்றுந் தவத்திற் கருத்துடையரா யிருப்பர்; சாந்தகுணத்திலேயே நிலைத்திருப்பர்; உயிர்களிடத்து இரக்கமுடைய வரா யிருப்பர்; அவ்விரக்கத்திற்குக் காரணமான அன்பு சொரூபமா யிருப்பர்; அவர்கள் மொழி கேட்போரது அஞ்ஞானத்தை யழிக்குஞ் சிவமொழியாகும். (வீணுக உரையாடார் என்றபடி) ஈண்டு அருளு டையோர் இலக்கணத்தை அருளிச்செய்தற்குக் காரண மென்னை யெனில், உலகத்தார், போலியாக அருள்பெற்றோமென வெளிவந்து வஞ்சிக்கும் மருளர்கள் மாயவலையில் வீழ்ந்து இடருறாதபடி அவரைத் தெடுத்தாட்கொள்ளவென்க. 15.

பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத்தங்கள்
துருத்திக் கறுசுவை போடுகின் றார்துறந் தோர்தமக்கு
வருத்தி யமுதிட மாட்டா ரவரையிம் மாநிலத்தில்
இருத்திக் கொண்டே னிருந்தாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! பஞ்சு மூட்டையைப்போல வயிறு பருக்கின்றதற்கு ஏதுவாக உள்ள துருத்தியில் அறுசுவை யுண்டினை நிரப்பி யடைக் கின்றார்கள்; துறந்தவர்களை வரவழைத்து அன்னமிடமாட்டார்கள். அவர்களை இப்பரந்த உலகத்தில் ஏன் வைத்துக்கொண்டிருக்கின்றாய்?

(வி-ரை) துருத்தி-தீனிப்பை. அறுசுவை-கைப்பு புளிப்பு தித் திப்பு கார்ப்பு உவர்ப்பு துவர்ப்பு என்பன. துறவறத்தாரைக் கவனி யாது உண்டு களிக்கும் இல்லறத்தார் விலங்கினுங் கொடியராகலான் அவரை "துருத்தி" போடுகின்றார்" என்னும் இழிசொற்களால்

குறிப்பிட்டார். இல்லறந் துறவற நிமித்தமாகவே நடத்தப்படும் அற மென்பது சாத்திரக்கொள்கை. "துறந்தார்க்குந் துவ்வாதார்க்கும் இறந்தார்க்கும், இல்வாழ்வான் என்பான் துணை" என்றார் தெய்வப் புலவரும். அறவொழுக்கத்தாரை வரவழைத்தாவது அவர்களிடஞ் சென்றாவது அன்னம் இடவேண்டுவது இல்லறத்தார் கடமை. விரிப்பிற் பெருகும்; அறநூல்களிற் காண்க. இருந்தாய்-காலவழுவமைதி.

பொல்லா விருளகற் றுங்கதிர் கூகையென் புட்கண்ணினுக்
கல்லா யிருந்திடு மாறொக்கு மேயறி வோருளத்தில்
வல்லா ரறிவா ரறியார் தமக்கு மயக்கங்கண்டாய்
எல்லாம் விழிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! ஞானிகள் (அகக்கண்ணாற் காணும்) வல்லமை யுடையவராகலான் உள்ளத்தில் (சிவ சூரிய வொளியை) அறிவாற் காண்பார்கள். அஞ்ஞானிகளுக்கு (அகக்கண் திறக்கப்படாமையான் அவர்கள் உள்ளத்துள்ள சிவ சூரிய வொளி தோன்றாது) மயக்கமுண்டாகும். இது கொடிய இருளை விலக்குஞ் சூரியவொளி கோட்டான் என்னும் பறவையினது கண்ணுக்கு இருளாக இருக்குந் தன்மை போன்றது. (ஆகையால் இவை) எல்லாம் கண் மயக்கமேயாம்.

(வி-ரை) கூகை-கோட்டான். இப்பறவைக்குப் பகல் இருளாகத் தோன்றும். அதுபோல அஞ்ஞானிகளுக்கு எங்கும் நிறைந்த சிவவொளி புலனாகாது. "ஊமன்கண் போல வொளியு மிக விருளே, வாமன்கண் காணா தவை" என்றார் உமாபதி சிவாசாரியார். மக்களுக்கு இருவகைக் கண்களிருக்கின்றன. ஒன்று அகக்கண்; மற்றொன்று புறக்கண். இவை முறையே ஞானக்கண்-ஊனக்கண் எனவும்படும். புறக்கண்ணுக்குச் சிவந் தோன்றாது. அகக்கண்ணிற்கு மாயை தோன்றாது. சிவமெனும் பொருள் போக்கு

வரவில்லாதது; அதற்குத் தோற்றமுமில்லை; மறைவுமில்லை; என்றும் ஒரு பெற்றித்தா யிருப்பது. அது தோன்றுவது போலவும் மறைவதுபோலவும் நிகழ்வது கண்மயக்கால் என்க. இதுபற்றியே சுவாமிகள் "எல்லாம் விழிமயக்கே" என்றார்கள். "முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள், அகத்திற கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்"—திருமந்திரம். "ஊனக்கண்பாசம் உணராப்பதியை, ஞானக் கண்ணி னிற்சிந்தைநாடி"—சிவஞானபோதம். 17

வாதுக்குச் சண்டைக்குப் போவார் வருவார் வழக்குரைப்பார்
தீதுக் குதவியுஞ் செய்திடு வார்தினந் தேடியொன்று
மாதுக் களந்து மயக்கிடு வார்விதி மாளுமட்டும்
ஏதுக் கிவர்பிறந் தாரிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! வாழ்நாள் முழுவதும் வாத தருக்கதனுக்கும் போருக்கும் போவார்கள்; வருவார்கள்; வழக்குத் தொடுப்பார்கள்; தீமையான காரியங்களுக்கு உதவியுஞ் செய்வார்கள்; நாடோறும் பொருளை அலைந்து தேடிப் பெண்ணுக்குக் கொடுத்து மயங்குவார்கள். இவர்கள் இவ்வுலகத்தில் எற்றுக்குப் பிறந்தார்கள்?,

(வி-ரை) இறைவனைப் போற்றாது வாளா காலங்கழிப்போர் பிறந்தும் பிறவாதாராகலான் "ஏதுக்கு இவர் பிறந்தார்" என்றார். "புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே" என்பது அப்பர் திருவாக்கு. 18

ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரை நிந்திப்ப ருற்றுபெற்ற
தாயாரை வைவர் சதியா யிரஞ்செய்வர் சாத்திரங்கள்
ஆயார் பிறர்க்குப காரஞ்செய் யார்தமை யண்டினர்க்கொன்
றீயா ரிருந்தென்ன போயென்ன காண்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! ஓயாமல் பொய்பேசுவார்கள்; நல்லவர்களைக் குறைகூறுவார்கள்; தவஞ்செய்து பெற்ற தாயாரைத் திட்டுவார்கள்; வஞ்சனைகள் பல செய்வார்கள்; ஞானநூல்களை ஆராய்ச்சி செய்யமாட்டார்கள்; மற்றவர்கட்கு உபகாரஞ் செய்யமாட்டார்கள்; தங்களை அடைந்தவர்கட்கு ஒன்றுங் கொடுக்கமாட்டார்கள். இவர்கள் இவ்வுலகில் இருந்தாலென்ன போனாலென்ன?.

(வி-ரை) பொய்யரிடத்தில் எல்லாத துர்க்குணங்களும் பொருந்தியிருக்கும். பொய்யாமை யென்னும் ஓர் அறததைக் கடைப்பிடிப்போர் எல்லா அறங்களையும் கடைபிடித் தொழுகுவோராவர். "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற; செய்யாமை செய்யாமை நன்று"—திருவள்ளுவர். முன்பாட்டும் இஃதும் ஒரு கருததனவேயாம். 19

அப்பென் றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல்பாய்த்
தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினாற்
செப்பில பக்குவம் பக்குவ மாயுள்ள சீவனிலும்
இப்படி யேநிற்ப னெந்தை பிரான்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! ஜலமானது எப்பொழுதுஞ் சுதத பொருளாயிருப்பினும் எந்நிலத்தில் பொருந்துகிறதோ அந்நிலததின் சுபாவத்தால் தவறுதலில்லாமல் இயல்பு மாறுபாடுகள் பல பொருந்துதல்போல ஆராய்ந்தறியுங்கால் பக்குவம் அபக்குவமென்னும் வேற்றுமையுள்ள ஆன்மாக்களிடத்திலும் மேற்சொல்லியவாறே எந்தை பெருமான் வீற்றிருந்தருளுவன்.

(வி-ரை) வெண்மை-பரிசுத்தம். பக்குவம்-அபக்குவமென மாற்றிப் பொருளுரைக்க. எந்தை-எம்தந்தை. ஏகம்பனே என்பதைப்

படர்க்கையாகக்கொண்டு ஏகாரத்தை அசையாக் கோடலுமொன்று. சிவம் எங்கனும் நீக்கமற நிறைந்திலங்கும் பொருளாகலான் அஃது ஆன்மாக்களின் அறிவிற்கேற்றவாறு தோன்றி விளங்குமென்பது கருத்து. கண்ணிற் சிறிதுங் குற்றமில்லாதானுக்கு விளக்கமாகத் தோன்றும் பொருள் கண்ணிற் சிறிது குற்றமுடையானுக்குச் சிறிது மங்கலாகத்தோன்றும். குற்றங்கண்ணிடத்தன்றிப் பொருளிடத் தன்றென்பதையோர்க. வெண்மை-வெண்மை நிறமெனக் கூறுவோருமுளர். "நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகு மாந்தற்கு; இனத்தியல்ப தாகும் அறிவு" என்னுங் குறட்பாவையுங் கவனிக்க. 20

நாயாய்ப் பிறந்திடி னல்வேட்டை யாடி நயம்புரியுந்
தாயார் வயிற்றி னராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்
காயா மரமும் வறளாங் குளமுங்கல் லாவுமெனன
ஈயா மனிதரை யேன்படைத் தாய்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! (உயிர்) நாயுடல் தாங்கினாலும் நல்ல வேட்டையாடி (தன்னை வளர்த்தவனுக்கு ஏதாவது) பயனைக் கொடுக்கும். தாயார் வயிற்றில் மக்களாய்த் தோன்றிப் பிறகு செல்வமுள்ளவர்களாகி, காயாதமரமும் நீர்வறண்ட குளமும் கற்பசுவும்போல (ஒருவருக்கும் ஒன்றுங்) கொடாத மனிதர்களை ஏன் சிருஷ்டி செய்தாய்?

(வி-ரை) தாய் தமக்கையென்னும் பகுத்தறிவில்லா நாயாகிலும் ஒரு பயனை விளைக்கக்கூடியதா யிருக்கிறது; தாய் தமக்கையென்று பகுத்தறியக்கூடிய மக்களாய்ப் பிறந்தும் என்ன பயன் என்பார் "தாயார் வயிற்றில்" என்றார். காயாதமரம் நீரில்லாக்குளம் கல்லாற் செய்யப்பட்ட பசு இவைகளினால் என்ன பயன் உண்டு? அதுபோல ஈகையில்லாச் செல்வர்களால் என்னபயன் என்றவாறு. ஈயாமனிதர்-நாயினுந் தாழ்ந்தவர் என்க. 21

ஆற்றிற் கரைதத புளியாக் கிடாமலென் னன்பையெல்லாம்.
போற்றித திருவுளம் பற்றுமை யாபுர மூன்றெரித்துக்
கூற்றைப் பணிகொளுந் தாளுடையாய் குன்ற வில்லுடையாய்
ஏற்றுக் கொடியுடை யாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) ஐயனே! திரிபுரதகனஞ் செய்து யமனை அடிமை கொண்ட திருவடிகளை யுடையவனே! மேருகிரியை வில்லாக உடையவனே! இடபக்கொடியை யுடையவனே! இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! என்னுடைய அன்டையெல்லாம் ஆற்றிற் கரைத்த புளியாக்கிவிடாமற் பாதுகாத்து அடியேன்மீது திருவுளஞ் செலுத்தியருள்க.

(வி-ரை) சிவபெருமான் அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்க வாசகர் கண்ணப்பர் சண்டேசர் முதலியோர் அன்பையேற்று அருள் செய்தவர். அவர் தம் அன்பிற்குத் தம்மன்பு ஈடாகாதெனக் கரு, அதனை யேற்றருள் செய்யவேண்டினரென்பது. "புரமூன்றெரித்ததும், கூற்றைப் பணிகொண்டதும், குன்றவில் தாங்கினதும் அன்பர்கள் பொருட்டல்லவோ? அக்குணமுடைய ஆண்டவனே! எனது அன்பிற்கும் இரங்கியருள்க" என்றபடி. 22

பெண்ணாகி வந்ததொரு மாயா பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையான் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
எண்ணா துனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! மாயையாகிய ஒரு பேய் பெண்ணுருவாக வந்து என்னைப்பற்றித் தன் கண்களால் பயமுறுததி முலைகளால் மயககச் செய்து, அல்குலிடதததாகிய புண்ணென்னுங் குழியில் வீழ்ததி எனது அறிவென்னும் பொருளைக் கொள்ளைகொள்ள, அடியேன் தேவரீரைக் கருதாது மறந்து நின்றேன்.

(வி-ரை) பெண்ணுறுப்புக்களில் முலையே ஆடவர்களை மயக்கிக் காமுறச்செய்வது. கடிதடம்-நிதம்பம்; அல்குல். ஆன்ம இலக்கணம் சார்ந்ததன் வண்ணமாய் நிற்றல். ஆன்ம அறிவு பெண்ணின் பத்திற் றோயுங்காலத்து அஃது அவ்வின்பமயமாகவே விளங்கும்; அதுகாலைச் சிவத்தைச் சார்ந்து நில்லாது என்க. "மையரி மதர்த்த ஒண்கண் மாதரார் வலையிற் பட்டுக், கையெரி சூல மேந்துங் கடவுளை நினைய மாட்டேன்" என்றார் அப்பர் சுவாமிகளும். 23

நாவார வேண்டும் விதஞ்சொல்லு வாருனை நான்பிரிந்தால்[டால
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான் வறண்
போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோவிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! (செல்வமுள்ள காலத்தில்) வாய் நிரம்ப வேண்டிய பிரிய வசனங்களைச் சொல்லுவார்கள்; நான் உன்னைப் பிரிந்தால் இறந்துவிடுவேன் என்று உடனிருந்து சாப்பிடுவார்கள். செல்வம் வற்றிப்போனால் போய்வாருங்கள் என்று நடுத்தலை பார்த்துக் குட்டியனுப்பும் விலைமகளிருக்கு (வீணாகப் பொருளைக்) கொடுக்கின்றார்கள். அஃது அவர்கள் தலையெழுத்தோ?.

(வி-ரை) வேண்டும் - விரும்பும். கைவறண்டுபோதல்-பொருள் வற்றிப்போதல்; "விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டுந், துளக்கற நாடின் வேறல்ல-விளக்கொளியு, நெய்யற்ற கண்ணே யறுமே அவரன்புங், கையற்ற கண்ணே யறும்"—நாலடியார். 24

கல்லார் சிவகதை நல்லோர் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார் பசித்தவர்க் கன்னங்கொ டார்குரு சொன்னபடி
நில்லா ரறத்தை நினையார்நின் னாம நினைவிற்சற்றும்
இல்லா ரிருந்தென் னிறந்தென் புகல்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! சிவசரிதங்களைப்படியார்; நல்லவர்களிடத்திலும் சொப் பனத்திலும் உண்மைபேசார்; பசித்தவர்க்குச் சோறிடார்; குரு உப தேசித்தபடி ஒழுகார்; தருமத்தைச் சிந்தியார்; தேவரீர் திருநாமத் தைச் சிறிதும் எண்ணத்திற் கொள்ளார். இவர்கள் உலகத்தில் இருந் தென்ன இறந்தென்ன சொல்க.

(வி-ரை) மக்கள் பிறவி யெடுத்தோர் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் சிவகதை கற்றல் முதலியன. நல்லோரிடத்தில் சொப்ப னத்திலும் மெய்பேசாரெனின் தீயோரிடத்தில் சாக்கிரதையில் எத்தகைப் பொய் பேசுவாரென்பது ஊகிக்கத்தக்கது. 25

வானமு தத்தின் சுவையறி யாதவர் வண்கனியின்
தானமு தத்தின் சுவையெண்ணல் போலத் தனித்தனியே
தேனமு தத்தின் தெளிவாய ஞானஞ் சிறிதுமில்லார்க்
கீனமு தச்சுவை நன்றல்ல வோகச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! தேவாமிர்தத்தின் சுவையை யுணராதவர்கள், வளமுடைய பழத்தின் இரசத்தினது சுவையை விரும்புதல்போலத் தனித்தனி யாகத் தேனினதும் அமுதத்தினதும் இனிமையிலும் தெளிவாய ஞானமிர்தச்சுவை சிறிதும் அனுபவியாதவர்க்கு (பிரவிர்த்தி விடய மாகிய) குறைபாடுடைய அமுதச்சுவை இனிமையாகத் தோனறு மல்லவோ?.

(வி-ரை) தேவாமிர்தம் உண்போர் நரை திரை மூப்பு எய் தப்பெறார். ஈனமுதச்சுவை-உலகவிடயம். "தினைத்தனை யுள்ள தோர் பூவினிற் றேனுண்ணாதே, நினைதொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும், அனைத்தெலும் புண்ணெக ஆனந்த தேன்சொரியுங், குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத் தும்பீ"—திருவாசகம். "கனியினுங் கட்டிபட்ட கரும்பினும், பனி

மலர்க்குழல் பாவைநல் லாரினும், தனிமுடி கவித்தாளு மரசினும்,
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே"—தேவாரம். 26

ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
ஏற்றுத் திரிந்துவிட் டேனிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! நாற்றம் பிடித்த அழுக்கு உடலை; பொய் முதலிய நிரம்பிய ஒதுக்கிடத்தை; மாமிசம் நிறைந்த (ஒன்பது) துவாரமுள்ள துருத்தியை; அன்னமிட்டடைக்குந் தோற்பையை; சொல்லொணுத காற்றினுல் நிறையப்பெற்ற நிலையில்லாத பாத்திரத்தைப் பெரிதும் விரும்பியே சுமந்து அலைந்தேன்.

(வி-ரை) தேகத்தின் சிறுமை தெரியாது அதனைப்போற்றி வளர்த்தேன் என்றபடி. "துச்சிலொதுக்கிடம்" என்றார் பிறரும். "ஊன்மிசை உதிரக்குப்பை ஒருபொரு ளிலாதமாயம்" என்றார் வன்றொண்டரும். 27

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனையால் வருந்தோடஞ் செய்த
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குக ளாயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! வார்த்தையினுல் நேரும் பிழைகள்; எண்ணத்தினுல் உண்டாகுங் குற்றங்கள்; காயத்தால் செய்த தீத்தொழில்கள்; கண்ணினுல் விளையுந் தீமைகள்; தருமநூல் அல்லாத பிறநூல்களைக் கேட்டலினுல் வருங்கொடுமைகள் முதலிய பிறகுற்றங்கள் எல்லாவற்றையும் பொறுத்து (அடியேனுக்கு) திருவருள்செய்வாய்.

(வி-ரை) மனம் வாக்கு காயங்களால் நிகழ்த்தப்படுங் குற்றங்கள் குறிக்கப்பட்டன. இவைகட்கு முறையே அரசதண்டனை, யமதண்டனை பிரமதண்டனை நேரும் எனப் புராணங்கள் சொல்லுகின்றன. மனந்தூயராய் வாழ்வோர் எவ்வித குற்றத்திற்கும் ஆளாகார்; எவ்வித தண்டனைக்கும் ஆளாகார்; ஆண்டவனுக்கு ஆளாவர். 28

முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளையோலை விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக் கேசெயும் பாவையர்மேல்
இட்டத்தை நீதவிர்ப் பாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! கெடுதலில்லாத மஞ்சளை எண்ணெயிற் குழைத்து முகத்திற்பூசி மினுக்கி, மோதிரமணிந்து, பொட்டு இட்டு, பித்தளையாற் செய்யப்பெற்ற காதணியைத் துலக்கித் தரித்து, பட்டப்பகலிலேயே வெளிமயக்கஞ் செய்யும் பெண்கள்மீது (எனக்கு உண்டாகும்) விருப்பத்தைப்போக்கி அருள்வாய்.

(வி-ரை) முட்டற்றமஞ்சள்-பதஞ்செய்த மஞ்சள்; பூசுமஞ்சள். மகளிர்கள் மஞ்சளை எண்ணெயிற் குழைத்து முகத்திற் பூசிக் கொள்ளுவது தங்கள் முகங்களிலுள்ள குற்றம் திரை முதலியன மறையுமாறென்க. இங்ஙனஞ் செய்வது பண்டைக்காலப் பொது மகளிர் செயல். இக்காலப் பொதுமகளிர் மஞ்சளைக் காத்தாலுந் தீண்டுவதில்லை. ஈண்டுக் கூறியவாற்றால் மஞ்சள்பூச்சு விலைமாதர்கட்கென்று கருதலாகாது. மஞ்சள்பூச்சு பொதுவாக எல்லா மகளிர்களுக்கும் உண்டு. குலமகளிர் நாயகனுக்குப் பொருட்செல்வமும் வாழ்நாளும் பெருக மஞ்சள்பூசுவர். விலைமகளிர் பொருட்பறிக்க மஞ்சளைப் பூசுவர். பெண்கள் தேகத்தில் கண்ணுக்குப் புலப்படா

சிறு கிருமிகளும் வியர்வையும் அடிக்கடி புறப்பட்டுக்கொண்டே யிருக்கும். அவைகளை யொழிக்கும் பொருட்டு அவர்கள் மஞ்சள் பூசுவார்கள். அக்கிருமிகளைக் கொல்லும் ஆற்றல் மஞ்சளுக்குண்டு. மஞ்சள் பூசாத பெண்கள்மேல் கிருமிகளும் அழுக்குந் திரண்டு திரண்டு தெளியும். அவை அவர்களோடு அணையும் ஆடவர்களைப் பற்றிக்கொள்ளும். அதனால் அவர்கள் நோய்வாய்ப் படுவார்கள். இதுகாலைக் குலமகளிர்களும் மஞ்சள் பூசுதலை விலக்கி வருவது இரங்கத்தக்கது. பித்தளை யோலையை விளக்குவது பித்தளையால் செய்யப்பட்ட அணிகலன்களைத் துலக்கிப் பார்ப்போர் பொன் னணியென, இரவில் மயங்கும்பொருட்டென்க. ஈண்டு பட்டப் பகலில் என்றமையால் பொது மகளிர்களின் சாமர்த்தியத்தையும் காமுகர்களின் பேதைமையையும் நன்கு விளக்கியவாறும். இட் டத்தை நீதவிர்ப்பாய் என்பதைப்பற்றி முன்னர் எழுதப்பட்டிருக் கிறது. 29

பிறந்துமண் மீதிற் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் றேடியப் பாவையர்க்கீந்
திறந்திட வோபணித் தாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! இம்மண்ணுலகில் தோன்றி நோயே குடிகொள் ளப் பெற்றுப் பேரின்பத்தை மறந்து, சிற்றின்பத்தின்மீது விருப் பங்கொண்டு, புல்லிய பெண்கள் கூட்டத்தில் நுழைந்து, அலைந்து, தடுமாறிப் பொருள்தேடி, அப்பெண்களுக்கே கொடுத்துச் செத் துப்போகவோ (மனிதரைச்) சிருஷ்டி செய்தாய்?

(வி-ரை) இவ்வுலகில் பிறத்தல் பிறவியை யொழித்தற்பொருட் டென்பது நூற்கொள்கை. உடலில் அடிக்கடி நோய் தோன்று வது பேரின்ப நினைப்பை யூட்டற்கேயாகும். அங்ஙனம் நோய்

கண்டு வருந்தியும் சிற்றின்பத்தில் நாட்டங்கொள்வது அறியாமை யாம். இதுபற்றியே "பிணியே குடிகொண்டு" என்றார். மாதர்-விலைமாதர். "இறந்திடவோ பணித்தாய்" என்றமையால் இறவா வழிதேடுவதே மக்கள் கடமையென்பது பெறப்படுகிறது. "யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்" எனத் திருவாசகமும் "இப்பிறவி நீக்கி யினியொரு காயத்திற், புக்குப் பிறவாத போம்வழி தேடுமின்" எனத் திருமந்திரமுங் கூறுதல் காண்க. 30

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரும் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக்
காதங் கரணங் களுமற்ற வானந்தக் காட்சியிலே
ஏதங் களைந்திருப் பேனிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! ஐம்பூதங்கள் நீங்கி, ஐம்பொறி யடங்கி, அவைகளிற் பொருந்திய ஐம்புலன்களும் அகன்று, வேற்றுமைப்படும் முக்குணம் அழிந்து, பேராசை யறுந்து, சகல கேவல அவத்தை யொழிந்து, வஞ்சிக்கும் அந்தக்கரணங்கள் நான்கும் ஒடுங்கிய முடிவில் தோன்றுஞ் சிவானந்தத்தோற்றத்தில் யான் என்னும் முனைப்பை அழித்துச் சிவமாய் விளங்குவேன.

(வி-ரை) பின்முன் எனபதற்கு முறையே ஆகாமிய பிராரதத கர்மங்களென்று கொள்வதுமொன்று. ஆகாமியம் எருதவாறு பிராரத்த வினையை நுகர்ந்துவரும் ஒருவனது சஞ்சிதம் நசிக்குமென்க. "தன்னை யறிந்திடுத் ததது‌வ ஞானிகள், முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள், பின்னை வினையைப் பிடிததுப் பிசைவர்கள், சென்னியில் வைதத சிவனரு ளாலே" என்றார் திருமூலரும். ஐம்பூதம் ஐம்பொறி ஐம்புலன் முக்குணம் ஆகிய இவைகளின் வழி

ஆசையும், ஆசைவழி கர்மமும் நிகழலானும் எல்லாவற்றிற்குங் காரணமாகக் கரணங்கள் நிற்றலானும், "பூதங்க * * * * கரணங்களுமற்ற" என்றார். ஆனந்தக்காட்சியில் ஏதமின்மை ஈண்டுச் சுட்டிக்காட்டப்பட்டது. ஐம்பூதம் - மண் புனல் தீ காற்று வெளி. ஐம்பொறி - மெய் வாய் கண் மூக்கு செவி. ஐம்புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம். முக்குணம் - இராஜதம் தாமதம் சாதவிகம். அந்தக்கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். பூதம் பொறி முதலிய யாவுந் தத்துவங்களாம். இவைகளைக் களைந்து செல்லும் ஆன்மா தத்துவாதீதமாய் ஒளிருஞ் சிவானந்தத்தில் அழுந்தும். அதுகாலை சிவபோதங்குன்றும். "ஆறாறு முப்பதும் அங்கே அடங்கிடில், கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்"—திருமந்திரம். "வான்கெட்டு மாருதமாய்ந் தழல்நீர்மண் கெடினுந், தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு, ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டுஎன் உள்ளமும்போய், நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"—திருவாசகம். 31

நல்லா யெனக்கு மனுவென்று தந்தருண் ஞானமிலாப்
பொல்லா வெனைக்கொன்று போடும் பொழுதியல் பூசைசெபஞ்
சொல்லார் நற்கோயி னியமம் பலவகைத் தோத்திரமும்
எல்லா முடிந்தபின் கொல்லுகண் டாய்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) நல்ல தாய்போன்றவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! அடியேன் செய்யவேண்டிய விண்ணப்பம் ஒன்றுளது. அதுகேட்டுக் கொடுத்தருளவேண்டும். (அது வருமாறு) ஞானமில்லாதவனும் பொல்லாதவனும் ஆகிய அடியேனைத் தேவரீர் கொல்லும்பொழுது, சிறந்த சிவபூசை பஞ்சாட்சர செபம் பாடல்பெற்ற நல்ல ஆலயவழிபாடு பலவகைத் துதிகள் ஆகிய இவை யெல்லாம் (அடியேனால் செய்யப்பெற்று) முடிந்த பின்னரே கொல்லல்வேண்டும்.

(வி-ரை) சிவபூசை முதலியன செய்தோர் கொல்லப்பெறார், கொல்லப்பெறினும் மறுபிறப்பில் மனிதராகவே பிறந்து ஞானம் பெறுவர். சிவபூசை முதலியன செய்யாது இறப்போர் மறுபிறப்பில் பகுத்தறிவுடைய மக்களாய்ப் பிறத்தல் அரிது. இதுபற்றியே எப் பிறவியிலுஞ் சிவத்தியானஞ் செய்யவேண்டுமெனப் பெரியோர் பணித்துள்ளார். "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி யென் மனத்தே, வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்" என்றார் அப்பரும். இதனால் முற்றத் துறந்த முனிவரும் சிவபூசை முதலியன செய் யுங் கடப்பாடுடையார் என்பது பெறப்படுகின்றது. சிவபூசை முதலி யன மனம் வாக்கு காயங்களை மாயா காரியங்களிற் செலுத்தாது காப்பன. "சிவபூசை முதலியன முற்றாமு முன்னர் நான் கொல்லப் பட்டால் எக்கதியடைவேனோ; அவை முடியப்பெற்ற பின்னர் எனது உடலை உயிரினின்றும் பிரிப்பாயாக" என்று ஆண்டவனை நோக்கி வேண்டுதல் செய்யுமாறு காண்க. சிவபூசை முதலியன முற்றுப்பெறுவதற்குள் மரணம் நேர்ந்தால் ஆன்மா எப்பிறவி தாங்குமோ என்ற அச்சத்தைக் குறிப்பித்தவாறும். 32

சடக்கடத் துக்கிரை தேடிப் பலவுயிர் தம்மைக்கொன்று
விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்து மிகமெலிந்து
படக்கடித் தின்றுழல் வார்க டமைக்கரம் பற்றிநமன்
இடக்கடிக் கும்பொழு தேதுசெய் வார்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே! சடமயமான தேகத்துக்கு ஆகாரந்தேடிப் பலவுயிர்களை வதைத்து, அவைகளின் மாமிசங்களை அதுக்கிக்கொண்டு செருக்கி, மிக மிருதுவாகும்படி கடித்துத் தின்று திரியும் மாக்களை யமன் கைப்பற்றி முரட்டுத்தனமாகத் தண்டிக்குங்காலத்தில் (அவர்கள்) என்ன செய்வார்கள். (பாவம்)

(வி-ரை) விடக்கு - மாமிசம். அடித்துக்கொள்ளல் - அதுக்கிக் கொள்ளல்; இழிவுகுறித்தவாறு. உயிர்களைக்கொன்று அவைகளின் ஊனை உண்போரை யமன் சிறிது மிரக்கமின்றித் தண்டிப்பன். இதனை "கொல்லிடு குத்தென்று கூறியமாக்களை, வல்லிடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச், செலவிடு நில்லென்று தீவாய் நரகிடை, நில் விடுமென்று நிறுத்துவர் தாமே" "பொல்லாப் புலாலை நுகரும் புலை யரை, எல்லாருங் காண இயமன்றன் தூதுவர், செல்லாகப் பற்றிய தீவாய் நரகதனின், மல்லாக்கத்தள்ளி மறித்துவைப்பாரே" என வரூஉந் திருமந்திரத்தா னுணர்க. மனிதனைப் படைத்த கடவுளே விலங்கு முதலியவற்றையும் படைத்தார்; மனிதன் விலங்கு முதலிய வற்றைக் காரணமின்றித் தன் நலங்கருதிக் கொன்று தின்பது நிய திக்கு மாறுபாடாகும். நியதிக்கு மாறாகச் செய்யும் ஒருவனது வினையே அவனைப் பின்னர் இடர்ப்படுத்துமென்க. ஒருவனுக்கு நல்லன செய்வதும் அல்லன செய்வதும் அவன் வினையேயாகும். 'இறுமாந்து உழல்வார்' என்ற குறிப்பு மனிதனது அறியாமையையும் சுயநலத்தையுங் காட்டுவது. விலங்கு முதலியவற்றைக் கொன்றால் கேட்பார் எவருமில்லை என்னும் அறியாமையைப் போக்க விசாரித் துத் தண்டிக்க யமன் இருக்கிறான் என்று அறிவுறுத்தியவாறும். உயிர்களைப் படைக்கும் ஆற்றலில்லாத மனிதன் அவைகளை அழிக் கும் உரிமை ஏற்பது அறமா என்பது கவனிக்கத்தக்கது. 33

நாறு முடைநரிப்பொதி சோற்றினை நான்றினமுஞ்
சோறுங் கறியு நிரப்பிய பாண்டத்தைத் தோகையர்தங்
கூறு மலமு மிரதமுஞ் சேருங் குழியில்விழா
தேறும் படியருள் வாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! தீநாற்றம்வீசும் உடம்பை, நரிகளுக்குப் பொதி சோறாயுள்ள பொருளை; நான் நாடோறும் அன்னபதார்த்தங்களால்

நிரப்பிய பாத்திரத்தை; மயில்போன்ற சாயலையுடைய பெண்களின் இழித்துச் சொல்லப்படும் மலமும் இரத்தமுஞ் சொரியும் (அல்குல்) குழியில் படியாமல் அதனைவிட்டு முத்தியங் கரையேறும்படி திருவருள் செய்வாய்.

(வி-ரை) நரிப்பொதிச்சோறு - நரிகளுக்குப் பெரிதும் ஆகாரமாயிருப்பது "சிறும் வினை" என்னுஞ் செய்யுளைப் பார்க்க. மண் பொன் பெண் என்னும் மூவாசையுள் பெண்ணாசையை வெறுக்க மனிதனுக்குப் போதிய ஆற்றலின்மையான், ஆண்டவன் அருளை வேண்டியவாறு காண்க. இதைப்பற்றிப் பலவிடங்களில் விரிவுரை எழுதப்பட்டிருக்கிறது. 34

சொக்கிட் டரமனைப் புக்குட் டிருடிய துட்டர்வந்து
திக்குற்ற மன்னரைக் கேட்பவ போற்சிவ நிந்தைசெய்து
மிக்குக் குருலிங்க சங்கம நிந்தித்து வீடிச்சிக்கு
மெக்குப் பெருத்தவர்க் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! மயக்கமருந்திட்டு அரசமாளிகை நுழைந்து களவாடிய கொடியர் மீண்டும் வந்து, எட்டுத்திக்கும் புகழ்பெற்ற வேந்தனைப் பொருள் கொடுக்கும்படி யாசிப்பதுபோல, சிவநிந்தைசெய்து சிறந்த குருலிங்கசங்கம வழிபாடுகளை இழிதுக்கூறி மோட்சவீட்டை விரும்புங் கொடுமையிற் சிறந்தவர்க்கு என்ன உரைப்பேன்?.

(வி-ரை) துட்டர் - காவலாளிகளாற் கொண்டுவரப்பட்ட அவர் (துட்டர்) மன்னரைத் தங்களை மன்னிக்கும்படி கேட்பதுபோல எனினுமாம். சிவநிந்தை புரிவோர் வீடு அடையார். என்னை! வீட்டுக்குரியபொருள் அஃதாகலான். ஏனைய கடவுளர் வீற்றிருக்குமிடங்கள் புண்ணியஞ்செய்வோ ரடையும் லோகங்கள்; அவை வீடு அல்ல. குருலிங்க சங்கம வழிபாடு வீட்டை யளிப்பது. இதனை

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா, அம்மலங் கழீஇ அன்ப ரொடு மரீஇ, மாலறநேய மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அர னெனத் தொழுமே" என வருஉஞ் சிவஞானபோதத்தா னுணர்க. இதனால் குருலிங்க சங்கமத்தின் சிறப்பு உணர்த்தியவாறு காண்க.

விருந்தாக வந்தவர் தங்களுக் கன்ன மிகக்கொடுக்கப் [தம்
பொருந்தார் வளம்பெற வாழ்வார்நின் னாமந்தனைப் போற்றிநித்
அருந்தா முலைபங்க ரென்னாப் பாதக ரம்புவியில்
இருந்தாவ தேதுகண் டாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! விருந்தினராக வந்தவர்க்கு வேண்டிய அளவு சோறிட மனங்கொள்ளார்; பொருட்செல்வம் அதிகரிக்க வாழ்வார்; தேவரீர் திருநாமத்தைத் துதித்து நாடோறும் "உண்ணாமுலை பங்கா" என்றோத்தார். இந்தப் பாதகர்கள் அழகிய உலகத்தில் வாழ் வதால் விளையும் பயன் யாது?.

(வி-ரை) "இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி, வேளாண்மை செய்தற் பொருட்டு" என்றார் திருவள்ளுவர். சிவ நாமம் போற்றாதவர்கள் பெரும்பாவிகளென்பார் "அப்பாதகர்" என் றார். "சிவசிவ என்கிலர் தீவினையாளர்" என்றார் திருமூலரும். பாத கர்களைப் பூமிபாரமென்பார் 'இருந்தாவதேது' என்றார். மனித உடல் தாங்கி நிற்போர் மற்றவர்க்குத் துணையாகவும், ஈசுரபக்தி யுடையவராகவும் வாழ்தல் வேண்டுமென்பது கருத்து. 36.

எல்லா மறிந்து படித்தே யிருந்தேமக் குள்ளபடி
வல்லா னறிந்துள னென்றுண ராது மதிமயங்கிச்
சொல்லான் மலைந்தூழ் விதிப்பின்படி தூக்கித்துப்பின்
எல்லாஞ் சிவன்செய லேயென்பர் காண்கச்சி யேகம்பனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! எல்லா நூல்களையும் ஓதியுணர்ந்து "நமது வினைக்குத் தக்கபடி நமக்கு ஏற்பட்டுள்ள அளவை எல்லாம் வல்ல இறைவன் அறிந்திருக்கின்றான்" என்று தேறாது, அறிவு கெட்டு (அறிவில்லார்) சொற்களால் மலைவுகொண்டு (பிரவர்த்தி மார்க்கத்திலிறங்கி உழன்று அதனால்) உண்டாகும் விதியின்படி வருத்தமடைந்து அதற்குமேல் "எல்லாஞ் சிவன் செயலே" என்று சொல்லுவார்கள் (இஃதென்ன அறியாமை.)

(வி-ரை) இது கற்றறி மூடருக்கு அறிவுகொளுத்த எழுந்த திருவாக்கு. அவாவால் விடயங்களில் நுழையுமுன்னர் "எல்லாஞ் சிவன் செயல்" என்றிருப்போரது பிரார்த்தம் நசிக்கும்; அன்றறை ஆகாமிய மணுகாது. விடய இன்பங்களில் நுழைந்து நுகர்ந்து அவைகளால் துன்பம் வருங்கால் "எல்லாஞ் சிவன் செயல்" என்றுரைப்பது உபசாரம். அவர்களை ஆகாமியம் பற்றும். கற்றோர் மூடர்சொல் கேட்டல் கூடாதென்பார் "மதிமயங்கிச் சொல்லான் மலைந்து" என்றார். "கல்லாத மூடரைக் காணவு மாகாது, கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று"—திருமந்திரம். 37

பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவர் பூவையன்னாள்
தன்னை நினைந்து வெகுவா யுருகுவர் தாரணியில்
உன்னை நினைந்திங் குனைப்பூசி யாத வுலுத்தரெல்லாம்
என்னை யிருந்துகண் டாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! பொருளைச் (சேகரிக்க) எண்ணி (பெரு முயற்சி செய்து) ஏராளமாகச் சேகரிப்பார்கள்; இலக்குமிபோன்ற அழகுடைய பெண்களை நினைந்து அதிகமாக உருகுவார்கள்; தேவரீரைச் சிந்தித்துப் பூசியாதலோபிகள் இவ்வுலகத்தில் வாழ்ந்தென்ன பிரயோசனம்?.

(வி-ரை) உலுத்தர் - பொருளாசைக்காரர். எல்லா ஜென்மங்களிலும் உயர்ந்த ஜென்மமாகிய மனிதஜென்மம் சிவத்தியானம் சிவபூசை முதலியன செய்யவே வகுக்கப்பட்டதென்க. "மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம், ஆனிடைத் தைந்துமாடும் அரன்பணிக் காகவன்றே, வானிடத் தவருமண்மேல் வந்தரன் றனையர்ச்சிப்பர், ஊனெடுத் துழலுமூமர் ஒன்றையும் உணராரந்தோ"—சிவஞானசித்தியார். "சிவகருமஞ் செய்யார் திருநீறு சாற்றார், தவநெறியாஞ் சைவநெறி சாரார்-அவனிதனில், கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார், ஏன்பிறந்தார் மானுடராயின்று"—திருக்கருவைவெண்பா அந்தாதி. 38

கடுஞ்சொல் லின்பம்வரை யீனரைக் குண்டரைக் காமுகரைக்
கொடும்பவ மேசெயும் நிர்மூடர் தம்மைக் குவலயத்துள்
நெடும்பனை போல வளர்ந்துநல் லோர்த நெறியறியா
இடும்பரை யேன்வகுத் தாயிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! (எந்நேரமும்) கடுஞ்சொற்களைப் பேசுந் துஷ்டரை; (ஆசாரமில்லாத) இழிந்தவரை; புறணி பேசுகின்றவரை; காமுகரை; கொடிய பாவத் தொழில்களையே செய்யும் நிர்மூடரை பூமியிலே நீண்ட பனைமரம்போல (உருவத்தால் மாத்திரம்) வளர்ந்து உயர்ந்து, நால்வர்களது சன்மார்க்கத்தை யறியாத செருக்கரை ஏன் படைத்தாய்?.

(வி-ரை) வம்பர், குண்டர்-சோரபுத்திரர். "பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு, அணியல்ல மற்றுப் பிற" "இனிய உளவாக இன்னாத கூறல், கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"—திருக்குறள். வம்பர் முதலியோரை முன்னிலைப்படுத்திக் கூறுவதும் பாவமென்று கடவுளைப் பழித்தவாறு காண்க. இதனால் தீயோர் கொடுமை தெரித்தவாறும். 39

கொன்றே னனேக முயிரையெல்லாம்பின்பு கொன்றுகொன்று
தின்றே னதன்றியுந் தீங்குசெய் தேனது தீர்கவென்றே
நின்றேனின் சந்நிதிக் கேயத னாற்குற்ற நீபொறுப்பாய்
என்றே யுனைநம்பி னேனிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! பல உயிர்களை யெல்லாங் கொலை செய்தேன்; பின்னர் அவைகளை வதைத்து வதைத்துப் புசித்தேன்; அஃதல்லாமலும் பல தீமைகள் செய்தேன்; அவைகளை "ஒழிக்க" என்றே தேவரீர் சந்நிதானத்தை யடைந்து நின்றேன். ஆகையால், தேவரீர் என் பிழைகளெல்லாவற்றையும் பொறுத்தருள்வீரென்றே தேவரீரை நம்பியிருக்கிறேன்.

(வி-ரை) கொலையும் புலாலுண்ணுமே பாவங்களில் தலையாயவை. அவை யொழித்தவன் எல்லாப் பாவங்களினின்றும் நீங்கினவனாவான். "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா உயிருந் தொழும்"—திருக்குறள். "கொல்லாமை யெத்தனைக் குணக் கேட்டை நீக்கும் ... ... ..." "கொல்லா விரதங்கொண்டோரே நல்லோர், மற்றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே" "கொல்லா விரதங் குவலயமெல் லாம்ஓங்க, எல்லார்க்குஞ் சொல்லுவது என் னிச்சை பராபரமே"—தாயுமானர். தாம் அறியாமையால் செய்த குற்றங்களை அறிவு விளங்கிய காலத்துக் கடவுள் முன்னும் உலகத்தவர் முன்னும் முறையிடுவது ஞானிகள் வழக்கம். பாவ அறிக்கை என்று பிறர் கூறுப. 40

* ஊரிருந் தென்ன நல்லோ ரிருந்தென னுபகாரமுள்ள
பேரிருந் தென்பெற்ற தாயிருந்தென்மடப் பெண்கொடியாள்
சீரிருந் தென்ன சிறப்பிருந் தென்னவித் தேயதனில்
ஏரிருந் தென்வல்ல வாவிறை வாகச்சி யேகம்பனே.

* இது பழைய பிரதிகளிலில்லை.

(பொ-ரை) எல்லாம் வல்லவனே! இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! இவ்வுலகத்திலே (சொந்த மாக) ஊரிருந்தென்ன; நல்லவர்களிருந்தென்ன; பரோபகாரிக ளிருந்தென்ன; ஈன்ற தாயிருந்தென்ன; மடமையும் அழகுமுடைய பூங்கொடிபோன்ற வாழ்க்கைத்துணைநலம் (மனைவி) இருந்தென்ன; நல்ல புகழிருந்தென்ன; ஏரிருந்தென்ன; (தேவரீர் திருவருளொன் றில்லாவிடின், இவைகளால் என்னபயன்.)

(வி-ரை) இவையாவும் நிலையுதலில்லாதவை. திருவருளொன்றே நிலைபெறுயுளது என்றபடி. ஏர்-உழவுத்தொழில். 41

வில்லா லடிக்கச் செருப்பா லுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பா லடிக்கக் களிவண்டுகூர்ந்
தல்லார் பொழிற்றில்லை யம்பல வாணர்க்கோ ரன்னைபிதா
இல்லாத தாலல்ல வோவிறை வாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! ஒருவன் வில்லினால் மோத, ஒருவன் செருப்பி னால் உதைக்க, ஒருவன் கோபித்துக் கல்லினால் எறிய, ஒருவன் பிரம்பினால் அடிக்க (நேர்ந்தது) தேனையுண்டு களிக்கும் வண்டுகள் நிறைந்து மேகந்தங்குஞ் சோலை சூழ்ந்த தில்லையம்பதிக்கணுள்ள சிற்சபையில் நடம்புரியும் பெருமானுக்கு ஒரு தாயுந் தந்தையும் இல்லாமலிருக்கின்றபடியால் அல்லவோ?.

(வி-ரை) வில்லால் அடித்தவன் அருச்சுனன். செருப்பாலுதைத் தவன் கண்ணப்பன். கல்லாலெறிந்தவன் சாக்கியன். பிரம்பாலடித் தவன அரிமர்த்தனபாண்டியன்; இச்செய்யுளால் இறைவன் தாய் தந்தையரில்லாதவன அதாவது பிறப்பு இறப்பு இல்லாதவன் என்னும் உண்மை பெறப்படுகிறது. "தாயுமிலி தந்தையிலி தான் *தனியன் காணேடி"—திருவாசகம். 42

---

இது பழைய பிரதிகளிலில்லை.

திருவேகம்ப விருத்தம்

அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னை யெத்தனை யெத்தனை சென்மமோ
மூட னாயடி யேனு மறிந்திலேன்
இன்ன மெத்தனை யெத்தனை சென்மமோ
என்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே.

(பொ-ரை) திருக்காஞ்சியி லெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! (சிறியேன் இதுகாறும் எடுத்த பிறவிகளில் வாய்ந்த) தாய்மார் எத்தனை எத்தனைத் தாய்மாரோ; தந்தைமார் எத்தனை எத்தனைத் தந்தைமாரோ; பின்னும் மனைவிமார் எத்தனை எத்தனை மனைவிமாரோ; புத்திரர் எத்தனை எத்தனைப் புத்திரரோ; முன்னெடுத்த பிறவிகள் எத்தனை எத்தனைப் பிறவிகளோ; அறிவில்லா நாய் போன்ற அடியேன் ஒன்றும் அறிந்தேனில்லை. இனி எடுக்கப்போகும் பிறவிகள் எத்தனை எத்தனைப் பிறவிகளோ? என்ன செய்வேன்!.

(வி-ரை) உயிர்கள் உடலோடுகூடி வாழுங் காலத்துத் தாம் முன்னரெடுத்த பல பிறவிகளைப்பற்றிச் சிறிதும் அறியமாட்டா; திருவருள் ஞானங் கைவந்ததும் அறியப்பெறும்; அதுகாலைப் பிறவித் துக்கத்தை யுணர்ந்து இனிப் பிறவாதிருக்க இறைபணி நிற்றல் முதலிய நிட்காமியச் செயல்களைச் செய்ய முயற்சி செய்யும். இதுபற்றியே சுவாமிகள் "அன்னை யெத்தனை * * * * " என்றருளிச்செய்தார்கள். இச்செய்யுளாற் பிறவியை வெறுத்துக் கூறியவாறும். 43

## திருத்தில்லை



காம்பிணங் கும்பனைத் தோளார்க்கும்
பொன்னுக்குங் காசினுக்குந்
தாம்பிணங் கும்பல வாசையும் விட்டுத்
தனித்துச் செத்துப்
போம்பிணந் தன்னைத் திரளாகக் கூடிப்
புரண் டினிமேற்
சாம்பிணங் கத்துதை யோவென் செய்வேன்
தில்லைச் சங்கரனே.

(பொ-ரை) தில்லையம்பதிக்கண் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானே! மூங்கிலை யொத்த பருத்த தோள்களையுடைய பெண்களிடத்திலும், பொன்னிடத்திலும், பூமியிடத்திலுந் தாம் நெருக்கமாகக்கொள்ளும் பலவகை ஆசைகளையும் ஒழித்துத் தனிமையாக மாண்டுபோன பிணங்களை இனிமேல் மாளப்போகிற பிணங்கள் கூட்டமாகச் சூழ்ந்து புரண்டு கத்துகின்றன. அந்தோ! (அவர் தம் அறியாமைக்கு) என்ன செய்வேன்?.

(வி-ரை) தில்லை - சிதம்பரம். சங்கரன் - சுகத்தைக்கொடுக்கின்றவன். "பனைத்தோளார் * * * ஆசை" யென்றது பெண் பொன் மண் என்னும் மூன்று ஆசையை யென்க. இச்செய்யுளால் இறந்தவர்களைக் குறித்து வருந்துவது அறியாமை யென்பதை உணர்த்தியவாறும். 1

சோறிடு நாடு துணிதருங் குப்பைதொண் டன்பரைக்கண்
டேறிடுங் கைக ளிறங்கிடுந் தீவினை யெப்பொழுது
நீறிடு மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டால்
ஊறிடுங் கண்க ளுருகிடு நெஞ்சமென் னுள்ளமுமே.

(பொ-ரை) எக்காலத்தும் திருநீறு சண்ணித்த திருமேனி யுடையவரும், திருச்சிற்றம்பல முடையவரும் ஆகிய எம்பெருமானது திருநதாண்டவத்தைக் கண்ணுற்றால் என் விழிகள் ஆனந்த நீரைச்சொரியும், மனமும் உயிரும் உருகும்; ஊரார் (தாமேவலிந்து) அன்னமிடுவர்; குப்பை ஆடையுதவும், திருதவெதாண்டு செய்யும் அன்பர்களைக்கண்டு கைகள் தலைமேல் ஏறும்; தீயவினைகள் அகலும்.

(வி-ரை) தில்லை நடராஜப் பெருமானைத் தரிசிக்குங்கால் உண்டாகும் நிகழ்ச்சிகளை "கையுந் தலைமிசை புனையஞ் சலியன கண்ணும் பொழி மழைபொழியாதே, பெய்யுந் தகையன கரணங் களுமுட னுருகும் பரிவின பேறெய்து, மெய்யுந் தரைமிசை விழு முன் பெழுதரு மின்றாழ் சடையொடு நின்றாடும், ஐயன் றிருநட மெதிர்கும் பிடுமவரார்வம் பெருகுத லளவின்றால்" எனப் பெரிய புராணங் கூறுமாற்றான் உணர்க. ஞானிகள் தங்கட்கெனப் பொருள் சோறு முதலியவற்றை வலிந்து தேடாராகலானும், எல்லாஞ் சிவ னுடைமை யெனக் கொள்வராகலானும் மானத்தை அறவே யொழித் தவராகலானும் "சோறிடுநாடு * * * " என்றார். "ஊரெ லாம் அட்டசோறு நம்மதே உவரிசூழ்ந்த, பாரெலாம் படுக்குந் திண்ணை" என வரூஉந் திருவிளையாடற் செய்யுளையோர்க. நாடு- ஆகுபெயர். தாவரத்தில் சகளீகரித்துள்ள மூர்த்தியைத தரிசித் தோர்க்கு, அன்பர்கள் உள்ளதெதாளிருஞ் சிவமூர்த்தநதோன்று மாகலான் "அன்பரைக்கண் டேறிடுங்கைகள்" என்றார். எல்லா உயிர்களையுஞ் சிவமாகக்கண்டு வணக்கஞ் செய்வோர்க்கு மலச் சேட்டை யின்மையான் "இறங்கிடுந் தீவினை" என்றார். 2

அழலுக்குள் வெண்ணெ யெனவே யுருகிப்பொன் னம்பலத
நிழலுக்கு ணின்று தவமுஞற் றாமனிட் டோமின்னார்
குழலுக் கிசைந்த வகைமாலை கொண்டுகுற் றேவலசெய்து
விழலுக்கு முத்துலை யிட்டிறைத் தேனென் விதிவசமே.

(பொ-ரை) கனகசபாபதியின் திருவடிநீழலில் நின்று நெருப்பிடைப்பட்ட வெண்ணெயைப்போல மனமுருகித் தவஞ்செய்யாமல், கொடிய வார்த்தைகளைப் பேசும் மின்னலைப்போன்ற இடையுடைய பெண்கள் கூந்தலுக்குப் பொருத்தமான பூமாலைகளைத் தாங்கிக்கொடுத்து, அவர்கள் விரும்பிய அற்பவேலைகளையுஞ் செய்து விழற்புல்லுக்கு மூன்றுதுலா நாட்டி நீர் இறைத்த மடவோரைப் போன்றவனானேன். இஃது என் ஊழ்வினையாம்.

(வி-ரை) சிவபெருமானைப் போற்றாது மாதர்களைப் போற்றி வாளா காலங்கழித்துப் பயனிழந்தேன் என்பார் "விழலுக்கு முத்துலை விட்டிறைத்தேன்" என்றார். முத்துலை-அறியாமைக்குறிப்பு. திருவடிநீழல்-திருவருள். 3

ஓடாமற் பாழுக் குழையாம லோர முரைப்பவர்பாற்
கூடாம னல்லவர் கூட்டம் விடாமல்வெகு கோபநெஞ்சில்
நாடாம னன்மை வழுவாம லின்றைக்கு நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.

(பொ-ரை) சிதம்பரத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவகுருநாதனே! (வயிற்றின் பொருட்டு அங்குமிங்கும்) ஓடி அலையாமலும், வீணுக்கு உழையாமலும், பட்சபாதமாய்ப் பேசுபவரிடத்திற சேராமலும், நல்லவர் கூட்டத்தைவிட்டு நீங்காமலும், கொடிய கோபத்தை மனதிற்கொள்ளாமலும், நீதி தவறாமலும், இன்றைக்கு நாளைக்கு என்று பொருள் தேடாமலும் வாழத்தகுந்த திருவருட்செல்வத்தைக் கொடுத்தருள்வாய்.

(வி-ரை) பாழுக்கு உழைத்தல்-பிரவிர்த்தி மார்க்கத்தில் பிறறல். ஓரம்-பட்சபாதம். நன்மை யீண்டு நீதியின்மேற்று. இன்றைக்கென்செய்வோம் நாளைக்கென்செய்வோம் என்று கவலைகொண்டு பொருள்தேட முயல்வோர கடவுளுண்மையில் உறுதியில்லாத நாத்திகரெனக. தன்னலங்கருதி அங்குமிங்குமோடல், பாழுக்

குழைத்தல் முதலியன கடவுளுண்மையில் உறுதியின்மையைக் காட்டுவனவாம். கடவுளுண்மையில் உறுதியுடையார் தம் நலங் கருதி அங்குமிங்குமோடார்; உழையார்; ஒன்றுஞ்செய்யார். அவர் "எல்லாஞ் சிவன்செய" லென்றிருப்பர். அச்செயலுடையாரே சிறந்த செல்வர். "எல்லாஞ் சிவனுடைமை" "எல்லாஞ் சிவன்செயல்" என்ற உணர்வுபெறுதார் எவ்வளவு பொருள்பெறினும் நிறையுள்ளம்பெறுது ஏக்கமுற்றேகிடப்பர். ஆதலால் இவரை வறியரென்றன்றோ அழைத்தல்வேண்டும்? ஈண்டு அடிகளுந் தன்னலங்கருதி ஓடியுழலாத ஒன்றைச் "செல்வம்" என்று கூறினார்கள். 4

பாராம லேற்பவர்க் கில்லையென் னுமற் பழுதுசொல்லி
வாராமற் பாவங்கள் வந்தணு காமன மனமயர்ந்து
பேராமற் சேவை பிரியாம லன்பு பெறுதவரைச்
சேராமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.

(பொ-ரை) சிதம்பரத்தி லெழுந்தருளியுள்ள சிவகுருநாதனே! ஏற்றத் தாழ்வு நோக்காமலும், யாசிப்பவர்கட்கு இல்லையென்று சொல்லாமலும், பிறர் குற்றங்கூறித்திரியாமலும், பாவங்கள் வந்து நெருங்காமலும், மனவெழுச்சி குன்றுமலும், தேவரீரது சேவை என்னைவிட்டகலாமலும், அன்பில்லாதவர்களிடங் கூடாமலுமிருக்கத் திருவருட்செல்வத்தைக் கொடுத்தருள்வாய்.

(வி - ரை) பாராமல் - பதார்த்தங்களைப் பாராமல் எனலுமொன்று. "பரஞானத்தாற பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்"—சிவஞானசித்தி. பழுதுசொல்லல்-கண்டவற்றிற் கெல்லாங் குறைசொல்லல்; ஞானத்தில் குறை சொல்லல். ஞானத்தில் குறைபாடுடையார்க்கே பிறபொருள்களிலுங் குறைபாடு தோன்றுமென்பது ஞானநூற்றுணிபு. பாவங்களை வந்து அணுகாமல்-யான் பாவச் செயல்களைச் செய்யத் தலையிடாமல். மனமயர்ந்து பேராமல்-திருவருட் செல்வ பொருளென மன

உறுதிகொண்டு ஊன்றிய மனஞ்சோர்ந்து பிறபொருண் முயற்சியி லெழாமல், சேவை பிரிந்தால் பிறநினைப்பு உறுமாகலான் "சேவை பிரியாமல்" என்றார். 5

கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.

(பொ-ரை) சிதம்பரத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவகுருநாதனே! (உயிர்களைக்) கொல்லாமலும், கொன்றவற்றை யுண்ணாமலும், வஞ்சம் கோள் திருடு (முதலியவற்றைக்) கற்றுக்கொள்ளாமலும், வஞ்சகருடன் சேராமலும், சொப்பனத்திலும் (மறந்தும்) பொய் பேசாமலும், பொய்ச் சொற்களுக்குச் செவி சாயாமலும், மயில்போன்ற சாயலுடைய மாதர்கள் மாயவலையிற் சிக்காமலு மிருக்கத் திருவருட் செல்வத்தைக் கொடுத்தருள்வாய்.

(வி-ரை) இச்செய்யுளில் பஞ்சமாபாதகத்தைக் குறிப்பித்தார். இம்மூன்று செய்யுட்களும் ஒரு கருத்தனவேயாம். அவைகளிற் போந்துள்ள பொருள்விரிவைத் திருக்குறள் முதலிய உண்மைநூல் களிற் காண்க. திருவருட் செல்வம் ஒன்றுபெறின் எத்தகைத் தீமைகளுந் தலைகாட்டா என்பது கவனிக்கத்தக்கது. 6

முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே.

(பொ-ரை) கிரீடந் தரித்த அரசர்களும் மற்றவர்களும் இறுதிக் காலத்தில் ஒரு பிடி சாம்பராக வெந்து மண்ணாவதையும் (கண்கூடாகக்) கண்டும், மேலும் இப்பூமியிற்பொருந்திய வாழ்வை

எண்ணுவதல்லாமல், கனகசபாபதியின் திருவடிகளை யடைந்து நாம் பிழைக்கவேண்டுமென்று உணருவோரில்லையே (என் செய்வது.)

(வி-ரை) மரணமென்பது உயர்ந்தோர் தாழ்ந்தோரென்னும் அனைவருக்கும் பொதுவா யிருப்பதென்பார், "முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும்" என்றார். இத்திருப்பாட்டால் உயிர்கள் இறந்து சாம்பராகி மண்ணுவதைக் கண்கூடாகக்கண்டும் உலகப் பற்றை யொழித்துக் கடவுட்பற்றைக் கொள்ளாதிருப்பது எத்துணை அறியாமை என்பதை விளக்கியவாறும். "வாழ்வாவது மாயம் மண்ணுவது திண்ணம்" என்றார் வன்றொண்டர். "அழல் வாய் சுடலை தின்னக் கண்டும்" எனறார் சாத்தனார். 7

காலை யுபாதி மலஞ்சல மாமன்றிக கட்டுச்சியிற்
சால வுபாதி பசிதாக மாமுற் சஞ்சிதமா
மாலை யுபாதி துயில்காம மாமிவை மாற்றிவிட்டே
ஆலமு கந்தரு ளம்பல வாவென்னை யாண்டருளே.

(பொ-ரை) (திருப்பாற் கடலினின்று மெழுந்த) விஷத்தை விரும்பி யுண்டருளிய சபாநாதனே! (உயிர்கட்கு நாடோறும்) காலையில் உண்டாகுந் துன்பம் மலத்தாலுஞ் சலத்தாலுமாம்; இஃதல்லாமல் நண்பகலில் உண்டாகும் அருந்துன்பம் பசியினாலும் தாகத்தினாலுமாம்; முன்னே சேகரித்ததாகிய மாலைத துனபம் உறக்கததாலுங் காமததாலுமாம். இததுன்பங்களை அறவொழிதது அடியேனை யாட்கொண்டருள்க.

(வி-ரை) உபாதி-துன்பம். பசியுந் தாகமும் மிககொடுமையாக உயிகளை வருததுதலின் "சால உபாதி" எனறார். சஞ்சிதம்-ஈட்டியவினை. மும்மலத தொடர்புடையார்க்கு மலசல உபாதி முதலிய உபாதிகள் உண்டு. அத்தொடர்பில்லார்க்கு இவ்வுபாதிகள் இல்லை யென்க. இவ்வுபாதிகளைப் போக்கும் வழி யோகாப்பியா

சமாம். உறக்கமுங் காமமும் வினைக்கீடாக விளைதலின் "மூற்சஞ் சிதமா மாலையுபாதி" என்றார். 8

ஆயும் புகழ்த்தில்லை யம்பல வாண ரருகிற்சென்றாற்
பாயு மிடபங் கடிக்கு மரவம்பின் பற்றிச்சென்றாற்
பேயுங் கணமும் பெருந்தலைப் பூதமும் பின்றொடரும்
போயென்செய் வாய்மன மேபிணக் காடவர் போமிடமே.

(பொ-ரை) மனமே! (அறிஞரால்) ஆராயப்படுஞ் சீர்த்தி வாய்ந்த தில்லைச்சிற்றம்பலநாதர் சமீபத்தில் அணைந்தால் இடபம் பாயும்; பாம்பு கடிக்கும்; பின்தொடர்ந்துபோனால், பேய்களும் பிசாசுகளும் பெரிய தலைகளையுடைய பூதங்களும் பின்னேதொடர்ந்துவரும்; பயமுறுத்தும். அக்கடவுள் செல்லுமிடம் பிணங்கள் நிறைந்த சுடுகாடாம். (அவரிடத்தில்) நீசென்று என்ன செய்வாய்?

(வி-ரை) இடபம்-தருமம் ஞானம் என்பவற்றின் குறிப்பு. பாம்பு-குண்டலிசத்திக்குறி. கணங்கள்-பலமூர்த்தங்கள்; பஞ்சபூதக் குறி யெனலுமாம். பிணக்காடு-மாயை யழிந்த இடத்தைக் காட்டுங் குறிப்பு. இவ்வுண்மை யுணராதார் மாடு பாம்பு பூதம் சுடுகாடு எனக்கொண்டு இடர்ப்படுவர். சிவபிரானிடத்துள்ள இவைகளை அவ்வப்பொருளாகக் கொண்டு வழிபடுகின்றமட்டும் ஞானம் உதயமாகாது: அவைகளின் உண்மைகண்டே வழிபடல் வேண்டுமென்பது இச்செய்யுளின் கருத்து. "தூமதி சடைமிசை சூடுதல் தூநெறி * * * " எனச் சுவாமிகள் திருவொற்றியூர் ஒருபா ஒருபஃதில் அருளிச்செய்துள்ள பொருள்களைச் சிந்திக்க. 9

ஓடு மெடுத்தத ளாடையுஞ் சுற்றி யுலாவிமெள்ள
வீடுக டோறும் பலிவாங்கி யேவிதி யற்றவர்போல்
ஆடு மருட்கொண்டிங் கம்பலத் தேதிரிந்து மாண்டிதன்னைத்
தேடுங் கணக்கென்ன காண்சிவ காம சவுந்தரியே.

(பொ-ரை) சிவகாமசௌந்தரியே! (அரையில்) தோலாடை யுடுத்திக் (கரத்தில்) பிக்ஷாபாத்திரமேந்தி வீட்டு வாயில்கடோறு மெதுவாகத் திரிந்து பிச்சையேற்றுத் திக்கற்றவரைப்போல மயங்கி வெட்ட வெளியிலே கூத்தாடி நிற்கும் ஆண்டியைத் தேடுங்காரணம் யாது?

(வி-ரை) மக்கள் ஞானம் பெறவேண்டின் அகப்பற்று புறப் பற்றுக்களை அறவே யொழித்து ஓடெடுத்துப் பிச்சை யெடுக்கும் ஆண்டிபோலாதல் வேண்டுமெனக் குறிப்பால் உணர்த்தியவாறும். மாறுபிமானம் விடவேண்டுமென்பது கருத்து. ஆண்டு-தத்துவங்க ளில் தோயாது தன்னை ஆள்பவன்; பற்றில்லாதவன். சிவசத்தி வழிச் சென்று ஆண்டியை அடையவேண்டுமென்க. 10

ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன் றோடொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன் றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே.

(பொ-ரை) உண்பிக்கின்றவனும், தூங்குவிக்கின்றவனும், ஒரு பொருளோடு மற்றொரு பொருளை இசைவிக்கின்றவனும், அவை களைத் தொழிற்படுத்துகின்றவனும், அங்ஙனந் தொழிற்படுத்திய பய னைக் காண்பிக்கின்றவனும், நல்வினை தீவினையென்னும் பாசக் கயிற்றின் வழி ஆட்டுவிக்கின்றவனும் தில்லைச்சிற்றம்பலத்திலே ஒரு முதல்வன் உளன்.

(வி-ரை) "நன்றாரிற் பூட்டிய" என்னுஞ் செய்யுளையும் அத னது விசேட உரையையும் பார்க்க. 11

அடியார்க் கெளியவ ரம்பல வாண ரடிபணிந்தால்
மடியாமற் செல்வ வரம்பெற லாம்வைய மேழளந்த
நெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலனருட்
குடிகாணு நாங்க ளவர்காணு மெங்கள் குலதெய்வமே.

(பொ-ரை) தொண்டர்களுக்கு எளியவரும், சிற்சபையில் விளங்குபவருமாகிய ஸ்ரீநடராஜப்பெருமான் திருவடிகளைத்தொழு தால், அழியாமல் திருவருட்செல்வத்தை யடையவேண்டிய வரத் தைப் பெறலாம். நாங்கள் ஏழுலகங்களையும் அளந்த நாராயணனும் நான்முகனுங் கண்டறியாத நித்தனாகிய சிவபெருமான் திருவருளுக் குரிய அடிமைகளாவோம்; அவர் எங்கள் குலதெய்வமாவர்.

(வி-ரை) வையம் ஏழினையும் அளந்தமையால் விஷ்ணுமூர்த் தியை நெடியோன் என்றார். வேதியன்-வேதங்களை வெளியிட்ட வன்; பிரமன். நிமலன்-மலமில்லாதவன்; சிவபெருமான். ஈண்டு ஆண்டவனை அடியார்க்கெளியன் என்றமையான், மற்றையோர்க்கு அவன எளியவனல்லன் என்பது பெறப்படுகிறது. 'தான்' என் னும் ஜீவபோதமற்று ஆண்டவன் அருள்வழிநின்று அவன் அடியில் ஆர்ந்தமனமுடையார்க்கு இறைவன் எளியவனாவன்; அவர்க்கு ஊழிய னாய் அவரிடும் பணியையுஞ் செய்வன். ஜீவபோதமுடையார்க்கு ஆண்டவன் எளியனல்லன்; அவ்வுண்மையைச் சுவாமிகள் இத்திருப் பாட்டிலேயே "நெடியோனும் வேதனுங் காணாத நித்தநிமலன்" என்று குறிப்பிட்டுள்ளார். நெடியோனும் வேதனும் தான்தானே முறையே கடவுளென்றும், ஆண்டவன் அடிமுடியைக் காணவல்லேம் என்றும் இறுமாந்து நின்றமையால், அவர்க்கு அடிமுடி புலனாக வில்லை. ஆண்டவன் அடியார்க் கெளியன் என்பதும், ஏனையோர்க்கு அரியன் என்பதும் இப்பாவால் விளக்கப்பட்டிருத்தல் காண்க. மடியாதசெல்வம் - இறவாத வாழ்வு. பிறப் பிறப்பில்லா இறைவனை வழிபடுவோர் இவ்வாழ்வு பெறுவரென்க. இக்கருத்துப்பற்றியே "அம்பலவாணர் அடிபணிந்தால்" என்றார். அம்பலத்தாடும் எம்பெரு மான் பிறப் பிறப்பில்லாப் பெரியோன் என்று கூறாத நூல்களில்லை. தத்துவங்கடந்த தனிமுதலுக்குப் பிறப்பேது? இறப்பேது? அவரே "எங்கள் குலதெய்வம்" என்றபடி. இப்பாவில் ஆண்டானடிமைத் திறம் நன்கு விளக்கப்பட்டிருத்தல் காண்க.

தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங் கேமண்ட லீகர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடக சாலையெங் கேயிது கண்மயக்கே.

(பொ-ரை) தெய்விகம் பொருந்திய சிதம்பரத்தில் வீற்றிருந்தருளும் பெருமானே! தேவரீர் திருவுள்ளஞ் சிறிது திரும்பிவிடுமானால் பொய்யாகிய கனவுபோன்ற பெரிய அரசர்களின் வாழ்வும் உலகமும் எது? மெய்யாக எண்ணிய செல்வம் எது? சக்கரவர்த்திகளின் உப்பரிகை எது? அலங்காரஞ் செய்த நாடகசாலை எது? (எல்லாஞ் சூன்யமாம்) இவையாவும் கண்மயக்கமேயாம்.

(வி-ரை) சித்தம் திரும்பிவிட்டால் - திருவுள்ளம் எங்கள்மீது பதிந்துவிட்டால்; திருவுள்ளம் சராசரங்களினின்றும் நீங்கிவிட்டால் எனக்கொள்ளினும் பொருந்தும். கண்மயக்கம் - போலித்தோற்றம். ஆண்டவன் திருவருள் பதியாதவரை செகமும் பிறவும் தோன்றிக் கொண்டிருக்குமென்றபடி. 18

உடுப்பானும் பாலன்ன முண்பானு முய்வித்தொருவர் தம்மைக்
கெடுப்பானு மேதென்று கேள்வி செய்வானுங் கெதியடங்கக்
கொடுப்பானுந் தேகியென் றேற்பானு மேற்கக் கொடாமனின்று
தடுப்பானு நீயல்லை யோதில்லை யானந்தத் தாண்டவனே.

(பொ-ரை) தில்லையம்பதியில் ஆனந்த நடம்புரியும் ஐயனே! ஆடைகளைத் தரிப்பவனும், பாலன்னத்தைப் புசிப்பவனும், ஒருவரைப் பிழைப்பித்து மற்றொருவரைக் கெடுப்பவனும், யாதென்று கேள்வி கேட்பவனும், வறுமை நீங்கக் கொடுப்பவனும், பிக்ஷா தேகியென்று இரப்பவனும், இரக்கத் தானங்கொடாமல் இடைநின்று தடுப்பவனும் நீயல்லவா?

(வி-ரை) சிவச்செயல்கள் யாவுஞ் சிவச்செயலெனக் கூறிய வாறு காண்க. அஃது இறைவன் உலகுயிர்களோடு அத்துவித மாகக் கலந்து நிற்றலின் அங்ஙனம் அருளிச்செய்தனர் என்க. "அறிவானுந்தானே அறிவிப்பான்தானே, அறிவாய் அறிகின்றான் தானே-அறிகின்ற, மெய்ப்பொருளுந்தானே விரிசுடர் பாராகாயம், அப்பொருளுந் தானேயவன்"—காரைக்காலம்மையார். இந்நிலை பெற்றோர்க்குக் காண்பான் காட்சி காட்டப்படும் பொருள் என்னும் வேற்றுமைகள் தோன்றா. எல்லாஞ் சிவமாகவே தோன்றும். அத்துவித நிலை என்பது இதுவே. 14

விததாரம் பேசினுஞ் சோங்கே றினும்கம்ப மீதிருந்து
தததாவென் றோதிப் பவுரிகொண் டாடினுந் தம்முனை றம்பி
ஒத்தாசை பேசினு மாவதுண் டோதில்லை யுண்ணிறைந்த
கத்தாவின் சொற்படி யல்லாது வேறில்லை கன்மங்களே.

(பொ-ரை) வாக்கு விஸ்தாரமாகப் பேசினாலும், கப்பலேறிப் போனாலும், கம்பத்தின்மேலிருந்து தத்தா என்று சொல்லிப் பவுரிக் கூத்தாடினாலும், தமையன் தம்பி உதவியாகப் பேசினாலும், எதாயினும் ஒருகாரியம் ஆவதுண்டோ? தில்லையம்பதியில் பூரண கலைகளோடு வீற்றிருந்தருளும் ஆண்டவன் கட்டளைப்படி அல்லாமல் வேறு செயல்களில்லை.

(வி-ரை) விததாரம்-விறபனம்; வாக்சாதுர்யம். சோங்கு-ஒருவகை மரக்கலம். பவுரி-கூத்துவிகற்பம்.

இக்கருத்துள்ள பாக்கள் முன்னே பல உள்ளன. அவைகட்கு எழுதியுள்ள விசேடவுரைகளைப் பார்க்க. 15

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்துவிட்டால்
இறவா திருக்க மருந்துண்டு காணிது வெப்படியோ
அறமார் புகழ்த்தில்லை யம்பல வாண ரடிக்கமல
மறவா திருமன மேயது காணன் மருந்துனக்கே.

(பொ-ரை) நெஞ்சே! (உலகத்திலே) பிறவாமலிருக்க வரம் பெறுதல்வேண்டும்; (அவ்வரம்பெருமல்) பிறந்துவிட்டால் மரணமடையாதிருக்க மருந்திருக்கிறது. இஃது எப்படியென்றால் தருமம் நிறைந்த கீர்த்திவாய்ந்த தில்லையம்பதியிலே சிற்சபையிலெழுந்தருளியுள்ள ஸ்ரீநடேசபெருமானுர் திருவடித்தாமரைகளை மறவாமலிரு. அதுதான் உனக்கு நல்ல மருந்து.

(வி-ரை) பிறவி, பெருந்துன்பத்தை விளைப்பதினாலும், அப்பிறவி தாங்கி உலகத்தில் வாழ்ந்து பிராரத்த வினையை நுகர்ந்து வருகையில் மறுபிறப்பிற்கு வித்தாக ஆகாமியகர்மம் ஏறுகின்றமையாலும், "பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும்" என்றார். இது பற்றியே "மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்" என்றார் தம்பிரான் தோழர். அறியாமையால் ஞானம் பெறாது கர்மங்களைச் செய்து பிறந்துவிட்டால் அப்பிறவியிலேயே மீண்டும் பிறவா நெறியைத் தேடிக்கொள்ளல் வேண்டுமென்பார் "இறவா திருக்க" என்றார். ஞானம் பெறாது சாகின்றவன் மீண்டும் பிறப்பானுகலான் இறப்புவேண்டாம் எனப் பெரியோர் கூறுப. இறப்பு இன்றேல் பிறப்பும் இன்றென்க. "யானேனும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்" என்றார் மணிவாசகனாரும். இறவாமைக்கு மருந்து ஸ்ரீநடராஜப்பெருமான் திருவடிக்கமலங்கள் என்று குறிப்பிட்டார். இறவாமையை விரும்புவோர் சிவபிரானையே போற்றல்வேண்டுமென்க. "மருநதாகிப் பிணிதீர்க்க வல்லவடி" என அப்பர்சுவாமிகளும், "பெருந்துறையின் மேயபெருங் கருணையாளன், வருந்துயரந் தீர்க்கு மருந்து" எனவும், காரணங்களெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன், சரணங்களே சென்று சார்தலுமே தானெனக்கு, மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுதத, கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" எனவும் மாணிக்கவாசகசுவாமிகளுங் கூறியிருத்தல் காண்க. "இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகிறார், பிறவாமை

வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னையென்றும், மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்துபாடி, அறவாநீ ஆடும் போது உன்னடியின் கீழிருக்க என்றார்"—பெரியபுராணம்—காரைக் காலம்மையார் புராணம். இறவாதிருக்கு மருந்து "அம்பலவாணர் அடிக்கமலம் மறவாதிருப்பது" எனறு அடிகள் அருளியுள்ளது கருதத்தக்கது. "இரவும்பகலும் பிரியாது வணங்குவன" என்றார் அப்பரும். இறைவனை மறவாதேத்துவோரை, வேறு வினைகள் சூழா. அவர் இறைவனையே எண்ணலால் அவர்பால் இறைவன் அருட் குணங்களே பதிகின்றன. அக்குணம் பதியப்பெறுவோர் பிறப் பிறப்பு என்னும் மருளில் வீழாரென்க. 16

தவியா திருநெஞ்ச மேதில்லை மேவிய சஙகரனைப்
புவியார்ந் திருக்கின்ற ஞானா கரனைப் புராந்தகனை [தால்
அவியா விளக்கைப்பொன் னமபலத் தாடியை யைந்தெழுத்
செவியாம னீசெவித தாற்பிற வாமுததி சித்திக்குமே.

(பொ-ரை) மனமே! இளையாமலிரு. தில்லையம்பதியிலெழுந் தருளியுள்ள சிவபெருமானை; உலகமெங்கும் நிறைந்திருக்கின்ற ஞானகரனை; முப்புரங்களை யெரித்தவனை; என்றும் அவியாத விளக்கினை; கனகசபையில் தாண்டவம் புரிபவனை; ஸ்ரீ பஞ்சாட்சர மந்திரததால் செபியாமல் செபித்தால் பிறவாத வீடு கைகூடும்.

(வி-ரை) "தில்லை மேவிய சங்கரன் யாண்டுளன என்று நெஞ்சே! நீ தவியாதிரு. அவன புவியார்ந்திருக்கின்ற ஞானகரன்" என்று உலகததார்க்கு அறிவுறுத்தியவாறு காண்க. நாம் புவி யைக் காண்கிறோம். ஆனால் அதன்கண் ஆர்நதிருக்கிற சிவததைக் காண்கின்றேமில்லை. இஃதென்ன அறியாமை? அறியாமையே இதறகுக்காரணம். அவ்வறியாமையைப் போக்கவல்லது ஸ்ரீபஞ் சாக்கர செபமாகலான் "ஐந்தெழுத்தால் செவியாமல் நீசெவித தால்" என்றார். ஈண்டுப் பஞ்சாக்கர மென்றது முததி பஞ்சாக்

சரத்தை. செபியாமல் செபித்தல் - கருவிகாரணங்களைக் கடந்து சமாதிநிட்டையில் செபித்தல். இஃது அனுபவ நிலையாகலான் சற்குருபால் கேட்டுதெளிக. "இல்லக விளக்கது இருள் கெடுப்பது, சொல்லக விளக்கது சோதி யுள்ளது, பல்லக விளக்கது பலருங் காண்பது, நல்லக விளக்கது நமச்சி வாயவே"—தேவாரம். எல்லா ஒளிகளுக்கும் ஒளியளிக்கும் பேரொளி சிவமாதலான் அதை "அவியாவிளக்கு" என்றார். அவியும் விளக்குகளைக் காணுங்கண்ணை அவியாவிளக்கைக் காண்பதாகச் செய்ய முயலவேண்டுவது அறிஞர் கடமை. 17

நாலின் மறைப்பொரு ளம்பல வாணரை நம்பியவர்
பாலி லொருதரஞ் சேவிக்கொ ணுதிருப் பார்க்கருங்கல்
மேலி லெடுத்தவர் கையிலங் கைதைப்பர் மீண்டுமொரு
காலி னிறுத்துவர் கிட்டியுந் தாம்வந்து கட்டுவரே.

(பொ-ரை) நான்கு வேதப் பொருளாயுள்ள சபாநாயகரை உறுதியாகக்கொண்டு அவர் திருச்சந்நிதியில் ஒருமுறையாவது வணங்கக் கூடாமல் (லௌகிகத்தில் அழுந்தி வாளா) கிடப்பவர்களை (யமபடர்கள்) அவர்கள்மேல் கருங்கல்லைச் சுமத்திக் கைகளில் விலங்கிடுவார்கள்; மறுபடியும் ஒருகாலில் நிற்கச் செய்வார்கள்; (அவ்வளவில் நின்றுவிடாமல்) தாங்களே நெருங்கிப்போந்து (பாசத்தால்) இறுக்கிக் கட்டுவார்கள்.

(வி-ரை) நான்கு வேதம்: இருக்கு யசுர் சாமம் அதர்வணம். நால்வேதப்பொருள் சிவபெருமான என்பதனை "வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது, நாத னுமம நமச்சி வாயவே" "அருமறையினகத்தானை" என வருஉந் தேவாரத்தானுணர்க. கடவுளுண்மையில் நம்பிக்கை வேண்டுமென்பார் "அம்பலவாணரை நம்பி" என்றார். என்னை? "எதுக்களானும் எடுத்த மொழியானுஞ்" சாதிக்க வொண்ணுதவன் ஆகலான். "இறைவனே யெம்மை யென்றும்

நம்புவார்க் கன்பர் போலும்" என்றார் அப்பர்சுவாமிகளும். சிவ பிரானைத் தொழாமலும், அவர் திருநாமத்தை யுச்சரியாமலும் வாளா காலங்கழிப்போர் அடையும் நரகவாதனையை உபதேசகாண்ட முத லிய உண்மைநூல்களிற் காண்க. கட்டுவர் என்பதற்குத் தம் வழி நிறுத்துவர்; கஷ்டப்படுத்துவர் எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். சிவதரிசனஞ் செய்பவரை யமன் அணுகான் என்ப தைக் கூறியவாறு. "நமன்வரில் ஞானவாள் கொண்டே யெறிவன் சிவன்வரின் நானுடன போவது திண்ணம்" என்றார் திருமூலர். 18

ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தமைப்
போற்றா தவர்க்கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்தில்
சோற்றாவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்றே
ஏற்றாலும் பிச்சை கிடையாம லேக்கற் றிருப்பர்களே.

(பொ-ரை) கங்காநதியோடு தும்பைமலரைத்தரித்துத் திரு நடஞ் செய்யுஞ் சபாநாயகரைத் தோத்திரஞ் செய்யாதவர்கட்கு இவ்வுலகத்தில் அடையாளங்களுண்டு (அவை யென்னவெனில்) சோற்று வாசனையுங் கிடைக்கப்பெறாமல், இன்பமிழந்து, உடுக்க ஆடையு மொழிந்து, இரந்தாலும் பிச்சை யகப்படாமல் ஏக்க மடைந்திருப்பார்கள்.

(வி-ரை) ஆவி - வாசனை. சுகம் - உலக இன்பம். ஏக்கறல் - தாழ்ந்து நிற்றல். சிவபிரானைப் போற்றாதவர்கள் உலக இன்பமும் நுகரமாட்டார்கள் என்பது. "மருவுந் துவாதச மார்க்க மில்லாதார், குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார், வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகும், உருவுங் கிளையும் ஒருங்கிழப் பாரே"—திருமந்திரம். 19

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
சித்தனை யம்மை சிவகாம சுந்தரி நேசனையெங்

கத்தனைப் பொன்னம் பலத்தாடு மையனைக் காணக்கண்கள்
எத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றவே.

(பொ-ரை) எல்லா உயிர்கட்குந் தந்தையை; முப்பத்து முக்கோடி தேவர்கட்குத் தலைவனை; நித்தியனை; தாயாகிய சிவகாமசுந்தரியின் நாயகனை; எமது கர்த்தனை; கனகசபையில் நடம்புரியும் அழகனைத் தரிசிக்க நம் கண்கள் எத்தனைகோடி யுகங்களோ தவஞ் செய்திருக்கின்றன.

(வி-ரை) உலகிலுள்ள எல்லாச் சமயத்தவர்களுஞ் சிவபெருமானையே வழிபடினும், அவர் சிவநாமத்தால் வழிபடாமையானும், தத்துவங் கடந்த சொரூப உண்மையைத் தேருமையானும், சித்தாந்த சைவர் சிவநாமத்தால் இறைவனை வழிபடுகின்றாராகலானும், கடவுள் சொரூபம் தத்துவங் கடந்த தென்னுங் கொள்கை யுடையாராகலானும் "கத்தனை" யெனப் பொதுவாகக் கூருது "நங்கத்தனை" என்றருளிச்செய்தார். பின்னர் அதனை வலியுறுத்த "பொன்னம் பலத்தாடு மையனை" என்றார். 20

## திருச்செங்காடு

நெருப்பான மேனியர் செங்காட்டி லாத்தி நிழலருகே
இருப்பார் திருவுள மெப்படி யோவின்ன மென்னையன்னைக்
கருப்பா சயக்குழிக் கேதள்ளு மோகண்ணன் காணரிய
திருப்பாத மேதரு மோதெரி யாது சிவன்செயலே.

(பொ-ரை) அக்கினிபோன்ற திருமேனியுடையவரும், திருச்செங்காட்டில் ஆத்தி மாத்தடியில் எழுந்தருளியிருப்பவரும் ஆகிய சிவபெருமானுரது திருச்சித்த மெப்படியோ! அடியேனை யின்னந் தாயார் கருக்குழியில் வீழ்த்துமோ! (அல்லது) திருமால் காண்டற்கரிய திருவடியைக் கொடுத்தருளுமோ! ஒன்றுந் தெரியாது; எல்லாஞ் சிவன்செயலாம்.

(வி-ரை) இதனல் ஆன்மாக்கள் பாதந்திரரென்றபடி. 21

# திருவொற்றியூர்

ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி யறிவழிந்து [ன்
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யா
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே.

(பொ-ரை) திருவொற்றியூரி லெழுந்தருளியுள்ள சிவபெரு மானே! கோழையுங் கட்டி, கண்களும் உள்வாங்கி, உணர்வுங் கெட்டு, தேகமும் பொய்யாகிவிடும்பொழுது அடியேன் ஒரு வரம் வேண்டு கிறேன். அதனைத் திருவருள்செய்யவேண்டும். (அஃதென்னவெனில்) விபூதி யணிந்து, கைகளைத் தொழச்செய்து, பஞ்சாட்சரத்தை யோதக் கற்பித்தருளுமென்பது.

(வி-ரை) செய்யும் என்பதைத் திருவொற்றியூ ரென்பதோடு கூட்டிப் பொருளுரைத்தலுமொன்று. கண்கள் உள்வாங்கல்-கண்கள் பஞ்சடைதல். அறிவழிதல்-புலன்களொடுங்கல். தேகம் பொய்யாதல்-உயிர்போதல்; தேகம் நழுவல். நீறு-மலத்தை நீறுக்குவது. திருநீறிட லும், கைதொழலும், ஐந்தெழுத்தோதலுஞ் சிவத்தியானத்தை யுண் டாக்குவனவாம். உயிர் உடலினின்றும் பிரியுங்காலத்து எப்பொருளை யும் அவாவாது சிவத்தியானத்தோடு பிரிதல்வேண்டும். இல்லையேல் அவாவிற்கேற்ற பிறவி தாங்கும். "மரிக்கும்போ துன்னும் வடிவினை யாவி, பரிக்கு நினைவு பரிந்து" எனச் சோமவார விரதகற்பங் கூறிய வாற்று னுணர்க. சிவத்தியானத்தோடு நீங்கும் ஆன்மா சிவபிரானைத் தரிசித்துச் சிவமாம் என்க. "அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை யுணக்கேதந்து, பங்கத்தைப் போகமாற்றிப் பாவித்தேன் பரமாவுன் னைச், சங்கொத்த மேனிச்செல்வா சாதல்நாள் நாயேனுன்னை, என் குற்று யென்றபோதால் இங்குற்றேன் என்கண்டாயே"—தேவாரம்.()

சுடப்படு வாரறி யார்புர மூன்றையுஞ் சுட்டபிரான்
திடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன் றெருப்பரப்பின்
நடப்பவர் பொற்பத நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மேவிதி யேட்டைக் கிழிப்பதுவே.

(பொ-ரை) மனமே! மூன்று புரங்களையும் எரித்த முதல்வனும், உறுதியான பெரிய மதில்களாற் சூழப்பெற்ற அழகிய திருவொற்றியூரி லெழுந்தருளியுள்ளவனுமாகிய தியாகேசப்பெருமானது அகன்ற திரு வீதியில் நடக்கும் அடியவர்களுடைய திருவடிகள் நமது சிரசின்மேற் படும்படி நன்றாக உருண்டு கிடத்தலே பிரமன் எட்டைக் கிழிப்ப தாகும். (இவ்வுண்மையை ஞானமின்றி யிறந்து சுடுகாட்டிற்) சுடப்படு கின்ற கீழ்மக்கள் அறியார்.

(வி-ரை) தென்-தெற்குமாம். இச்செய்யுளால் திருவொற்றியூரின் உயர்வும் அடியார்கள் பெருமையும் விளக்கியவாறும். 23

## திருவிடைமருதூர்

காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
ஓடே யெடுத்தென்ன வுள்ளன்பி லாதவ ரோங்கிவிண்ணோர்
நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.

(பொ-ரை) உள்ளத்தில் மெய்யன்பில்லாதவர்கள் வனத்திலே சஞ்சரித்தா லென்ன? காற்றையே யுணவாகக் கொண்டு (சீவித்தா) லென்ன? கந்தைத் துணியை யணிந்து பிட்சாபாத்திரத்தையே தாங் கிப் பிச்சை யேற்றாலென்ன? (ஒன்றும் பயனில்லை) உயர்ந்த தேவர்க ளுலகமே யென்னத்தக்க திருவிடைமருதூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானிடத்தில் உண்மை யன்புடையவர்கள் பெண்களுடன வீட்டிலே யிருந்தாலும் உண்மை ஞானத்தால் உண்டாகும் முத்தி யின்பத்தை யடைவார்கள்.

(வி-ரை) நாரியர்பால் வீடு என்றது இல்லறத்தை, நாரியர்பால் வீடு என்றது பொதுமகளி ரில்லமெனக் கூறுவோருமுளர். அஃ தீண்டுப் பொருந்தாது. இறைவனுக்கு வேண்டியது அன்பு. அவ்வன் புடையார் எவவிடமிருந்தாலென்ன என்பதைக் குறிப்பித்தவாறும், வெறும் வேடத்தால் ஒருவித பயனுமில்லை எனறபடி. இக்கருததை அடிகள் "புண்ணிய புராதன புதுப்பூங்கொன்றை" என்னுந் தொடக் கத்த ஆசிரியப்பாவால் விரிததுக் கூறியிருக்குமாற்றானுணர்க. "கான நாடு கலநது திரியிலென், ஈனமின்றி யிருந்தவஞ் செய்திலென்" என்றும், "நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்" என்றும் அப்பர்சுவாமிகளுங் கூறியுள்ளார்கள். 24

தாயும பகைகொண்ட பெண்டீர் பெரும்பகை தன்னுடைய
சேயும் பகையுற வோரும் பகையிச் செகமும்பகை
ஆயும பொழுதி லருஞ்செல்வ நீங்கிலிங் காதலினாற்
றோயுநெஞ் சேமரு தீசர்பொற் பாதஞ் சுதந்திரமே.

(பொ-ரை) பிரவிர்த்திமார்க்கத்தி லழுந்தும் மனமே! ஆராய்ந்து யோசிக்குங் காலத்தில், இவவுலகத்தில் அரிய பொருட்செல்வம் நீங்கு மாறுல் பெற்ற தாயாரும் பகையாவர்; மணஞ்செய்த மனைவியரும் பகைவராவர்; தன் பிள்ளைகளும் பகைவராவார்கள்; சுற்றத்தினரும் பகைவராவர்; இவ்வுலகிலுள்ள மற்றவர்களும் பகைவராவார்கள். ஆனபடியால் நமக்குச் சுதநதிரமாக உள்ளது திருவிடைமருதூரி லெழுந்தருளியுள்ள சிவபெருமானாது திருவடித்துணையே.

(வி-ரை) "கொண்ட பெண்டீர்" என்றமையான் பொருட் பெண் டிரை விலக்கியவாறு காண்க. "கல்லானே யாயிடினுங் கைப்பொரு ளொன்றுண் டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர் - இல் லானை, இல்லாளும் வேண்டாள் ஈன்றெடுத்த தாய்வேண்டாள், 'செல்லா தவன்வாயிற் சொல்"—ஔவையார். 25

## திருக்கழுக்குன்றம்

காடோ செடியோ கடற்புற மோகன மேமிகுந்த
நாடோ நகரோ நகர்நடு வோநல மேமிகுந்த
வீடோ புறந்திண்ணை யோதமி யேனுடல் வீழுமிட
நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணை நின்பதமே.

(பொ-ரை) ஓங்கி யெழுந்துள்ள திருக்கழுக்குன்றத்தில் வீற்றிருந்தருளும் பெருமானே! அடியேன் சரீரஞ் சாயுமிடம் காட்டிலோ; மரத்தடியிலோ; கடற்கரையிலோ; பெருமை மிகுந்த நாட்டிலோ; நகரத்திலோ; நகரத்தினிடையிலோ; நன்மை சிறந்த வீட்டிலோ; வெளித்திண்ணையிலோ; (ஒன்றும் அறியேன் ஆதலால்) தேவரீர் திருவடிகளே எனது உயிர்க்குத் துணை.

(வி-ரை) நாடு - நாடப்படுவது. வீட்டில் எல்லாச் சௌகரியங்களும் உண்மையான் "நலமே மிகுந்த" என்றார். தமியேன்-தனியேன்; வறியேன். 'இறப்பது நிச்சயம் அஃது எப்பொழுதோ எங்கேயோ நிகழ்ந்துவிடும். உடல்துணையை நான் பொருள்படுத்துகின்றேனில்லை. உயிர்த்துணையையே வேண்டி நிற்கிறேன்' என்றபடி. உயிர்க்குத துணை ஆண்டவன் திருவடி என்னும் உணர்வு பெற்றோர் உடல்நலம் நாடார். அது வீழுமிடங்களையுங் கருதார். உயிர்த்துணை யின்னதென் றுணரார் தாம் உலவும்போதும் உடல்நலங் கருதி வாழ்ந்து, இறந்த பின்னரும் அதைத் தம்முடைமையாகக் கொள்ளுமாறு எனது உடலை இவ்விடத்தில் இவ்வாறு புதைக்கவேண்டுமென்று குறிப்பிடுகிறார். இம்மூடர்க்கும் அறிவுகொளுத்த ஓதிய பாடல் இது. 26

## திருக்காளத்தி

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைசுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்தபின்பு

செத்துக் கிடக்கும் பிணத்தருகே யினிச் சாம்பிணங்கள்
கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே.

(பொ-ரை) தென்கயிலாயமென்னும் திருக்காளத்தியி லெழுந்தருளியுள்ள சிவபெருமானே! தாயார் வயிற்றிற் பத்துமாதந் தங்கிப் பின்னர்ப் பூமியிற் பிறந்து வளர்ந்து பட்டுவத்திரம் (முதலிய வஸ்திரங்களைக்) கட்டி முத்தாபரணங்களையும் பவளமாலைகளையும் அணிந்து, இங்குமங்கும் ஓடியும் ஆடியும் (உலக இன்பங்களை நுகர்ந்து) பூர்த்தியாகிய பிறகு இறந்துகிடக்கின்ற பிணத்தின் சமீபத்திலே இனிமேல் இறக்கப்போகும் பிணங்கள் கூச்சலிட்டு அழுங் காரணமென்னை?.

(வி-ரை) திருக்காளத்திக்குத் தென்கயிலாயமென்றும் ஒரு பெயருண்டு. காளத்தி-ஆகுபெயர். "காம்பிணங்கும்" என்னுஞ் செய்யுளைப் பார்க்க. "ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலு, மாண்டார் வருவரோ மாநிலத்தீர் - வேண்டாம், நமக்கும் அதுவழியே நாம் போம் அளவும், எமக்கென் னென்றிட் டுண்டிரும்"—ஔவையார். 27

பொன்னாற் பிரயோசனம் பொன்படைத் தாற்குண்டு
பொன்படைத்தோன்
தன்னாற் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டத்
தன்மையைப்போல்
உன்னாற் பிரயோசனம் வேணதெல் லாமுண
டுனைப்பணியும
என்னாற் பிரயோசன மேதுண்டு காளத்தி
யீசனே.

(பொ-ரை) திருக்காளத்தியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! பொன்னாலாகவேண்டிய பயன் பொன்னைப் பெற்றவர்களுக்

குண்டு. பொன்னைப் பெற்றவனால் பொன்னுக்கு ஆகவேண்டிய பயன் என்ன இருக்கின்றது? அதுபோலத் தேவரீரால் விளையவேண்டிய பயன் அடியேனுக்குப் பல உண்டு. தேவரீரைத் தொழும் அடியேனால் தேவரீருக்கு ஆகவேண்டிய பயன் என்ன இருக்கிறது (ஒன்றுமில்லை.)

(வி-ரை) உவமானம் வெளிப்படை. சிவம் இன்பப்பொருளாக லான், அதனை யடையுஞ் சீவர்கட்கு அவ்வின்பம் நுகர்தலாகிய பயனுண்டு. சீவர்களால் சிவத்திற்கு என்ன பயனுளது என்றபடி. இதனை "தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர், அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாதுநீ பெற்றதொன் றென்பால், சிந்தையே கோயில்கொண்ட எம்பெருமான் திருப்பெருந்துறை யுறைசிவனே, எந்தையே யீசா உடலிடங் கொண்டாய் யானிதற் கிலனோர் கைம்மாறே" என மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்தவாற்றானுணர்க. 28

வாளான் மகவரிந் தூட்டவல்லே னல்லன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் றொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்ல னினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே.

(பொ-ரை) வாளினால் (பெற்ற) பிள்ளையை யறுத்து (இறைவனை) உண்பிக்கப் (போதிய) வல்லமையுடையனல்லேன். மனைவி கூறிய சபததால் இளமை யின்பததை விட்டொழிக்கத் தீரமுடையனல்லேன். (ஐந்து நாளாகத) திருத்தொண்டு செய்து ஆறுநாளிற் கண்ணைத் தோண்டி (ஆண்டவன் திருக்கண்ணில்) அழுத்த ஆற்றலுடையவனல்லேன. இததகைய அடியேன் திருக்காளததிநாதனுக்கு இனிப்போய் ஆட்படுவது எப்படி?,

(வி-ரை) வாளால் மகவரிநதூட்டினவர்-சிறுதொண்டநாயனார். மாதுசொன்ன சூளால் இளமை துறந்தவர் - திருநீலகண்டநாயனார்.

காமத்தை வெறுத்தற்கரிய பருவம் இளமையாகலான் "இளமை துறக்க" என்றார். "காளையாம் பருவம் செத்துங் காமுறு இளமை செத்தும்" என்றும், "பொறையிலா வறிவுபோகப் புணர்விலா இளமை * * * " என்றும் வளையாபதி கூறுமாற்றானுணர்க. "தொண்டு செய்து" என்பதைப் பிறவற்றோடு சேர்ப்பினும் பொருந்தும். கண்ணிடந்தப்பினவர்-கண்ணப்பநாயனார். இவர்கள்வரலாற்றைப் பெரியபுராணத்திற் காண்க. மகவையரிதல், இளமைதுறத்தல், கண்ணிடந்தப்பல் ஆகிய இச்செயல்கள் செயற்கருஞ் செயல்களாகும். இவை, உடலையும் மனைவி மக்களையும் பொருளாகக்கொண்டுள்ளார்க்கு மிக அருமையாகத் தோன்றும். அவைகளைப் பொருளாகக் கொள்ளாது அவைகளின்மேல் சிறிதும் பற்றின்றி அறிவுமயமாய் நிற்போர்க்கு அவைகள் மிக எளிமையாகத் தோன்றும். உலகப் பற்றை யொழித்தே கடவுளுக்கு ஆளாதல் வேண்டுமென்பதை அறிவித்தவாறும். 29

முப்போது மன்னம் புசிக்கவுந் தூங்கவு மோகத்தினாற்
செப்போ திளமுலை யாருடன் சேரவுஞ் சீவன்விடும்
அப்போது கண்கலக் கப்பட வும்மமைத் தாயையனே
எப்போது காணவல் லேன்றிருக் காளத்தி யீசுரனே.

(பொ-ரை) ஐயனே! திருக்காளத்தியி லெழுந்தருளியுள்ள பெருமானே! மூன்று வேளையுஞ் சோறுண்ணவும்; உறங்கவும், காம விகாரததால் செப்புக்கிண்ணமென்று சொல்லப்படும் இளைய தனங்களையுடைய பெண்களோடு புணரவும், உயிர்விடுங்காலத்தில் கண் கலங்கித துக்கப்படவுஞ் செய்தாய். (ஆகையால்) யான் எந்தக் காலத்தில் தேவரீரைத தரிசிக்க வல்லவனுவேன்?.

(வி-ரை) முப்போது - காலை உச்சி மாலை. புசித்தலிலும் தூங்குவதிலும் இளமுலையாருடன் சேர்வதிலுங் காலங்கழிப்போர் இறு

திக்காலத்துப் பெருந்துக்கமுற்று மாணமடைவர்; மீண்டும் உலகிற் பிறந்து உண்ணல் உறங்கல் முதலிய களியாட்டுக்களைச் செய்து, இறப்பர். இங்ஙனே பிறப்பிறப்புக்களாற் றுன்புறுத்தப் பெறுவோர் கடவுள் திருவடியைக் காணார் என்னும் உண்மையை இப்பாசுரத்தால் அறிவுறுத்தினார். கடவுளைக் காணவேண்டுமாயின் மேற்போந்த மூன்றையும் விடவேண்டுமென்பது பெரிதுங் கவனிக்கத்தக்கது. உறக்கத்துக்குங் காம விச்சைக்குங் காரணமாயிருப்பது உணவு. அதுபற்றியே அறிவுடையோர் மிதமாகச் சததுவகுண ஆகாரங்களைப் புசித்து வருவர். 30

இரைக்கே யிரவும் பகலுந் திரிந்திங் கிளைத்து மின்னார்
அரைக்கே யவலக் குழியரு கேபசும் பார்ந்தொழுகும்
புரைக்கே யுழலுந் தமியேனை யாண்டருள் பொன்முகலிக்
கரைக்கேகல் லால நிழற்கீ ழமர்ந்தருள் காளத்தியே.

(பொ-ரை) பொன்முகலி நதிக்கரையிலும் கல்லாலவிருட்சத் தடியிலும் எழுந்தருளியுள்ள காளத்தியப்பனே! இவ்வுலகத்தில் உணவின்பொருட்டே அல்லும்பகலும் (அங்குமிங்கு) மோடித்திரிந்து மெலிந்து பெண்களின் மின்னலைப்போன்ற இடையிலே, நோய்க்கிடமான குழிக்குச் சமீபத்தில் வழுவழுப்பு நிறைந்து (இரத்தநீர் முதலியன) சிந்துங் குழிப்புண்ணிலே சுழலும் வறியேனை ஆட்கொண்டருள்க.

(வி-ரை) கடவுளிடத் தன்பின்றி ஆகாரத்தின் பொருட்டே யுழலுவோர் கதியை "யாக்கைக் கொண்டான் பொன்னடி போற்றிலார், நாக்கைக் கொண்டான் நாம நவில்கிலார், ஆக்கைக் கேயிரை தேடி அலமந்து, காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே" என அப்பர்சுவாமிகள் கூறியவாற்றான் உணர்க. அவலம்-நோய்; வருத்

தம். அசும்பு-வழுக்குநிலம். புரை-குழிப்புண்; துவாரம். பொன் முகலி - திருக்காளத்தியிலுள்ள ஒருநதி. கல்லால் - ஒருவகை மரம். அதனடியில் சிவபிரான் தக்ஷிணாமூர்த்தமாக எழுந்தருளியிருப்பார்; "கெண்டையங் தடங்கணல்லார் தம்மையே கெழுமவேண்டிக், குண்டராய்த் திரிதருவைவர் குலைத்திடர்க் குழியினூக்கக், கண்டு நான் தரிக்ககில்லேன் காத்துக்கொள் கறைசேர்கண்டா, அண்டவானவர்கள்போற்றும் ஆரூர்மூ லட்டனீரே"—தேவாரம். 31

நாறுங் குருதிச் சலதாரை தோற்புரை நாடொறுஞ்சீய்
ஊறு மலக்குழி காமத் துவார மொளித்திடும்புண்
தேறுந் தசைபிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்
டேறும் பதந்தரு வாய்திருக் காளத்தி யீசுரனே.

(பொ-ரை) திருக்காளத்தியி லெழுந்தருளியுள்ள சிவபெருமானே! துர்நாற்றம் வீசும் இரத்தம் நிரம்பிய நீர்க்கால்; தோற்குழி; தினந்தோறுஞ் சீயொழுகும் மலக்குழி; விருப்ப மெழுப்புந்தொளை; மறைந்திடும் புண்; மிகுந்த தசை வெடிப்பு; இத்தகைய இரகசியமான இடத்திலே யுள்ள சிறு இன்பத்தை விடுத்துப் (பேரின்பத்தை யடைய) தேவரீரது மேலான திருவடியை உதவி யருள்க.

(வி-ரை) இதனால் அல்குலின் இழிவும், அதனது இன்பத்தின் சிறுமையும், இறைவன் திருவடிப் பெருமையும் தெரிவித்தவாறும். 32

## கைலாயம்

கான்சாயும் வெள்ளி மலைக்கர சேநின் கழனம்பினேன்
ஊன்சாயுஞ் சென்ம மொழித்திடு வாய்கரு வூரனுக்கா
மான்சாயச் செங்கை மழுவலஞ் சாய வளைந்தகொன்றைத்
தேன்சாய நல்ல திருமேனி சாய்ந்த சிவக்கொழுந்தே.

(பொ-ரை) வாசனை வீசுந் திருக்கயிலாயத்துக்குத் தலைவனே! காலூரிலுள்ள ஓரடியவன் நிமித்தம் அழகிய திருக்கரங்களி லேந்திய மான் இடதுபக்கஞ்சாயவும் மழு வலதுபக்கஞ்சாயவும் திருமுடியில் தரித்த கொன்றை மலரிலேயுள்ள தேன் சிந்தவும் அருமையான திருமேனியை வளைத்த சிவக்கொழுந்தே! அடியேன் தேவரீர் திருவடிகளை நம்பியுள்ளேன். மாமிசம் பொதிந்த உடலைத் தாங்கும் பிறவியை யொழித்தருள்க.

(வி-ரை) காலூர் - திருவிரிஞ்சிபுரம். இத்திருப்பதியில் ஓராதி சைவ சிறுவர்க்காகச் சிவபெருமான் திருமுடியை வளைததருளினர். விரிவை அத்தலபுராணத்திற் காண்க. இததிருப்பாட்டால் ஊன் உடலை யொழிக்க விரும்புவோர் ஊன் உடலில்லாச் சிவபெருமானையே நம்பி வழிபடவேண்டுமென்பது பெறப்படுகிறது, பிறவியை யொழிக்கவே இறைவனை வணங்கவேண்டு மென்பதனை "வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனநின்பால், தாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச், சூழ்த்துமது காமுரலுந் தாரோயை நாயடியேன், பாழ்த்தபிறப் பறுததிடுவான் யானுமுன்னைப் பரவுவனே" என வரூஉம் மாணிக்கவாசகசுவாமிகள் திருவாக்கா னுணர்க. 33

இல்லந் துறந்து பசிவந்த போதங் கிரந்துநின்று
பல்லுங் கறையற்று வெள்வாயு மாயொன்றிற் பற்றுமின்றிச்
சொல்லும் பொருளு மிழந்து சுகானந்தத் தூக்கத்திலே
அல்லும் பகலு மிருபபதென் றோகயி லாயததனே.

(பொ - ரை) திருக்கயிலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! வீட்டைவிட்டுத் துறநது, பசிநேர்ந்தகாலத்திற் பிச்சையேற்றுண்டு, பற்களில் (தாம்பூலக்) கறையின்றி வெளுத்த வாயாகி

ஒருபொருளினும் பற்றில்லாமற் சொல்லையும் பொருளையுங் கடந்து (போக்கி) அவைகளுக்கு மேலாக விளையுஞ் சுகானந்த நித்திரையிலே இரவும் பகலும் இருப்பது எந்தக்காலமோ?.

(வி-ரை) இல்லத்தில் மனைவி மக்களானும் பிறவாற்றானும் மாறிமாறிக் கவலைகள் பெருகுமாகலானும், அவை மனதை அலைத்து நிட்டைகூடலைத் தடுக்குமாகலானும், அறங்களுட்டலையாயது துறவறமாகலானும் "இல்லந்துறந்து" என்றார். இல்லத்திருந்தும் விடயவின்பங்களில் தோயாத அறிவாற்றலுடையோர் இல்லத்திற்றங்கியே நிட்டைகூடியிருப்பரென்க. இக்கருத்தையுஞ் சுவாமிகள் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்கள். துறவொழுக்கம் பூண்டார் மானாபிமானமின்றி எல்லாஞ் சிவன் செயல் எல்லாஞ் சிவனுடைமையென்று பசிவந்தகாலத்தில் இரந்துண்பராகலான் "பசிவந்தபோதங் கிரந்துதின்று" என்றார். "அச்சிவ னுண்ணின்ற அருளை யறிந்தவர், உச்சியம் போதாக உள்ளமர் கோவிற்குப், பிச்சை பிடித்துண்டு பேதமற வினை, திசைகெட்டோந்தத் தேறியிருப் பாரே" எனத் திருமந்திரங் கூறுவது காண்க. தாம்பூலந்தரித்தல் முதலியன இல்லற மேற்கொண்டொழுகுவோர்க்கு ஏற்படுத்தப்பட்டன. பற்றுள்ளமட்டும் சொல்லும் பொருளுந் தலைகாட்டுமாகலான் "பற்றுமின்றிச் சொல்லும் பொருளு மிழந்து" என்றார். சொல்லும் பொருளும் மாயாகாரியங்களாகலானும், அவவாசனையுள்ளவரை நிமலநிட்டையுறாதாகலானும் "சொல்லும் பொருளு மிழந்து" என்றார். "சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்துநின்ற சொலற்கரிய சூழலாயிது வுன்றன்மை" என்றார் அப்பர்சுவாமிகளும். சுகானந்தத்தூக்கம்-ஞானானந்தம்; யோகானந்தத்திற்கு மேற்பட்டது. யோகானந்தம ஞானானந்தத்திற்குச் சோபான மென்பது சித்தாந்த ஞானநூற்கொள்கை. ஞானானந்தம் எப்பொழுதும் நீங்காததாகலான் "அல்லும் பகலும்" என்றார். 34

சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்தது மற்று நினையா மையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
வனந்தனி லென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே.

(பொ-ரை) சிவபெருமானே! திருக்கயிலைவாசனே! கோபத்தை யொழித்து, ஆசையை யறுத்து, செயலற்று, நினைந்தவைகளை யழித்து, மறப்பையும் அகற்றி, எண்ணமில்லாதவனாய்த் தனித்து நின்று சிவானந்த நித்திரை பொருந்துகின்ற தூக்கத்திலே எந்தக் காலத்தில் நிலைத்திருப்பேன்?.

(வி-ரை) சினத்துக்கு அடிப்படை ஆசை. ஆசை நிறைவேறா விடத்துச் சினம் பிறத்தலின் என்க. சினமும் ஆசையுமுள்ளமட்டும் செய்கை நிகழ்ந்துகொண்டிருக்குமாதலின் மூன்றாவதாகச் செய்கையைக் குறிப்பிட்டார். நினைப்புள்ளபோது நினையாமையும், நினையாமையுள்ளபோது நினைப்பும் மாறிமாறிப் போநதடுக்குமாகலின் இரண்டையுமற்று என்றார். நினைப்பும் மறப்பும் அற்ற சிந்தையே நிர்ச்சிந்தை யெனப்படும். அச்சிநதையே தியானத்துக்குரியது. "நினைப்பும் மறப்பும் அற்றவர் நெஞ்சில்" என்றும், "நினைப்பற நினைந்தேன்" என்றுஞ் சான்றோர் கூறியிருத்தல்காண்க. கோபம் ஆசை முதலியன தத்துவக்காரியங்கள். அவையுள்ளமட்டும் மனிதன் நிர்ச்சிநதை யுடையனாகமாட்டான். அதுபற்றியே அவைகளை யறுக்கவேண்டு மென்றார். இவைகட்குப் பிரமாணமும் வியாக்கியானமும் விரிக்கிற் பெருகும். தன்னநதனியேயிருந்து என்றது தன்னைததானறிந்து நிறறலை யெனக. ததது்வச் செயல்களற்றதும் ஆன்மா தன்னைத்தானறிநது சிவானந்ததது் லழுந்துமாகலான் "தனந்தனியே யிருநது ஆனந்த நிததிரை * * * " என்றார் "தன்னிற் றன்னை யறியுந் தலைமகன், தன்னிற றன்னை யறியிற் றலைப்படும், தனனிற் றன்னை யறிவில னாயிடில், தனனிற் றன்னை

யுஞ் சார்தற் கரியனே"—என்றார் அப்பர்சுவாமிகள். "ஆனந்த நித்திரை தங்குகின்ற வனம்" என்பது மனக்கண்ணால் நோக்கத்தக்கது. என்னே இன்பம்!. 35

கையார வேற்றுநின் றங்ஙனந் தின்று கரித்துணியைத்
தையா துடுத்துநின் சன்னிதிக் கேவந்து சந்ததமு
மெய்யார நிற்பணிந் துள்ளே யுரோமம் விதிர்விதிர்ப்ப
ஐயாவென் றோல மிடுவ தென்றோகயி லாயத்தனே.

(பொ-ரை) திருக்கயிலாயபதியே! கைநிரம்பப் பிச்சைவாங்கி நின்று அவ்வண்ணமே புசித்துக் (கிழிந்த) கரிததுணியைத தையாமல் அணிந்து, தேவரீர் திருச்சந்நிதி யடைந்து, எந்நேரமும் உடல் பூமியில் பொருந்தும்படி தேவரீரைத்தொழுது, அகத்தே உண்டாகும் (ஆனந்தமேலீட்டான்) மயிர்ச்சிலிர்ப்ப "ஐயனே" என்று அழுது முறையிடுவது எந்நாளோ?.

(வி-ரை) ஊணும் உடையுமே துறவிகளுக்கு வேண்டுமென்பது ஈண்டு அறியத்தக்கது. "கரித்துணி" "தையாது" என்பவைகள் மானுபிமானமில்லாமையைக் குறிப்பவைகள். மெய்யாரப்பணிதல்-அட்டாங்க நமஸ்காரஞ் செய்தல். உரோமம் விதிர்விதிர்ப்ப-புளகங்கொள்ள. ஓலமிடல்-அபயமிடல், அழைத்தல். 36

நீறார்ந்த மேனி யுரோமஞ் சிலிர்த்துள நெக்குநெக்குச்
சேறாய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே
மாறாத் தியானமுற் றானந்த மேற்கொண்டு மார்பிற்கண்ணீர்
ஆறாய்ப் பெருகக் கிடப்பதென் றோகயி லாயத்தனே.

(பொ-ரை) திருக்கயிலாய நாதனே! விபூதியணிந்த உடலிலே மயிர்க்கூச்செறிந்து, மனம்விண்டு விண்டு சேறாய்க் கரைந்துகரைந்து உருகித் தேவரீர் திருவடியிலே இடையறாத தியானம் பொருந்திப் பேரின்பமேலிட்டு மார்பிலே கண்களினின்றும் நீரானது ஆறாகப் பெருகும்படி நிலைத்திருப்பது எந்நாளோ?.

(வி-ரை) ஈண்டு அன்பர்கள் அடையாளங்கள் குறிக்கப்பட்டன. விரிவு உபதேசகாண்டத்திற் காண்க. "தூயவெண்ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும், நாயகன்சேவடி தைவருசிந்தையு நைந்துருகிப், பாய்வதுபோ லன்புநீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல், மேயசெவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே"—பெரியபுராணம். 37

செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரிதவியாமற் பரானந்தத்தின்
எல்லையிற் புக்கிட வேகாந்த மாயெனக் காமிடத்தே
அல்லலற் றென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே.

(பொ-ரை) சிவபெருமானே! திருக்கயிலைத் தலைவனே! நாடோறும் தனவந்தர்கள் பின்னே தொடர்ந்துபோய்த் தனக்குள்ள கஷ்டங்களெல்லாவற்றையும் எடுத்துச்சொல்லிப் பல்லைக்காட்டி வருந்தாமல், சிவானந்தப் பரவெளியிலே பிரவேசித்தற்குத் தன்னந்தனியனாய் எனக்குகந்த இடத்திலே துன்பம் நீங்கி எந்நாளிருப்பேன்?.

(வி-ரை) பொருட்செல்வரைநாடி அவமானமும் இடருங் கவலையும் அடைவதினும், அருட்செல்வனாகிய ஆண்டவனை யடைந்து கவலையற்று ஆனந்தமுற்றிருப்பது மேன்மையென்றபடி. அத்தன்-தந்தையுமாம். 38

✓ மந்திக் குருளையொத் தேனில்லை நாயேன் வழக்கறிந்துஞ்
சிந்திக்குஞ் சிந்தையை யானென்செய் வேனினைத் தீக்கதற்றிப்
புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போல்
எந்தைக் குரியவன் காணத் தனேகயி லாயத்தனே.

(பொ-ரை) சிவபெருமானே! திருக்கயிலாயபதியே! அடியேன் குரங்குக்குட்டியைப் போன்றவனல்லன். சிறியேனது வழக்கத்தை

யுணர்ந்திருந்தும் (பிரவிர்த்திமார்க்கத்துக் கேதுவான காரியங்களை) எண்ணும் மனதை யான் என்ன செய்வேன்? அடியேனைத் தீமையி னின்றும் விலக்கி உள்ளத்தெழும் அன்பால் குட்டியைத்தானே கவ்விக்கொண்டு செல்கின்ற பூனையைப்போல ஆட்கொண்டருளத் தந்தையாகிய தேவரீருககு உரிமை பூண்டிருக்கிறேன்.

(வி-ரை) தாய்க்குரங்கு தான் ஓரிடத்திருந்து மற்றோரிடத் திற்குச் செல்லுங்காலததுத தன் குட்டியைத் தானே தூக்கிச்செல் லாது. குட்டியே தாய்க்குரங்கை உறுதியாகப் பற்றிககொள்ளும். இதனை மர்க்கடநியாயமென்ப. இவ்வுபமானததால் சீவர்கள் தம்முயற் சியால் சிவத்தைப்பற்றுதலில்லை யென்பதை விளக்கியவாறும். தாய்ப் பூனை யோரிடததிலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லுங்காலததுத் தன் குட்டியைத தானே கவ்விச் செல்லும். இதனை மார்ச்சால நியாயமென்ப. இவ்வுவமையாற் சிவபிரான் திருவருளே சீவர்களைத் தாங்கிச்சென்று நன்னெறியி லுய்க்கவேண்டுமென்பதை அறிவுறுத் தியவாறும். "அவனருளாலே அவன்தாள் வணங்கி" என மாணிக்க வாசகசுவாமிகளும், 'என்னை யேதும் அறிந்திலேன் எம்பிரான், தன்னை யானுமுன் ஏதும் அறிந்திலேன்;என்னைத் தன்னடி யானெனன் றறிதலும், தன்னை யானும் பிரானெனன் றறிந்தனே' என அப்பர் சுவாமிகளும் அருளிச்செய்துள்ளார்கள்.

39

வருந்தேன் பிறந்து மிறந்து மயக்கும் புலன்வழி போய்ப்
பொருந்தே னரகிற் புகுகின்றி லேன்புகழ் வாரிடததில
இருந்தே னினியவர் கூட்டம் விடேனிய லஞ்செழுததாம்
அருந்தே னருந்துவ னின்னரு ளாற்கயி லாயததனே.

(பொ-ரை) திருக்கயிலை நாயகனே! தேவரீர் திருவருளால் இனி ஜெனனஞ்செய்தும் மரணமடைந்துந் துனபப்படமாட்டேன்; மயக்கஞ்செய்யும் ஐம்புலன்வழியே சென்று புறப்பொருள்களில்

கிலைக்கமாட்டேன்; நரகத்திற் பிரவேசிக்கமாட்டேன்; தேவரீர் திருவடிகளைப் புகழும் அடியவர் திருக்கூட்டததிற் சேர்ந்துவிட்டேன்; இனி அத்திருக்கூட்டத்தைவிட்டுப் பிரியமாட்டேன்; அழகிய ஸ்ரீபஞ்சாக்கரமென்னும் அரிய தேனை யுண்பேன்.

(வி-ரை) புலன்கள் மாறிமாறி மயக்கி யீர்த்துப் புறப்பொருள்களி லழுந்தி யறிவைக் கெடுக்கின்றமையான் "மயக்கும்புலன்" என்றார். "மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்புல னைந்தின்வழி யடைத்து" என்றார் மாணிக்கவாசகரும். ஸ்ரீபஞ்சாக்கரத்தை திருமூலர் "நன்று கண்டீர் நமச்சிவாயப் பழம்" என்று கூறியிருத்தல் காண்க. 40

## மதுரை

விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனந்
திடப்படு மோநின் னருளின்றி யேதின மேயலையக்
கடப்படு மோவற்பர் வாயிலிற் சென்றுகண் ணீர்ததும்பிப்
படப்படு மோசொக்க நாதா சவுந்தர பாண்டியனே.

(பொ-ரை) சொக்கலிங்கப்பெருமானே! சோமசுந்தரபாண்டியனே! தேவரீர் திருவருட்டுணையின்றி, இவ்வுலகவாழ்க்கையை விட்டுவிட முடியுமோ? அதனைவிடுத்து (மீண்டும்) மனமானது (அதிற் றோயாமலிருக்கும்) உறுதியைப் பெறுமோ? நாடோறும் மனம் அலைந்துதிரியக் கடமைப்படுமோ? ஈனர்கள் வீட்டுவாயில்களிற் போய்க் கண்களில் நீர்நிறம்பித் துன்பமடையக்கூடுமோ?

(வி-ரை) சிவபிரான் திருவருளாலேயே சீவர்கட்கு இன்பதுன்பங்கள் நிகழ்கின்றன என்பது. 41

## பொது

உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை யுண்டுணவிங்
கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே

விடையேறுமீசர் திருநாம முண்டிந்த மேதினியில் [க்கே.
வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்பிறை

(பொ-ரை) இந்த உலகத்திலே உடுப்பதற்குக் கௌபீனம் உண்டு; தூங்குவதற்குத் திண்ணைப்புறம் உண்டு; ஆகாரத்திற்குக் கிடைக்குங் காயும் இலையும் உண்டு; குடிப்பதற்குத் தண்ணீர் உண்டு. நீங்காத துணைக்கு இடபவாகனத்தின்மேல் ஆரோகணித்தருளுஞ் சிவபெருமானுடைய திருநாமம் உண்டு; ஆனபடியால் ஆகாயத்தி லுள்ள சந்திரனுக்கு வடமுனை உயர்ந்தாலென்ன? தென்முனை தாழ்ந்தாலென்ன?.

(வி-ரை) மானுபிமானம் விடுத்த சாதுக்களுக்கு நன்மை தீமை யில்லை; புண்ணியபாவமில்லை; க்ஷேமக்ஷாமமில்லை என்றபடி. சந்திரன் வடமுனை உயர்ந்திருந்தால் ஊருக்கு நன்மையெனவும், தென்முனை சாய்ந்திருந்தால் ஊருக்குத் தீமையெனவும் நூல்கள் கூறுகின்றன. இது விருப்பு வெறுப்புள்ள இல்லறத்தார்களன்றி அவையில்லாத் துறவறத்தார்க்கில்லை யென்பது அறியத்தக்கது. திருஞானசம்பந்தர் அருளிச்செய்த கோளறுபதிகம் நோக்க. "நாளென்செயும் வினைதா னென்செயும் எனைநாடிவந்த கோளென்செய்யும்" என்றார் அருண கிரிநாதரும். 42

வீடு நமக்குத் திருவாலங் காடு விமலர்தந்த
ஓடு நமக்குண்டு வற்றாத பாத்திர மோங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல் லாந்தர நன்னெஞ்சமே
ஈடு நமக்குச் சொலவோ வொருவரு மிங்கில்லையே.

(பொ-ரை) நல்ல மனமே! நமக்கு வீடாகவிருப்பது திருவாலங் காடு என்னுந் திருத்தலம். சிவபெருமான் கொடுத்தருளிய திருவோடு நமக்கு உண்டு; அஃது எக்காலத்தும் வற்றாத பாத்திரமாகும். நாம்

வேண்டியவற்றை யெல்லாம் கொடுக்க மேம்படுஞ் செல்வம் நிறைந்த தேசங்கள் உண்டு. (ஆகையால்) நமக்கு ஒப்புச்சொல்ல இங்கு ஒருவரு மில்லை.

(வி-ரை) திருவாலங்காடு - தொண்டைநாட்டு முப்பானிரண்டு திருப்பதிகளுள் ஒன்று. காரைக்காலம்மையார் கயிலையடைந்து கடவுளைத் திருவடியின்பங் கேட்டகாலத்துப் பெருமான் அம்மை யாரை நோக்கி "அவ்வின்பந் திருவாலங்காட்டிற் சென்று அடைவா யாக" என்று திருவாய்மலர்ந்தருளினர். இதனாலே ஆன்மாக்கள் பந்தம் விட்டு நிற்குமிடந் திருவாலங்காடு என்பது பெறப்படுகிறது. இது பற்றியே "வீடுநமக்குத் திருவாலங்காடு" என்றார். விமலர்-மலமில் லாதவர். திருவோட்டிற்கு வற்றுதலில்லை யென்பது வெளிப்படை. அறவறமேற்கொண்டோர்க்கு ஒப்பாவார் ஒருவருமில்லை எனறபடி. ()

நாடிக்கொண் டீசரை நாட்டமுற் றாயிலை நாதரடி
தேடிக்கொண் டாடித் தெளிந்தா யிலைசெக மாயைவந்து
மூடிக்கொண் டோமென்றுங் காமாயுதங்கண் முனிந்தவென்றும்
பீடிப்பையோ நெஞ்சமேயுனைப் போலில்லை பித்தர்களே.

(பொ-ரை) மனமே! சிவபெருமானை விசாரித்தறிந்து அவர்மேல் குறிவைத்தாயில்லை; அக்கடவுளின் திருவடிகளைத் தேடிக்கொண் டாடித் தெளிவுற்றாயில்லை; (இவைகளைச் செய்யாமல் எனபாலணுகி) 'உலக மாயையினால் மறைக்கப்பட்டோ'மென்றும், மனமதபாணங்கள் (எம்மைச்) சீறித் துன்புறுத்துகின்றன' வெனறும் (முறையிட்டு என்னை) வருத்துவையோ? உனனைப்போலப் பிததர்கள் இல்லை.

(வி-ரை) மனமே! சிவபெருமானை நாடாமல் உலகவிடயங்களாற் துன்பப்படுகின்றோம் என்று சொல்வது அறியாமை. செய்யவேண்டிய கடமை சிவத்தியானம் என்பதும், அதுசெய்யின் உலகத்துன்பங்கள்

தாமே விலகுமென்பதும் பெறப்படுகின்றன. இச்செய்யுள் மனதை நோக்கி அறிவு சொல்லுகிறவகையாக அருளிச்செய்யப் பெற்றது. மன்மத பாணங்கள்-தாமரை மா அசோகு முல்லை நீலம். 44

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழு
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே.

(பொ-ரை) அடியவர்களுடைய இருவினையும் ஒழித்தவனே! கையானது ஒரு தொழிலைச் செய்ய, கண் ஒரு பொருளை நோக்க, மனம் ஒன்றை நினைக்க, பொய் பொருந்திய வஞ்ச நாவானது ஒன்றைப்பற்றி வார்த்தையாட, புலால்நாற்றம் வீசும் உடலானது ஒரு பரிச உணர்ச்சியில் நிற்க, காது ஒன்றைக் கேட்கப் பிரியங்கொள்ளுஞ் சிறியேன் செய்யும் பூசையை எப்படி ஏற்றுக்கொள்வாய்?

(வி-ரை) புலன்கள் ஒடுங்கி மனமொன்றவே சிவபூசை செய்யப்படல்வேண்டும். அவ்வொற்றுமையால் துவித பாவனை ஒழிந்து அத்துவித பாவனை சித்திக்கும். அத்துவிதத்துக்குத் துவைதம் சோபனம். வேத முதலிய கலைகள் இரண்டையும் வலியுறுத்திப் பேசும். "வேதமுடன் ஆகம புராண இதி காசமுதல் வேறுமுள கலைகளெல்லாம், மிக்கான அத்துவித துவிதமார்க்கத்தையே விரிவாயெடுத்துரைக்கும், ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை உண்டுபணு ஞானமாகும்" எனவருந் தாயுமானுர் திருவாக்கு கருதற்பாலது. அத்துவித ஞானத்துக்கு இன்றியமையாத சிவபூசை செய்யும்போது ஐம்புலனும் மனமும் அலைந்து திரிதலாகாது. புலன்கள் வழி மனதைச் செலுத்திச் செய்யப்படும் பூசையினால் எவ்வித நலனும் விளையாது; ஆண்டவனும் அப்பூசையை ஏற்றுக்கொள்ளான். சிவபூசை செய்யும்போது கருவி கரணங்களையும் அப்பூசைவழி நிறுத்தவேண்

டும். புலன்களையும் மனதையும் பூசைவழி செலுத்தாது செய்யப் படும் பூசை திருட்டுப்பூசை யெனப்படும். 'ஐந்துபே ரறிவுங் கண் களேகொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ்-சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமேயாக-இந்துவாழ் சடையா னாடு மானந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்தின்-வந்தயே ரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியுன் மலர்ந்தார்"—பெரிய புராணம். "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை"— தேவாரம். நாவின் கொடுமை நோக்கி "பொய்யொன்று வஞ்சகநா" என்றார். என்னை? பாவங்களில் தலையாய பொய்யை நிகழ்த்துவது நாவாகலான் என்க. 45

கண்ணுண்டு காணக் கருததுண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப்பல் பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த வெதிர்நிற்க வீச னிருக்கையிலே
மண்ணுண்டு போகுதை யோ கெடுவீரிந்த மானிடமே.

(பொ - ரை) கெட்டுப்போகின்றவர்களே! (சிவபெருமானைத்) தரிசிப்பதற்குக் கண்களுண்டு; (அவனைச்) சிந்திப்பதற்கு மனம் உண்டு; குழைந்து உருகி (அவன் புகழைப்) பாடுவதற்குப் பண்கள் உண்டு; (அவைகளைப் பிறர்பாடக்) கேட்பதற்குக் காதுகள் உண்டு; (இறைவன் திருவடிகளைப்) பச்சிலையால் அருச்சிப்பதறகு மந்திரங்க ளுண்டு. இத்திருத்தொண்டுகளைச் செய்து திருமுன் நிற்பதற்கு (நம்பொருட்டுச்) சிவபெருமான் திருக்கோயில் கொண்டெழுநதருளி யிருக்கையில் (மேற்போநத காரியங்களுக்கெனத் தாங்கிய) இம்மனித சரீரத்தை ஐயோ! மண் தின்று போகிறதே!

(வி-ரை) உலகததிலுள்ள பலவகைப் பிறவிகளிற் சிறந்தது மானுடப்பிறவி. அப்பிறவியில் இறைவனாற் கொடுக்கப்பெற்றுள்ள கண் முதலிய உறுப்புககள் அவ்விறைவனைக் காணவும் வழிபடவுமே

பயன்படல்வேண்டும் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திரு அங்கமாலையை உய்த்துணர்க. இறைவன் வழிபாட்டிற்குக் கிடைக்கப்பெற்ற மானுடதேகத்தைப் பிறவழிகளிற் படுத்துவோர் மண்ணுக்கிரையாவர் என்பார் "மண்ணுண்டு போகுதையோ இந்த மானிடமே" என்றார். "மண்ணுவது திண்ணம்" என்றார் சுந்தரரும். ()

சொல்லினுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லினு மாசற்ற வாகாயந் தன்னிலு மாய்ந்துவிட்டோர்
இல்லினு மன்ப ரிடத்தினு மீச னிருக்குமிடங்
கல்லினுஞ் செம்பினு மோவிருப் பானெங்கள் கண்ணுதலே.

(பொ-ரை) எல்லாச் செல்வமுடையவனும் நெற்றியில் கண்ணை யுடையவனுமாகிய எமது கடவுள் மந்திரத்திலும், மந்திரமுடிவிலும், வேதமாகிய சுருதியிலும், இருளிலும்; குற்றமில்லாத ஆகாயத்திலும், தத்துவங்களை ஆராய்ச்சிசெய்து அவைகளைச் சடமென்றொதுக்கிச் சித்துப்பொருளான சிவத்தோடு கலந்து நிட்டை புரிவோர் வாழும் வீடுகளிலும், அன்பர்களிடத்திலும் வீற்றிருப்பதல்லாமல் கல்லினிடத்திலுஞ் செம்பினிடத்திலுமோ வீற்றிருப்பான்?

(வி-ரை) ஈசன்-சர்வ ஐசுவரியமுடையவன். கண்ணுதல்-நெற்றியிற் கண்ணையுடையவன். வேதம்-அறிதற்கருவி. சுருதி-காது; ஒலி-வேதம் எழுதாக் கிளவியாகலானும் ஒலி மாத்திரையாகக் கேட்கப் படுதலானுஞ் சுருதியெனப்பட்டது. இச்செய்யுள், எங்கும் நிறைந்துள்ள கடவுளைக் கல்லாகவுஞ் செம்பாகவுங் கருதுவோர்க்கும், அவ்வுருவங்களிலன்றிப் பிறவிடங்களிற் கடவுளுண்மையை மறப்போர்க்கும் அறிவு கொளுத்த எழுந்ததாகும். இத்திருவாக்கு கடவுள் எங்கும் நிறைந்தவன் என்னுங் கொள்கை யுடையராய், அவன் உண்மை வடிவம் வாக்கு மனங்கட்கு எட்டாததெனக்கொண்டு, அவனது சகள வடிவத்தை வழிபடும் அறிவுடையவர்கட்காக எழுந்த

தன்று என்பது கவனிக்கத்தக்கது. சிலர் இத்திருப்பாசுரத்தின் உள்ளக்கிடக்கையை நுணித்தறியாது ஆலய வழிபாட்டை மறுக்கின்றனர். அன்னவரைச் சுவாமிகள் அருள்வாக்குகளை முற்றிலும் ஆராய்ச்சி செய்யாதவரென ஒதுக்குக. சுவாமிகள் ஆலய வழிபாட்டைப் போற்றிக் கூறிய பாக்கள் இந்நூலில் பலபடக்கிடத்தல் கவனிக்கற்பாலது. பொருளைக் கல் செம்பாகக் கொள்வோர்க்குக் கடவுளில்லை. கடவுளாகக் கொள்வோர்க்குக் கல் செம்பில்லை என்றபடி. "உளியிட்ட கல்லையும்" எனனும் பாட்டிற்கு வரைந்துள்ள விசேடம் நோக்குக. 47

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால்
தினைப்போ தளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதநினை
நினைப்போரை மேவு நினையாரை நீங்கி நெறியினின்றால்
உனைப்போ லொருவருண் டோமன மேயெனக் குற்றவரே.

(பொ-ரை) மனமே! ஒருதேகமென்பது முன்னை வினையின் பயனேயாம். அது வினைநீங்கினால் இறையளவும் நில்லாது. (ஆகையால்) சிவபெருமான் திருவடிகளைச் சிந்தனை செய், சிந்தனை செய்வோரைச் சேர்ந்திரு, சிந்தனை செய்யாதவரை விட்டு விலகு. இந்த நல்வழியில் நின்றால் உனைப்போல எனக்கு உற்றதுணைவர் வேறொருவருளரோ?.

(வி-ரை) பிராரத்த வினையின பயனே தேகமாகும். பிராரத்த வினை நசித்துவிடின் தேகமெனபதேயில்லை. பிராரத்தவினையை நசிக்கச்செய்யாமல், அதன் மூலமாக ஆகாமியவினையை யேற்றிக்கொண்டால் பிறவி யொழியாது. பிராரத்தவினையை நுகர்ந்து வருகையில் சிவபூசையிலுஞ் சிவாலய வழிபாடு முதலியவற்றிலுங் கருத்தைப் பதித்துவிட்டால் ஆகாமியவினை யேறுதற்கு இடம் பெறாதொழியும். எனவே பிறவியை யொழிப்பதற்கு வழிகள் சிவபூசை சிவாலய சேவை அடியாருறவு முதலியனவாம். 48



காதற்ற ஊசியைக்கண்ட சுவேதாரணியர் துறவற மேற்கொள்ளல்

பட்டைக் கிழித்துப் பருவூசிதன்னைப் பரிந்தெடுத்து [துக்
முட்டச் சுருட்டியென் மொய்குழ லாள்கையில் முன்கொடுத்
கட்டி யிருந்த கனமாயக் காரிதன் காமமெல்லாம்
விட்டுப் பிரியவென் றேவிங்ங னேசிவன் மீண்டதுவே.

(பொ-ரை) பட்டுத்துணியைக்கிழித்துப் பெரிய ஓர் ஊசியை விருப்புட னெடுத்து, (அப்பட்டுத் துண்டில் வைத்து) நன்றாகச் சுருட்டி, எனது நெருங்கிய கூந்தலையுடைய மனைவியின் காத்திலே விரைந்து கொடுத்தருளி, என்னைப் பந்தித்திருந்த பெரிய மாயா வல்லியின் ஆசைகளெல்லாம் என்னைவிட் டொழியவேண்டியல்லவோ இப்படியே சிவகுருநாதன் எழுந்தருளிவந்தது?.

(வி-ரை) சுவாமிகள் தமக்குக் கடவுள் அருளிச்செய்த வரலாற்றை இத்திருப்பாட்டிற் குறித்துள்ளார்கள். 49

சூதற்ற கொங்கையு மானுர் கலவியுஞ் சூழ்பொருளும்
போதற்ற பூசலுக் கென்செய லாஞ்செய்த புண்ணியத்தால்
தீதற்ற மன்னவன் சிந்தையி னின்று தெளிவதற்கோ
காதற்ற வூசியைத தந்துவிட் டானென்றன் கைதனிலே.

(பொ-ரை) சூதாடு கருவிபோன்ற தனங்களையுடைய மனைவியும், மான்போன்ற கண்களையுடைய காமக்கிழத்தியரின் புணர்ச்சியின்பமும், மற்றுஞ் சூழ்ந்துள்ள பொருள்களும் மரண காலத்திலுண்டாகின்ற இந்திரியங்களின் போருக்கு என்செய்யக்கூடும்? முற்பிறப்பிற் செய்த புண்ணியத்தால் மாசில்லாத் தலைவனுகிய சிவபெருமான், உள்ளத்திலே இப்பிறப்பில் உண்மை தெளியும் பொருட்டோ என் காத்திற் காதற்ற ஊசியைக் கொடுத்தருளினன்?.

(வி-ரை) கொங்கை - ஆகுபெயர். மானுர் சூதற்ற கொங்கையும் கலவியும் எனக்கூட்டிப் பொருள்கொள்ளலு மொன்று. போது- எப்போது மெனினுமாம். ஐம்புலன்கள் பூசல் விளைக்கின்றன வென்

பதை "ஐவர் வந்து வழிதருகிற்று விடென்று, ஒப்பவே நலியலுற்றால் உய்யுமா றறிய மாட்டேன்" என்றும் "கூட்டமா யைவர்வந்து கொடுந் தொழிற் குணத்தராகி, ஆட்டுவார்க் காற்றகில்லேன்" என்றும் அப்பர் சுவாமிகள் அருளிச்செய்தவாற்றா னுணர்க. மன்னவன் என்றது மருதவாணரை. தீது அற்ற-இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய சிந்தையினின்று எனக்கொள்ளினுமாம். 50

வாதுற்ற திண்புய ரண்ணுமலையர் மலர்ப் பதத்தைப்
போதுற்றெப் போதும் புகலுநெஞ் சேயிந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே.

(பொ-ரை) மனமே! (அருச்சுனன் முதலியவரோடு) போர் புரிந்த வலிய தோளையுடையவரும், திருவண்ணமலையி லெழுந் தருளியிருப்பவரும் ஆகிய சிவபெருமானார் திருவடித்தாமரைகளை யடைந்து எந்நேரமும் தோத்திரஞ் செய். இவ்வுலகத்தில் தீமை நிறைந்த (இன்பம் கல்வி சீர் ஐசுவரியம் முதலிய) செல்வமிருந்து மென்ன பயன்? வருந்தித் தேடிப் புதைத்துவைத்துள்ள பணமிருந்து மென்ன பயன்? மரணத்தின் பின்னுள்ள வழித்துணைக்குக் காதறுந்த ஊசியும் உடன் வாராது.

(வி-ரை) கடைவழிக்குத் துணையாயிருப்பது சிவபெருமான் திருவடித்துணையாகலான் அதனையே போற்றவேண்டு மென்பது. "நம்பொருள் நமக்கென்று நச்சியிச்சை செய்துநீர், அம்பரம் அடைந்துசால அல்லலுய்ப்ப தன்முனம், உம்பர்நாதன் உத்தமன் ஒளிமிகுந்த செஞ்சடை, நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே"—தேவாரம். 51

வேதத்தி னுட்பொருண் மண்ணுசை மங்கையை விட்டுவிடப்
போதித் தவன்மொழி கேட்டிலையோ செய்தபுண்ணி யத்தால்

ஆதித்தன் சந்திரன் போலே வெளிச்சம் தாம்பொழுது
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே.

(பொ-ரை) வேதத்தின் உட்பொருளும், மண்ணாசையையும், பெண்ணாசையையும் விட்டுவிடும்படி உபதேசித்தவனும் ஆகிய சிவ குருநாதனது ஒருமொழியைக் கேட்கவில்லையோ? பூர்வ புண்ணியத்தால் சூரிய சந்திர வொளிபோல ஆத்மா ஒளிமயமாகிறபொழுது (இறக்குங் காலத்தில்) மரணத்தின் பின்னுள்ள வழித்துணைக்குக் காதறுந்த ஊசியும் உடன்வாராது.

(வி-ரை) மண்ணாசை பெண்ணாசைகளை விட்டுவிடும்படி வேதத்தின் உட்கருத்தை உபதேசித்தவன் எனப் பொருள் கூறினும் பொருந்தும். பொன்னாசையையும் உடன் சேர்க்க. மூவாசையில் முயங்காது இறைவன் திருவடியையே பற்றுக்கோடாகக்கொள்வோர் இருளில் வீழார் என்பது கருத்து. ஊசி வரலாற்றை அடிகள் வரலாற்றிற் காண்க. ஆன்மா ஒளிமயமாம்பொழுது ஒளிக்கு வேறாகப் பொருள் தோன்றாதிருத்தல் பவத்தில்அது அறிதற்பாலது. அந்நிலையே உயரிய நிலையென்க. 52

மனையாளு மக்களும் வாழ்வும் தனமுந்தன் வாயின்மட்டே
இனமான சுற்ற மயானமட் டேவழிக் கேதுதுணை
தினையா மளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே.

(பொ-ரை) (செத்துப் பிணமான பிறகு) மனைவியும் மைந்தரும் வாழ்வும் பொருளும் வாசல்வரையிலுமே துணை நிற்கும். சாதியாராகிய பந்துக்கள் சுடுகாடு வரையிலுந் துணைநிற்பர் அதற்குமேல் உயிர்போகும் வழிக்குத் துணைசெய்து நிற்பது யாது? தினையளவாதல் எள்ளளவாதல் உயிர்போகுமுன் செய்த தவமானது துணைநின்று தன்னைப் பாதுகாக்கச் சிவலோகங் கைகூடும். இஃதுண்மை.

(வி-ரை) உயிர்ச்சார்பும் பொருட்சார்பும் இறந்தபின் துணை செய்யமாட்டா. அதுகாலைத் துணைசெய்வது தவமேயாகும். ஆனபடியால் உலகத்தில் மனைவி மக்களோடு களியாட்டயராது தவத்தைச் செய்யவேண்டுமென்பது. "மக்களே மணந்ததார மவ்வயிற் றவரையோம்பும், சிக்குளே யழுந்திமீசன் திறம்படேன் தவமதோரேன், கொப்புளே போலத்தோன்றி அதனுளே மறையக் கண்டும், இக்களே பரத்தையோம்ப என்செய்வான் தோன்றினேனே"— தேவாரம். "பண்டம் பொய்க்கூரை பழகி விழுதலால், உண்ட அப் பெண்டிரும் மக்களும் உடன்செலார், கொண்ட விரதமும் ஞானமும் அல்லது, மண்டி அவருடன் வழிநட வாதே"—திருமந்திரம். ()

அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

(பொ-ரை) பொருளும் அதனாலுண்டாகும் வாழ்வும் வீட்டளவிலேயே நின்றுவிடும். மிகுதியாகச் சூழ்ந்திருந்த (மனைவிமுதலிய) பெண்களும் கண்களில் நீர் சிந்தத் தெருவளவிலேயே நின்றுவிடுவார்கள். இரண்டு கைகளையுந் தலைமேல் வைத்துத் தேம்பித் தேம்பி யழும் பிள்ளைகளுஞ் சுடலையளவிலேயே நின்று விடுவார்கள். இரண்டு வினைகளாகிய புண்ணியமும் பாவமுமே பின்பற்றிச் செல்லும்.

(வி-ரை) அத்தம்-அர்த்தம்-பொருள். அம்பு-நீர். புண்ணியஞ் செய்வோர் சொர்க்க மடைவர். பாவஞ் செய்வோர் நரகடைவர். உடலினின்றும உயிர் பிரிந்தகாலத்து உடன் துணையாக வருவது தாந்தாஞ்செய்யும் வினையெனக்கொண்டு உலகத்தில் அறஞ்செய்ய வேண்டுமென்றபடி. "அன்றறிவா மெனாது அறஞ் செய்க, மற்றது பொன்றுங்கால் பொன்றாத் துணை"—திருவள்ளுவர். 54

சீயுங் குருதிச் செழுநீர் வழும்புஞ் செறிந்தெழுந்து
பாயும் புடைவையொன் றில்லாத போது பகலிரவாய்
ஈயு மெறும்பும புகுகின்ற யோனிக் கிரவுபகன்
மாயு மனிதரை மாயாமல் வைக்க மருந்தில்லையே.

(பொ-ரை) சீயும், இரத்தமாகிய கொழுநீர் சுரக்கும் நிணமும் மலிந்து வெளிவந்து பாய்கின்ற புடவையொன்று இல்லாத காலத்தில் பகலிலும் இரவிலுமாக ஈயும் எறும்பும் நுழைகின்ற பெண் குறிக்காக இரவும் பகலுங் கெடும் மனிதர்களைக் கெடாமல் வைத்திருக்க ஒரு மருந்து மில்லையே.

(வி-ரை) பாயும்-பெயரெச்சம். பாயும்யோனியென்க. பெண்களையே கடவுளாகக் கொண்டுள்ள பேதைமாக்களுக்கு அறிவு கொளுத்தியவாறும். 55

சீதப் பனிக்குண்டு சிக்கெனக் கந்தை தினம்பசித்தால்
நீதுய்க்கச் சோறு மனைதோறு முண்டு நினைவெழுந்தால்
வீதிக்கு ணல்ல விலைமாத ருண்டிந்த மேதினியில
வேதுக்கு நீசலித் தாய்மன மேயென்றும் புண்படவே.

(பொ-ரை) நெஞ்சமே! இவ்வுலகத்தில் குளிர்ந்த பனிக்காலத்திற்குப் போர்த்துக்கொள்ள உறுதியான கந்தைத்துணியுண்டு. நாள்தோறும் பிச்சையேற்று நீ புசிப்பதற்கு அன்னம் வீடுதோறும் உண்டு; காம நினைப்பு தோன்றினுல் தெருக்களிலே அழகிய வேசிமாருளர். நீ யெப்பொழுதும் புண்படும்படி எற்றிற்குச் சலிக்கின்ருய்?

(வி-ரை) சிக்கெனவு-உறுதி. பனிக்கு ஆய்க்க எனக் கூறிக் (காம) நினைவிற்கெனக்கூருது நினைவெழுந்தால் எனக் கூறினமையான் ஞானிகட்குக் காமநினைவு எழாதென்பது பெறப்படுகின்றது. மாதரென்ஞது விலைமாதரென்றமையான் குலமாதரை யிச்சிப்பது

பாவமென்பதைக் குறிப்பித்தனர். "நலக்குரியார் யாரெனில் நாம நீர் வைப்பில், பிறர்க்குரியாள் தோள்தோ யாதார்" எனவருந் திருவள்ளுவர் திருவாக்கைச் சிந்திக்க. சந்திர கலையினின்றும் பொழியும் அமிர்ததாரை யுணவுகொள்ளும் யோகஞானிகட்குக் காம இச்சை தோன்றவே தோன்றாது. அமிர்ததாரை பொழியும் நிலை பெறாத யோகிகட்கு ஒவ்வொருவேளை காம இச்சை தோன்றுத லுண்டு. 56

ஆறுண்டு தோப்புண் டணிவீதி யம்பலந் தானுமுண்டு
நீறுண்டு கந்தை நெடுங்கோ வணமுண்டு நித்தநித்த
மாறுண் டுலாவி மயங்குநெஞ் சேமனை தோறுஞ்சென்று
சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுமுண்டே.

(பொ-ரை) தினந்தோறும் மாறுபட்டு விடயங்களில் உழன்று மயங்கும் மனமே! (குளிப்பதற்கு) நதி உண்டு; (இளைப்பாறவும் உலாவுற) தோப்பு உண்டு; (தங்கவும் உறங்கவும்) அழகிய தெருவிலே பொதுக்கட்டிடம் உண்டு; (தரிக்க) விபூதி யுண்டு; (உடுக்க) கந்தையும் நீண்ட கௌபீனமும் உண்டு; வீடுதோறும்போய்ப் பிச்சையேற்று அன்னம் புசித்து உறங்கிப் பின்பு சும்மா இருப்பதனால் இன்பமும் உண்டு.

(வி-ரை) சும்மாயிருத்தல்-நிஷ்டைகூடியிருத்தல். மக்கள் இறுதியில் அடையவேண்டுவது இவவின்பம். அவவின்பம் மனதை விடயங்களில் தோயவிடாது ஒன்றச்செய்து நிஷ்டை கூடினால் விளையும். தேக சுகமில்லாககாலதது மனம் ஒன்றுபடாது. அதுபற்றித் தேகசுகத்தைத் தேடிக்கொள்ளல்வேண்டும். அதற்கு ஆறு தோப்பு முதலியன இருககின்றன. இவைகளால் தேகசுகம்பெற்று நிஷ்டை கூடி இறைவனடி யின்பத்தை நுகர்வது மக்கள் கடமை. இங்ஙனமின்றி விடயங்களி லழுந்தி மனமலைந்து சஞ்சலமுற்றுக் கலங்கி நிஷ்டை கூடாது துன்பமடைவது அறியாமையென்க. 57

"உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யி லொடுங்கிவந்தால்
தடுக்கப் பழைய வொருவேட்டி யுண்டு சகமுழுதும்
படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு பசித்துவந்தால்
கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே.

(பொ-ரை) மனமே! குளிர்காற்றிலும், வெயிலிலும் ஒடுக்க முற்று (வாடி வருந்தி) வந்தால் (அத்தட்ப வெப்பங்களைத்) தடுக்கும் பொருட்டு உடுத்திக்கொள்வதற்கும் போர்த்துக்கொள்வதற்கும் ஒரு பழைய வேஷ்டி யுண்டு. படுத்துக்கொள்வதற்கு உலக முழுவதும் திண்ணைப்புறம் எவ்விடத்திலும் உண்டு. பசித்துவந்தால் உணவு கொடுக்கச் சிவபெருமானுண்டு. (ஆகையால்) நமக்கு ஒரு குறைவும் இல்லை.

(வி-ரை) சிவனடியார் பசியால் வருந்தின் சிவபெருமான் தாமே நேராக வந்தாதல் வேறு சில உயிர்களின் மூலமாகவாதல் அவர்கட்கு அனனமளிப்பர். எல்லாஞ் சிவன் செயல் என்னும் அறிவு தோன்றுதவர்கள் அன்னத்தைக் கருதியே யிடர்ப்படுவார்கள். சிவபெருமான் அப்பர்சுவாமிகளையுஞ் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் பொதிசோற்றுனும் பிச்சைச்சோற்றுனும் உண்பித்த சரிதங்களையோர்க. 58

மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண் டெனும்படி கேட்டுவிட் டோமினிக் கேண்மனமே
ஓடுண்டு கந்தையுண் டுள்ளே யெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே.

(பொ-ரை) மாடு உண்டு கன்று உண்டு பிள்ளைகள் உண்டு என்று இறுமாந்து சந்தோஷிப்பதெல்லாம் ஒருகாலத்தில் அழிவடையும் என்னும் விதத்தை ஞானிகள் சொல்லக்கேட்டு அவைகளின்மீது கொண்டிருந்த பற்றை விட்டுவிட்டோம், மனமே!

இனிக்கேட்பாயாக. நமக்குப் பிச்சையேற்கத் திருவோடு உண்டு; உடுக்கக் கந்தையுண்டு; உள்ளத்திலே ஓத ஸ்ரீபஞ்சாட்சரமுண்டு. குண்டலந்தீண்டும் ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமான் அடியவர்கள் துணையும் உண்டு.

(வி-ரை) இத்திருச்செய்யுளில் துறவறத்தின் மாண்பு விளக்க முற ஓதியிருத்தல் காண்க. 59

*மாத்தா னவத்தையு மாயா புரியின் மயக்கத்தையும்*
*நீத்தார் தமக்கொரு நிட்டை யுண்டோநிதத னன்புகொண்டு*
*வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று*
*பார்த்தா லுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே.*

(பொ - ரை) பெரிய தேவலோகப் பொருள்களையும், மாயா சரீரத்தால் விளையும் மயக்கத்தையும் வெறுத்துத் துறந்தவர்க்குச் செய்யவேண்டிய நிஷ்டையொன்று உண்டோ? இருவகைப் பற்றுக்களையும் ஒழித்தவர்கள், சிவபெருமானிடத்தில் அன்புவைத்து வியர்வை யுற்றால் குளித்துப் பசியெடுத்தல் (பிச்சை யேற்று) உண்டு (நித்திரை வந்தால்) கண்ணுறங்கிப் பிறர் பார்த்தால் உலகத்தவர்களைப்போல இருப்பார்கள்.

(வி - ரை) மா - பெரிய; தானம் - தேவலோகம். அங்குள்ள பொருள்:—சிந்தாமணி கற்பகம் காமதேனு முதலியன. உலகத்தில் புண்ணியஞ் செய்வோர் அடையும் உலகம் தேவலோகமாகும். ஞானிகள் அந்த உலகத்தையும் அங்கேயுள்ள பொருள்களையும் விரும்பமாட்டார்கள். என்னை? அவ்விருப்பததால் பிறவி பெருகுமாகலின். "வானேயும் பெறில் வேண்டேன்" என்றார் மாணிக்க வாசக சுவாமிகள். மாயாபுரி என்றது உடலை. புலன்களால் விளையுந் துன்பங்கள் முன்னர் விளக்கப்பட்டுள்ளன. சொர்க்க முதலிய லோகங்களின் பற்றினையும் உட்பற்றினையும் விட்டவர்களையே மீண்டு "பற்றற்றவர்" என்றார். வேண்டுதல் வேண்டாமை

யில்லாதவர்கட்கு நிட்டை வேண்டுவதில்லை யென்பது சாத்திரக் கொள்கை. நிட்டையாவது ஞானம் பெறுவதற்கு ஒருசாதனம்; உலகத்தவர்களாற் பல துன்பங்கள் நேரிடுமாகலின் ஞானிகள் உலகத்தவர்களைப்போல உண்டும் உறங்கியுங் காலங் கழிப்பார்கள். உலகத்தவர் அநித்திய உலகத்தைப் பொருளாக் கொண்டு அதன் மாட்டு அன்பு செலுத்துவர். ஞானிகள் அவர்போலன்றி நித்தியப் பொருளாகிய சிவத்தின்மீது இடையறாப் பேரன்பு செலுத்துவார்கள். அதுபற்றியே "நித்தன் அன்புகொண்டு" என்றார். 60

ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார்வல் லறமுநட்பும்
நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென் றிருமன மேயுனக் கேயுப தேசமிதே.

(பொ-ரை) மனமே! தெய்வம் ஒன்று என்று இரு; அத்தெய்வம் என்றும் உண்டு என்று நம்பியிரு; உயர்ந்த செல்வங்கள் யாவும் அநித்தியமென்று இரு; பசித்தவர்களுடைய முகத்தை இரக்கத் தோடு பார் (அவர்கட்கு இரங்கி அன்னமிடு). நல்ல தருமமும் நல்ல சிநேகமும் நல்லன என உறுதிகொண்டிரு. நடுநிலை குன்றாமல் வினைக்குத் தக்கவாறு இறைவன் விதித்தபடி இவ்வளவு கிடைத்தது என்று திருப்தியாயிரு; இதுவே உனக்கு யான் செய்யவேண்டிய உபதேசம்.

(வி-ரை) வேதவேதாந்தங்கள் ஏகமேவாத் துவிதீயம் முத லிய வாக்கியங்களாய் கடவுள் ஒருவனே என அறுதியிட் டுரைத்தலின் "ஒன்றென்றிரு" என்றார். தெய்வமிரண்டு பல என் னுங் கொள்கை அஞ்ஞானம் பயப்பதெனபது ஈண்டு அறியத் தக்கது. "காலமும் நாள்கள் ஊழிபடையாமுன் ஏக உருவாகி" என்றார் அப்பர் சுவாமிகளும். "ஒன்றென்ற தொன்றேகாண்" என மெய்கண்டாருங் கூறியிருத்தல் காண்க. தெய்வம் ஊழுமாம்.

நல்லற மென்பதை யில்லறமெனச் சிலர் கூறுப. இருவகை யறத்தையுங் கோடலே பொருத்தம். நட்பின் சிறப்பை, "செயற்கரிய யாவுள நட்பின்" என்றார் திருவள்ளுவர். கிடைத்தமட்டுந் திருப்தி யடைவதே அருள்வழி நிற்பதாகும். பிராரத்த வினையளவாக இறைவனுண் ஆன்மாக்களுக்குவேண்டுவ உதவலான் பெற்றமட்டுந் திருப்தி யடையாது மேலும் பெற அவாவுவோர் அறவழி யொழுகுவோரல்ல ராகலான் "நடுநீங்காமலே" என்றார். இத்திருச் செய்யுளிற் போந்த உபதேசமொழி வழிநிற்போர் இறைவனடியை யடைவரென்க. 61

நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்மல்
ஆட்டமென் றேயிரு பொல்லா வுடலை யடர்ந்தசந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீர்
ஓட்டமென் றேயிரு நெஞ்சே யுனக்குப தேசமிதே.

(பொ-ரை) மனமே! சத்குரு மூர்த்தியின் திருவடிகளைத் தேடத்தக்க பொருளொன்றே கருதியிரு; அத்திருவடிகளையே உறுதியாக நம்பு: பொல்லாத தேகத்தைப் பதுமை யாட்டமென்றே யெண்ணியிரு; பந்துக்களை நெருங்கிய சந்தைக் கூட்டமென்றேயிரு; இவ்வுலக வாழ்க்கையைக் குடஞ்சாய்த்த நீரோட்டமென்றேயிரு; உனக்கு யான் செய்யவேண்டிய உபதேசமிதுவே.

(வி-ரை) சத்குரு - உண்மையைக் காட்டி அஞ்ஞானத்தை யழிப்பவன். (சத்-என்றும் உள்ளது; குரு-அஞ்ஞானத்தை நீக்குபவன்.) நாட்டம்-நோக்கம். "ஓராதே யொன்றையு முற்றுன்றுதே நீமுந்திப், பாராதே பார்த்ததனைப் பார்",—திருவருட்பயன். தேகத்தைப் பொருளாக்கொண்டு ஆடும் ஆடல்கள் யாவும் பொய்யாய்ப் பொன்றுவன வென்பார் "பொம்ம லாட்டம்" என்றார். சுற்றத்தவர்கள், சந்தை கூடுமிடத்தில் ஒன்று சேர்வோர் சிறிதுநேரம் முறை பாராட்டியும் சம்பாஷித்தும் உண்டும் களிப்புற்றுப் பின்

னர்ப் பிரிந்து தத்தம் வீடுகளுக்குச் செல்வோரை ஒப்பச் சின்னாள் நெருங்கி யுறவாடிப் பிரிகின்றமையான் "சுற்றத்தை அடர்ந்த சந்தைக் கூட்டமென்றே யிரு" என்றார். "தந்தைதாய் தமர்தார மகவெனு மிவையெலாஞ் சந்தையிற் கூட்டம் இதிலோர் சந்தேகமில்லை" என்றார் தாயுமானாரும். வாழ்வு-மனைவி மக்கள் முதலியவரோடு கூடியிருப்பது. வாழ்வு சிறிதுகாலம் நிலைதந்து அழிகின்றமையான் "குடங்கவிழ்நீர்" என்றார். நீர் குடத்திலுள்ளமட்டும் அளவுபட்டு நிலைத்திருக்கும். குடஞ் சாய்ந்ததும் நீர் வெளியோடி மறைந்து போம். உடலோடு கூடிய வாழ்வும் அத்தன்மைத்தே. "வாழ்வாவது மாயம்" என்றார் வன்றொண்டப் பெருந்தகையாரும். இச் செய்யுளால் உடல் சுற்றம் வாழ்வு முதலியன நிலையுதலில்லாதன வென்பதும், அவை நமது அறிவு விளக்கத்துக்கு இறைவனால் கொடுக்கப்பெற்ற துணைக்கருவிகளெனபதும், அவைகளையே உறுதிப் பொருளாகக் கொள்வது அறியாமை யென்பதும், அவை யாவும் பொருளல்ல என்றுபதேசித்த குருவை யிடையறாது சிந்திக்கவேண்டு மென்பதும், சிந்தியாதொழியின் உலகமும் அதன் வாழ்வும் மீண்டும் பொருளாகத் தோன்றி அறியாமையை வளர்க்குமென்பதும் விளங்குதல் காண்க.

62

என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே.

(பொ-ரை) ஆண்டவனே! இனிமேல் (தேவரீருக்கு யான் அடிமைப்பட்ட பின்னர்) எனது செய்கையிலே ஆகுங்காரியம் ஒன்றுமில்லை. எல்லாம் தேவரீர் திருவருட் செயலேயென்று அறியப் பெற்றேன். இந்தத் தேகந்தாங்கிய பின்னர் யான் செய்த தீவினை ஒன்றேனும் இல்லை, இப்பிறவி யெடுப்பதற்கு முன்னே

(முற்பிறப்பில்) செய்த தீவினை தானோ இந்த விதமாக வந்து சேர்ந்தது?.

(வி-ரை) இச்செய்யுள் சுவாமிகள் கழுமரத்தை நோக்கிப் பாடியது. விரிவு சரிதம் பார்க்க. நிலையியற் பொருளிலும் இயங்கியற் பொருளிலும் இறைவன் நீக்கமற நிறைந்து அவைகளை நடத்துகின்றனன். அவனன்றி யோரணுவும் அசையாதென்பது ஆப்தவாக்கு. எல்லாம் அவன்செயலாக விருப்ப அச்செயலைத் தஞ்செயலாகச் சீவர்கள் கொள்வதே அறியாமை. அறியாமை நீங்கிய பெரியோர் எல்லாஞ் சிவன் செயலாகக் காண்டலான் "என் செயலாவது * * * * பெற்றேன்" என்றார். யான் பிராரத்த வினையை நுகர்ந்து வருகையில் ஆகாமியவினை யேறக் கூடிய செயல் ஒன்றுஞ் செய்யவில்லை யென்பார் "இந்த வூனெடுத்தபின் செய்த தீவினை யாதொன்று மில்லை" என்றார். இப்பொழுது தண்டவினைமாக்கள் வயப்பட்டு அரசனால் கழுவேறுந் தண்டனை விதிக்கப் பெற்றதற்குக் காரணமாயுள்ள தீவினை யிப்பிறப்பில் ஒன்றுஞ் செய்யவில்லை யென்றும், முற்பிறப்பில் செய்திருக்க வேண்டுமென்றுந் தெரிவிப்பார், "பிறப்பதற்கு முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே" என்றார். ஞானிகள் அடையும் துன்பத்திற்குக் காரணம் முன்னூழ் என்றுணர்க. எல்லாஞ் சிவனசெயல் என்றிருப்போர்க்கு ஆகாமிய கர்மம் இல்லை யென்பதையும் அறிக. 63

திருவேட மாகித் தெருவிற் பயின்றெனை தேடிவந்து
பரிவாகப் பிச்சை பகருமென் றுனைப் பதம்பணிந்தேன்
கருவாகு மேதக் கடற்கரை மேவக் கருதுமென்னை
உருவாக்கிக் கொள்ளவல் லோவிங்ங னேசிவ னுற்றதுவே.

(பொ-ரை) சிவவேடந் தாங்கினவனாய் வீதியில் உலாவி அடியேனைத் தேடி வந்தடைந்து விருப்பமாகப் பிச்சை யெடும்



பத்திரகிரியார் சேவகர் பட்டினத்தாரைக் கள்வனெனப்
பிடிததுப்போதல்.

என்று அருளிச்செய்த குருநாதன் திருவடிகளைத் தொழுதேன். கருவாகிய துன்பக் கடற்கரையையடைய எண்ணியிருந்த சிறியேனைச் சிவபெருமான் தன்னுருவாக்கிக்கொள்ள அன்றோ இவ்வாறு எழுந்தருளிவந்தது?.

(வி-ரை) பிக்ஷாடன வேடந்தாங்கிப் பிச்சையிடுங்களெனத் தாருகாவன ரிஷிப்பெண்களைக் கேட்ட சிவபெருமானையெனப் பொருளுரைப்பினும் பொருந்தும். சகலரை ஆட்கொள்ளச் சிவபெருமான் குருமூர்த்தியாய் எழுந்தருளி வருவாராகலான் "திருவேடமாகி" யென்றார். திருவேடம்-சிவவேடம்; சங்கமவேடம். பிச்சையெடுக்குமாறு பணித்தல் உபதேச மொழி. கரு - கரை. பிறவி - கடல். இச் செய்யுள் உபதேசகுருவாக எழுந்தருளிய வடிவத்தை அறிவுறுத்துவதாகும் காண்க. பிச்சைபகரும் என்பதற்குப் பிச்சையிடும் எனப் பொருள் கொள்ளுநரும் உளர். சிவபெருமான் பட்டினத்தடிகள்பாலணுகிப் பிச்சைகேட்டதாக ஒருகதை தமிழ்நாட்டில் வழங்கி வருகிறது. உருவாககல்-சிவமாக்கல். 64

விட்டே னுலகம் விரும்பே னிருவினை வீணருடன்
கிட்டே னவருரை கேட்டு மிரேன்மெய் கெடாதநிலை [ம்
தொட்டேன்சுக துக்கமற் றுவிட் டேன்றொல்லை நான்மறைக்கு
எட்டே னெனும்பர மென்னிடத் தேவந்தி ங் கெய்தியதே.

(பொ-ரை) பழைய நான்கு வேதங்களுக்கும் எட்டப்படேன் என்னும் மேலான பொருள் என்னிடத்தில் வந்து பொருந்தினதும் உலகப் பற்றை விட்டு விட்டேன்; புண்ணிய பாவங்களில் ஆசை வையேன்; பிரயோசன மில்லாதவர்களோடு நெருங்கமாட்டேன்; அவர் தம் வார்த்தைகளுக்குச் செவியுஞ் சாய்த்துக்கொண்டிரேன்; அசத்தாந்தன்மை யில்லாத ஒரு நிலையைப்பற்றி விட்டேன்; இன்ப துன்பங்களை யொழித்துவிட்டேன்.

(வி-ரை) இருவினை - புண்ணியபாவம். மெய்கெடாத நிலை-சித்தாந்தன்மை; உண்மை அழியாதநிலை. சரீரசித்தியெனினுமாம். மாயைக்குத் தோற்றக்கேடு உண்மை யானும், அவை சிதசுப் பொருட்கின்மையானும், அஃதென்றும் ஒருபடித்தா யுண்மையானும் "மெய்கெடாத நிலை" என்றார். "வான்கெட்டு மாருதமாய்ந் தழல் நீர் மண்கெடினும், தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு" என்றார் மாணிக்கவாசகனார். ஈண்டு வீணரென்றது மூவாசை யுடையோரையென்க. தொடல்-தொடங்கல்; தலையிடல். சுகதுக்க மற்றவிடமே பிறவி யொழிந்தவிடம். அதுவே பேரானந்தம். "இன்பமுந் துன்பமும் இல்லானே யுள்ளானே" என்பது திருவாசகம். வேத வேதாந்தங்களையுங் கடந்த சித்தாந்தப் பொருளென்பார், "கானமறைக்கு மெட்டேன் எனும்பரம்" என்றார். "அல்லையீதல்லை யீதென மறைகளும் அனமைச் சொல்லினல் துதித்திளைக்குஞ் சுந்தரன்"—திருவிளையாடற் புராணம். "மறைகளீறு முன் தொடரொணாத நீ"—திருவாசகம். எய்தியது என்பதிலுள்ள உம்மை தொக்கது. 65

அட்டாங்க யோகமு மாதார மாறு மவத்தைதையைந்தும்
விட்டேறிப் போன வெளிதனி லேவியப் பொன்றுகண்டேன்
வட்டாகிச் செம்மதிப் பாலூர லுண்டு மகிழ்ந்திருக்க
எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே.

(பொ-ரை) அஷ்டாங்க யோகங்களையும், ஆதாரங்கள் ஆறையும், அவஸ்தை ஐந்தையுங் கழிதது மேலேயேறிச் சென்ற பரவெளியிலே ஓர் அற்புததைதைக் கண்ணுறறேன். வண்டு (தேனையுண்பது) போன்று செவ்விய சந்திரகலை பொழியுஞ் ஞானமிர்த தாரையைப் பருகிக் களிப்புற்றிருக்க (சீவபோத முயற்சியால்) எட்டமுடியாத பேரானந்தமானது என்னை விழுங்கி யிருக்கின்றது.

(வி-ரை) அட்டாங்கயோகம்:—இயமம், நியமம், ஆதனம், பிரா ணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி. ஆறா தாரம்:—மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை. ஐந்தவதை:—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். இவைகளைக் கடந்து சென்றால் சுத்த வெளியொன்று தோன்றும். அது திருவருள்வெளி யெனவும் படும். பாழெனவுங் கூறுப. அவ்வெளியிலே சந்திரகலை அமிர்த தாரை சொரியும். அதனையுண்ணும் ஆன்மா மீட்டும் மாயை வயப் படாது பேரானந்தமயமாய் விளங்கும், இஃது அநுபவத்தால் அறிதற்பாலது. "உண்ணீ ரமுதமுறு மூறலைத்திறந், தெண்ணீ ரிணையடித் தாமரைக்கே செலத், தெண்ணீர்ச் சமாதி யமர்ந்து தீராநலக், கண்ணாற்றோடே சென்றுகால் வழிமாறுமே" "அமு தப்புலன் வருமாற்றங் கரைமேல், குமிழக்கதற் சுடரைந்தையுங் கூட்டிச், சமையதத்தண் டோட்டித தரிக்கவல்லார்க்கு, நமனில்லை நற்கலை நாளில்லைதானே"—திருமந்திரம். ஆன்மா பெத்தநிலையில் ஆணவத்தால் விழுங்கப்பெறுவதுபோல முத்திநிலையில் சிவத்தால் விழுங்கப்பெறுதலான, "பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின் றதே" என்றார். "ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத், தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ" என்றார் தாயு மானார். வண்டு - வட்டு; எதுகைநோக்கிவந்த வலித்தல் விகாரம். வட்டு-திரட்சியுமாம்.

66

எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கெனு மிந்தமண்ணுஞ்
சரியெனக் கெனனும் பருந்தோ வெனக்கெனுந் தான்புசிக்க
நரியெனக் கெனனும்புன் னாயெனக் கென்னுமிந் நாறுடலைப்
பிரிய முடன்வளர்த் தேனித னாலென்ன பேறெனக்கே.

(பொ-ரை) (செத்தபின்) துர்நாற்றம் வீசும் இத்தேகத்தை நெருப்பு எனக்கு உரியது என்று சொல்லும்; புழுவோ எனக்

குரியது என்று சொல்லும்; இந்த மண்ணும் எனக்குத் தகுந்த ஆகாரம் என்று சொல்லும்; பருந்தோ எனக் குரியதென்று சொல் லும்; நரி தான் உண்ணும்பொருட்டு எனக்குரியது என்று சொல் லும; இழிந்த நாய் எனக்கு உரியதென்று சொல்லும். (இவ்வுண்மை யறியாமலிதனை) விருப்பத்துடன் வளர்த்தேன். இதனால் எனக்கு என்னபயன்? (ஒன்றுமில்லை.)

(வி-ரை) உயிர் நீங்கினபின்னர் உடல் நெருப்பு புழுமுதலிய வற்றிற்கு ஆகாரமா யொழிதலின் அதனை வளர்க்காமல் உயிர்விளக் கத்திற் கேதுவாயுள்ள அறத்தை வளர்க்கவேண்டு மென்பது. "நாய் நமதென நரிநமதெனப் பிதா, தாய் நமதென நமன் றனதெனப்பிணி, பேய் நமதென மனமதிக்கும் பெற்றிபோல், ஆய் நமதெனப் படும் யாக் கையாரதே"—திருவிளையாடற்புராணம். இதைப்பற்றி முன் னரும் எழுதப்பட்டிருக்கிறது. 67

அண்ணறன் வீதி யாசிருப் பாகு மணிபடையோர்
நண்ணொரு நாலொன்ப தாமவ ரேவலு நண்ணுமிவ்வூர்
துண்ணென் பசிக்கு மடைப்பள்ளி யான சுகமுமெல்லாம்
எண்ணிலி கால மவமே விடுத்தன மெண்ணரிதே.

(பொ-ரை) பிராணன் உலாவும்வழி ஆன்மாவின அரசாட்சி யிடமாகும், அழகிய சேனைவீரர் பொருந்திய முப்பத்தறுவர். அவர் (ஆன்மாவாகிய அரசன் வேண்டுங்கால் அவனுக்குப்) பணியுஞ் செய் வர். (அவர் பணிசெய்தற்கிடமாக உள்ள உடலாகிய) இவ்வூர் கொதித் தெழும் பசிக்குச் சமையற்சாலையாம். இத்தகையவான இன்பங்க ளெல்லாவற்றையும், அளவற்றகாலம் வீணாக வொழியச்செய்தோம். அதனை அளவிடல் அருமை.

(வி-ரை) இச்செய்யுட்குப் பொருள் பலர் பலவாறு கூறுப. உண்மைப்பொருள் சிவாநுபூதிச் செல்வர்கட்கே இனிது விளங் கும்; கலைப்புலமை சிறிதுடைய எம்போன்றார்க்கு விளங்காதென்க.



பட்டினத்தார் கழுமரம் எரியச்செய்தல்; அரசனை ஆட்கொளல்.

பிராணன் வழி ஆன்ம இருக்கை யென்பதை "என்னுளே யுயிர்ப் பாய்ப் புறம்போந்து புக், கென்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே" எனவும், "உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும்" எனவும் வரூஉம் அப்பர்சுவாமிகள் திருவாக்கானுணர்க. ஈண்டு ஆன்மா என்றது பரமான்மாவை. 68

என்பெற்ற தாயரு மென்னைப் பிணமென் றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லிப்புலம்பிவிட்டார்
கொன்பெற்ற மைந்தரும் பின் வலம்வந்து குடமுடைத்தார்
உன்பற் றொழிய வொருபற்று மில்லை யுடையவனே.

(பொ-ரை) எல்லாவற்றையும் அடிமையாக உடையவனே! என்னை யீன்ற அன்னையாரும் என்னைப் பிணமென்று இகழ்ச்சி செய்து விட்டனர். என்பால் பொருளைப் பெற்றுவந்த மனைவிய ரும் போ என்று கூறி அழுது ஒழித்தார்; வலிமையுள்ள பிள்ளைக ளும் என் பின்னே சுற்றி வந்து குடமுடைத்துவிட்டார்கள். இனித் தேவரீர் பற்றே யன்றிப் பிறிதொரு பற்று அடியேனுக்கில்லை.

(வி-ரை) உயிர் உடலினின்று நீங்கிய பின்னர் அதற்கு மனைவி தாய் தந்தை மக்கள் முதலியோர் வழித்துணை யாகமாட் டார். இறந்தபின் உயிர்க்கு உறுதுணையாயிருப்பது அன்பு என்ற படி. பற்று-அன்பு; விருப்பம். இத்தகைய கருத்துள்ள பாக்கள் பல மேல்வந்துள்ளன. அவைகட்கு வரைந்துள்ள விசேட உரைகளைக் காண்க. 69

கறையற்ற பல்லுங் கரித்துணி யாடையுங் கள்ளமின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாத வூணும் புறந்திண்ணையுந்
தரையிற் கிடப்பு மிரந்துண்ணு மோடுஞ் சகமறியக்
குறைவற்ற செல்வமென் றேகோல மாமறை கூப்பிடுமே.

(பொ-ரை) (தாம்பூல முதலியவற்றால்) அழுக்குப்படியாத பற்களும், கரித்துணி ஆடையும், வஞ்சனையில்லாமல் பொறுமை நிறைந்த மனமும், சுவையில்லாத ஆகாரமும், தெருத்திண்ணைப் புறமும், தரையிற் படுக்கையும், பிச்சையெடுத்துச் சாப்பிடுந் திருவோடும் (ஆகிய இவைகள்) குறைவில்லாத செல்வமென்று உலகமறிய அழகிய வேதங்கள் முழங்கும்.

(வி-ரை) ஈண்டுச் செல்வ மென்றது அருட் செல்வத்தை. இக்கருத்துள்ள பாக்களைப் பார்க்க.

70

எட்டுத் திசையும் பதினாறு கோணமு மெங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாங்
கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே.

(பொ-ரை) எட்டுத் திசைகளிலும் பதினாறு கோணங்களிலும் எவ்விடத்திலும் ஒரே தன்மையாய் நிறைந்து எழும்பித் தோன்றுஞ் சோதியை அறிவீனர்களெல்லாரும் கட்டிச் சுருட்டித் தங்களுடைய அக்குளில் வைப்பார்கள்; மனதில் வைக்கமாட்டார்கள். அவர்கள் பட்டம்பகலை யிரவென்று சொல்லும் பாவிகளே யாவார்கள்.

(வி-ரை) சோதியை-சோதியைப் பற்றிச் சொல்லும் நூலை; ஆகுபெயர். இறைவன் எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருக்கின்றானாகலின் "எட்டுத்திசையும் பதினாறுகோணமும் எங்கும் ஒன்றாய், முட்டித்ததும்பி முளைத்தெழுந்த சோதியை" என்றார். இறைவனைப்பற்றிக் கூறும் நூல்களை வாசித்து அவைகளை அக்குளில் அடக்கிக் கடவுள் இப்புத்தகத்தில்தான் இருக்கிறார் எனக்கொள்வது அறியாமை யென்பார், "மூடரெல்லாங் கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பர்" என்றார். எங்குமுள்ள பொருளை ஓரிடத்திலிருப்பதாகக் கருதுவது அறியாமையென்க. எங்குமுள்ள

கடவுள் ஓரிடத்திலிருக்கின்றாரென்போரது பேதைமையைவிளக்க "பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே" என்றார். இறைவனை உள்ளத்திற்கொண்டு வழிபடவேண்டுமென்பார் "கருத்தில் வையார்" என்றார். "என்னுள்ளங் கவர்கள்வன்" என்றார் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளும். "கனமனவீர் கழியுங் கருத்தேசொல்லிக் காண்பதென்னே, நன்மனவர் நவில்தில்லையுள் சிற்றம்பலத்து நட்டம், பொன்மலையில் வெள்ளிக்குன் றதுபோலப் பொலிந்திலங்கி, என் மனமே யொன்றிப்புக் கனனபோந்த சுவடில்லையே" என்றார் அப்பர் சுவாமிகளும். 71

வாய்நாறு மூழன் மயிர்ச்சிக்கு நாறிடு மையிடுங்கண்
பீநாறு மங்கம் பிணவெடி நாறும் பெருங்குழிவாய்ச்
சீநாறும் யோனி யழுநாறு மிந்தியச் சேறுசிந்திப்
பாய்நாறு மங்கையர்க் கோவிங் ஙனேமனம் பற்றியதே.

(பொ-ரை) வாய் ஊத்தை நாற்றம் வீசும்; சிக்கு மயிர் வியர்வை (யழுக்கு) நாற்றம் வீசும்; மைதீட்டிய கண்கள் பீளை நாற்றம் வீசும; தேகம் பிணநாறறம் வீசும், பெரிய குய்யவாய் சீநாற்றம் வீசும்; யோனி தீநாற்றம் வீசும்; இந்திரியச்சேறு சிந்துற்றுப் பாய் நாற்றம் வீசும். (இத்தகைய இழிவிற்கிடமாயுள்ள) பெண்களுக்காகவோ இவ்விடத்தில் என் மனம் இச்சையி லழுந்தியது?

(வி-ரை) கண்பீநாறும்-கண்பீளை சிந்தும் எனினுமாம். இழி பொருள்களொழுகும் அங்கங்களையுடைய மாதர்கள் மேல் பற்று வையாமல் திருவருளொழுகுந் திருமேனியனாகிய சிவபெருமானிடத்தில் பற்றுவைத்தல் வேண்டும் என்றபடி. 72

உரைக்கைக்கு நல்ல திருவெழுத் தைந்துண் டுரைப்படியே
செருக்கித் தரிக்கத் திருநீறு முண்டு தெருக்குப்பையில்

தரிக்கக் கரித்துணி யாடையு முண்டெடுக்கச் சாதியிலும்
இரக்கத் துணிந்துகொண் டேன்குறை யேது மெனக்கில்லையே.

(பொ-ரை) செபஞ் செய்வதற்குச் சிறந்த பஞ்சாட்சரமுண்டு; வேதாகமங்களின் வாக்கியப்படி இறுமாந்து அணிந்து கொள்ளுதற்கு விபூதியுண்டு; கட்டிக்கொள்வதற்கு வீதிக் குப்பை மேடுகளிற் கரித துணியாடையுண்டு; எல்லாச் சாதியாரிடததிலும் பிச்சையெடுக்கத துணிநதுவிட்டேன். (ஆகையால்) எனக்கு யாதொரு குறைவு மில்லை.

(வி-ரை) செபிக்கப் பஞ்சாக்கரமும், பூச விபூதியும், அணியக் கரித்துணியும், இரந்துண்ணப் பல சாதியும் இருக்கின்றன. உலகத்தில் மனிதர்கள் உடை உணவு முதலியவற்றிற்கே அரிய காலத்தைச் செலவுசெய்து சிவத்தியானமின்றி யிடர்ப்படுகிறார்கள். யானோ அவைகளைச் சிறிதுங் கஷ்டமின்றிப் பெறுகிறேனாகலின் எனக்கொரு குறையுமில்லை என்றபடி.

73

எதப்பட் டாயினி மேற்படும் பாட்டை யிதென்றறிந்து
போதப்பட் டாயில்லை நல்லோ ரிடஞ்சென்று புல்லறிவால்
வாதைப்பட் டாய்மட மாதர் கலவி மயக்கததிலே
பேதைப்பட் டாய்நெஞ்ச மேயுனைப் போலில்லை பித்தருமே.

(பொ-ரை) மனமே! பிழைபட்டாய். ஞானிகளை யடைந்து இனிமேலடையும் நெறி யின்னதென்றுணர்ந்து ஞானம் விளங்கப் பெற்றாயில்லை. சிவபோத வறிவால் துனபப்பட்டாய். அறியாமை மிக்க மான்போன்ற கண்களையுடைய பெண்களின இன்பமயக்கத தில் அழுந்திக் கீழாயினாய். உன்னைப்போலப் பைத்தியக்காரரும் இல்லை.

(வி-ரை) முற்பிறப்பில் வினையீட்டினமையால் இப்பிறவி தாங்கினை யென்பார் "எதப்பட்டாய்" என்றார். இப்பிறவியிலாயி

னும் மறுமைக்கு நன்னெறி யடையவேண்டுமெனக் கருதிப் பெரியோர்களிடத்தில் இதோபதேசம் பெற்றுச் சிவபோத மேற்படவேண்டுமென்பார், "இனி * * * சென்று" என்றார். அங்ஙனஞ் செய்யாத இப்பிறவியிலுஞ் சீவபோதத்தால் பிரவிர்த்தி மார்க்கத்தில் ஒழுகுவது அறியாமை யென்பார், "புல்லறிவால் போதப்பட்டாய்" என்றார். மறுபிறவி யெடுப்பதற்கு இப்பிறவியிலேயே விதையிடுவது போன்றது பெண்ணின்பமாகலானும், அதுவே மனிதனைச் சிறுமைப்படுத்துவதாகலானும் "மடமாதர் கலவி மயக்கத்திலே பேதைப்பட்டாய்" என்றார். முன்பிறப்பில் செய்த வினையையிப்பிறப்பில் அனுபவித்துத் துன்புறுவதை யுணர்ந்தும் மேலைக்கு நல்வழி தேடாது சிற்றின்பத்தில் உழல்வது பித்தர் செய்கைபோன்றதென்பார், "உனைப்போலில்லை பித்தருமே" என்றார். 74

சுரப்பற்று வல்வினை சுற்றமு மற்றுத் தொழில்களற்றுக்
கரப்பற்று மங்கையர் கையிணைக் கற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மனமடங்கப்
பரப்பற் றிருப்பதன் றோபர மாபர மானந்தமே.

(பொ-ரை) மேலானவனே! சீவபோத ஊற்று அழிந்து, கொடிய வினையின் பயனாகிய மனைவி முதலிய பந்துக்களும் ஒழிந்து, சீவகாரணச் செய்கைகள் அடங்கி, வஞ்சனையின்றி, பெண்கள் கூட்டுறவு நீங்கிச் சஞ்சலந் தொலைந்து, அளவுகடந்து (அன்பால்) கடவுளாகிய தேவரீரை வாயாரவாழ்த்தி மனம் ஒடுங்குமாறு ஆசையற்று இருப்பதல்லவோ பரமானந்தம்?.

(வி-ரை) சுற்றம் வினையென்பதனை "மனைவி தாய் தந்தை மக்கள் மற்றுள சுற்றமென்னும், வினையுளே விழுந்தழுந்தி" என வரூஉம் அப்பர்சுவாமிகள் திருவாக்கானுணர்க. சீவபோதமும் காரணச் செயலும் ஆசையும் அற்றவிடமே ஆனந்தமாம் என்றபடி. "ஆனந்

தம் ஆனந்த மென்ப ரறிவிலார், ஆனந்த மாநடம் யாரு மறிகிலார், ஆனந்தமா நடம் யாரும் அறிந்தபின், தானந்த மற்றிட மானந்த மாமே" "ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள், ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள், ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள், ஆசை விடவிட ஆனந்த மாமே"—திருமந்திரம். 75

பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்திட்ட பிச்சையெல்லா
நாய்போ லருந்தி நரிபோ லுழன்றுநன் மங்கையரைத் [ம்
தாய்போற் கருதித் தமர்போ லனைவர்க்குந் தாழ்மைசொல்லிச்
சேய்போ லிருப்பர்கண் டீருண்மை ஞானந் தெளிந்தவரே.

(பொ-ரை) திருவடி ஞானங் கைவரப் பெற்றவர்கள் பிசாசு போல அலைந்து, செத்த பிணம்போலச் செயலற் றிருந்து, பிறர் இட்ட பிச்சைக ளெல்லாவற்றையும் நாய்போல உண்டு, நரிபோல அங்குமிங்குந் திரிந்து, கற்புடைய பெண்களைத் தாய்போல எண்ணி, எல்லாருக்கும் பந்துக்களைப்போலத் தாழ்மையான வார்த்தைகளைப் போதித்து, குழந்தைபோ லிருப்பார்கள்.

(வி-ரை) இதனால் ஞானிகள் இலக்கணங் கூறியவாறும். 76

விடக்கே பருந்தின் விருந்தே கமண்டல வீணனிட்ட
முடக்கே புழுவந் துறையிட மேநல முற்றுமிலாச்
சடக்கே கருவி தளர்ந்துவிட் டாற்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கே யுனைச்சுமந் தேனின்னி னேது சுகமெனக்கே.

(பொ-ரை) மாமிசபிண்டமே! பருந்தினுடைய விருந்தே! குண்டிகை யேந்தி வீணனாகிய பிரமன் சிருட்டித்த கோணலே! புழுக்கள் வந்து தங்குமிடமே! நன்மை யென்பது சிறிதுமில்லாத உடலே! உறுப்புக்கள் தளர்ந்துவிடுமாயின் ஈன்றதாயுந் தீண்டாத தொடக்கே! உன்னை யிதுகாறும் தாங்கினேன். உன்னால் எனக்கு இன்பம் உண்டோ?

(வி-ரை) முடக்கு - மட்கலமுமாம். சடக்கு - சட்டையுமாம். தொடக்கே - சப்த தாதுக்களால் கட்டப்பட்ட கட்டே; தீட்டுப் பொருளே எனினுமாம். உடலைப் பொருளாக்கொண்டு அதனைப் போற்றும் உலகாயுதருக்கு அறிவுறுத்தும் செய்யுளிது. சிவபூசை சிவாலயவழிபாடு செய்யாது மரிப்போர் தேகம் பருந்து முதலிய வற்றிற்கு உணவாய் ஒழியும் என்க. அத்தேக மெடுத்ததால் சிறிதும் பயன் பெருது பலவகைச் சிற்றின்பங்களால் மேலைத் துன்பத்திற்கு விளைநிலம் போன்றதா யுண்மையின் "ஏது சுகமெனக்கே" என்ருர். முதல் கோயில் திருவகவற்கு நாமெழுதிய விசேட உரையில் உடலைப்பற்றி எழுதியுள்ளோம். 77

அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோன்
எழுதாப் படிவரு மோசலி யாதிரென் னேழைநெஞ்சே.

(பொ-ரை) எனது ஏழைமனமே! (துன்பம் வந்த காலத்தில்) அழுதால் என்ன பிரயோசனம்; வருந்தினுல் என்ன பிரயோசனம்; (கடவுளை) வணங்கினுல் என்ன பிரயோசனம்; உன்னை ஒருவர் புண்படும்படி சொன்ன நிந்தனையால் என்ன பிரயோசனம்; ஆவது ஒன்றுமில்லை. நல்லனவும் தீயனவும் பிரமன் எழுதாதவழி வந்து பொருந்துமோ? (ஆகையால்) தளர்ச்சி யடையாதே.

(வி-ரை) யாவும் விதிப்படி நடக்குமென்பது. 78

ஊரீ ருமக்கோ ருபதேசங் கேளு முடம்படங்கப்
போரீர் சமணைக் கழுவேவற் றுநீற்றைப் புறந்திண்ணையிற்
சாரீ ரனந்தலைச் சுற்றத்தை நீங்கிச் சகசகைக்க
வேரீ ருமக்கவர் தாமே தருவ ரிணையடியே.

(பொ-ரை) ஊரவர்களே! உங்களுக்கோ ருபதேசஞ் செய் கிறேன். கேளுங்கள்; தேக முழுவதுஞ் சமணர்களைக் கழுவிலேற் றிய விபூதியைப் பூசிக்கொள்ளுங்கள்; திண்ணைப்புறத்தில் நித்திரை செய்யுங்கள்; பந்துக்களைவிட்டு நீங்கி உலகஞ் சிரிக்கப் பிச்சை யெடுங்கள். (இங்ஙனஞ் செய்வீர்க ளாயின்) சிவபெருமானே (வலிந்து வந்து) தமது திருவடிகளை உங்களுக்கு உதவுவர்.

(வி-ரை) ஊரீர்-விளி. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநீற்றால் கூன்பாண்டியன் சுரரோயைத் தணித்துச் சமணர்களைக் கழுவேற்றிய வரலாற்றைப் பெரியபுராணம் திருவிளையாடற்புராணம் முதலிய புராணங்களிற் காண்க. புறந்திண்ணை-தெருத திண்ணை. அனந்தல்-நித்திரை. ஈண்டு யோகநித்திரையின்மேற்று. "நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த" என்றும், "நாடவர் பழித்துரை பூணதுவாக" என்றும் மணிவாசகனார் அருளிச்செய்தமை காண்க. விபூதிதரித்துத் தெருத்திண்ணையி லுறங்கிப் பிச்சை யேற்றுண்டு உலக எண்ணமின்றி யிருப்பதே சிவபெருமானுக் குகந்த செய லென்க. 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்னும் பெரியோர் மொழியையும் ஓர்க. இணையடி என்றது திருவருளை. 79

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திர மென்னகண்டாய்
ஆற்றிற் கிடந்துந் துறையறி யாம லலைகின்றதே.

(பொ-ரை) மனமே! நீ விபூதியைத் தேகமுழுவதும் பூசிக் கொண்டாலு மென்னபயன்? தீர்த்தயாத்திரை செய்தாலுமென்ன பயன்? மருள் நெறியினின்றும் பெயர்ந்து அருள்நெறியிற் றலைப் படவேண்டிய வழியை அறியவில்லையே. பெரிய வேதங்களில்

விரிந்து கிடக்கும் எழுகோடி மந்திரங்களாலும் என்ன பயன் பெற்றாய்? ஆற்றிலே யிருந்தும் ஏறுந் துறை தெரிந்து கொள்ளாமல் அலைகின்றனையே.

(வி-ரை) அடிகள் மேற்செய்யுளில் "உடம்படங்கப்போரீர் சமணைக் கழுவேற்றுநீற்றை" என்று ஓதி, இப்பாசுரத்தில் "நீற்றைப் புனைந்தென்ன" என்றோதியிருத்தலான் விபூதியை யணியவேண்டு மென்பதும், அதனை யன்புடன் அணியவேண்டு மென்பதும், போலியாகப் பூசுதலாற் பயனில்லை யென்பதும் அடிகள் கருத்தென்பதை உய்த்துணர்க. சுவாமிகள் "திருநீறுமிட்டு" என்றும் "தரிக்கத் திருநீறுமுண்டு" என்றும் பிறண்டும் அருளிச் செய்திருத்தல் காண்க. இச்செய்யு ளொன்றைக்கொண்டு விபூதி யணிவதில் பயனில்லை யென்பது ஆசிரியர் கொள்கை யென நிறுத்துவது அறியாமை. விபூதியணிந்தும் மருள்நெறியில் உழலும் மாக்களை நோக்கி "நீற்றைப்புனைந்தென்ன" என்றார். "வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன், வேடநெறி நிற்பார்வேடம் மெய்வேடம்" என்றார் திருமூலரும். "நீராடப்போ யென்ன" "எழுகோடி மந்திர மென்ன கண்டாய்" இவையும் அன்பில்லாரை நோக்கிக் கூறியன என்க. அன்புடன் நீராடல் முதலியன செய்ய வேண்டு மென்பது ஆசிரியர் கருத்து. எழுகோடி மந்திரம் - எழு முடிபுகளையுடைய மந்திரம். கோடி எண்ணன்று. "கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை, ஆடினாலும் அரனுக் கன்பிலையேல், ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி, மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே"—தேவாரம். 80

செல்வனைப் பின்சென் றுபசாரம் பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரிதவி யாமற் பரானந்தத்தின்
எல்லையிற் புக்குநல லேகாந்த மாயெனக் காமிடத்தே
அல்லலற் றென்றிருப் பேனல நீழ லரும்பொருளே.

(பொ-ரை) கல்லாலவிருட்சத்தடியி லெழுந்தருளியுள்ள சிவ பெருமானே! நாள்தோறும் பொருட்செல்வ முடையவர்களைப் பின் தொடர்ந்துபோய் (அவர்கள் மகிழ) உபசாரவார்த்தைகள் பேசிப் பற் களைக் காட்டி வருந்தாமல் பேரானந்த எல்லையில் நுழைந்து எனக்கு உரிய இடத்திலே மிகவும் ஏகாந்தமாகத் துக்கமற்று எந்தக்காலத்தி லிருப்பேன்?.

(வி-ரை) கல்லால விருட்சத்தடியில் எழுந்தருளி யிருக்கும் பொருள் தக்ஷிணாமூர்த்தி. அம்மூர்த்தி மோன ஞானோபதேசத்தைச் சொல்லாமற் சொல்லுதலான் "அரும் பொருள்" எனப்பட்டார். எல்லை-முடிவு; கரை. ஏகாந்தம்-தனிமை. "இனிது இனிது ஏகாந் தம் இனிது" என்றார் ஔவையாரும். 81

ஓங்கார மாய்நின்ற வத்துவி லேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனறிந் தாற்பதி னாலுலகு
நீங்காம னீங்கி நிறையா நிறைந்து நிறையுருவாய்
ஆங்கார மானவர்க் கெட்டாக் கனிவந் தமர்ந்திடுமே.

(பொ-ரை) பிரணவமாக நின்ற பொருளிலே ஒரு விதை, பொருந்தி வளமாகத் தோன்றிய பிரயோசனத்தை உணர்ந்தால் பதினான்கு லோகங்களிலும் நீங்காமல் நீங்கி நிறையாமல் நிறைந்து அகண்டாகாரமாய் நான் என்னும் முனைப்பு உடையார்க்குக் கிட் டாத பழம் வந்து சேரும்.

(வி-ரை) பிரணவசமாதி யடைந்தோர் எங்கும் நிறைந்துள்ள சிவத்தோடு கலந்து எங்குமாய் விளங்குவரென்பது. நீங்காமல் நீங்கி நிறையாமல் நிறைதல் என்பது தத்துவங்களை விடுத்துச் சிவத்தைப் பற்றலையென்க. அகங்கார முள்ளமட்டும் இறைவன் நிறைவிற்கலத்த லின்மையான "அகங்காரமானவர்க் கெட்டா" என்றார். இறைவனை "நமச்சிவாயப் பழம்" எனவும், "ஈசனெனுங்கனி" எனவும் பெரி யோர் கூறியிருத்தல் காண்க. 82

விதியார் படைப்பு மரியா ரளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்புநம் பாலணு காது பரானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாந் துயிலிற் கனவெனநீ
மதியா திருமன மேயிது காணுன் மருந்துனக்கே.

(பொ-ரை) மனமே! சிவானந்தத்தையே உற்றதுணையாகக் கருதி மற்ற எல்லாவற்றையும் உறக்கத்தில் தோன்றுங் கனவென்று கொண்டு அவையிற்றைக் கருத்துட் கொள்ளாதிரு. இதுதான் உனக்கு (பிறவியறுக்கும்) நல்ல மருந்தாகும். (இங்ஙனமிருப்பின்) பிரமதேவன் சிருஷ்டியும், நாராயணமூர்த்தியின் இரட்சிப்பும், சிறந்த திருக்கயிலாயத்தைப் பதியாகக் கொண்டெழுந்தருளியுள்ள உருத்திரபகவான் சம்மாரமும் நம்மிடம்வந்து நெருங்க மாட்டா.

(வி-ரை) பொருளல்லாதவற்றைப் பொருளாகக் கொள்வோர் முத்தொழில் வாய்ப்படுவர், மாறுதலில்லாச் சிதப்பொருளைப் பொருளாகக்கொள்ளலே பிறவிநோய்க்கு மருந்தாகுமென்க. "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு, மருளானும் மாணுப்பிறப்பு"—குறள். மும்மூர்த்திகளின் மூன்று தொழில்களுஞ் சிவபெருமானைக் கண்டோர்க்கு இல்லை யென்க. மும்மூர்த்திகளும் பசுக்களென்பது வேதக்கொள்கை. வியன்கயிலைப் பதியார் என்றது சீகண்டபரமசிவனை; தற்பர சிவத்தை யன்று. "மூவர்கோனுய் நின்றமுதல்வன்" என்ருர் மாணிக்கவாசகரும். 83

நாய்க்குண்டு தெண்டு நமக்குண்டு பிச்சை நமனையெல்ல
வாய்க்குண்டு மந்திர பஞ்சாட் சரமதி யாமல்வரும்
பேய்க்குண்டு நீறு திகைப்புண்டு நின்ற பிறவிப்பிணி
நோய்க்குண்டு தேசிகன் றன்னரு ளேக்கங்க ளேக்குதற்கே.

(பொ-ரை) (முயற்சியின்றி உணவு பெற) நாய்க்கு எச்சி லிலைகள் உண்டு; (அதுபோல) நமக்கும் (வீடுகடோறும்) பிச்சை யன்னம் உண்டு; யமனை ஜெயிப்பதற்குப் பஞ்சாட்சரஜெபம் வாய்க்கு உண்டு; மதியாமல் எதிர்த்துவரும் பேய்க்கு விபூதியுண்டு; மயக் கத்தை யடையச்செய்கின்ற பிறவியென்னுங் கொடிய நோய்க்கு ஆசாரியனுடைய திருவருள்நோக்கம் நோக்குதற்கு உண்டு. (நமக் கென்ன பயம்.)

(வி-ரை) "கூற்றை-அஞ்ச உதைப்பன அஞ்செழுத்துமே" என் றார் ஞானசம்பந்தரும். திருவருள்நோக்கம்-சட்சுதீட்சை. 84

நேமங்க ணிட்டைகள் வேதங்க ளாகம நீதிநெறி
ஓமங்க டர்ப்பணஞ் சந்தி செபமந்த்ர யோகநிலை
நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே
சாமங்க டோறு மிவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே.

(பொ-ரை) நியமங்களும், நிஷ்டைகளும், வேத அத்தியயன மும், ஆகமமோதலும், நியாயவழி யொழுகலும், ஓமங்களும், தர்ப் பணமும், சந்தியாவந்தனமும், செபமும், மந்திரமும், யோகநிலை யும், சிவநாம உச்சரிப்பும், சந்தனம் விபூதி இவைகளையணிந்து சிறப் புடனே ஒவ்வொரு சாமத்திலும் இவர்களால் செய்யப்படும் பூசை களும் வஞ்சனையேயாம்.

(வி-ரை) உண்மை அன்பின்றிச் செய்யப்படும் நியமம் முதலி யன வஞ்சனை யென்றபடி. "நீற்றைப் புனைந்தென்ன" எனனுஞ் செய்யுளைப் பார்க்க. வேதங்களாகம நீதிநெறி யென்பதற்கு வேதா கமங்களிற் கூறியுள்ள அறவழிக் கேதுவான எனக் கொள்ளினுமாம். நேமம்-நியமம்; மரூஉ. அஷ்டாங்க யோகத்துள் முதலது. ஓமம்-அக் கினி வளர்த்தல். தர்ப்பணம்-மந்திரநீர் இறைத்தல். 85

நாமனைத் தனைபுத்தி சொன்னாலுங் கேட்டிலை நன்னெஞ்சமே
எனிப் படிக்கெட் டுழலுகின் றாயினி யேதுமிலா



அடிகள் வாணிபமாடி மரக்கலத்திற் செல்லல்

வானத்தின் மீனுக்கு வன்றூண்டி விட்ட வகையதுபோல்
போனத்தை மீள நினைக்கின் றனையென்ன புத்தியிதே.

(பொ-ரை) நல்ல மனமே! நான் எவ்வளவு புத்தி சொன்னு லும் நீ கேட்கவில்லை; ஏன் இவ்வாறு கெட்டு அலைகின்றாய்; இனி மேல், ஒருதொடர்புமில்லாத ஆகாயத்திலுள்ள மீன்களைப் பிடிப்ப தற்கு வலிய தூண்டிலை யெறிந்த தன்மைபோல ஒரு தொடர்பு மின்றிச் சென்றதைக்குறித்து மறுபடியும் எண்ணுகின்றாய். இஃது என்ன புத்தி?

(வி-ரை) வானமீன் - நட்சத்திரம். போனத்தை யென்றது கழிந்த மாயாகாரியங்களை. கழிந்தவரைக் குறித்துக் கருதுகின்ற வன் அறிவீனன் என்க. "சென்றது கருதார்நாளை சேர்வது நினை யார்" என்பது கைவல்யம். "கற்றூர்முற் றூன்றுக்கழி விரக்கம்" என்றார் காக்கைபாடியனாரும். சென்றபொருளைக் குறித்து நினைந்து நினைந்து வருந்துதல் வானத்துள்ள நட்சத்திரங்களைப் பூமியி லிருந்தபடியே பிடிக்கத் தூண்டிலெறிந்த பேதைமையை யொக்கும் என்றபடி. 86.

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே.

(பொ-ரை) பஞ்சாக்கரமென்னுங் கோடரியால் இந்த ஐந்து புலனுக் கிருப்பிடமான கொடிய ஐம்பொறிக் கட்டையை வேரற வெட்டிச் செழுமை செய்து மிகவும் பண்படுத்திச் சதாசிவமென்கிற விதையை விதைத்துக் கூட்டமாகிய களைகளைப் பிடுங்கிச் சிவபோக மென்னும் பயிரை வளர்த்தேன்.

(வி-ரை) ஐம்புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம். ஐம்பொறி-மெய் வாய் கண் மூக்கு செவி. புலன் தங்குமிடம்-பொறி. களை-காமம் குரோதம் முதலியன; தத்துவக்கூட்டங்கள். பஞ்சாட்சரசெபத்தால் ஐம்புலச் சேட்டைகள் அடங்கும், அவை அடங்கின் மனம் ஒன்றுபடும். அதற்குமேல் சதாசிவததியானமுண்டாம். அஃதுண்டாகத தத்துவக்கூட்டங்கள் ஒடுங்கிச் சிவநதோன்றும் என்றபடி. இதனுல் ஸ்ரீபஞ்சாட்சர செபத்தின் இன்றியமையாமை தெரிவித்தவாறும். 87

தாயாருஞ் சுற்றமும் பெண்டிருங் கைவிட்டுத தாழ்ந்திடுநாள்
நீயாரு நானு ரெனப்பகர் வாரந்த நோததிலே
நோயாரும் வந்து குடிகொள்வ ரேகொண்ட நோயுமொரு
பாயாரு நீயுமல் லாற்பின்னை யேதுநட் பாமுடலே.

(பொ-ரை) சரீரமே! அன்னையாரும் பந்துக்களும் மனைவியாருங் கைநெகிழ விடுத்துப், பின்னிடுங்காலத்தில் (மரணதசையில்) நீயார நானுர் என்று சொல்லுவார்கள். அந்தக்காலததில் வியாதி வந்துசேரும. சேர்நத வியாதியும், படுத்துக்கொண்டிருக்கிற பாயும் நீயும் அல்லாமல் வேறு உறவு ஏது?.

(வி-ரை) கைவிடுததுத தாழ்நதிடுநாள் - செயலற்றுச் சாகின்ற காலத்தில். உலகததிற் செவவனே வாழ்கின்றகாலததில் மக்கள் தாயென்றும் தந்தையென்றும் மனைவியென்றும் மக்களெனறுஞ் சூழ்ந்து உறவாடுவார்கள்; உயிர்போகின்றகாலத்தில் நீயார நானுர் எனறு வீட்டளவிலேயே நின்றுவிடுவார்கள். அத்தகையினர்மீது பற்றுவைதது வாழ்வது அறியாமை யென்றபடி. "மததயானையேறி மன்னர்சூழ வருவீர்காள், செததபோதே யாருமில்லை சிந்தையுள் வைம்மின்கள்" என்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகளும். 88

ஆயும் பொழுது மயிர்க்கால்க டோறு மருநகிருமி
தோயு மலக்கூட்டை யாகிய காயத்தைச் சுட்டுவிட்டால்

பேயு நடன மிடுங்கட மாமென்று பேசுவதை
நீயு மறிந்திலை யோபொரு டேட நினைந்தனையே.

(பொ-ரை) மனமே! ஆராய்ந்து பார்க்குங்காலத்தில் ஒவ்வொரு மயிர்க்காலிலுஞ் சிறிய புழுக்கள் மலியும் மலம் நிறைந்த குட்டையாகிய உடலைச் சுட்டுவிட்டால், பிசாசுகள் நடனமிடுஞ் சுடுகாடு என்று உலகததவர் வார்த்தையாடுவதை நீ கேட்டு உணரவில்லை போலும். (அத்தகைய தேகததைப் பொருளாகக் கருதிப்) பொருட் செல்வந் தேடத துணிந்தாயல்லவா?.

(வி-ரை) உயிர் நீங்கிய பிறகு பேய்க்கிடமாகும் உடம்பைப் பொருளாக் கொண்டு பொருட் செல்வந் தேடுவது அறியாமை யென்றபடி. அருட்செல்வந் தேட உழைப்பதே மக்கள் கடமை யென்றவாறு. 89

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே.

(பொ-ரை) தரித்துக்கொள்ளும் ஆபரணங்களுக்காக அல்ல; பொருளைக் குறித்து அல்ல; நிலங்களைக் கொள்ளும் பொருட்டல்ல; பெண்கள் நிமித்தம் அல்ல; அழகிய பொருள்களைக் கண்டு களித தற்கு அல்ல; ஆகாயங் கடநது விளங்குஞ் சிவபெருமான் திருவடிக் கும் அல்ல; என் மனமழிந்து ஒரு சாண்வயிற்றை வளர்க்க அடியேன் படுங் கஷ்டங் கொஞ்சமன்று.

(வி-ரை) அடிகள் கொங்குநாட்டில் தங்கியிருநதபோது, ஒரு நாள் ஒருவன் வீட்டையடைந்து பிச்சையேற்ற காலத்து, அவ் வீட்டுக்காரன் சுவாமிகளைக் கள்வனெனக் கருதிப் புடைததனன். அதுகண்ட எதிர்வீட்டுக்காரன் சுவாமிகளை அழைத்துச்சென்று

உபசரித்து அன்னமிட்டனன். அதுகாலை அடிகள் பாடியபாட்டு இஃதெனக் கூறுப. இச்செய்யுளால் பசியின் கொடுமை குறித்த வாறும். "மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை, தானந் தவ முயற்சி தாளாண்மை-தேனின், கசிவந்த சொல்லியர்மேல் காமுறு தல் பத்தும், பசிவந்திடப் பறந்து போம்"—ஔவையார். பசி சிவ யோகிகளையும் விட்டகலாது. சிவயோகம் முதிரப்பெற்று அமிர்த தாரை உணவாமளவும் பசிநோய் யோகிகளையும் வருத்தியேதீரும். (எப்பற்றுமின்றி யோகத்தில் தலைப்பட்ட அன்பர்கள்பசியை ஆற்ற வேண்டுவது இல்லறத்தார் கடன்.) 90

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்ப மிறையாத தீர்த்த மினிமுடிந்து
கட்டாத லிங்கங் கருதாத நெஞ்சங் கருதகினுள்ளே
முட்டாத பூசையன் றேகுரு நாதன் மொழிந்ததுவே.

(பொ-ரை) (வெள்ளி செம்பு முதலிய தகடுகளில்) பொறியாத சக்கரம்; செபியாத மந்திரம்; பிறர்க்கு எட்டாத புஷ்பம்; இறையாத சலம்; நன்றாக முடிந்து (பெட்டகத்திற்) கட்டிவையாத லிங்கம்; நினையாத மனம்; நினைவிலே கட்டுப்படாத பூசை. (இவைகளை யல் லவோ) சிவகுருநாதன் (எனக்கு) உபதேசித்தனன்.

(வி-ரை) கருவிகாரணங்களைக் கடந்து அநுபூதியில் அறிய வேண்டியதாகலின் "வெட்டாத சக்கரம் ... ... ..." என்றார். சொல்லமுடியாத தொன்றைச் சொல்லளவில் நிறுத்திக் கூறு வது அறியாமை யென்க. "சொல்லாத வார்த்தையைச் சொன் னண்டி தோழி" எனத் தாயுமானாரும், "உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்" எனத் திருமூலரும் அருளிச்செய்துள் ளார்கள். கலைஞானத்தால் விளக்கமுறும் அறிவு காட்சி காண்பான் காணப்படும் பொருள் என்ற வேற்றுமையை உணர்த்துவதாம். குருநாதன் உபதேசமொழி கேட்டதும் விளங்கப்பெறும் மெய்

யறிவு மனிதன் அந்தக்கரணம் முதலியவற்றை மறக்கச்செய்கிறது. அந்நிலையில் தோன்றுவன யாவும் ஞானமயமான பொருள்களாகும். அதனால் அவைகளை வெட்டாத சக்கரமென்றும், பேசாதமந்திர மென்றும், எட்டாத புட்பமென்றும், இறையாத தீர்த்தமென்றும், கட்டாத லிங்கமென்றும், கருதாத நெஞ்சமென்றும், முட்டாத பூசையெனறும் ஞானிகள் சொல்வது வழக்கம். மனவுணர்வு கடந்த ஒரு நிலையைப் பெரியோர் அவ்வாறு உலகத்தார்க்கு அறிவுறுத்துவ ரென்க. 91

எருமுட்டை பிட்கி னுதிர்ந்திடுஞ் செல்லுக் கெவரழுவார்
கருமுட்டை புக்குக் கழலகன் றுய்கன துக்கமதாய்ப்
பெருமுட்டுப் பட்டவர் போலழும் பேதையிர் பேத்துகிறீர்
ஒருமுட்டும் வீட்டு மானும மென்றைக்கு மோதுமினே.

(பொ-ரை) கருவாகிய முட்டையில் நுழைந்து சிவபெருமா னுடைய திருவடிகளை நீங்கியுள்ளவர்களே! மிகுந்த துன்பம் உடை யவர்களாய்ப் பெரிய இடையூறு அடைந்தவர்களைப்போலப் புலம்பும் அறிவில்லாதவர்களே! (தேக மழிந்துவிடுமெனக்) கலங்குகின்றீர்கள். வராட்டியைப் பிட்டால் அதினின்றுஞ் சிந்துகின்ற செல்லுக்கு யாவர் அழுவார் (ஒருவரும் அழார்). ஒருவகைத் துன்பமும் வரவொட்டாத படி தடுக்குஞ் சிவநாமத்தை யெப்பொழுதுந் துதியுங்கள்.

(வி-ரை) வராட்டியைப் பிட்டகாலத்தில் சிந்துஞ் செல்லுக்கு அழுவாரில்லை; அழுவோர் மூடராவர். அதுபோல உடலழிவதைக் குறித்து அழுவது அறியாமை என்றபடி. சிவபிரான் திரு வடியை மறந்தவரே கருவாய்ப்படுவராகலான் "கருமுட்டை புக்குக் கழலகன்றீர்" என்றார். வீடல்-அழிதல். சிவநாமம் பிறவியை யொழிப்பதாகலான் "ஒருமுட்டும் வீட்டும் அரனுமம்" என்றார். 'சிவசிவ என்கிலர் தீவினை யாளர், சிவசிவ என்றிடத் தீவினை

மாலும், சிவசிவ என்றிடத் தேவரு மாவர், சிவசிவ என்றிடச் சிவகதி தானே"—திருமூலர். 92

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
ஐயாநின் மாயை யுருவெளித மேதாற்ற மகிலத்துள்ளே
மெய்யாயிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே.

(பொ-ரை) சிவந்த நெருப்புத் திருமேனி யுடையவனே! (அழல் வண்ணா) மைதீட்டிய கண்களையுடைய மனைவியும், பிள்ளைகளும் வாழ்க்கையும், வீடும் தேவரீரது மாயையாகிய பொய்ததோற்றம் (அவை முதலில்) இந்த உலகத்திலே சத்தியமாயிருந்தன. (பின்னர்) நாள்கழிய நாள்கழிய முற்றிலுஞ் சூன்யமாய், பழைய கட்டுக்கதை யாய்ச் சொப்பனமாய் மெல்ல ஒழிந்தன.

(வி-ரை) உருவெளித் தோற்றம் - மனமருட்சியால் உண்டாகும் பொய்த்தோற்றம். இதுபற்றியே மாயையை அநிர்வசனீயமென வேதாந்தமோதும். மாயாகாரியங்கள் முதலில் மெய்யாகத் தோன்று வது அறியாமையான் என்க. பழங்கதை கனவு இவை பொய்ம்மை யைக்காட்டுங் குறிப்பு மொழிகள். 'வைத்தநிதி பெண்டீர் மக்கள் குலங்கல்வி யெனும், பித்தவுலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ், சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த, வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோதம்பீ" என்றார் மணிவாசகனாரும். 93

ஆயாய்ப் பலகலை யாய்ந்திடுந் தூய வருந்தவர்பாற்
போயா கிலுமுண்மை யைத்தெரிந் தாயில்லை பூதலத்தில்
வேயார்ந்த தோளியர் காமவிகா ரத்தில்வீழ்ந் தழுந்திப்
பேயாய் விழிக்கின் றனைமன மேயென்ன பித்தனக்கே.

(பொ-ரை) நெஞ்சமே! பல ஞானநூல்களை ஆராய்ச்சி செய் கின்றாயில்லை, அவைகளை ஆராயும் பரிசுத்தம்பொருந்திய அரிய

தவசிரேட்டர்களிடஞ் சென்றாகிலும் உண்மையைத் தெளிந்தா யில்லை. உலகத்திலே மூங்கிலையொத்த மாதர்களினது காம மயக் கத்தில் தோய்ந்து முழுகிப் பேய்போல விழிக்கின்றாய். உனக்கு என்ன பயித்தியம்?

(வி-ரை) சாத்திரங்களை யாய்தல் அபரஞானம். உண்மை விளங்கப்பெறுதல் பரஞானம். உண்மை - என்றும் விகாரம் எய் தாது ஒரு பெற்றித்தாயுள்ள பரம்பொருள். கற்றல் கேட்டல் இல்லா அறிவீனர்கட்கு அறிவுகொளுத்தியவாரும். "கற்றிலேன் கலைகள் ஞானம் கற்றவர் தங்க ளோடும் - உற்றிலேன்" என்றார் அப்பரும். 94

அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோபங் கயன்வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாறொக்கு மென்றினஞ் சார்ந்திலரே.

(பொ-ரை) உலகத்தில் திருத்தொண்டர்களின் நேசமும், சிவபூசையில் விருப்பமும், பக்தியும் அல்லாமல் வேறு பிரயோசன மளிக்கக்கூடிய பொருளுண்டோ? பிரமன் படைத்த குடும்பமாகிய பந்துக்களும் மனைவியும் வாழ்க்கையுங் குயவனாற் செய்யப்பட்ட மட் கலங்கள் தடியினால் அடிபட்ட விதத்தை யொக்குமென்று எண்ணி அடியவர் திருக்கூட்டத்திற் சேரவில்லை (உலகத்தார்).

(வி-ரை) அடியார்-திருவருளில் பொருந்தியிருப்பவர். அடி-திரு வருள். "நல்லா ரிணக்கமும்" என்னுஞ் செய்யுளைப்பார்க்க. 95

ஆங்காரப் பொக்கிசங் கோபக் களஞ்சிய மாணவந்தான்
நீங்கா வரண்மனை பொய்வைத்த கூடம்வின் ணீடிவளர்
தேங்கார் பெருமதிற் காம விலாசமித் தேகங்கந்தல்
பாங்கா யுனைப்பணிந் தெப்படி ஞானம் பலிப்பதுவே.

(பொ-ரை) இவ்வுடலாகிய கந்தல் ஆங்காரத்திற்குப் பொக்கிஷம்; கோபத்திற்குக் களஞ்சியம்; ஆணவம் விட்டகலாத அரண்மனை; பொய் நிறைந்த கூடம்; ஆகாயமளவு ஓங்கி வளர்ந்து நிறைவு பொருந்திய பெரிய மதில் சூழ்ந்த காமவிலாசம் (ஆகையால்) தேவரீரை முறைப்படி வணங்கி எவ்விதம் ஞானம் பெறுவது?

(வி-ரை) கந்தல் - நவதுவாரம். ஆங்காரம் - முனைப்பு. பொக்கிஷம் - திரவியசாலை. ஆங்காரம் நிறைந்த இடம் என்றபடி. களஞ்சியம் - பண்டகசாலை. கூடம் - அறை; வீடு. விலாசம் - விளையாட்டுத் தலம். அகங்காரம் கோபம் முதலிய தீக்குணங்கள் உள்ளமட்டும் ஞானங் கைகூடாதென்பது. 96

ஒழியாப் பிறவி யெடுத்தேங்கி யேங்கி யுழன்றநெஞ்சே
அழியாப் பதவிக் கவுடதங் கேட்டி யநாதியனை
மழுமான் கரத்தனை மால்விடை யானை மனத்திலுன்னி
விழியாற் புனல்சிந்தி விம்மி யழுநன்மை வேண்டுமென்றே.

(பொ-ரை) நீங்காத பிறவி யெடுத்து ஏக்கமுற்று ஏக்கமுற்று அலைந்த மனமே! என்றும் அழியாத மோட்ச வீட்டிற்கு மருந்து கேட்பாயாக. உற்பத்தி யில்லாதவனும், மழு மான் ஏந்திய திருக்கரங்களை யுடையவனும், திருமாலாகிய இடபத்தை யுடையவனுமாகிய சிவபெருமானை மனதால் நினைத்துக் கண்ணால் நீர் ஒழுக்கி ஞானம் வேண்டுமென்று தேம்பி யழுவாயாக.

(வி-ரை) பிறவிக்குக் காரணம் 'மனததினின் றெழுமெண்ணமாகலான் "ஒழியா * * * நெஞ்சே" என்று விளித்தார். அழியாப்பதவி - சாயுச்சியம். அநாதியனை - ஆதியில்லாதவனை. பிறவியை யொழிக்கவேண்டுமாயின் பிறவியில்லாக் கடவுளையடைய வேண்டுமென்பார் "அநாதியனை" என்றார். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்றார் திருவள்ளுவ

ரும். பிறப்பில்லாக் கடவுள் சிவபிரான் என்பார் "மழுமான் கரத்தனை மால்விடையானை" என்றார். பிறவிக்கு வித்தாகிய வினைப்பு முதலியவற்றிற்குக் காரணமா யிருப்பது மனமாகலானும், அம் மனம் எவ்வெப் பொருளைப்பற்றிச் செல்கிறதோ அவ்வப்பொருளை நுகர்வதற்கேற்ற பிறவிகளுண்டாமாகலானும், அது பிறப்பிறப் பில்லாக் கடவுளைத் தியானஞ்செய்யுமாயின் பிறப்பிறப்புத் துக்கங்க ளொழியுமாகலானும் "மனததிலுன்னி" என்றார். மனம் எவ்வழியோ அவவழியே வாக்கு காயமும் நிறகுமென்க; விழி யாற் புனல் சிந்தல் விம்மியழல் முதலியன அன்பர்களின் புறக் குறிப்புக்கள். "மெய்தா னரும்பி விதிர்விதிர்த துன்விரை யார் கழற்கென், கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி யுள்ளம், பொய்தான் தவிர்த்துன்னைப் போற்றி சயசய போற்றி யென்னுங், கைதா னெகிழவிடே னுடையா யென்னைக் கண்டு கொள்ளே" "அழுதா லுன்னைப் பெறலாமே" "அழுமதுவே யன்றி மற்றென் செய்கேன்"—திருவாசகம். ஈண்டு நன்மை யென்றது பிறவாமையை.

97

நாய்க்கொரு சூலு மதற்கோர் மருத்துவ நாடிலுண்டோ
பேய்க்கொரு ஞானம் பிடிபடு மோபெருங் காஞ்சிரங்காய்
ஆக்குவ ரார தருந்துவ ராரது போலுடம்பு
தீக்கிரை யாவதலலாலேதுக் காமிதைச் செப்புமினே.

(பொ-ரை) நாயினுக்கு ஒரு கருப்பமும், அதற்கு ஒரு வைத்தியமுந் தேசத்திலுண்டோ? பேயினுக்கு ஒப்பற்ற ஞானம் பதியுமோ? பெரிய எட்டிக்காயை வளர்ப்பவர் யார்? அதனை யுண்பவர் யார்? (அதுபோல) உடலானது அக்கினிக்கு ஆகாரமாகுமன்றி வேறு எதற்குப் பிரயோசனப்படும்? சொல்லுங்கள்.

(வி-ரை) இத்திருப்பாடல், பததிரகிரியார் தம்மை வணங்கி நின்றபோது அவர்க்கு உடலினிழிவைச் செவியறிவுறுத்த அடி

கள் அருளிச்செய்ததென்ப. நாய் கருப்பமுற எவரும் வைத்தி யஞ் செய்யார். அதுபோல மூவாசையென்னும் பேய்கொண்ட ஒருவனுக்கு மெய்ஞ்ஞானேபதேசஞ் செய்ய எவரும் முந்தார். அறிவுடையோர் எட்டியை வளர்க்கவுமாட்டார்; அதனைத் தின்ன வும் மாட்டார். அதுபோல அறிஞர் உடலையும் ஓம்பார்; அதனுல் இன்பமும் நுகரார் என்றபடி. ஆக்குவார் என்பதற்குச் சமைப் பார் எனக் கூறுவோருமுளர். 98

கச்சிற் கிடக்குங் கனதனத் திற்கடைக் கண்கள்பட்டே
இச்சித் திருக்கின்ற வேழைநெஞ் சேயிம வான்பயந்த
பச்சைப் பசுங்கொடி யுண்ணு முலைபங்கர் பாதத்திலே
தைச்சுக் கிடமன மேயொரு காலுந் தவறில்லையே.

(பொ-ரை) கச்சுக்குள்ளே இருக்கின்ற பருத்த கொஙகை களின்மேல் கடைக்கண்ணேக்கஞ் செலுததி அவைகளையே விரும்பி யுள்ள அறிவில்லா மனமே! மலையரையன் பெற்ற மிகப் பசிய பூங்கொடிபோன்ற உண்ணுமுலை யம்மையாரை இடப்பாகத்தில் வைதருள்ளவராகிய சிவபிரானுடைய திருவடிகளிலே பதிந்திருப் பாயாக. நெஞ்சே! (அப்பொழுது) உனக்கு ஒருகாலுந் தவறுதல் உண்டாகாது.

(வி-ரை) கச்சு - முலைக்கட்டு. ஆடவர்களுக்குக் காமக் கிளர்ச் சியை யுண்டுபண்ணுவன கொங்கைகளாகலான் "கனதனத்தில்" என்ருர். பெண்கள் தனத்தில் கருத்துக்கொள்ளுவதால் ஞானம் விளங்காதாகலான் "ஏழை நெஞ்சே" என்ருர். "வேனில்வேண் மலர்க்கணைக்கும் வெண்ணகைச் செவ்வாய்க்கரிய, பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே" என்ருர் மாணிக்க வாசகரும். உண்ணுமுலை யென்ற குறிப்பால் "பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னியாவள்" என்ற திருவாக்கின் உண்மை தொனித்தல் காண்க. இறைவன் திருவடி இன்பக்கருவியாகலான்

"பாதத்திலே தைச்சுக்கிட" என்றார். "அன்புடைத் தொண்டர்க்கு அமுதருத்தி, இன்னல் களைவன இன்னம்ப ரான்றன் இணைய டியே" என்றார் திருநாவுக்கரசர். திருவடி-திருவருள். 99

மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வாழ்குருவுங்
கோனாகி யென்னைக் குடியேற்றிக் கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறிருந் தாலுநற் பேறிது பொய்யன்றுகாண்
ஆனாலு மிந்த வுடம்போ டிருப்ப தருவருப்பே.

(பொ-ரை) பெண்களின் கண்ணாகிய வலையினைத் தாண்டி ஏறி வந்தேன. நீர்நிழல்போல என்னுடன வாழுங் குருமூர்த்தியும் ஞானாசாரியராக எழுந்தருளித் திருவருள் விலாசத்திற் குடியேற்றிக் கொண்டான். இனி விளையுங்குற்றம் ஒன்றுமில்லை. உடலழிந்து போனாலும் பேறு; உலகத்திலிருந்தாலும் பேறு. இது பொய்யன்று. ஆனாலும் இந்தத் தேகத்தோடு கூடியிருப்பது அருவருக்கத் தக்கதே யாம்.

(வி-ரை) மான் ஆர்-மான்போன்ற. பிறவிக்கு வித்தாகிய பெண்ணாசையைக் கடந்தேன். குருவின் திருவருளையும் பெற்றேன். இனி வீடு அடைவதில் ஐயமில்லை. ஆனாலும் தேகமுள்ளமட்டுங் கர்மங் கட்டு ஏது உண்மையான் அதனை யொழிக்கவேண்டும் என்றபடி.

சற்றாகி னுந்தன்னை தானறி யாய்தன்னை யாய்ந்தவரை
உற்றா கினுமுரைக் கப்பொருந் தாயுனக் கானதில்லை
பற்றாய் குருவைப் பணியாய் பரத்தையர் பாலிற்சென்றேன்
பெற்றாய் மடநெஞ்ச மேயுன்னைப் போலில்லை பித்தனுமே.

(பொ-ரை) அறியாமையோடு கூடிய மனமே! கொஞ்சமாகிலும் உன்னை நீ உணராய்; தன்னையாராய்ந்து தெளிவடைந்தவரை அடைந்தாகிலும் அவர்கள் தங்கள் அனுபவங்களைச் சொல்ல (அத

னைக் கேட்க) ஒருப்படாய்; உனக்கு வேண்டிய உறுதி நிலையைக் கடைப்பிடிக்கமாட்டாய்; சற்குருவை வணங்காய் (இவைகளைச் செய்யாமல்) வேசையர்களிடஞ் சென்று என்ன பயன் அடைந்தாய்? உன்னைப்போலப் பிததன் இல்லை.

(வி-ரை) தன்னைத்தானறிதல்-தன்னைத் தேகமென்னும் அறிவு நீங்கி ஆன்மாவென்னும் அறிவு உதயமாதல். தன்னை யறியும் அறிவே தலைவனை யறியும் அறிவென்க. 101

உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூற்றையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகிலே னுயர்பொன் னெனவே
ஒளியிட்ட தாளிரண் டுள்ளே யிருத்துவ துண்மையென்று
வெளியிட் டடைத்துவைத் தேனினிமே லொன்றும் வேண்டிலனே.

(பொ-ரை) உளியினாற் செதுக்கப்பட்ட கல்லுருவையும், அழகமையச் செய்யப்பட்ட சாந்துருவையும், அழுக்கு நீங்கப், புளியிட்டுத்துலக்கிய செம்புருவையும் வணங்கமாட்டேன். பொன் போலப் பொலிகின்ற (இறைவன்) திருவடி யிரண்டையும் நெஞ்சினுள்ளே பதியவைப்பது உறுதி யென்று புறத்தே சொல்லி (அத் திருவடிகளை) உள்ளே நிறுத்திவைத்தேன். இனிமேல் ஒன்றையும் விரும்புவனல்லேன்.

(வி-ரை) ஒளியிட்ட தாளிரண்டு-இடகலை பிங்கலை என்பாருமுளர். ஆலயங்களில் கல்லினாலுஞ் சாந்தினாலுஞ் செம்பினாலுஞ் செய்யப்பட்ட உருவங்களையே பொருளாகக்கொண்டு வழிபடுவோர் அஞ்ஞானிகள். அவர்கள் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடக்க முயலாதவர்கள். அவ்வுருவங்களில் சாந்நித்தியமா யமர்ந்துள்ள மூர்த்தியை வழிபடுவதே ஞானத்துக் கேதுவாம் கல் மண் சாந்து செம்பு என்னும் எண்ணமுடையார்க்குக் கடவுளெண்ணந் தோன்றாது. கடவுளெண்ணம் உடையார்க்குக் கல் மண் சாந்து செம்பு என்னும் எண்ணந் தோன்றாது. "மாத்தை மறைத்

தது மதாம யானை, மரத்தில் மறைந்தது மாமத யானை, பரத்தை மறைத்தது பார்முதல்பூதம், பரத்தில்மறைந்தது பார்முதல்பூதமே" "பொன்னைமறைத்தது பொன்னணி பூடணம், பொன்னில் மறைந்தன பொன்னணிபூடணம், தன்னைமறைத்தன தன்கரணங்களும், தன்னில்மறைந்தன தன்கரணங்களே" எனவரூஉந் திருமூலர் திருவாக்கை உய்த்துணர்க. இறைவனுக்குரிய அட்டமூர்த்தங்களுள் விசேடித்தது ஆன்மமூர்த்த மென்பது வேதாந்தக் கொள்கை. ஆன்மமூர்த்தத்தை வழிபட்டுச் சமாதிகூடுவோரே அத்துவித முத்தி யெய்தப்பெறுவர். இதுபற்றியே ஞானிகள் இறைவனை ஆன்மமூர்த்தமாக வழிபடுவார்கள். இதுவே அகப்பூசை யென்னப்படும். அடிகள் ஞானசமாதி நிஷ்டை கைவந்தவராகலான் "தாளிரண்டு உள்ளே இருத்துவ துண்மையென்று" என்றார். "மாயனை நாடி மனநெடுந் தேரேறிப், போயின நாடறி யாதே புலம்புவர், தேயமு நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக், காயமிந் நாட்டிடைக் கண்டுகொண் டேனே" என்றார் திருமூலர். 102

* கல்லா லெறியுண்டுங் காலா லுதையுண்டுங் காளைகையில்
வில்லா லடியுண்டு முன்னாள் விடமுண்டு மேவிளித்துப்
பல்லாற் புரமெரி யேகம்ப வாணர் பதாம்புயத்தின்
சொல்லார் செவியினிற் கேளா திருந்ததென் றொல்வினையே.

(பொ-ரை) கல்லால் அடிபட்டும், காலால் உதைப்பட்டும், ஒரு காளை கையிலேயுள்ள வில்லால் அடிபட்டும், பூர்வத்தில் விஷத்தை யுண்டும், பல் வெளியிற்றோன்ற புன்னகையால் மூன்று புரங்களையும் எரித்த ஏகாம்பரநாதருடைய திருவடித்தாமரைகளின் தோத்திரங்களை அருமையான காதுகளில் கேளாதிருந்ததற்குக் காரணம் என் பழவினையேயாம்.

* இப்பா சில பிரதிகளிலில்லை.

(வி-ரை) கல்லெறிந்தவர் - சாக்கியநாயனார். காலாலுதைத்த வர்-கண்ணப்பநாயனார். காளை - அருச்சுனன். விடமுண்டல்-ஆன் மாக்களின் பாசத்தை ஏற்றல். திரிபுரமெரித்தல்-மும்மலமழித்தல். விடமுண்ணல் திரிபுரமெரித்தல் முதலியன ஒவ்வோர் ஆன்மாவி னிடத்தும் நிகழ்வன. "ஆலமுண்டாய் அமுதுண்ணக்கடைய வனே" என்று மாணிக்கவாசகரும், "அப்பணி செஞ்சடை ஆதி புராதன்-முப்புரம் எரித்தனன் என்பர்கள் மூடர்கள்-முப்புரமாவது மும்மலகாரியம்-அப்புரம் எய்தமையார் அறிவாரே" என்று திரு மூலரும் கூறியிருத்தல் காண்க. 103

* ஒருநான்கு சாதிக்கு மூவகைத் தேவர்க்கு மும்பருக்குந்
திருநாளுந் தீர்த்தமும் வேறுள வோதாவத திசைமுகனுல
வருநாளில் வந்திடு மந்தக் கண்ணுளன் வகுப்பொழியக்
குருநாத னாணைகண் டீர்பின்னை யேதிக் குவலயத்தே.

(பொ-ரை) நால்வகை வருணததார்க்கும், பிர்மா விஷ்ணு ருத்திரர் என்னும் மூன்றுவகைத தேவர்கட்கும், மற்ற வானவர் கட்கும் திருவிழாவும் தீர்த்தமும் வேறு உண்டோ? நான்முகனுல் (சிருஷ்டிக்கப்படும் யாவும்) கூடுகின்ற காலததிற் கூடும். அவன் சிருஷ்டி யொழியுமாயின அதற்குமேல் சிவகுருநாதன் கட்டளை வழி யாவும் நடைபெறும். இப்பூமியில் வேறு என்ன இருக்கிறது?

(வி-ரை) நால்வகைச்சாதி - பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் சூத்திரர். மூவகைத்தேவர்-பிர்மா விஷ்ணு ருத்திரர். உம்பர்-தெய்வ லோகத்தார். பிரம சிருஷ்டி பிரகிருதிமட்டு மாகலானும், அதறகுமேல் அவன்செயலின்றி எல்லாஞ் சிவன்செயலாகலானும "அநதக கண்ணு ளன் வகுப்பொழியக் குருநாதனாணை" என்றார். 104

* இப்பா சில பிரதிகளிலில்லை.



பட்டினத்தடிகள் அன்னையார்க்குத் தகனகிரியை நிகழ்த்தல்

## தாயாருக்குத்
## தகனகிரியை செய்கையிற் பாடியது



வெண்பா

ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பிற் காண்பே னினி.

(பொ-ரை) பத்துமாதங்களாகச் சுமந்து, உடல் முழுவதும் வருந்தி யீன்று, ஆண்குழந்தை யென்ற உடனே விருப்பத்தோடு எடுத்து, அழகிய இரண்டு கைத்தலங்களில் ஏந்திப் பொற்கலசம் போன்ற தனங்களால் பாலைக் கொடுத்தவளாகிய அன்னையை இனி எந்தப் பிறப்பிற் காணப்போகிறேன்?

(வி-ரை) பையுள் என்றும் பாடம். முலைதால் - பாலூட்டல் பிறந்து ஆண்மகவெனக் கேட்டதும் பிரசவநோயையுங் கவனியாது குழந்தையை அன்பாக எடுத்தணைப்பது தாய்மார் இயல்பாகலான் "பையலென்ற போதே பரிந்தெடுத்து" என்றார். கனகம்-பொன். தாயின் பெருமை அறிவுறுத்தியவாறு. 1

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
அந்திபக லாச்சிவனை யாதரித்துத—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழன்மூட்டு வேன்.

(பொ-ரை) முன்னம் இரவும் பகலும் சிவபெருமானைப் போற்றித் தவஞ்செய்து பத்துமாதஞ் சுமந்து, வயிறுசரிய வருந்தித

தாங்கி யீன்ற அன்னையாருக்கோ எரியும்படி அக்கினி மூட்டு வேன்?

(வி-ரை) "மூந்நூறு நாட்சுமந்தே அந்திபகலாச் சிவனை ஆத ரித்தே" எனக் கொள்ளலுமாம். பன்னாள் புத்திரப் பேறின்றிச் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து தம்மை யீன்றமையான் "முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்து" என்றார். முந் நூறு நாளளவும் என்றும் பாடம். முந்நூறு நாள் என்றது நாட் பெருக்கைக் குறிக்கு முகத்தான் தாயின் அன்பைக் குறிப்பிட்ட வாறும். தவங்கிடந்து பெறும்பிள்ளை நல்லொழுக்க முடையதா யிருக்கும். காம இச்சையால் பிறப்பது மிருக சுபாவமுடையதா யிருக்கும். மணவினை முடிந்த சிறிது காலத்துக்குள் கருத்தரித்த லாகாதென்றும், பன்னெடுங்காலங்கடந்து நாயகியின் மனமும் நாய கன் மனமும் பிள்ளைப்பேறு கருதிச் சிவபிரான் தியானத்தில் பதிந்து கிடக்கும்போது கருத்தரித்தல் நலமென்றும் பெரியோர் கூறுப. 2

வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன்.

(பொ-ரை) எணையிலும், தொட்டிலிலும், மாரிலும், தோளி லும், கட்டிலிலும் என்னைக் கிளர்தி விரும்பி முறறிலும் இடுப்பில் வைத்துப் பாதுகாத்துச் சிறப்புச்செய்த அன்னையையோ கட்டை யில் வைத்து நெருப்பிடுவேன்?

(வி-ரை) சிறகு - பக்கம். குழந்தையின் அழுகை தணிவிக்கத் தாய் குழந்தையைப் பலபக்கங்களில் வைப்பது வழக்கம். 3

நொந்து சுமந்துபெற்று நோவாம லேந்திமுலை
தந்து வளர்த்தெடுத்த தாயாமே—அந்திபகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டு வேன்.

(பொ-ரை) வருந்திப் பத்துமாதஞ் சுமந்து ஈன்று வருந்தாமல் என்னை யேந்திப் பாலூட்டி வளர்த்துக் காத்துத் தனியே விடுத்துத் தங்கியிராமல் இரவும் பகலும் கையிலே வைத்துக் காப்பாற்றிய அன்னைக்கோ (அவள்) தேகத்தில் நெருப்பை மூட்டுவேன்?.

(வி-ரை) முன்னறிதெய்வம் தாயே. பின்னறிதெய்வமே கடவுள். "ஈன்றாளில் என்ன கடவுள்" என்றார் பெரியோரும். ஆண்டவன் முதல் முதல் தாயாகவே உயிர்களை ஈனுகிறான். அவன் முதல் காட்டும் வடிவம் தாய் வடிவேயாகும். அத்தகைத் தாயை மறப்பது எத்தகைப் பாவமென்று ஈண்டுச் சொல்லவேண்டுவதில்லை. பட்டினத்தார் தாயின் மாண்புணர்ந்த பெரியாராகலான் "தாய்தனக்கோ" என்றார். 4

அரிசியோ நானிடுவே னாத்தா டனக்கு
வரிசையிட்டுப் பார்த்துமகி ழாமல—உருசியுள்ள
தேனே யமிர்தமே செல்வத் திரவியபூ
மானே யெனவழைத்த வாய்க்கு.

(பொ-ரை) எனது அன்னைக்கு வரிசை வைத்துக் கண்டு மகிழாமல், சுவையுள்ள தேனே! அமிர்தமே! செல்வப்பொருளுடைய அரசனே! என்று என்னைக் கூப்பிட்ட வாய்க்கு அரிசியையோ நான் இடுவேன். 5

அள்ளி யிடுவ தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல்—மெள்ள

முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு.

(பொ-ரை) மெதுவாக முகத்தின்மேல் முகம் வைத்து முதத மிட்டு என்னுடைய மகனே என்று கூப்பிட்ட வாயில் அரிசியையோ அள்ளியிடுவது? அன்னை சிரசின்மேல் கூசாமல் கொள்ளியையும் இடுவேனோ?.

(வி-ரை) அருமையாகப் பெற்றுவளர்த்துச் சீராட்டி இனிய மொழிகளால் அழைத்துத் துன்பம் அணுகவொட்டாதபடி என்னைப் போற்றிய அன்னையார்க்குக் கைம்மாருக நெருப்பிடவும், அரிசி யிடவும், கொள்ளிவைக்கவும் நேர்ந்ததே என்றிரங்கியவாறும். மேற் போந்த செய்யுள்களிலுள்ள ஓகாரங்களை எதிர்மறைப்பொருளாக் கொள்வோருமுளர். 6

கலிவிருத்தம்

முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்
அன்னை யிட்டதீ யடிவ யிற்றிலே
யானு மிட்டதீ மூள்க மூள்கவே.

(பொ-ரை) முன்காலத்தில் (சிவபிரான்) இட்ட நெருப்பு திரி புரத்தில் (மூண்டது); பின்காலததில் (அநுமான்) இட்டநெருப்பு தெற்கேயுள்ள இலங்காபுரியில் (மூண்டது); என் தாயார் இட்ட நெருப்பு அடிவயிற்றில் (எரிகிறது); (அதுபோல) யானும் இட்ட நெருப்பு மூண்டெரியக் கடவது மூண்டெரியக் கடவது.

(வி-ரை) இச்செய்யுள் அன்னையார் தேகம் வெந்து நீருக வாழை மட்டைகள் எரியும்படி அருளிச் செய்தது. அன்னையார் பிரிவின் துககம் அளவிடற்பால தொன்றன்றென்பார் "அன்னை யிட்டதீ அடிவயிற்றிலே" என்ருர். 7

வெண்பா

வேகுதே தீயதனில் வெந்துபொடி சாம்பல்
ஆகுதே பாவியேன யையகோ—மாகக்
குருவி பறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை.

(பொ-ரை) ஆகாயத்திற் பறக்குங் குருவிகள் என் எதிரே பறவாதபடி என்னைச் சீராட்டி அன்புடன் போற்றி வளர்த்துக் காத்த கைகள் நெருப்பில் வேகின்றனவே. வெந்து சாம்பற் பொடியாகின்றனவே. ஐயோ! யான் பாவியாய் நின்றேன்.

(வி-ரை) சில பறவைகள் நிழலால் குழந்தைகட்கு நோயுண்டாகலின் "மாகக்குருவி பறவாமல் கோதாட்டி" என்றார். கருதி - போற்றி; கருத்தாக என்றபடி. என்னைப் போற்றி வளர்த்த கைகள் வேகின்றதைக் கண்டும் உயிர் பெற்றிருக்கின்றே னாதலால் நான் பாவியானேன் என்றபடி. என்னை வளர்த்த கைகள் வெந்து நீறாவதைக் கண்டு நிற்பதோ யான் அன்னையாருக்குச் செலுத்தவேண்டிய கைம்மாறு என்றிரங்கியவாறாம். 8

வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ வென்னை மறந்தாளோ—சந்ததமும்
உன்னையே நோக்கி யுகந்து வரங்கிடந்தென்
தன்னையே யீன்றெடுத்த தாய்.

(பொ-ரை) திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள சின்மயனே! எப்பொழுதும் தேவரீரையே நாடி விரும்பி வரம் வேண்டி நின்று என்னைப் பெற்றெடுத்த அன்னை வெந்துவிட்டாளோ? தேவரீர் திருவடியடைந்தாளோ? என்னை மறந்துவிட்டாளோ?

(வி-ரை) தவப்பேற்றால் தம்மை ஈன்றதாய் என்றவாறு காமவிச்சையால் தம்மைப் பெறவில்லை என்றபடி. ஒருகணமும் என்னை

மறவாத அன்னை என்னை மறந்தாளோ என்றிரங்குகிறார். நின் பதத்தில் வந்தால் என்னை மறக்கக்கூடும். என்னை? நீ என்னினுமினியன் ஆகலின். சோணகிரி - சிவந்தமலை; அக்கினிமலை; அண்ணுமலை. 9

வீற்றிருந்தா ளன்னை வீதி தனிலிருந்தாள்
நேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள்—பாற்றெளிக்க
எல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம்.

(பொ-ரை) என் தாய் திடகாத்திரமா யிருந்தாள்; தெருவீ லிருந்தாள்; நேற்று உயிரோடிருந்தாள்; இன்று வெந்து சாம்பராய் விட்டாள்; என் என்று மனவருத்தமடையாமல் எல்லாரும் பால் தெளிக்க வந்து சேருங்கள். எல்லாஞ் சிவமயம் ஆகும்.

(வி-ரை) நேற்று நன்றாக இருந்தாள். தெருவில் உலாவி யிருந்தாள். ஐயோ! இன்று இறந்துவிட்டாளே எனக் கூறிக் கதறிப் புலம்புதல் உலக இயற்கை. எல்லாஞ் சிவன் செயல் சிவன் மயம் எனக் கொள்வது ஞானிகளியற்கை. 10

---

## திருவிடைமருதூர்

மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேடல்
என்று விடியுமெனக் கென்கோவே—நன்றி
கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதாவுன் சந்நிதிக்கே வந்து.

(பொ-ரை) என்னுடைய தலைவனே! தருமநெறியைக் கடைப் பிடித்தொழுகாதவராகிய அரக்கர்களுடைய மூன்று புரங்களையும் மிகுந்த நெருப்பினால் நீறாக்கிய மருதப்பிரானே! தேவரீர் திருச்

சந்நிதியிலே வந்தும், உணவை மென்று உட்கொண்டு தாகவிடாய் தணிக்க ஜலந்தேடுந் தொழில் எனக்கு என்று ஒழியும்?

(வி-ரை) உலகத்தில் மக்கள் பலதுறைகளில் நின்று உழைப் பது வயிற்றின் பொருட்டேயாம். "சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே" என்று பிறண்டும் சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்கள். வயிற்றின்பொருட்டுச் செய்யப்படும் இலௌகி கத் தொழில்கள் திருவருள் வழிக்கு முட்டாகிப் பிறவிக்கும் வித் தாகின்றன. அதுபற்றியே பெரியோர் பசியை யொழிக்கத் தொடக் கத்தில் பயிற்சி செய்வர். ஈண்டுத் திருவருளமுதங் கைவரப் பெற் றும் பசியின் கொடுமை யிடர்ப்படுத்துகிறதேயென இரங்கியவாறும்.

## திருவொற்றியூர்

கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதாம்
அண்டத்தைப் போல வழகியதாந்—தொண்டர்
உடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு.

(பொ-ரை) மேம்பட்ட புகழினை வாய்ந்த திருவொற்றியூர் சமுத்திரக்கரையிலே நிற்கின்ற கரும்பு; கண்டம் நீலநிறமுடைய தாம்; திரிநேத்திரங்களையுடையதாம்; ஆகாயத்தையொத்த அழகு பொருந்தியதாம்; அடியவர்கள் திருமேனி யுருகும்படி யினிப்ப தாம்.

(வி-ரை) ஆகாய அழகு உருவவழிபாடுடையார்க்குப் புலனு காது. வடிவிலா ஆகாயம் அகக்கண்ணிற்குப் புலனாகும்போது ஆண் டவன் கண்டங்கருமையும், அவன் கண் மூன்றும் தோன்றும். இது யோகநிலை. அந்நிலையில் உடலுருக இன்பந்தோன்றும். அதைக் கரும்பு என்றார் அடிகள். "முக்கட் செங்கரும்பே" என்றார் தாயுமா

ஞரும். "மனத்தமுதாஞ் சங்கரனை" என்ருர் மாணிக்கவாசகனுர். தேகாத்மபுத்தி தேயத்தேய ஆனந்தம் பெருகும் என்பார் "உடலுருகத் தித்திக்கும்" என்ருர். 12

ஓடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்துந்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவில்
போவா ரடியிற் பொடி.

(பொ-ரை) துவாரம் விழுந்து சீயொழுகும் நவவாசல்களுள்ள புண்ணுக்கு உபயோகிக்கும் ஔடதத்தை யான் தெரிந்துகொண்டேன். அது விடமுண்ட தேவதேவனுகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவொற்றியூர் வீதியிலே செல்வோர்களின் பாதததிலேயுள்ள தூளியாம்.

(வி-ரை) ஓடு-பருவமாம். ஒன்பதுவாய்-நவதுவாரம்; கண்ணிரண்டு, காதிரண்டு, மூக்குத்துவாரம் இரண்டு, வாயொன்று, குதம் ஒன்று, குறியொன்று. 'ஒண்ணுளே யொன்பது வாசல்வைத்தாய்' என்ருர் அப்பர் சுவாமிகளும். புண்ணென்றது-உடலை. புண்ணுக்கு மருந்து அடியவர் திருவடித்துகள் என்றபடி. அடியவர் திருவடித்துகளைப் பிறவிப்பிணிக்கு மருந்தாகக் கொள்வோர் ஆணவமற்றவராவர். திருவொற்றியூரிற் சஞ்சரிப்போர் சீவன்முததராகலான் "திருவொற்றி யூர்த்தெருவிற், போவா ரடியிற் பொடி" என்ருர். மேற் செய்யுளைக் காண்க. 13

வாவியெல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவணங்க ளெல்லாங் கணநாதர்—பூவுலகில்
ஈது சிவலோக மென்றன்றே மெய்த்தவத்தோர்
ஓதுந் திருவொற்றி யூர்.

(பொ-ரை) உண்மைத் தவமுடையார் உலகத்திலே இது சிவலோகம் என்று பலமுறை புகழும் திருவொற்றியூர்க் கண்ணுள்ள தடாகங்களெல்லாம் புண்ணியத்தீர்த்தங்களாம். மணல் முற்றிலும் விபூதியாம். சோலைகள் யாவுஞ் சிவகணநாதர்களாம்.

(வி - ரை) இது சிவோகம் பாவனை கைவரப் பெற்றோர் கூற்று. 14

## திருவாரூர்

ஆரூரா ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றாரூர்க டோறு முழலுவீர்—நேரே
உளக்குறிப்பை நாடாத வூமர்கா ணீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்.

(பொ-ரை) திருவாரூர்ப் பெருமான் இவ்விடத்தில் வீற்றிருப்ப அவ்வூரில் திருவிழா என்று பற்பல ஊர்கடோறும் அலைந்து திரிகின்றவர்களே! நேராக உள்ளக்குறிப்பைத் தெளியாத ஊமைகளே! நீங்கள் தீபமிருக்க (அதனை விடுத்து வெறுந்) தீயை நாடுபவர்கள்.

(வி-ரை) அகத்திலுள்ள ஆரூரைக் காணாது புறத்தேயுள்ள தலங்களைத் தரிசிக்கச் செல்வது அறியாமை யென்றபடி. 15

எருவாய்க் கிருவிரன் மேலேறுண் டிருக்குங்
கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய்—திருவாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்
நீரோடும் தாரைக்கே நீ.

(பொ-ரை) மலத்துவாரத்துக்கு இரண்டங்குலத்தின் மேலேயுள்ள புழுக்கூடாகிய கருக்குழிக்கோ வருந்தினாய்? திருவாரூர் தேரோடுந் தெருவிலே ஜலம் பாயுஞ் சிறுவழியின் பொருட்டு நீ மாண்டு கிடக்கின்றாய் (அந்தோ இஃதென்ன அறியாமை.)

(வி-ரை) தன்னடியவன் ஒருவன் காம விகாரத்தால் எண்ணெய் ஸ்நானஞ்செய்த நாளில் மனைவியுடன் கூடி மாண்டனன். அவன் உயிர் பெற்றெழப் பாடிய பா இது. திருவாரூர் வீதியைச் சிறப்பித்தவாறும். திருவாரூர் வீதி யென்றது சுழுமுனை நாடியை. திருவாரூர் வீதியிலிருந்துஞ் சிற்றின்பத் தழுந்திக் கெட்டனையே என்றிரங்கியபடி. 16

## திருக்காளத்தி

பொய்யை யொழியாய் புலாலைவிடாய் காளத்தி
ஐயரை யெண்ணா யறஞ்செய்யாய்—வெய்ய
சினமே யொழியாய் திருவெழுத் தைந்தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு.

(பொ-ரை) நெஞ்சமே! பொய் பேசுதலை விடமாட்டாய்; மாமிச பக்ஷணத்தை விலக்கமாட்டாய்; திருக்காளத்தியப்பரைச் சிந்தனை செய்யமாட்டாய்; தருமஞ் செய்யமாட்டாய்; கொடிய கோபத்தை நீக்கமாட்டாய்; ஸ்ரீ பஞ்சாட்சரத்தை யோதமாட்டாய்; உனக்கென்ன பெருமை யுண்டாகப்போகிறது?

(வி-ரை) பொய்யும் புலாலும் சினமும் மனிதன் ஞானநிலையைக்கெடுப்பன. சிவத்தியானமும் அறமும் பஞ்சாட்சரமும் ஞானநிலையை விளங்கச் செய்வன. அல்லன செய்யாது நல்லன செய்வது மனதுக்கு மாண்பு என்றபடி. 17

## திருக்காஞ்சி

எத்தனையூ ரெத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்கள்
எத்தனைபே ரிட்டழைக்க வேனென்றேன்—நித்தம்
எனக்குக் களையாற்று மேகம்பா கம்பா
உனக்குத் திருவிளையாட் டோ.

(பொ-ரை) ஏகாம்பரநாதனே! கம்பனே! எத்தனை ஊர்கள்? எத்தனைவீடுகள்? பெற்றவர்கள் எத்தனை அன்னைமார்கள்? எத்தனைப் பெயர்களை வைத்துக் கூப்பிட (அவைகட்கெல்லாம்) ஏன் ஏன் என்று நாடோறும் பதிலுரைத்தேன். (இதனால்) எனக்கு உண்டாகும் இளைப்பை யொழிப்பாய். நான் துன்புறுவது தேவரீருக்குத் திருவிளையாட்டாக விருக்கிறதுபோலும்!

(வி-ரை) பல ஊர்களிலும் பல வீடுகளிலும் பல தாய்மார்கள் வயிற்றிலும் பிறந்து பல பெயர்களைத் தாங்கிக் களைத்துவிட்டேன். பிறந்தது சாலும்; இனிப் பிறக்கவாற்றலும் இல்லை. திருவருள் செய்யாய் என்றிரந்தபடி. 18

## திருவிருப்பையூர்

மாதா வுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்து விட்டானே—நாதா
இருப்பையூர் வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையூர் வாராமற் கா.

(பொ-ரை) கடவுளே! திருவிருப்பையூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! (என்னைப் பலமுறையும் பெற்றுப் பெற்று) தாயாரும் தேகந் தளரப் பெற்றாள். கொடிய வினையையுடையனாகிய யானுங் கால் ஓயப் பெற்றேன். பிரமனும் (சிருஷ்டித்துச் சிருஷ்டித்துக்) கைச்சலிக்கப்பெற்றான். இனி யொரு தாயின் வயிற்றிற் பிறவாதபடி காத்தருள்க.

(வி-ரை) "இப்பிறவி நீக்கி யினியொரு காயத்திற் புக்குப் பிறவாத போம்வழி தேடுமின்" என்றார் திருமூலரும். 19

## திருக்காரோணம்

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா—மெத்தப்

பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
இசிக்குதையா காரோண ரே.

(பொ-ரை) யானைமுதல் எறும்பீறாக உள்ள எல்லா உயிர்களை யுந் திருவுள முவந்து ரட்சித்துவரும் பெருமானே! திருக்காரோணக் கடவுளே! மிகவும் பசிக்கின்றது ஐயா! பாழானவயிற்றைப் பிடித்து இழுக்கின்றது ஐயா! (என் செய்வேன்.)

(வி-ரை) யானைமுதல் எறும்பீறாக உள்ள உயிர்களுக்கெல்லாம் ஆண்டவன் அமுதளித்துக் காத்துவரும் உண்மை காண்பவர் பசி வரும்போது ஆண்டவனை நோக்கியே முறையிடுவர். இறைவ னுண்மையில் ஐயுறுவோர் பசியை ஒழிக்கும்பொருட்டுச் செல்வ ரிடஞ் சென்று யாசிப்பர். இவர் ஆண்டவனிடத்து அன்பில்லாத வர். "கருப்பினுள் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும் விருப் புற் றமுதளிக்கு மெய்யன்" என்றார் ஔவையார். தேசிகன்-ஆசா ரியன்; பெரியன். 20

## திருக்குற்றாலம்

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

(பொ-ரை) யமன் வருவதற்கு முன்னே, கண்பார்வை கெடுவ தற்கு முன்னே, பாலுண்ட கடைவாய்ப் பல் விழுவதற்கு முன்னே, பந்துக்கள் மேலே விழுந்து அழுவதற்கு முன்னே ஊரவர்கள் சுடுவதற்கு முன்னே (மனமே) திருக்குற்றாலத்துக் கடவுளையே தோத்திரஞ் செய்வாயாக.

(வி-ரை) புலன்கள் கெட்டபோதும் பின்னைநேரும் யமவாதனை யாலும் கடவுளைச் சிந்திக்க முடியாதாகலான், "காலன் வரு முன்னே ... ... ... குற்றாலத தானையே கூறு" என்றார். 21

## திருவையாறு

மண்ணுந் தணலாற வானும் புகையாற
எண்ணரிய தாயு மிளைப்பாறப்—பண்ணுமயன்
கையா றவுமடியேன் காலாற வுங்கண்பார்
ஐயா திருவை யாறு.

(பொ-ரை) ஐயனே! திருவையாற்றில் எழுந்தருளியுள்ள பெருமானே! பூமியும் உஷ்ணமடங்கவும், ஆகாயமும் புகையடங்கவும், அளவிறந்த தாய்மார்களும் களைப்பாறவும், சிருஷ்டிக்கும் பிரமன் கை ஓயவும், சிறியேன் காலாறவும் கடைக்கண் நோக்கி யருள்க.

(வி-ரை) மண்தணலாறல்-கொளுததிய பூமி நெருப்பு அடங்கல் வான்புகையாறல் - கொளுத்துங்காலத்தில் ஆகாயத்தை நோக்கிச் செல்லும் புகை அடங்கல். பிற வெளிப்படை. 22

## சிதம்பரம்

சிற்றம் பலமுஞ் சிவனு மருகிருக்க
வெற்றம் பலந்தேடி விட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சங்
கறந்திடத்தை நாடுதே கண்.

(பொ-ரை) சிதம்பரமும் சிவபெருமானும் சமீபத்திலே யிருக்க நாம் ஒன்றுமில்லாச் சூந்யத்தைத் தேடிக்கொண்டோம். அறியாமையை யுடைய மடநெஞ்சமானது (நாம்) ஜனனஞ் செய்த தானத்தை நாடுகிறது. கண்ணானது (நாம்) பால் உண்ட தனத்தை விரும்புகிறது.

(வி-ரை) சிற்றம்பல மென்றது - இருதய கமலத்தை. சிவன் என்றது இருதய கமலததில் வீற்றிருந்தருளும் பரமான்மாவை.

இவை யிரண்டுங் காயத்துள்ளிருப்பதுவும் அவைகளை வேறிடத்தி லிருப்பதாகக் கருதுவது அறியாமை யென்பார் "சிற்றம்பலமுஞ் சிவனும் அருகிருக்க, வெற்றம் பலந்தேடி விட்டோமே" என்றார். பிறந்த இடம்-அல்குல், கறந்த இடம்-தனம், எல்லா மாதர்களையுந் தாய்போலக் கருதுதல் வேண்டுமென்றபடி. 23

## பொது

தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு—நாடிநீ
என்னை நினைத்தா லிடுப்பி லுதைப்பேனுன்
உன்னை நினைத்தா லுதை.

(பொ-ரை) இதழ்விரிந்த மலர்மாலையைச் சூடிய கூந்தலையும் மயில்போன்ற சாயலையும் உடையமாதே! உன்னை இப்பொழுது தேடினவர் சென்று விட்டார்; தெளிவாயிரு; நீ என்னை விரும்பி நினைத்தால் உன் இடுப்பில் உதைப்பேன்; நான் உன்னை நினைத்தால் நீ என்னை உதை.

(வி-ரை) சீவன்முத்தர்க்குங் காமவிச்சை ஒவ்வொருவேளை எழுதல் இயல்பு. அவ்வேளையில் அதன்கண் அவர்படிந்து பின்னை அதை வெறுப்பர். சுவாமிகள் தம்பாலெழுந்த எண்ணத்தையும், அதை யெழுப்பியதையும் உருவகப்படுததி வெறுத்துக் கூறியுள்ளது கவனிக்கத்தக்கது. அடிகள் ஒருவிலைமாதினைக் காமுற்றதாகவும், அவளிசைவதற்குள் இந்திரியம் ஸ்கலிதமாய் விட்டதாகவும், அதற்கு மேல் அவள் சுவாமிகள் விருப்பத்தை நிறைவேற்ற முயன்றதாகவும், அதுகாலைப் பிள்ளையார் இச்செய்யுளை யருளிச் செய்ததாகவுஞ் சிலர் கூறுப. இது நம்பத்தக்கதன்று. இக்கதையை ஆதாரமாகக்கொண்ட வேறொரு பொய்க்கதை நமது தமிழ் நாட்டில் உலவுகிறது. பட்டினத்தார் விந்துவை அவ் விலைமாது உண்டு அருணகிரிநாதரை

யீன்ருள் என்று சொல்லப்படுகிறது. சுக்கிலத்தை உண்டு கருத்தரிப்பது இயற்கைக்கு அரண்செய்வதன்று. அருணகிரியார் பதினைரும் நூற்ருண்டில் பிரபுடதேவன் காலத்தி லிருந்தவர். பட்டினத்தார் பத்தாம் நூற்ருண்டி லிருந்தவர். இவர் திருப்பாடல்கள் பதினெராந் திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பட்டினத்தார் சேக்கிழாருக்கு முன்னே ஞானசம்பந்தருக்குப் பின்னே தமிழ்நாட்டில் தோன்றினவா. ஆறுநூருண்டு கடந்து பிறந்த அருணகிரியாரைப் பட்டினத்தார் பிள்ளை என்று கூறுவது பொருந்தாது. விரிக்கிற் பெருகும். 24

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் படுவதில்லை யண்ணலே—யாசைதனைப்
பட்டிறந்த காலமெலாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல்.

(பொ-ரை) பெருமையிற் சிறந்தவனே! சிவபெருமானே! வாயற்படியைத தாண்டிக்கொண்டு வந்திடாத பிச்சையில் பிரியம் வைப்பதில்லை. அப்பிச்சைக்குப் பிரியம் வைத்தழிந்த காலம் சாலும். இனிச் சுட்டறிவிற் கெட்டாத ஞானத்தை உபதேசிப்பாயாக.

(வி-ரை) சுட்டிறந்த ஞானம் - ஞாதுரு ஞானஞேயங் கடந்த திருவடி ஞானம். 25

நச்சரவம் பூண்டானை நன்ருய்த் தொழுவதுவும்
இச்சையிலே தானங் கிருப்பதுவும்—பிச்சைதனை
வாங்குவது முண்பதுவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம்.

(பொ-ரை) விஷத்தையுடைய பாம்பினை யணிந்த சிவபெருமானை நன்மை உண்டாகப் பணிவதும், பணியும் விருப்பதிலே உள்

ளத்தைக் கிடத்தியிருத்தலும், பிச்சை யேற்றலும், அதனை யுண்ட லும், உண்டபின் வந்து சிவாலயத்தில் உறங்குவதுவே இன்பம்.

(வி-ரை) நச்சரவம்-குண்டலி சத்திக் குறிப்பு. இச்சையிலே யென்பதற்குச் சிவபிரான் இச்சையிலே எனலுமாம். திருவருள் வழி யென்றபடி. 26

இருக்கு மிடந்தேடி யென்பசிக் கேயன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகே னரனே யென்தேகம்
இளைத்தாலும் போகே னினி.

(பொ-ரை) சிவபெருமானே! யான் இருக்கின்ற இடத்தைத் தேடி யென் பசிநோ யொழியும்பொருட்டு உருக்கமாகச் சோறு கொண்டு வந்தால் புசிப்பேன். (அவ்வாறின்றித் தங்களிடத்துக்கு என்னை வரும்படி) மிக வருந்திக் கூப்பிட்டாலும் போகேன். என் உடல் மெலிந்தாலும் இனிப் போகமாட்டேன்.

(வி-ரை) பசியின் பொருட்டுத் தாமே பிறர் இல்லஞ்சென்று இரப்போர் திருவருள்வழி யொழுகாதவர். திருவருள்வழி நிற்போர் எங்கிருப்பினும் அவர்க்குத் திருவருள் தூண்டுதலால் பலர் தாமே வலிந்து வந்து அன்னமிடுவர். உடல் பொருள் ஆவி மூன்றையுஞ் சிவார்ப்பணஞ் செய்வோரைக் காக்குங் கடன் சிவபெருமானுடைய தென்பது. 27

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகிறார் சுற்றத்தார்—பட்டதுபட்
டெங்கே ரமுஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம்.

(பொ-ரை) உயிரானது தேகத்தை விட்டு நீங்கப் போகிறது; நீங்கினதும் தேகத்தைப் பந்துக்கள் நெருப்பில் எரித்துவிடப் போகின்றார்கள். என்னபாடு பட்டாயினும் எப்பொழுதும் (இடையறாமல்) சிவபெருமானைத் தோத்திரஞ் செய்யுங்கள்; வணக்கஞ் செய்யுங்கள். அஃதே யின்பம். (உண்மை) விளம்பினேன்.

(வி-ரை) உடலைவிட்டு உயிர் நீங்குங்காலம் இஃதென்னும் உறுதியின்மையான் "விட்டுவிடப் போகுதுயிர்" என்றார். உயிர் நீங்கினதும் பந்துக்கள் உடலைச் சுட்டுவிடுவார்கள். அதற்குமேல் செய்வ தென்னை? உடலின்றி உயிர் ஒரு கருமத்தையுஞ் செய்யாது. ஆனதுபற்றி உயிர் உடலோடு கூடிவாழுங் காலத்திலேயே சத்கருமங்களைச் செய்யவேண்டு மென்றார். மாயா காரியங்களை நினைப்பதால் துக்கமும், பிறவியும் பெருகுமாகலானும், இன்பப் பொருளாகிய இறைவனை யிடையறாது போற்றலானும், நினைவதாலும் இன்பம் பெருகிப் பிறவி யொழியுமாகலானும் "எந்நேரமுஞ் சிவனை யேத்துங்கள் போற்றுங்கள், சொன்னே னதுவேசுகம்" என்றார். 28

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியில்
பாவியென்று நாமம் படையாதே—மேவியசீர்
வித்தா ரமுங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி.

(பொ-ரை) அறியாமையுடைய மனமே! உயிரோடு உடல் ஒழிந்தாலும் பூவுலகில் "பாவி" என்று பெயர் தாங்காதே. பொருந்திய செல்வச் செருக்கும் டம்பமும் வேண்டாம். இறந்தவரை யொப்ப உலகில் உலவு.

(வி - ரை) பாவியென்ற நாமம் படையாதே - பாவச் செயல்களைச் செய்யாதே என்றபடி. செல்வச் செருக்கு முதலியன

பிறவிவாய்ப் படுத்துவன ஆகலான் "மேவியசீர் வித்தாரமுங் கடம்பும் வேண்டாம்" என்றார். செத்த பிணம் செயலின்றிக் கிடப்பதுபோலச் செயலின்றிக்கிடப்பதே ஞானநெறியாம். என்னை? திரிகரணச் செயல்களே மறுபிறப்பிற்குக் காரணமாகலின். செயலின்றிக் கிடத்தல்-கருவிகரணங்க ளோய்ந்து கிடத்தல். 29

பின்முடுகு வெண்பா

இப்பிறப்பை நம்பி யிருப்பரோ நெஞ்சகமே
வைப்பிருக்க வாயின் மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு.

(பொ-ரை) மனமே! சேமித்த பொருளிருக்க, வீடு வாசல் இருக்க, கனவைப்போல விக்கலெடுத்துப் பற்கள் கிட்டிக்கொள்ள, கண்கள் மிகவும் பஞ்சடைந்து கபத்தை யொழுக்கி யிறந்து சாப்பறை யடித்தலை (பிரத்தியட்சமாகப்) பார்த்தும் இந்தப் பிறவியை (உறுதியாக) நம்பி யிருப்பார்களோ (அறிவுடையோர்கள்?.)

(வி-ரை) கடவுளைப் போற்றலின்றிப் பெருமுயற்சி செய்து ஈட்டிய பொருள் வீடு முதலியன கெடாமலிருப்ப அவைகளைச் சேமித்த புருஷன் இறந்துவிடுவதைக் கண்கூடாகக் கண்டும் உடலைப் பொருளாகக் கருதுகின்றார்களே யென்றிரங்கியவாறும், நம்முடன் தொடர்ந்து மறுமைக்கு உய்தி கொடுக்கும் அறச்செயல்களைச் செய்யல் வேண்டும் என்றபடி. வைப்பு-செல்வம். அப்பு-நீர்; ஈண்டுக் கபம் கோழை. இருப்பையோ என்றும் பாடம். 30

மேலு மிருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீல மறிந்திலையே சிந்தையே—கால்கைக்குக்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக் குத்திமொத்தப் பட்டவுடல்
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு.

(பொ-ரை) மனமே! காலுக்குங் கைக்குந் தலையணைவைத்து, மெத்தை பரப்பிக் குத்தி அடிபட்ட தேகத்தைக் கட்டையிலே வைத்துச் சுடுவதைப்பார்த்தும் மேலும் உலகத்தில் வாழ ஆசைப்பட்டாய்; வெள்ளிய இடபத்தை வாகனமாகவுடைய சிவபிரானது தருமநெறியைத் தெரிந்து கொண்டாயில்லை.

(வி-ரை) மரணமடைவதைப் பிரத்தியக்ஷமாகக் கண்டும் உலகத்தில் என்று மிருப்போமென விஷயங்களில் தலையிடுவது அறியாமை யென்றபடி. 31

ஒன்பதுவாய்த் தோற்பைக் கொருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே யலைந்தாயே—வன்கழுக்கள்
தத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்
கத்திக்குத் தித்தின்னக் கண்டு.

(பொ-ரை) மனமே! கொடிய கழுகுகள் பாய்ந்து பாய்ந்து சிறகுகளைத் தட்டி மூடித் தேகத்தைச் சின்னபின்ன மாக்கிக் கூச்சலிட்டுக் கொத்தி யுண்பதைப் பார்த்தும் நவதுவாரங்களை யடைய தோல்பையாகிய உடலிடத்தில் விசுவாசம் வைத்துத் திரிந்தாயே.

(வி-ரை) கழுகு முதலிய பறவைகளுக்கு உணவாகுந் தேகத்தைப் பொருளாகக் கொண்டு காலங் கழிப்பது அறியாமை யென்றவாறு. 32

இன்னம் பிறக்க விசைவையோ நெஞ்சமே
மன்னரிவ ரென்றிருந்து வாழ்ந்தவரை—முன்னம்
எரிந்தகட்டை மீதி லிணைக்கோ வணத்தை
உரிந்துருட்டிப் போட்டது கண்டு.

(பொ-ரை) மனமே! அரசர் இவர் என்று உலகத்தார் புகழ உயிரோடிருந்து வாழ்ந்தவரை முன்னே வெந்து கரியான கட்டை

யின்மேல் கட்டியிருந்த கௌபீனத்தையும் உரிந்து உருட்டி விட்ட தையும் பார்த்து இன்னம் பிறவி யெடுக்க விருப்பங் கொள்வையோ?,

(வி-ரை) கௌபீனத்தையும் உரிந்து கொள்கின்றார் என்றது நம்மால் தேடப்பட்ட சிறுமைப்பொருளும் நம்முடன் வரமாட்டாது என்பதைக் குறிக்கவென்க. அரசனும் இறந்த பின்னர்ச் சுடுகாட் டிற் கட்டைபோல உருட்டப்படுவதையுங் கண்டு பிறவியொழிக்கும் அறக்காரியங்களைச் செய்யாது மறக்காரியங்களைச் செய்ய விரும்பு வது அறியாமை யென்றபடி. 33

முதற்சங் கமுதூட்டு மொய்குழலார் தம்மை
நடுச்சங்க நல்விலங்கு பூட்டுங்—கடைச்சங்கம்
ஆம்போ தனதூது மம்மட்டோ விம்மட்டோ
நாம்பூமி வாழ்ந்த நலம்.

(பொ-ரை) முதலில் சங்கானது பாலை யுண்பிக்கும்; இடை யில் சங்கானது நெருங்கிய கூந்தலையுடைய மாதர்களைச் சிறந்த தளையாகப் பூட்டும்; முடிவில் சங்கானது சாவுக்குரிய தொன்றாகி முழங்கும். நாம் உலகத்தில் வாழ்ந்த சிறப்பு அவ்வளவோ இவ்வ ளவோ?

(வி-ரை) முதல் - குழந்தை பருவம். நடு-கல்யாண பருவம். கடை-சாங்காலம். சங்கானது குழநதை பருவத்தில் பாலடையாக உதவுகிறது; கல்யாண காலததில் மங்கலவாததிய மாகிறது; இறந்த காலததில் சாவாத்திய மாகிறது. இம்மூன்றினும் சங்கே சாக்குறிப் பைக் காட்டி நிற்றலான் எப்பருவ வாழ்வை வாழ்வெனக் கொள் வது என்றார். 34

எத்தனைநாள் கூடி யெடுத்த சரீரமிவை
அத்தனையு மண்டின்ப தல்லவோ—வித்தகனார்

காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப்போ மே.

(பொ-ரை) இவை எத்தனைதினஞ் சேர்ந்து ஆக்கிய தேகங்கள். அவை யாவையும் மண் சாப்பிட்டு விடுகின்றதல்லவோ; சிவபெருமான் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு மெதுவாக இரவு பகல் இல்லா இடத்திலே மறுமையில் குடிபுகுவோம்.

(வி-ரை) ஆன்மாக்கள் அநாதி கேவலத்தினின்றும் வெளிப்பட்டு மரம் பறவை மிருகம் முதலிய பல பிறவிகளை யெடுத்து மனித சரீரந் தாங்கப் பல்லூழிகால மாகுமாதலான் "எத்தனைநாள் கூடி யெடுத்த சரீரம்" என்றார். அவ்வளவு அருமையாக வெடுத்த சரீரத்தை மண்ணுக் கிரையாக்கல் அறியாமை யென்பார் "அத்தனையும் மண்டின்பதல்லவோ" என்றார். மண்ணுக்கிரையாகாம லிருப்பதற்கு வழி சிவபிரான் திருவடியைப் பற்றுத லென்பார் "வித்தகனார் காலைப்பிடித்து" என்றார். இரவு பகலற்ற விடம்-சுகதுக்கமில்லாவிடம்; நினைப்பு மறப்பு இல்லாவிடம். 35

எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதே
எச்சி லிருக்கு மிடமறியீர்—எச்சிறனை
உய்த்திருந்து பார்த்தா லொருமை வெளிப்படும்பின்
சித்த நிராமயமா மே.

(பொ-ரை) எச்சில் என்று இழிவுரை கூறி நன்மை தீமை வார்த்தை யாடாதேயுங்கள். எச்சிலுள்ள இடத்தை யுணரமாட்டீர்கள். எச்சிலை நன்கு ஊகித்துப் பார்த்தால் ஒற்றுமை புலனாகும். அதற்குமேல் சித்தசுத்தி யுண்டாம்.

(வி-ரை) எச்சில் தோஷமுள்ளமட்டும் அவிதபுத்தி யறாது அத்தோஷம் நீங்கிய பின்னர் ஏக உணர்ச்சி யுண்டாம். அதனால் சித்தவிகாரம் ஒழியும். 36

எத்தனைபேர் நட்டகுழி யெத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்—நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய்.

(பொ-ரை) எத்தனைபேர் புணர்ந்த அல்குல்; எத்தனைபேர் பற்றிய ஸ்தனங்கள்; எத்தனைபேர் (பற்களால்) கடித்து வலித்த உதடு; நாடோறும் பொய்யையே பேசும் உலகில் வாழும் அறியாமையுடைய பெண்களை விடுத்து நீங்கிப் பிழைப்பாயாக; பிழைப்பாயாக; பிழைப்பாயாக.

(வி-ரை) ஈண்டு மாதரென்றது - விலைமாதர்களை. அடா-இழிவுக்குறிப்பு. 37

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்குந் தீங்கினையுன் னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருப்ப நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான்.

(பொ-ரை) மனமே! உலகத்தில் நிலையாக வாழ்வது பொய். இறந்துபோவது சத்தியம் என்று யோசித்து ஒருவருக்குங் கெடுதி நினையாதே. பெருத்த உடலை நம்முடையதென்று நாம் களிகூர்ந்திருக்க, நாய் நரி பேய் கழுகு (முதலியவைகள்) தம்முடையதென்று களிகூர்ந்திருக்கின்றன.

(வி - ரை) எல்லா உயிரையுந் தன்னுயிரைப்போல் பார்த்தலே சிறந்த அறநெறியாகலான் "ஒருத்தருக்குந் தீங்கினை யுன்னாதே" என்றார், "தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல், மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமின்" என்றார் சிந்தாமணிக் காரரும். நிலையாமையைக் கருதுவதே ஓருயிர்க்குந் தீங்கு செய்

யாமலிருப்பது என்பார் "இருப்பதுபொய் போவதுமெய் யென் றெண்ணி, யொருத்தருக்குந் தீங்கினை யுன்னாதே" என்றார். தொந்தி- ஆகுபெயர் (வயிறு). 38

எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

(பொ-ரை) சாதுரியமாய்ப் பிரிந்து விளையாடிக் கொண்டு கைகளை வீசி நடந்துவந்தாலும் தோழிப்பெண்ணின் எண்ணம் நீர்க் குடத்திலேதான் நிலைத்து நிற்கும். அதுபோல எந்தவேலை செய் தாலும், எவ்விதத் துன்பமடைந்தாலும் முத்தர்களது உள்ளம் மோன நிலையிலேயே பதிந்து நிற்கும்.

(வி-ரை) தாமரையில் சலமிருப்பதுபோல் முத்தர்கள் உலகத் தில் வாழ்வர் என்றபடி. "நாரியர்வீட்டே யிருப்பினும் மெய்ஞ்ஞானி கள் வீடெய்துவரே" என்றார் முன்னரும். 39

மாலைப் பொழுதினறு மஞ்சளரைத தேகுளித்து
வேலை மினக்கிட்டு விழிததிருந்து—சூலாகிப்
பெற்றாள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தானு லென்செய்வாள் பின்.

(பொ-ரை) மாலைக் காலத்தில் நல்ல மஞ்சளை அரைதது ஸ்நா னஞ்செய்து வேலைகளைச் செய்யாமல் கண்விழித்திருந்து கரு வடைந்து பிள்ளையை யீன்றாள்; வளர்த்தாள்; நாமமிட்டாள். அங் ஙனம் அருமையாகப் பெற்ற பிள்ளையானது பைத்தியக்காரனுய்விட் டால் பிறகு என்ன செய்வாள் பாவம்?

(வி-ரை) எல்லாம் விதிப்படி நடக்கும் என்றபடி. கண்விழித் தல்-நாயகனேடுகூடல். மினக்கிடல்-தடைசெய்தல். 40

விருத்தம்

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவர்பிளந்த மரத்துளையிற் காலுழைத்துக் கொண்டே
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர் கிடந்துழல வகப்பட் டீரே.

(பொ-ரை) நாவெடிக்கப் பொய்பேசி, (நவநிதியை யொப்ப) ஏராளமாகப் பொருளைச் சம்பாதித்து, நன்மை யென்பது சிறிது முணராத பெண்களைச் சேர்ந்து பூமியானது பிளவுறும்படி வெளிப்படும் புற்றினின்றும் புறப்படும் ஈசல்களைப்போலப் புலபுல வெனவுங் கலகலவெனவும் பிள்ளைகளைப் பெற்று விடுவீர்கள். அவைகளைக் காப்பாற்றும் விதத்தை அறிந்துகொள்ள மாட்டீர்கள்; கைவிடவு மாட்டீர்கள். இரண்டாகப் பிளந்த மரத்துளையில் காலை நுழைய விடுத்துக்கொண்டு, ஆப்பை அசைத்து அசைத்துப் பிடுங்கிவிட்ட குரங்கைப்போல அகப்பட்டுக் கொண்டீர்கள்; இவ்வுலக துன்பத்தில் கஷ்டப்பட அகப்பட்டுக் கொண்டீர்கள்.

(வி-ரை) மரப்பிளவில் காலை நுழைத்துக்கொண்ட குரங்கின் துன்பத்திற்கு உலகத் துன்பத்தை யுவமித்தது ஊகிக்கத் தக்கது. பொய்யின் கொடுமையை "நாப்பிளக்க" என்றார். பொய்யால் ஈட்டும்பொருள் பயனளிப்பதாகாது. அறவழியால் பொருளீட்டவேண்டுமென்பது சுவாமிகள் கருத்து. அறவழியால் ஈட்டப்

படும் பொருளைத் தக்கார்க்கு உவகையோ டளிக்கவேண்டுமே யன்றி, அதனை வேசையர்களுக்கு அளித்தலாகா தென்பதை "நவ நிதியந்தேடி * * * நாரியரைக்கூடி" என்று குறிப்பாக உணர்த்துகிறார். 41

வேறு

மதத்தளை தயிருண் டானு மலர்மிசை மன்னி னானும்
நிதத்தமுந் தேடிக் காணா நிமலனே நீயின் றேகிச்
செய்த்தளை கயல்பாய் நாங்கூர் சேந்தனை வேந்தனிட்ட
கைத்தளை நீக்கி யென்முன் காட்டுவெண் காட்டு ளானே.

(பொ-ரை) மதத்தினால் கடையப்பட்ட தயிரைச் சாப்பிட்ட விஷ்ணுமூர்த்தியும், தாமரைப் பூவின்மீது வீற்றிருக்கும் பிரமதேவனும் நாடோறுந் தேடியுங்காணாத மலரகிதனே! திருவெண்காட்டில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! தேவரீர் இன்று எழுந்தருளி வயல்களில் கயல்மீன்கள் பாயும் நாங்கூர் சேந்தனை அரசனிட்ட விலங்கினின்று விடுவித்து என்முன்னே அவனைக் கொண்டுவந்து காட்டியருளவேண்டும்.

(வி-ரை) இத்திருப்பாட்டிலுள்ள வரலாற்றை அடிகள் சரித்திரத்திற் காண்க. 42

வடிவந் தானும் வாலிபம் மகளுந் தாயு மாமியும்
படிகொண் டாரு மூரிலே பழிகொண் டாட னீதியோ
குடிவந் தானு மேழையோ குயவன் றானுங் கூழையோ
நடுநின் றானும் வீணனோ நகரஞ் சூறை யானதே.

(பொ-ரை) உருவம் இளமையுடையது; புதல்வியும் அன்னையும் மாமியும் நிலைத்துவாழும் பதியிலே பழியை யெடுத்துக் கூறல்

நியாயமோ? குடியிருக்கவந்தவன் வறியனோ? குயவனும் வன்மையில்லாதவனோ? இடை நிற்கின்றவனும் வீணனோ? பதியுஞ் சூறையாய் விட்டதே.

(வி-ரை) குடிவந்தான்-சீவன்; குயவன்-பிரமன்; நடுவன்-யமன்; மகன்-ஆணவம்; தாய்-மாயை; மாமி-கர்மம். 43

மண்ணு முருகு மாமுருகு மாயை யுருகு மாலுருகும்
பெண்ணு முருகு மாணுருகும் பேதாபேத வகையுருகும்
அண்ண லுருகு மிடத்தமர்ந்த வாத்தாளுருகு மாவணையான்
எண்ணி யுருகுங் குருநாத னென்பா லுரைத்த வோர்மொழியே.

(பொ-ரை) எனது குருநாதன் அருளிச்செய்த ஒருமொழியை நினைந்து மண்ணுருகும்; மாமுருகும்; மாயையுருகும்; மயக்கமும் உருகும்; பெண்ணும் உருகும்; ஆணும் உருகும்; பேதாபேதப் பொருள்கள் எல்லாம் உருகும்; சிவபெருமானும் உருகுவர்; அவரிடப்பாகத்தில் பொருந்தியுள்ள அன்னையாகிய பார்வதிதேவியாரும் உருகுவர்; சர்ப்பாசயனமுடையவரான நாராயணமூர்த்தியும் உருகுவர்.

(வி-ரை) அரவணையான் எண்ணி என்பதைக் குருநாதன் என்பதனோடு கூட்டிப் பொருளுரைப்போருமுளர். ஒரு மொழியின் பெருமை கூறியவாறும். இதனைச் "சொல்லாத வார்த்தை" யென்றார் தாயுமானார். உருகும் உருகும் எனனுங்குறிப்பு மண்முதல் நாதமீறாக உள்ள தத்துவங்கள் கழன்று விலகுதலை அறிவுறுத்துவதாம். "மண்ணுமுருகும்" எனத்தொடங்கி "ஆத்தாள் உருகும்" என முடித்திருத்தற் கவனிக்கற்பாலது. உருகலாவது காரியம் காரணத்தில் ஒடுங்குவதை உணர்த்துவதென்க. குரு-அஞ்ஞானத்தை அழிப்பவன். 44

## உடற்கூற்று வண்ணம்



தனதனதான தனதனதான
தந்ததனந்தன தந்ததனந்த
தனனதனந்த தனனதனந்த
தானனதானன தானனதந்த—
தந்ததனதான தனதானறு.

ஒருமடமாது மொருவனுமாகி யின்பசுகந்தரு
மன்புபொருந்தி யுணர்வுகலங்க வொழுகியவிந்து
ஊறுசுரோணித மீதுகலந்து—

(பொ-ரை) அறியாமைக் குணமுடைய ஒருதலைவியும் ஒரு தலைவனுந் தன்னந்தனியராய், இன்பசுகத்தை யளிக்கும் அன்பில் நிலைத்து, அறிவு மயங்க, (தலைவன் வழியாக) வெளிவந்த சுக்கிலம் (தலைவிவழியாக) வெளிவந்த சுரோணிதத்திற் கலந்து,

(வி-ரை) மடம்-மடமை-அறியாமை; பெண்கள் நாற்குணத்து ளொன்று. (நாற்குணம்: அச்சம் நாணம் மடம் பயிர்ப்பு) ஆகி-வேறு எவருமின்றித் தாமிருவராய். இருவருள்ளமும் அன்பால் ஒன்று பெற்று நிலைபெற்றாலன்றி இன்பம் நிகழாதாகலான் "இன்ப சுகந் தரும் அன்பு பொருந்தி" என்றார். அன்பு பொருந்தி - கூடி; புணர்ந்து - இடக்காடக்கல். இருவர் தம் உள்ளமும் ஒன்றிய கலவியால் விளையும் இன்பஞ் சொலற்கரிதாய், எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் மனஅமுதாய் அகலாது நிற்பதாயுள்ள பேரின்பமாகலின் "இன்ப சுகந்தரு" என்றார். "சொற்பா லமுதிவள் யான் சுவையென்னத் துணிந்திங்ஙனே, நற்பால் வினைத்தெய் வந் தந்தின்று நானி வளாம்பகுதிப், பொற்பா ரறிவார் புலியூர்ப்

புனிதன் பொதியில் வெற்பிற், கற்பாவி யவரைவாய்க் கடிதோட்ட களவகத்தே" "உணர்ந்தார்க் குணர்வரியோன் தில்லைச்சிற்றம்பலத் தொருத்தன், குணர்ந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடி யிடைதோள், புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும்புதிதாய், மணந்தாழ் புரிகுழலா ளல்குல்போல வளர்கின் றதே" என வருஉம் மாணிக்கவாசகனார் திருவாய்மொழியானுணர்க. விந்து வெளிப்படுங்கால் அறிவால் அளவிடுதற்கரியதோ ரின்பம் முறுகியெழுந்து அறிவையும் விழுங்கித் தான் முனைத்து நிற்ற லான் "உணர்வு கலங்கி" என்றார். உணர்வு கலங்காவிடத்து வெளி வரும் விந்து பயனளிப்பதொன்றன்று. விந்து "ஒழுகிய" என்ற சொல்லாலும், சுரோணிதம் "ஊறு" என்னுஞ் சொல்லாலும், விசே டிக்கப்பட்டிருத்தலை யூகித்துக்கொள்க. சுக்கிலமுஞ் சுரோணித முங் கலவாவிடத்துப் புத்திரோற்பத்தி யின்மையான் "கலந்து" என்றார். சுக்கிலம்-ஆண்விந்து; வெண்ணிறமுடையது. சுரோணிதம்- பெண்விந்து; செந்நிறமுடையது. சுக்கில காரியம் எலும்பு முதலி யனவென்றும், சுரோணிதகாரியம் இரத்தம் தசை முதலியனவென் றுங் கூறுப. 'உணர்வு கலக்கி' யென்றும் பாடம்.

பனியிலொர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்துபு
குந்துதிரண்டு பதுமவரும்பு கமடமிதென்று
பார்வைமெய்வாய்செவி காலகைகளென்ற—

(பொ-ரை) (சுக்கிலமுஞ் சுரோணிதமுங் கலந்து) பனித்துளி யில் ஒரு பாதியளவான சிறுதுளி தலைவியின் கருவிற் பாய்ந்து திரண்டு தாமரை. மொட்டினையும் ஆமையினையும் போன்று கண் உடல் வாய் காது கால் கைகள் என்று சொல்லப்பட்ட,

(வி-ரை) "அறுகுநுனி பனியனைய ... ... ..." என் றார் அருணகிரிநாதரும். கால் கை முதலிய உறுப்புக்கள் தோன் றுவதற்கு முன்னர்க் கரு பிண்டவடிவாக விருத்தலான் "கமடமி

தென்று" என்று கூறினர். கமடம்-ஆமை. கரு ஆமைபோன்ற வடிவம் பெறுவதற்கு முன் தாமரை அரும்புபோல இலங்கலான் "பதும வரும்பு" என்றார். பதுமம்-தாமரை.

உருவமுமாகி யுயிர்வளர்மாத மொன்பதுமொன்றுநி
றைந்துமடங்காத யுதரமகன்று புவியில்விழுந்து
யோகமும்வாரமு நாளுமறிந்து—

(பொ-ரை) வடிவம் பெற்று உயிர்வளர்தற்குப் பத்துமாதம் பூர்த்தியாகி அத்தலைவியின் வயிற்றினின்றும் வெளிவந்து பூமியில் விழ; (உறவினர்) யோகம் வாரம் நாள் (முதலியவற்றை ஆராய்ந்து) அறிந்து,

(வி-ரை) உதரம்-வயிறு. யோகம் வாரம் நாள் அறிதல்-சோதிடம் பார்த்தல்.

மகளிர்கள்சேனை தரவணையாடை மண்படவுந்தியு
தைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை யமுதமருந்தி
யோரறிவீரறி வாகிவளர்ந்து

(பொ-ரை) பெண்கள் கூட்டம் எணைத்துகிலில் கிடத்தி உறங்கச்செய்ய, பூமியில் தன் உடல் படும்படி நெகிழ்ந்துவந்து தவழ்ந்து கவிழ்ந்தும் மடமைக்குணம் பொருந்திய மயில்போன்ற சாயலையுடைய தாயாரின் முலைப்பாலைக் குடித்து ஓரறிவு ஈரறிவு ஆக அறிவு விளங்கப்பெற்று வளர்ந்து,

(வி-ரை) மகளிர்கள் சேனை-தாய்வீட்டுப் பெண்கள். அணையாடை-எணைத துகில். மண்பட - பூமியில் பொருந்த; புழுதிபட. உந்தி-எணையினின்றும் வெளியே நெகிழ்ந்து வந்து. மடமை-அறியாமை. ஓரறிவு ஈரறிவுமுதல் ஆறறிவு என்றபடி. மக்கட்கு ஆறறிவு என்பது ஈண்டு அறியததக்கது.

ஒளிநகையூற லிதழ்மடவார்கு வந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியிலிருந்து மழலைமொழிந்து
வாவிருபோவென நாமம்விளம்ப—

(பொ-ரை) பிரகாசிக்கின்ற பற்களோடு ஊறுதலை யுடைய உதடுகளைப் பெண்கள் விரும்பி முத்தமிட அவர்களிடந் தவழ்ந்து சென்று மடியிலிருந்து குதலைச்சொற்களைப்பேசி வா உட்காரு போ என்று அதிசய வார்த்தைகளை யுரைக்க,

(வி-ரை) ஊறல்-வாய்த்தினைவுமாம். நாமம்-அதிசயம் இணக்கம் முதலியவற்றைக் காட்டுஞ் சொல்; பெயருமாம்.

உடைமணியாடை யரைவடமாட வுண்பவர்தின்பவர்
தங்களோடுண்டு தெருவிலிருந்து புழுதியளைந்து
தேடியபாலரொ டோடிநடந்து—
அஞ்சுவயதாகி விளையாடியே,

(பொ-ரை) உடுக்கையாகிய இரத்தினுபாரணங்களும் அரைஞாணும் அசையும்படி உண்பவர்களோடுந் தின்பவர்களோடும் உடனிருந்து உண்டு, வீதியிற்சென்று உட்கார்ந்து புழுதியை வாரிப் பூசிக்கொண்டு, தன்னை நாடிவந்த குழந்தைகளுடன் ஓடியும் நடந்தும் விளையாடி ஐந்து வயதை யடைந்து,

(வி-ரை) உடை மணி ஆடை அரைவடம்-இவைகட்குத் தனித் தனியாகப் பொருள்கொள்ளினும் பொருந்தும். உண்பவர்-சோறு முதலியவற்றை உண்பவர். தின்பவர்-கறிமுதலியவற்றைத் தின்பவர். (உண்டி நான்குவகை:—உண்ணல் தின்னல் நக்கல் பருகல். சோறுமுதலியன உண்ணல்; கறிமுதலியன தின்னல்; தேன் முதலியன நக்கல்; நீர் முதலியன பருகல்.) புழுதி - மண்துகள்.

அளைந்து-பூசி. ஐந்துவயது - ஞானோபதேசமும் வித்தியாரம்பமுஞ் செய்யும் வயது.

உயர்தருஞான குருவுபதேச முந்தமிழின்கலை
யுங்கரைகண்டு வளர்பிறையென்று பலரும்விளம்ப
வாழ்பதினாறு பிராயமும்வந்து—

(பொ-ரை) மேன்மை யளிக்கும் ஞானாசாரியனது உபதேசம் பெற்றுத் தமிழ் நூல்களை யோதி அவைகளின் எல்லையைக்கண்டு, பலரும் வளர்பிறை யென்று சொல்லுமாறு வளர்ந்து சிறந்த பதினாறு வயது அடைந்து,

(வி-ரை) உயர்-உயர்வு: தொழிற்பெயர். உயர்வென்றது மோட்ச இன்பத்தை. ஞானோபதேசஞ் செய்யப்பெற்ற பின்னரே வித்தியாரம்பஞ்செய்வது தொன்றுதொட்ட வழக்கு. கரைகண்டு-ஐயந்திரிபற வுணர்ந்து; எல்லா நூல்களையும் வாசித்து என்றபடி.

மயிர்முடிகோதி யறுபதநீல வண்டிமிர் தண்டொடை
கொண்டைபுனைந்து மணிபொனிலங்கு பணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—

(பொ-ரை) தலைமயிரை வகிர்ந்துகட்டி ஆறுகால்களையுடைய நீலவண்டுகள் ஒலிக்கின்ற குளிர்ந்த பூமாலையாற் கொண்டையை அலங்கரித்து, இரத்தினங்களாலும் பொன்னாலும் செய்யப்பட்டுப் பிரகாசிக்கின்ற ஆபரணங்களைத் தரித்து, இருந்து புகழ்வோரும் நின்று புகழ்வோரும் ஒருங்கு சேர்ந்து வணங்க,

(வி-ரை) அறுபதம்-ஆறுகால். வண்டிற்கு ஆறுகால். இமிர்தல்-ஒலித்தல்; மொய்த்தல். மணிபொன்னிலங்கு மணிகள்-இரத்தின மிழைத்த பொன்னாபரண மெனினுமாம்.

மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டும
ருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவதுகண்டு—

(பொ-ரை) காமக்கிழத்தியர்கள் (இவனைப்) பார்த்து 'இவன் காமனைப்போன்ற வடிவினன்' என்று (எண்ணி) மயங்கி ஒன்று கூடிச் செவ்வரிபடர்ந்த தங்கள் கண்களால் சுழற்றி மருட்டி அழகிய மயிலைப் போல அவர்கள் செல்வதைக் கண்ணுற்று,

(வி-ரை) மதனசொரூபன் - மன்மதனைப்போன்ற அழகுடையவன். மோக மங்கையர் - விலைமாதர்கள். சுழிய எறிந்து-அவன் மனநிலை கெட்டு அறிவு மயங்க வீழ்த்தி. காமுற்றார்க்குக் காமமீதூர மயிலைப்போல நடத்தல் மங்கையரியல்பு.

மனதுபொருமலவர்பிறகோடி மங்கலசெங்கல
சந்திகழ்கொங்கை மருவமயங்கி யிதழமுதுண்டு
தேடியமாமுதல சேரவழங்கி—

(பொ-ரை) மனந்தளராமல் அவர்களைப் பின்தொடர்ந்து சென்று அழகிய செம்பொற் கலசம்போன் றொளிருந் தனங்கள் தன் மார்பிற் பொருந்தப் புணர்ந்து அதரபானஞ்செய்து, சம்பாதித்த பெருஞ் செல்வப்பொருளை முழுவதும் அவர்களுக்குக் கொடுத்து,

(வி-ரை) அவர் பின்னர் நாய்போலோடி என்பார் "ஓடி" என்றார். மங்கலம்-பொலிவு. மயங்கி-கூடி; இடக்கரடக்கல். "தாருமாலைய மயங்கி" எனவும், "எதிரி" எனவும் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்துட் கூறியவாற்றானறிக. தேடிய-தானும் தன்முன்னோரும் ஈட்டிய. சேர-முழுவதும்.

ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும்
வம்பிலிழந்து மதனசுகந்த விதனமிகுதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து—

(பொ-ரை) மூலதன மொழிந்து மற்றுமுள்ள உரிமைப்பொருள்களாகிய செல்வங்களையும் தீயவழியில் செலவழித்துக் காமவின்பத்தின் துக்க மிஃதென்று சொல்லும்படி இளமைப்பருவ அழகு மாறுபட்டு,

(வி-ரை) முதுபொருள் - வீடு நிலம் முதலியன. இளமையில் விலைமாதர் போகத்திலே யழுந்துபவர் விரைவில் வாலிப வனப்பு நீங்கப்பெற்று ஆண்டன்மையுங்குன்றப் பெறுவராதலான் "மதன சுகந்த விதனமிகுதென்று" என்றார். மதன சுகந்த விதனமாவது "அந்தோ இவ்வளவு சீக்கிரத்தில் நமக்குக் கிழமுகமாய் விட்டதே ஆண்டன்மை குன்றிவிட்டதே" என்று வருந்துவது.

வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு
கண்களிருண்டு வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோத குரோதமடைந்து
செங்கையினிலோர் தடியுமாகியே,

(பொ-ரை) அழகும் மாறுபட்டு, இளமையும் மாறுபட்டு வலிய பற்கள் விழுந்து, இரண்டு கண்களின் ஒளி குன்றி, வயது மூப்படைந்து, நரை திரை அடர்ந்து, வாதம் நிலைகெட்டு மாறி வேறுபட்டுச் சிவந்த கையில் ஒரு தடி பிடித்து,

(வி-ரை) வளமை - செல்வமுமாம். திரை - மறைப்பு. விரோத குரோதமெனப் பொருள் கோடலுமொன்று.

வருவதுபோல வொருமுதுகூனு மந்தியெனும்படி
குந்திநடந்து மதியுமழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல் விடாமன்மொழிந்து—

(பொ-ரை) இங்குமங்கும் உலவுதலையுடைய ஒரு கிழக்கூன் குரங்கு என்று சொல்லும்படி குந்தியும் நடந்தும், அறிவு கெட்டு, காது செவிடடைந்து, ஓயாமல் சொல்வது இன்னதென் றறியாமல் வாயில் வந்தவாறு பிதற்றி,

(வி-ரை) ஒரு முதுகூன் - அதிக கூனுடன் எனினுமாம். முதுமை+கூன்=முதுகூன் எனக் கொள்வோருமுளர். முதுகு-முது; கடைக்குறை. குந்தி நடந்து - உட்கார்ந்தபடியே நடந்து; தவழ்ந்து எனக் கொள்வோருமுளர்.

துயில்வருநேர மிருமல்பொறுது தொண்டையுநெஞ்சமு
லர்ந்துவறண்டு துகிலுமிழந்து சுணையுமழிந்து
தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு—

(பொ-ரை) தூக்கம் வரும்வேளையில் உண்டாகும் இருமலைப் பொறுக்க முடியாமல் தொண்டையும் மார்பும் உலர்ந்து வறட்சியடைந்து, கட்டிய ஆடையும் நழுவிச் சுரணைகெட்டு, (அந்நிலையைக் கண்ணுற்ற) மனைவியரும் மக்களும் மனக்குழப்பங்கொள்ள,

(வி-ரை) சுணை - சுரணை; அபிமானம். கோரணி - கோளாறு; குழப்பம்; வியசனம்.

கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர்
சஞ்சலமிஞ்ச கலகலவென்று மலசலம்வந்து
கால்வழிமேல்வழி சாரநடந்து—

(பொ-ரை) கலியுகத்தில் இவர் நீதியைப் பாருங்கள் என்று சொல்பவர்கட்குக் கவலை அதிகரிக்கச் சலசலவென்று மலசல மிழிந்து கால்வழியாகவும் மேல்வழியாகவும் பொருந்த வொழுகி,

(வி-ரை) மூன்று யுகங்களி லிருந்தவர்கள் பிறர் துயரைத் தங்கள் துயர்போல் கொண்டுதவிபுரியும் பரோபகாரிக ளாகலானும், கலியுகத்திலுள்ளவர்கள் தேகாத்மவாத புத்தியிற்றலைப்பட்டுப் பிறர் துயரைக் கண்டு எள்ளி நகையாடும் வன்கண்ணர்க ளாகலானும் "கலியுகமீதி லிவர்மரியாதை" என்றார். கலியுகத்தில் தேகத் தளர்ச்சியுற்று உலகத்தில் வாழலாகாதென்பது கருத்து. மேல் விழி-உடலின்மேல்.

தெளிவுமிராம லுரைதடுமாறி, சிந்தையுநெஞ்சமு
லைந்துமருண்டு திடமுமுலைந்து மிகவுமலைந்து
தேறிநலாதர வேதெனநொந்து—

(பொ-ரை) உள்ளத் தெளிவுமன்றி, வாய்குளறி, எண்ணமும் மனமுங் குலைந்து மயங்கி உறுதிகெட்டு மிகவுந தடுமாறி ஆராய்ந்து சிறந்த துணை (நமக்கு இதுகாலை) ஏது என்று வருந்தி,

(வி-ரை) உரை தடுமாறல்-பேச்சுத தடுமாறல். திடமுமுலைந்து-மனோதிடங்குன்றி. 'அலைந்து' எனவும் பாடம்.

மறையவன்வேத னெழுதியவாறு வந்ததுகண்டமு
மென்றுதெளிந்து இனியெனகண்ட மினியெனதொந்த
மேதினிவாழ்வுநி லாதினிநின்ற—

(பொ-ரை) வேதநாயகனாகிய நான்முகன் தலையில் எழுதிய படியே கண்டமும் வந்துவிட்டது என்று தெளிவடைந்து "இனியென்ன கண்டமிருக்கிறது; இனி யென்ன தொந்தமிருக்கிறது; இனி உலகவாழ்வு நிலையாகவிராது, எஞ்சி நின்ற,"

(வி-ரை) வேதன் எழுத்து-தலைவிதி. கண்டம்-தத்து. தொந்தம்-தொடர்பு; சம்பந்தம். நின்ற-யான் செய்த லௌகிகக் கடமைகள்போக எஞ்சி நின்ற.

கடன்முறைபேசு மெனவுரைநாவு றங்கிவிழுந்துகை
கொண்டுமொழிந்து கடைவழிகஞ்சி யொழுகிடவந்து
பூதமுநாலுசு வாசமுநின்று—
நெஞ்சுதடுமாறி வருநேரமே.

(பொ-ரை) "கடமை முறைகளைப் பேசுங்கள்" என்று சொல்லிக்கொண்டிருந்த நாவானது எழாமல் வலித்துக்கொள்ளக் கையால் சாடைகாட்டிப் பேசி வாயில் விடப்படுங் கஞ்சி உள் செல்லாமல் வெளியே யொழுகப் பிராணவாயுவும் பூதமும் நான்கு சுவாசமும் அடங்கி மனந்தடுமாறலுறுங் காலத்தில்,

(வி-ரை) கடன்முறை-கடன் முதலிய காரியங்களெனக் கூறினும் பொருந்தும்.

வளர்பிறைபோல வெயிறுமுரோம முஞ்சடையுஞ்சிறு
குஞ்சியும்விஞ்ச மனதுமிருண்ட வடிவுமிலங்க
மாமலைபோல்யம தூதர்கள்வந்து—

(பொ-ரை) மூன்றாம்பிறைச் சந்திரனைப்போன்ற பற்களும் மயிரும், சடையும், சிறுகுடியும், தடித்த உள்ளமும், கரிய உருவமும் விளங்கப் பெரிய மலைபோல யமதூதர்கள் நெருங்கிச்சூழ,

(வி-ரை) விஞ்சுமனது-இரக்கமில்லா உள்ளம்.

வலைகொடுவீசி யுயிர்கொடுபோக மைந்தரும் வந்துகு
னிந்தழநொந்து மடியில்விழுந்து மனைவிபுலம்ப
மாழ்கினரேயிவர் காலமறிந்து—

(பொ-ரை) பாசவலையால் வீசி உயிரைப் பிடித்துக்கொண்டு போகப் பிள்ளைகள் வந்து குனிந்து புலம்பவும், வருந்தி மடியில் விழுந்து நாயகி யழவும் "அந்தோ இவர் இறந்தனரே" என்று காலவகையைக் குறித்து,

பழையவர்காணு மெனுமயலார்கள் பஞ்சுபறந்திட
நின்றவர்பந்த ரிடுமெனவந்து பறையிடமுந்த
வேபிணம்வேக விசாரியுமென்று—

(பொ-ரை) "பழைய மனித ரல்லவோ" என்று சொல்லிக் கொள்ளும் அயலார்கள் வேகமாகவந்து அங்குள்ளவர்களை நோக்கி "எல்லோருஞ் சென்று பந்தரிடுங்கள்" என்று சொல்ல, பறையர்கள் பறைமுழக்கத் தொடங்கப் "பிணத்தைச்சுட விசாரியுங்கள்" என்று கூறி,

(வி-ரை) பஞ்சு பறந்திட-பஞ்சுபோலோடி; வேகமாக வந்து சேர்ந்து. பந்தரிடல்-பிணத்துக்குமேல் வத்திரத்தால் விதானமமைத்துத் தாங்கி வருதல்.

பலரையுமேவி முதியவர்தாமி ருந்தசவங்கழு
வுஞ்சிலரென்று பணிதுகில்தொங்கல் களபமணிந்து
பாவகமேசெய்து நாறுமுடம்பை—

(பொ-ரை) பலபேர்களைப் பணித்தனுப்பிவைத்து, பெரியவர்கள் "பூமியில் கிடக்கும் பிணத்தைச் சிலர் கழுவுங்கள்" என்று கட்டளையிட்டு, ஆபரணம் வத்திரம் பூமாலை வாசனை இவைகளைத் தரித்துத் தங்களன்பை வெளிப்படுத்தி நாற்றம்வீசும் தேகத்தை,

வரிசைகெடாம லெடுமெனவோடி வந்திளமைந்தர்கு
னிந்துசுமந்து கடுகிநடந்து சுடலைபடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து—

(பொ-ரை) "முறை பிறழாமல் தூக்குங்கள்" என்று சொல்ல, இளம்பிள்ளைகள் ஓடிவந்து குனிந்தெடுத்துத் தோளில் வைத்துச் சுமந்து விரைந்து நடந்து சுடுகாட்டை யடைந்து "இவ்வளவுதானே மனிதவாழ்வு இவ்வளவுதானே மனிதவாழ்வு" என மயான வைராக்கியம் பேசி வருந்தி,

விறகிட மூடி யழல்கொடுபோட வெந்துவிழுந்துமு
றிந்துநிணங்க ளுருகியெ லும்பு கருகியடங்கி
யோர்பிடிநீறுமி லாதவுடம்பை—
நம்புமடியேனை யினியாளுமே.

(பொ-ரை) விறகுகளைப் பரப்ப (அதிற் பிணத்தைக் கிடத்தி) மறைத்து நெருப்பிட்டு மூட்ட உடல் வெந்து தசை விழுந்து முறிந்து கொழுப்புக்களுருகி, எலும்புகள் கரியாகி, தீயடங்கிய பின்னர் ஒருபிடி சாம்பருமில்லாத தேகத்தைப் பொருளாக நம்பும் அடியேனை யினி யாண்டருளும் (பெருமானே.)

(வி-ரை) தேகததின் அநித்தியம் தெரித்தவாறும். இவ்வாறு அழியும் உடலைப் போற்றி ஆண்டவனை மறந்து வாழ்நாள் கழிப்பது அறியாமை என்றபடி. 'விறகிடை' என்றும் பாடம்.

---


SRI VENKATESWARA ORIENTAL INSTITUTE
LIBRARY
TIRUPATI.

## முதல்வன் முறையீடு



கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைமாநகரில் வீற்றிருந்தருளுங் கடவுளே! மதுரைமாநகரில் வீற்றிருநதருளுங் கடவுளே!

(வி-ரை) கன்னிவனம்-மதுரை. கன்னி-மீனாட்சி. மீனாட்சியால் ஆளப்பெற்ற வனம் என்றபடி. கன்னிவனம் - அழியாவனம் எனலுமாம். கன்னி-அழியாத.

மூல மறியேன் முடியு முடிவறியேன்
ஞாலத்துட் பட்டதுயர் நாட நடக்குதடா.

(பொ-ரை) ஆதியும் உணரேன்; அடையும் அந்தத்தையும் உணரேன். உலகத்திலே சேர்நத துன்பம் என்னை அடைந்து மேற்கொள்ளச் செய்கிறது.

(வி-ரை) உலகத்தில் துன்பம் அனுபவமாயிருக்கிறது. அத்துன்பத்தின் காரணம் யாது? அதன் உற்பத்தி யென்ன? அதன் முடிவு என்ன? என்பது எனக்குத தோன்றவில்லை என்றபடி. துன்பம் உண்மையான் அத்துன்பத்துக்குக் காரணமு மிருததல்வேண்டும். அதுவே கருமம் என்பது. அக்கருமத்திற்கு ஆதியுமில்லை. அந்தமு மில்லை. அஃது அநாதியாக உள்ளது.

அறியாமை யாமலத்தா லறிவு முதற்கெட்டனடா
பிரியா வினைப்பயனாற் பிதறப் பிடிததனடா.

(பொ-ரை) அஞ்ஞானத்தை யுண்டாக்கும் மலத்தால் என் அறிவு முழுதும் கெடப்பெற்றேன். நீங்காத வினைப்பயனால் பைத்தியம் பிடிக்கப்பெற்றேன்.

(வி-ரை) அறியாமை மலம் - ஆணவம். இம்மலம் அறிவு என்னும் முதற்பொருளை முற்றிலும் விழுங்கி நிற்பது. பிரியாவினை-பிராரத்தகருமம். 2

தனுவா தியநான்குந் தானாய் மயங்கினண்டா
மனுவாதி சத்தி வலையிலகப் பட்டனடா.

(பொ-ரை) நான் தனுமுதலாகச் சொல்லப்பட்ட நான்கிலுந் தோய்ந்து அவைகளின் மயமாய் மயங்கினேன்; நீதியான திரோதான சத்தி வலையில் அகப்பட்டுச் சிக்கினேன்.

(வி-ரை) தனு-தேகம். தனுவாதிநான்கு-தனு கரணம் புவனம் போகம் என்பன இவை மாயாகாரியம். தன்னை அறிவாகக் கருதாமல் மாயா காரியங்களாய தனு கரண புவன போகங்களாகக் கருதல் அஞ்ஞானம் ஆகலான் "மயங்கினேன்" என்றார். திரோதான சத்தி-மறைத்தற்றொழிலைச் செய்வது. அது கருணையால் ஆன்மாக்களின் மலத்தைக்கழுவ மறைத்தலால் "மனுவர்தி சத்தி" என்றார். 3

மாமாயை யென்னும் வனத்தி லலைகிறண்டா
தாமா யுலகனைத்துந் தாது கலங்கிறண்டா.

(பொ-ரை) பெரிய மாயை யென்று சொல்லப்படுங் கானகத்தில் அலைகிறேன். அம்மாயையாய் நின்று உலகமுழுவதுந் தாது கலங்கப் பெறுகிறேன்.

(வி-ரை) தன்னை மாயையாகக் கருதுதல் பிறவிநோய் அளிப்பதாகலான் "தாது கலங்கிறண்டா" என்றார். 4

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

மண்ணாசை பட்டேனை மண்ணுண்டு போட்டதடா
பொன்னாசை பெண்ணாசை போகேனை யென்குதே.

(பொ-ரை) மண்ணிடத்து ஆசைவைத்த என்னை அம்மண்ணே சாப்பிட்டுவிட்டது. பொன்னாசையும் பெண்ணாசையும் நீங்கேம் என்று சொல்கின்றனவே.

(வி-ரை) எவர் எப்பொருளிடத்து ஆசை வைக்கின்றாரோ அவர் அப்பொருள் மயமாவர்; அதனை அனுபவிப்பர். மண்ணில் விருப்பம் வைப்போர் மண்ணாவர்; மண்ணிற் பிறப்பர். மூவாசையுள்ள மட்டும் ஆனந்தம் விளையாதென்றபடி. 5

மக்கள்சுற்றத் தாசை மறக்கேனே யென்குதே
திக்காசா மாசையது தீரேனே யென்குதே.

(பொ-ரை) பிள்ளை பந்துக்கள் ஆசை என்னை மறவேம் என்று சொல்லுகினறனவே. எட்டுத் திக்கையும் ஆளவேண்டும் என்னும் அவா நீங்கேன் என்று சொல்கிறதே.

(வி-ரை) பிள்ளை ஆசையும், அரச ஆசையும் மிகக் கொடியன. அவ்வாசைகளைக் கழற்றல் மிக அருமை. 6

வித்தைகற்கு மாசையது விட்டொழியே னென்குதே
சித்துகற்கு மாசை சிதையேனே யென்குதே.

(பொ-ரை) கல்வி பயிலும் விருப்பம் என்னைவிட்டு நீங்கேன் என்கிறது. சித்துக்கள் கறறுக்கொள்ளவேண்டும் என்னும் ஆசை அழியேன் என்கிறது.

(வி-ரை) 'கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்' என்றார் வாதவூரர். சித்தாசை பெரும்பைதியம். ஆசைகளில் தலையாயது சித்தாசை என்னலாம். 7

மந்திரத்தி லாசை மறக்கேனே யென்குதே
சந்தரத்தி லாசை துறக்கேனே யென்குதே.

(பொ-ரை) மநதிரததில் பதிந்துள்ள பற்று மறவேன் என கிறது. அலங்காரததில் கொண்டுள்ள பிரியம் விடேன் என்கிறது.

(வி-ரை) ஈண்டு மந்திரமென்றது சூன்யமந்திரம் முதலியவற்றை. ஸ்ரீ பஞ்சாட்சரம் ஞானபூசைக்குரியதாகலின் அதை மந்திரமென்று கூறினரில்லை. அலங்காரவாசை எத்துணையோபேரைப் பிணமாக்குகிறது. 8

கட்டுவர்க்கத் தாசை கழலேனே யென்குதே
செட்டுதனி லாசை சிதையேனே யென்குதே.

(பொ-ரை) உடுத்தும் வஸ்திர முதலியவற்றில் பதிந்துள்ள விருப்பம் அகலேன என்கிறது. பொருள் சேர்ப்பில் எழுந்துள்ள பற்று அழியேன் என்கிறது.

(வி-ரை) வஸ்திர ஆசை அளவோடிருப்பது நலம். தனக்குள்ள வஸ்திரங்கள் போதாவென்று மேலும் மேலும் ஆசைப்படுவதை நோக்கி யிரங்கியவாறும். அறவழியால் பொருளீட்டித் தக்கார்க்கு உவகையோடளித்தல் வேண்டும். அதனைச் சேர்த்துக் காக்குமாறு ஆசை தூண்டுகிறது என்றபடி. 9

மாற்றுஞ் சலவை மறக்கேனே யென்குதே
சோற்றுக் குழியுமின்னுந் தூரேனே யென்குதே.

(பொ-ரை) மாற்றி யுடுக்கப்படுஞ் சலவைத்துணியில் ஆசையொழியேன் என்கிறது. அன்னக்குழி யின்னும் நிரம்பேன் என்கிறது.

(வி-ரை) அன்னக்குழி-வயிறு. தோய்த்துலர்ந்த துணியில் மனம் திருப்தியடையவில்லை எனறபடி. 10

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

ஐந்து புலனு மடங்கேனே யென்குதே
சிந்தை தவிக்கிறதுந் தேறேனே யென்குதே.

(பொ-ரை) பஞ்சேந்திரியங்களும் ஒடுங்கமாட்டேம் என்கின்றன. மனஞ் சஞ்சலப்படும் துன்பத்தினின்றுந் தீரேன் என்கிறது.

(வி-ரை) ஐந்துபுலன்-சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம். சிந்தை-மனம். ஐம்புலன் ஒடுங்கினால் மனமொடுங்கும். மனமொடுங்கினால் துன்பம் நீங்கும். துன்பத்துக்குக் காரணமான புலன்கள் ஒடுங்கவில்லையே என்றபடி. 11

காமக் குரோதங் கடக்கிலேனே யென்குதே
நாமே யரசென்று நாடோறு மெண்ணுதே.

(பொ-ரை) காமக் குரோதங்கள் விடமாட்டேம் என்று சொல்கின்றன. அகங்காரம் தேகமாகிய நகரத்துக்கு நானே தலைவன் என்று தினந்தோறும் நினைக்கிறது.

(வி-ரை) நாம்-முனைப்பு; அகங்காரம். காமம் குரோதம் முதலியன உள்ளமட்டும நான் என்னும் முனைப்பு ஒழியாது. 12

அச்ச மாங்கார மடங்கிலேனே யென்குதே
கைச்சு மின்னுமானங் கழலேனே யென்குதே.

(பொ-ரை) அச்சமும் அகங்காரமும் தாழேம் என்கின்றன. புறப்பொருள் யாவற்றையும் வெறுத்தும் இன்னும் மானமானது நீங்கேன் என்கிறது.

(வி-ரை) அகங்காரமுள்ளமட்டும் அச்சமுண்டு; அச்சமொழிந்த விடத்தில் ஞான உணர்ச்சி யரும்பும். மானவுணர்ச்சி உள்ளமட்டும் பற்று முற்றும் அறுதென்பதை விளக்கியவாறு காண்க. 13

நீர்க்குமிழி யாமுடலை நித்தியமா யெண்ணுதே
ஆர்க்கு முயராசை யழியேனே யென்குதே.

(பொ-ரை) மனம் நீரிற் குமிழிபோன்ற தேகத்தை நித்தியப் பொருளாகக் கருதுகிறது. விடயங்களை அனுபவிக்கும் பேரவா கெடேன் என்கிறது.

(வி-ரை) மனவுணர்வு உள்ளமட்டும் தேகம் பொருளாக நித்தியமாகத் தோன்றுதல் இயல்பு. மனமொடுங்கினால் தேகத்தின் அநித்தியம் புலனாகும். விடய நுகர்ச்சிக்கு அவா கருவியாக நிற்கிறது. அவ்வவா ஒழிந்தால் நிததியாநித்தியம் புலனாகி ஆனந்த முண்டாகும். 14

கண்ணுக்குக் கண்ணெதிரே கட்டையில் வேகக்கண்டும்
எண்ணுந் திரமா யிருப்போமென் றெண்ணுதே.

(பொ-ரை) கண்கூடாகக் கட்டையிலே எரிகிறதைப் பார்த்தும் என்றும் அழியாமலிருப்போம் என்று மனம் நினைக்கிறதே.

(வி-ரை) கண்கூடாக உடல் நிலையுதலில்லாது என்று கண்டும் அதனைப் பொருளாக்கொள்ளும் அறியாமை குறித்து இரங்கியவாறும். 15

அநித்தியத்தை நிததியமென் றுதாவா யெண்ணுதே
தனிதிருக்கே னென்குதே தனைமறக்கே னென்குதே.

(பொ-ரை) (மனம்) அநித்தியததை நித்தியமாகக்கொண்டு அதனையே தனக்குப் பற்றுக்கோடாகவும் நினைக்கின்றது; ஏகாந்தமாயிருக்கமாட்டேன் என்கிறது; தன்னை மறக்கமாட்டேன் என்று சொல்லுகிறது.

(வி-ரை) பொருளல்லவற்றைப் பொருளாக்கொள்ளுதல் அறியாமை. செம்பொருளை விளங்கச்செய்வது அறிவு. அவ்வறிவு தன்னை மறக்குமட்டும் விளங்காது. தன்னை மறத்தலாவது தேகத்தைப் பொருளாகக் கொள்ளாததிலே. 16

நாகக் குழியுமின்னு நான்புசிப்பே னென்குதே
உரகப் படத்தல்கு லுனைக்கெடுப்பே னென்குதே.

(பொ-ரை) நரகக்குழி இன்னும் நான் உன்னை யுண்பேன் என்று சொல்கிறது. பாம்பின் படத்தையொத்த கடிதடம் உன்னை யின்னுங் கெடுப்பேன் என்கிறது.

(வி-ரை) நரகமும் பெண்ணாசையும் தேகாத்மவாதிகளையே யிடர்ப்படுத்தும்; ஆத்ம ஞானிகளுக்கு நரகமும் அல்குலும் சிவமாகத் தோன்றும். நரகத் துன்பமும் பெண்ணாசையும் அஞ்ஞானத்தின் சாயல் என்பது கவனிக்கத்தக்கது. தம்மிடத்துள்ள அஞ்ஞானத்தை நரகமாகவும் நிதம்பமாகவுங் கூறியவாறு காண்க. 17

குரும்பை முலையுங் குடிகெடுப்பே னென்குதே
அரும்பு விழியுமென்ற னுயிருண்பே னென்குதே.

(பொ-ரை) தென்னங்குரும்பை போன்ற தனங்கள் உன்னைக் குடிகெடுப்பேம் என்கின்றன. நீலோற்பல மலரைப்போன்ற கண்களும் உன் உயிரைச் சாப்பிடுவேம் என்கின்றன.

(வி-ரை) மகளிர்கள் முலையும் விழியும் காம இச்சையை எழுப்புங் கருவிகள். பாசத்துக்குள்ள வலிமை கூறியவாறும். 18

மாத ருருக்கொண்டு மறலிவஞ்ச மெண்ணுதே
ஆதரவு மற்றிங் கரக்கா யுருகிறண்டா.

(பொ-ரை) யமன் பெண்ணுருவந் தாங்கிவந்து மோசஞ்செய்ய நினைக்கின்றான். ஒருபற்றுக்கோடுமின்றி (அக்கினி முற்பட்ட) அரக்கைப்போல இளகுகின்றேன்.

(வி-ரை) பெண்ணாசையால் துன்பம்விளைதலால் பெண்ணை யமனாகக் கூறினார். இவ்வாறு அடிகள் கூறுவது வழக்கம். 19

கந்தனை யீன்றருளுங் கன்னி வனநாதா
எந்த விதத்திலு னேறிப் படருவண்டா.

(பொ-ரை) முருகப்பெருமானைப் பெற்றருளிய மதுரைக்கடவுளே! எவ்வகையில் இவ்வுலக மயக்கத்தினின்றும் வெளிவந்து தேவரீர் திருவடியை யடைவேன். 20

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

புல்லாகிப் பூடாய்ப் புலர்ந்தநாள் போதாதோ
கல்லாய் மரமாய்க் கழிந்தநாள் போதாதோ.

(பொ-ரை) புல்லாகியும் பூடாகியும் வாடிய காலம் போதாதோ. கல்லாகியும் மரமாகியுங் கடந்தகாலம் போதாதோ.

(வி-ரை) பூடு-பூண்டு. பல பிறவிகள் தாங்கி உழன்றும் இன்னும் ஆசை கழன்று ஞானம்பெறுமை கருதிப் பலவாறு வருந்துகிறார். "புல்லாகிப் பூடாய்" என வருந் திருவாசகத்தைச் சிந்திக்க. 21

கிரியாய்க் கீடமாய்க் கெட்டநாள் போதாதோ
நீரியா யூர்வனவாய் நின்றநாள் போதாதோ.

(பொ-ரை) கீரிப்பிள்ளையாகியும் புழுவாகியும் அழிந்தகாலம் போதாதோ. நீர்வாழ்வனவாகியும் ஊர்வனவாகியும் இருந்தகாலம் போதாதோ.

(வி-ரை) நீர்வாழ்வன-மீன் முதலை முதலியன. ஊர்வன-பாம்பு தேள் முதலியன. 22

பூதமொடு தேவருமாய்ப் போனநாள் போதாதோ
வேதனைசெய் தானவராய் வீழ்ந்தநாள் போதாதோ.

(பொ-ரை) பூதமொடு தேவர்களாகிச் சென்றநாள் போதாதோ. துன்பஞ்செய்யும் இராட்சதர்களாகிக் கெட்டநாள் போதாதோ. 23

அன்னை வயிற்றி லழிந்தநாள் போதாதோ
மன்னவனுய் வாழ்ந்து மரித்தநாள் போதாதோ.

(பொ-ரை) தாயார் வயிற்றில் (வெளியேதோன்றுமல்) அழிந்தகாலம் போதாதோ. அரசனுகி வாழ்ந்து செத்தகாலம் போதாதோ. 24

தாயாகித் தாரமாய்த் தாழ்ந்தநாள் போதாதோ
சேயாய்ப் புருடனுமாய்ச் சென்றநாள் போதாதோ.

(பொ-ரை) அன்னையாகி மனைவியாகிச் சிறுமையுற்ற காலம் போதாதோ. குழந்தையாகி நாயகனுகிப் போனகாலம் போதாதோ. 25

நோயுண்ண வேமெலிந்து நொந்தநாள் போதாதோ
பேயுண்ணப் பேயாய்ப் பிறந்தநாள் போதாதோ.

(பொ-ரை) வியாதியால் பீடிக்கப்பட்டு மெலிவுற்று வருந்திய காலம் போதாதோ. பேய்களுண்ணப் பேயாகி ஜெனித்தகாலம் போதாதோ. 26

ஊனவுடல் கூன்குருடா யுற்றநாள் போதாதோ
ஈனப் புசிப்பி லிளைத்தநாள் போதாதோ.

(பொ-ரை) குற்றம் நிறைந்த தேகத்தில் கூன் குருடாகிப் பிறந்தநாள் போதாதோ. குறைபாடுள்ள ஆகாரத்தால் மெலிந்த நாள் போதாதோ.

(வி-ரை) ஊன உடல் - மாமிச உடலுமாம். ஈனப் புசிப்பு அற்ப போஜனம். 27

பட்ட களையும் பரதவிப்பும் போதாதோ
கெட்டநாள் கெட்டேனென்று கெட்டநாள் போதாதோ.

(பொ-ரை) பிறவி யெடுக்குங் காலங்களில் அடைந்த இளைப்பும் வருத்தமும் போதாதோ. காலமெல்லாங் கெட்டுவிட்டேன் என்று பிறர் சொல்லக் கேளாமற்போனதும் போதாதோ. 28

நில்லாமைக் கேயழுது நின்றநாள் போதாதோ
எல்லாரு மென்பார மெடுத்தநாள் போதாதோ.

(பொ-ரை) தேகம் முதலிய நிலையாமையைக் குறித்து புலம்பி நின்றகாலம் போதாதோ. பலரும் என் சுமையைச் சுமந்தகாலம் போதாதோ. 29

காமன் கணையாற் கடைபட்டல் போதாதோ
ஏமன் கரத்தா லிடியுண்டல் போதாதோ.

(பொ-ரை) மன்மத பாணத்தால் இழிவடைந்தது போதாதோ யமன் கையால் இடியுண்டது போதாதோ. 30

நான்முகன் பட்டோலை நறுக்குண்டல் போதாதோ
தேன்றுளப நாரேமி தேக்குண்டல் போதாதோ.

(பொ-ரை) பிரமதேவனால் எழுதப்பட்ட விதியேட்டின்படி கஷ்டப்பட்டது போதாதோ. தேனொழுகுந துளசிமாலையையுடைய திருமாலின் ஆஞ்ஞாசக்கரததால் வருந்தியது போதாதோ. 31

உருத்திரனார் சங்காரத் துற்றநாள் போதாதோ
வருத்த மறிந்தையிலை வாவென் றழைத்தையிலை.

(பொ-ரை) உருத்திரக்கடவுளின் சங்காரததில் இடர்ப்பட்ட நாள் போதாதோ. (ஆண்டவனே) எனது துயரததை யறிந்தா யில்லை; வாவென்று கூப்பிட்டாயில்லை. 32

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

பிறப்பைத் தவிர்த்தையிலே பின்னுகக் கொண்டையிலே
இறப்பைத் தவிர்தததையிலே யென்னென்று கேட்டையிலே.

(பொ-ரை) ஜென்மததை யொழித்தாயில்லை. பிறகு ஆட் கொண்டாயில்லை. மரணத்தை யொழித்தாயில்லை. என்னவென்று கேட்டாயில்லை.

(வி-ரை) இத்துணைத் தேகங்கள் தாங்கி வருந்தி இளைத்துச் சலிப்புற்றுள்ள என்னை ஆளலாகாதா என்று விண்ணப்பித்தவாறு காண்க. 33

பாச மெரித்தையிலே பாதவிப்பைத தீர்த்தையிலே
பூசிய நீற்றைப் புனையென் றளிததையிலே.

(பொ-ரை) என்னுடைய மலத்தை அறுத்தாயில்லை. அம் மலததா லுண்டாகிய துன்பததை நீக்கினுயில்லை. பூசப்படுகின்ற விபூதியைத் தரித்துக்கொள் என்று அளித்தாயில்லை. 34

அடிமையென்று சொன்னையிலே யக்குமணி தந்தையிலே
விடுமுலகம் போக்கியுன்றன் வேட மளிததையிலே.

(பொ-ரை) (எமக்கு நீ) அடியவன் எனறு சொன்னுயில்லை. உருத்திராக்கமணி கொடுத்தாயில்லை. விடக்கூடிய உலகததை நீக்கி உனது திருவேடத்தை யுதவியருளினுயில்லை. 35

உன்னி லழைததையிலே யொன்றுகிக் கொண்டையிலே
நின்னடியார் கூட்டததி னீயழைதது வைததயிலே.

(பொ-ரை) உன்னுடனிருப்பக் கூப்பிட்டாயில்லை. இரண் டறக் கலக்கச்செய்தாயில்லை. உனது அடியார் திருக்கூட்டத்தில் கூட்டிவைத்தாயில்லை. 36

ஓங்கு பரத்து ளொளித்தவடி யார்க்கடியான்
ஈங்கோ ரடியா னெமக்கென் றுரைத்தையிலே.

(பொ-ரை) மேலான பரஞ்சுடரில் மறைந்த அடியவர்களுக்கு அடியவன் இவ்வுலகத்தி லொருவனிருக்கின்றான் என்று சொல்லி யருளவில்லை. 37

நாமந் தரித்தையிலே நானொழியா நின்றையிலே
சேம வருளிலென்னைச் சிந்தித் தழைத்தையிலே.

(பொ-ரை) (எனக்குச்) சிவனடியான் என்னும் பெயரைச் சூட்டினாயில்லை. முனைப்பு நீங்கத் திருவருள் செய்தாயில்லை. திருவருள்வைப்பி லென்னைக் கருதிக் கூப்பிட்டு நிறுத்தினாயில்லை. 38

முத்தி யளிதையிலே மோனங் கொடுத்தையிலே
சித்தி யளிதையிலே சீராட்டிக் கொண்டையிலே.

(பொ-ரை) மோட்சந் தந்தாயில்லை. மோனநிலையை யுதவினா யில்லை. திருவருட்சித்தியையுந் திருவருள் செய்தாயில்லை. என்னை யடியனுக்கிச் சிறப்புச்செய்தாயில்லை. 39

தவிர்ப்பைத தவிர்த்தையிலே தானுக்கிக் கொண்டையிலே
அவிப்பரிய தீயாயென் னுசை தவிர்தையிலே.

(பொ-ரை) எனது அக்கத்தைப் போக்கினாயில்லை; என்னைச் சிவமாக்கினாயில்லை; ஆற்றற்கரிய நெருப்பாகிய என்னுசையை யொழித்தாயில்லை. 40

நின்ற நிலையி னிறுததியென்னை வைத்தையிலே
துன்றுங் காணமொடு தொக்கழியப் பார்த்தையிலே.

(பொ-ரை) தேவரீர் கல்லால விருட்சததடியில் அசைவற நின்றநிலையில் அடியேனையும் நிறுததிவைத்தாயில்லை. நெருங்கிய

காரணங்களோடு பிறதத்துவக் கூட்டங்கள்கெடத் திருநோக்கஞ் செய்தாயில்லை. 41

கட்டவுல கக்காட்சிக் கட்டொழியப் பார்த்தையிலை
நிட்டையிலே நில்லென்று நீநிறுத்திக் கொண்டையிலை.

(பொ-ரை) பந்திக்கப்பட்டுள்ள உலகத்தோற்றமாகிய பந்தம் நீங்கத திருநோக்கஞ் செய்தாயில்லை. நிஷ்டை நிலைத்திருவென்று நிற்கச்செய்தாயில்லை. 42

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

கடைக்க ணருள்தாடா கன்னி வனநாதா
கெடுக்கு மலமொறுக்கிக் கிட்டவரப் பாரேடா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! கடைக்கணைக்கஞ் செய்தருளுக. என்னை ஞானமடையாதபடி கெடுக்கும் ஆணவத்தை நசுக்கித் தேவரீரை நெருங்கி நிற்கத் திருவுளங்கொள்க.

(வி-ரை) என்னை ஆட்கொண்டால் தேவரீர் திருக்கோலங் களைக்கண் டின்புறுவேன் என்றபடி. இனி மூர்த்தி இலக்கணத்தை வாழ்த்துதல் காண்க. 43

காதல் தணியேனோ கண்டு மகிழேனோ
சாதல் தவிரேனோ சங்கடந்தான் தீரேனோ.

(பொ-ரை) (திருவருள் நோக்கஞ் செய்யின்) உலகவிருப்பம் அடங்கப்பெறேனோ? தேவரீரைக் கண்டு களிகூரேனோ? இறப்பு ஒழியப்பெறேனோ? பிறவித்துன்பம் நீங்கப்பெறேனோ. 44

உன்னைத் துதியேனோ வூர்நாடி வாரேனோ
பொன்னடியைப் பாரேனோ பூரித்து நில்லேனோ.

(பொ-ரை) தேவரீரைத் தோத்திரஞ் செய்ய மாட்டேனே. க்ஷேத்திரங்களை விரும்பி யாத்திரைசெய்யேனே. பொன்போன்ற திருவடியைத தரிசிக்கமாட்டேனே, தரிசனத்தால் பேரானந்தம் உறேனே. 45

ஓங்காரப் பொற்சிலம்பி னுல்லாசம் பாரேனே
பாஙகான தண்டை பலபணியும் பாரேனே.

(பொ-ரை) ஓங்கார வடிவமான பொன்சிலம்பின் அலங்காரத் தைக் காணேனே. வளமான தண்டை முதலிய பலவகை அணி களையுங் காணேனே. 46

வீரகண் டாமணியின் வெற்றிதனைப் பாரேனே
சூரர்கணடு போற்றுமங்கச் சுந்தரத்தைப் பாரேனே.

(பொ-ரை) வீரகண்டாமணியினது ஜெய முழக்கத்தைக் காண மாட்டேனே. சூரர்கள் தரிசிததுத துதிக்கும் அழகைக் காணமாட் டேனே. 47

இடையில் புலித்தோ லிருந்தநலம் பாரேனே
விடையி லெழுந்தருளும் வெற்றிதனைப் பாரேனே.

(பொ-ரை) இடுப்பில் புலித்தோல் அணிந்த அழகைத் தரி சிக்கமாட்டேனே. இடபவாகனத்தில் வீற்றிருந்தருளும் வெற்றி மேன்மையைத தரிசிக்கமாட்டேனே. 48

ஆனை யுரிபோர்தத வழகுதனைப் பாரேனே
மானைப் பிடிததேந்து மலர்க்கரததைப் பாரேனே.

(பொ-ரை) யானைத்தோல் போர்த்த அழகைக் காணமாட் டேனே. மானைப் பிடித்து ஏந்தும் தாமரைபோன்ற திருக்கரததைக் காணமாட்டேனே. 49

மாண்டார் தலைப்பூண்ட மார்பழகைப் பாரேனே
ஆண்டார் நமக்கென் றறைந்து திரியேனே.

(பொ-ரை) இறந்தவர்களுடைய சிரங்களை மாலையாகத் தரித்துள்ள அழகைக் காணேனே. எங்களுக்குத் தலைவர் என்று எங்கணுஞ் சொல்லித் திரியமாட்டேனே. 50

கண்டங் கறுத்ததுநின்ற காரணத்தைப் பாரேனே
தொண்டர் குழுவினின்ற தோற்றமதைப் பாரேனே.

(பொ-ரை) திருக்கண்டங் கறுத்துள்ள காரணத்தை யோசியேனே. அடியார் கூட்டத்தில் நின்ற காட்சியைக் காணேனே. 51

அருள்பழுத்த மாமதியா மானனத்தைப் பாரேனே
திருநயனக் கடையொளிருஞ் செழுங்கொழுமைப் பாரேனே.

(பொ-ரை) கருணை கனிந்த பூரண சந்திரனைப் போன்ற திருமுக விலாசத்தைக் காணேனே. கிருபாகடாட்சம் நிறைந்த கடைக்கண்ணில் பிரகாசிக்கும் அழகிய வளத்தைக் காணேனே. 52

செங்குமிழின் றுண்டமவளர் சிங்காரம் பாரேனே
அங்கனியை வென்ற வதரத்தைப் பாரேனே.

(பொ-ரை) செய்ய குமிழமலர்போன்ற நாசியின அழகைத் தரிசிக்கமாட்டேனே. அழகிய கொவ்வைக்கனியைச் செயித்த திருவுதடுகளைத் தரிசிக்கமாட்டேனே. 53

முல்லை நிலவெறிக்கு மூரலொளி பாரேனே
அல்லார் புருவத் தழகுதனைப் பாரேனே.

(பொ-ரை) முல்லைப் பூவைப்போன்று சாந்திரிகை பொழியும் பற்களின் பிரகாசத்தைப் பார்க்கமாட்டேனே. கருமை நிறைந்த புருவத்தின் அழகைப் பார்க்கமாட்டேனே. 54

மகரங் கிடந்தொளிரும் வண்மைதனைப் பாரேனோ
சிகர முடியழகுஞ் செஞ்சடையும் பாரேனோ.

(பொ-ரை) மகரக்குண்டலங்கள் பிரகாசிக்கும் அழகைக் காணமாட்டேனோ, தலைக்கண்ணுள்ள திருமுடியின் அழகையும் சிவந்த சடாபாரத்தையுங் காணமாட்டேனோ. 55

கங்கையொடு திங்கணின்ற காட்சிதனைப் பாரேனோ
பொங்கரவைத் தான்சடையில் பூண்டவிதம் பாரேனோ.

(பொ-ரை) கங்கையுடனே சந்திரன் பொலிகின்ற தோற்றத்தைக் காணேனோ, சீறும் பாம்பினைச் சடையில் தரித்த வகையைக் காணேனோ. 56

சரக்கொன்றை பூத்த சடைக்காட்டைப் பாரேனோ
எருக்கறுகூ மதத்தையணி யேகாந்தம் பாரேனோ.

(பொ-ரை) சரக்கொன்றை பூத்த சடைக்கற்றையைத் தரிசியேனோ. எருக்கு அறுகு ஊமத்தை இவைகளைத் தரிததுள்ள தனிமையைத் தரிசியேனோ. 57

கொக்கிறகு சூடிநின்ற கொண்டாட்டம் பாரேனோ
அக்கினியை யேந்திநின்ற வானந்தம் பாரேனோ.

(பொ-ரை) கொக்கிறகை அணிந்துள்ள சீராட்டைக் காணேனோ. நெருப்பை யேந்தியுள்ள இன்பத்தைக் காணேனோ. 58

தூக்கிய காலுந் துடியிடையும் பாரேனோ
தாக்கு முயலகன்மேற் றாண்டவத்தைப் பாரேனோ.

(பொ-ரை) தூக்கிய திருவடியையும் உடுக்கையின முழக்கத்தையும் பார்க்கமாட்டேனோ. எதிர்தத முயலகன்மேல் புரியுந் திருநடனத்தைப் பார்க்கமாட்டேனோ. 59

வீசு கரமும் விகசிதமும் பாரேனோ
ஆசை யளிக்கு மபயகரம் பாரேனோ.

(பொ-ரை) சிற்சபையில் வீசுகின்ற திருக்கரங்களையும் புன்னகையையும் பார்க்கமாட்டேனோ. தரிசிப்போர்க்குக் காதலைக் கொடுக்கும் அபயாஸ்தத்தைப் பார்க்கமாட்டேனோ. 60

அரிபிரமர் போற்ற வமரர் சயசயெனப்
பெரியம்மை பாகம்வளர் பேரழகைப் பாரேனோ.

(பொ-ரை) விஷ்ணுவும் பிரமனும் தோத்திரஞ்செய்யத் தேவர்கள் சயசய வென்று சொல்ல உமாதேவியார் இடப்பாகத்தில் எழுந்தருளியுள்ள திருக்கோலத்தைத தரிசியேனோ. 61

சுந்தர நீற்றின் சொகுசுதனைப் பாரேனோ
சந்திர சேகரனுய்த் தயவுசெய்தல் பாரேனோ.

(பொ-ரை) திருநீற்றின் வனப்பைக் காணேனோ. சந்திர சேகரமூர்த்தியாய்க் கிருபை செய்தலைக் காணேனோ. 62

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

கெட்டநாள் கெட்டாலுங் கிருபையினிப் பாரேனோ
பட்டநாள் பட்டாலும் பதமெனக்குக் கிட்டாதோ.

(பொ-ரை) தேவரீர் திருவருளைப் பெறுமல் வாளா ஒழிந்த காலம் ஒழிந்தாலும் இனியாயினுந் தேவரீர் கிருபை நோக்கேனோ. துன்பநாளாகப் பலநாள் கழிந்தாலும் இனியாயினும் தேவரீர் திருவடி யெனக்குச் சித்தியாதோ. 63

நற்பருவ மாக்குமந்த நாளெனக்குக் கிட்டாதோ
எப்பருவ முங்கழன்ற வேகாந்தங் கிட்டாதோ.

(பொ-ரை) மலம் பரிபாகம் ஆகுங்காலம் எனக்கு உண்டா காதோ. எல்லாக்காலமும் (தத்துவமும்) விலகிய ஏகாந்தம் உண்டா காதோ. 64

வாக்கிறந்து நின்ற மவுனமது கிட்டாதோ
தாக்கிறந்து நிற்குமந்தத் தற்சுத்தி கிட்டாதோ.

(பொ-ரை) சொல்லைக்கடந்து விளங்கும் மௌனநிலை எனக்கு வாராதோ. மூன்றைப்பு அழிந்து விளங்கும் மேலான சுத்தநிலை வாராதோ. 65

வெந்துயரைத் தீர்க்குமந்த வெட்டவெளி கிட்டாதோ
சிந்தையையந் தீர்க்குமந்த தேறலது கிட்டாதோ.

(பொ-ரை) கொடிய பிறவித்துன்பத்தை யொழிக்கும் அப்பா வெளி கைகூடாதோ. மன மயலை யொழிக்குஞ் சிவமெனுந் தெளிவு கைகூடாதோ. 66

ஆன வடியார்க் கடிமைகொளக் கிட்டாதோ
ஊன மறவென்னை யுணர்த்துவித்தல் கிட்டாதோ.

(பொ-ரை) தொண்டுபட்ட அடியவர்கட்கு அடிமைசெய்யுந் தன்மை யெனக்கு நேரிடாதோ. மலங்கழல என் அறிவை விளக்கி என்னை விளங்கச்செய்யுந் தன்மை நேரிடாதோ. 67

என்னைனன்று சொல்லுவண்டா யென்குருவே கேளடா
பின்னை யெனக்குநீ யல்லாற் பிறிதிலையே.

(பொ-ரை) என் குருநாதா! என்னவென்று எடுத்துரைப்பேன். கேட்பாயாக. எனக்குத் தேவரீரை அல்லாமல் பின்னைப் பற்றுக்கோடா யுள்ளவர் வேறொருவருமில்லை. 68

கன்னி வனநாதா கன்னி வனநாதா.

(பொ-ரை) மதுரைக்கடவுளே! மதுரைக்கடவுளே!

அன்ன விசாரமது வற்றவிடங் கிட்டாதோ
சொன்ன விசாரந் தொலைந்தவிடங் கிட்டாதோ.

(பொ-ரை) சோற்றுத்துக்கம் ஒழிந்த இடந் தோன்றாதோ. பொருள் துக்கம் ஒழிந்த இடம் புலனாகாதோ. 69

உலக விசார மொழிந்தவிடங் கிட்டாதோ
மலக்குழுவின் மின்னார் வசியாதுங் கிட்டாதோ.

(பொ-ரை) உலகத் துன்பங் கழிந்த இடங் கைகூடாதோ. பாசத்தொகுதிபோன்ற பெண்கள் வாழாத இடங் கைகூடாதோ. 70

ஒப்புவமை பற்றோ டொழிந்தவிடங் கிட்டாதோ
செப்புதற்கு மெட்டாத தெளிந்தவிடங் கிட்டாதோ.

(பொ-ரை) சமான திருட்டாந்த பந்தமெனு மிவையற்ற இடம் நேராதோ. வாக்கினால் சொல்வதற்கும் எட்டாத தெளிவுள்ள இடம் நேராதோ. 71

வாக்கு மனாதீத வகோசரத்திற் செல்லவெனைத்
தாக்கு மருட்குருவே நின்றாளிணைக்கே யான்போற்றி.

(பொ-ரை) வாக்கு மனங்களுக்கு மேலாக உள்ள அரியத்தில் யான் போக என்னைச் செலுத்தும் திருவருட்குருமூர்த்தி! தேவரீர் திருவடி இரண்டினுக்கும் வணக்கம். 72

# அருட் புலம்பல்



ஐங்கரனைத் தெண்டனிட்டே னருளடைய வேண்டுமென்று
தங்காமல் வந்தொருவன் தற்சொரூபங் காட்டியெனை.

(பொ-ரை) திருவருளைப் பெறவேண்டுமென்று ஐந்து கரங்களை யுடைய கணபதியைக் கும்பிட்டேன். (அதன்பயனாக) ஒருதலைவன் தாமதஞ் செய்யாமல் என்முன்னேவந்து தனது உண்மை வடிவினைக் காண்பித்து அடியேனை,

(வி-ரை) உயிர்களின் திருவருள்மூலமாகக் கடவுளையடைய வேண்டுவதாகலான் "அருளடைய வேண்டுமென்று" என்றார். ஐங்கரன்-விநாயகன்; மூலாதாரத்தில் வீற்றிருப்பவன். ஒருவன் என்றது குருநாதனை.

கொள்ளைப் பிறப்பறுக்கக் கொண்டான் குருவடிவம்
கள்ளப் புலனறுக்கக் காரணமாய் வந்தாண்டி.

(பொ-ரை) (பெண்ணே) பலவாக உண்டாகும் பிறவியை யொழிக்க (என்பொருட்டுக்) குருவடிவந் தாங்கினான்; வஞ்சனை யுடைய ஐம்புலச் சேட்டைகளைக் களையவேண்டி என்முன் எழுந்தருளி வந்தான்.

(வி-ரை) பிறவிகள் எண்ணிறந்தன ஆகலான் "கொள்ளைப் பிறப்பு" என்றார். பிறவிக்கு வித்தாயிருப்பது அவா. அவ்வவா ஐம்புலன் வழியாக உண்டாவது. அவ்வைம்புலச்சேட்டை குருதரிசனத்தால் அடங்கும் என்றபடி. "மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத்தமுதே" என்றார் மாணிக்க வாசகனார்.

ஆதார மோராறு மைம்பத்தோ ரட்சரமும்
சூதான கோட்டையெல்லாஞ் சுட்டான் முரிசறவே.

(பொ-ரை) குற்றம் நீங்கும்படியாக ஆறு ஆதாரங்களையும், அவ்வாதாரங்களில் பொருந்தியுள்ள ஐம்பத்தோ ரெழுத்துக்களையும், அவ்வாதாரங்களைச் சுற்றியுள்ள மாயா அரண்களை யுடைய கோட்டை முதலிய எல்லாவற்றையும் (குருநாதன் தனது நெற்றிக்கண்ணால்) சுட்டு நீருக்கினன்.

(வி-ரை) ஆதாரம் ஆறு:-மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை. இவைகளுக்குக் கோணங்களுண்டு. அக்கோணங்களுக்கு இதழ்களுண்டு. அவ்விதழ் ஒவ்வொன்றிலும் ஒவ்வோரெழுத்தாக ஐம்பத்தோ ரெழுத்துக்களுண்டு. 3

மெத்த விகாரம் விளைக்கும பலபலவாம்
தத்துவங்க ளெல்லாந் தலைகெட்டு வந்ததடி.

(பொ-ரை) அதிக விகாரத்தை யுண்டுபண்ணும் பலவகைத் தத்துவக்கூட்டங்கள் நிலைகலங்கி யொடுங்கின.

(வி-ரை) விகாரம்-தோற்றம் ஒடுக்கம். தத்துவங்கள்-மாயாகாரியஙகள். அவை முப்பத்தாறு. தத்துவங்களைப் பொருளாகக் கொண்டிருந்த எண்ணம் ஒழிந்தது என்றபடி. 4

எனனோ டுடன்பிறந்தா ரெல்லாரும் பட்டார்கள்
தன்னந் தனிநேய தனித்திருக்க மாட்டேண்டி.

(பொ-ரை) என்னுடன் தோன்றினவர்க ளெல்லாரும் மாண்டு போனார்கள். யான் இனித் தனியனாய் வாழமாட்டேன்.

(வி-ரை) என்னுடன் பிறந்தார் - மேற்சொன்ன தத்துவங்கள். தனு கரண முதலியன. ஆன்மாவின் இயல்பு ஒன்றைப்பற்றியே

நிற்பது என்பதும், தனித்து நிற்பது அன்று என்பதுஞ் சாத்திரக் கொள்கை. என்னைப்பற்றி யிருந்த தத்துவங்களாகிய சகோதரர்கள் மாண்டுவிட்டார்கள். இனி யான் பற்றவேண்டியது கடவுளையே. யான் தனித்து வாழும் இயல்பினன் அல்லன், சார்ந்ததன் வண்ண மாயிருப்பவன் என்றபடி. 5

எல்லாரும் பட்டகள மென்று தொலையுமடி
சொல்லி யழுதாற் றுயரமெனக் காறுமடி.

(பொ - ரை) தத்துவங்களெல்லாம் அழிந்த இடம் என்று ஒழியும். அதனைப் பன்னிப்பன்னி அழுதால் எனது துக்கம் நிவர்த்தி யாகும்.

(வி-ரை) தத்துவம்-காரியம். மாயை-காரணம். காரணம் உள்ள மட்டும் காரியம் நிகழுமாகலான் காரணங்கெட வேண்டியவாறும். களம் என்றது மாயையை. 6

மண்முதலா மைம்பூத மாண்டுவிழக் கண்டேண்டி
விண்முதலா மைம்பொறிகள் வெந்துவிழக் கண்டேண்டி.

(பொ-ரை) (பெண்ணே) பிருதிவி முதலிய பஞ்சபூதங்கள் கெட்டு ஒழிதலைக் கண்டேன். சப்தம் முதலிய தன்மாத்திரைகள் ஒன்றுமில்லாமல் அழிதலையுங் கண்டேன்.

(வி-ரை) தத்துவவகைகளைத் தெரிவிக்கின்றார். பஞ்சபூதம்-பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம். தன்மாத்திரை-சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம். பூதங்களின் சேஷ்டையும் பொறிகளின் சேஷ்டையும் அடங்கின என்றவாறு. 7

நீக்காப் புலன்களைந்து நீறாக வெந்ததடி
வாக்காதி யைவரையு மாண்டுவிழக் கண்டேண்டி.

(பொ-ரை) விலக்கவியலாத ஐம்புலன்களும் சாம்பராக எரிந்தன. வாக்கு முதலிய ஐந்தும் அழிந்ததையுங் கண்ணுற்றேன்.

(வி-ரை) ஐம்புலன் - மெய் வாய் கண் மூக்கு செவி. வாக்காதி ஐவரொன்றது - கன்மேந்திரியங்களை. அவை வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் என்பன. 8

மனக்கரண மத்தனையும் வகைவகையே பட்டழிய
இனக்கரணத் தோடே யெரிந்துவிழக் கண்டேண்டி.

(பொ-ரை) உட்கரணங்களெல்லாம் முறைமுறையாகக் கெட்டழிய அவைகளின் கூட்டாளிகளாகிய பிற இந்திரியங்களும்பட்டு விழுவதைக்கண்டேன்.

(வி-ரை) மனக்கரணம் என்றது - அந்தக்கரணத்தை. மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. இவை அந்தக்கரணமெனப்படும்.

ஆத்தும தத்துவங்கள் அடுக்கழிய வெந்ததடி
போற்றும்வகை யெப்படியோ போத மிழந்தானை.

(பொ-ரை) ஆத்தும தத்துவங்கள் தம் வைப்புக்கெட நீறாயின. இனிக் குருநாதனைத தோத்திரஞ்செய்யும் வழி யெப்படி?

(வி-ரை) மேற்சொல்லிய தத்துவம் இருபத்து நான்கிற்கும் ஆத்மதத்வம் என்று பெயர். ஆத்துமதத்துவம் இருபத்துநான்காவன:-பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு. ஆத்மதத்வத்தோடு கருவி கரணங்கள் ஒழிதலான் போற்றுதல் முதலியன செய்ய இயலாமை தெரிவித்தபடி. போதம் இழந்தானை-அகங்காரமில்லாதவனை; குருநாதனை. 10

வித்தியா தத்துவங்கள் வெந்துவிழக் கண்டேண்டி
சுத்தவித்தை யைந்தினையுஞ் சுட்டான் றுரிசறவே.

(பொ-ரை) வித்தியாதத்துவங்கள் எரிந்து ஒழிவதைக் கண்ணுற்றேன். குருநாதன் சுத்தவித்தை முதலிய ஐந்து தத்துவங்களையும் என்னைப் பற்றியிருந்த மலமகலத் தகித்துவிட்டான்.

(வி-ரை) வித்தியா தத்துவம் ஏழு. அவை காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்பன. சுத்தவித்தை முதலிய ஐந்தும் சிவதத்துவம் எனப்படும். அவை சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்பன. 11

மூன்று வகைக்கிளையு முப்பத் தறுவரையும்
சான்று விழச்சுட்டுக் கருவே ரறுததாண்டி.

(பொ-ரை) ஆத்மததவம் வித்யாதத்வம் சிவதத்வம் என மூன்று வகையாகப் பிரிந்துள்ள தத்துவக்கூட்டங்களையும், அம்மூன்றின் விரிவாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் கழன்று விழக் கொளுத்தி அவைகளின் உற்பத்தியை அறவே யழித்தான் (குருநாதன்).

(வி-ரை) குருநாதன் சட்சுதீட்சையால் தத்துவங்களை வேரற எரித்தான் என்றபடி. 12

குருவாகி வந்தானோ குலமறுக்க வந்தானோ
உருவாகி வந்தானோ வுருவழிக்க வந்தானோ.

(பொ-ரை) ஞானசிரியனாக எழுந்தருளி வந்தானோ? அல்லது தத்துவக்கூட்டங்களை யொழிக்கவந்தருளினனோ? சகளீகரித்த திருமேனியோடு வந்தானோ? அல்லது என்னுடைய உருவத்தைக் கெடுக்க வந்தானோ?

(வி-ரை) சிவபெருமான் குருமூர்த்தியாக எழுந்தருளிச் சட்சுதீட்சை செய்ததும் ஆன்மாக்களைப் பற்றியுள்ள மும்மலங்களறுதலால் "உருவழிக்க வந்தானோ" என்றார். உருவழித்தலாவது பிறவியை யொழிப்பது. 13

கேடுவரு மென்றறியேன் கெடுமதிகண் டோற்றாமல்
பாடுவரு மென்றறியேன் பதியாண் டிருந்தேனண்டி.

(பொ-ரை) கெடுமதி கண்ணுக்குத் தோன்றுமையால் எனக்குக் கெடுதி வருமென்று அறிந்தேனில்லை. துன்பம் நேரிடுமென்று தெரிந்துகொண்டேனில்லை. (வீணுக) உலகத்தை ஆண்டுகொண்டிருந்தேன்.

(வி-ரை) கெடுமதி கண்ணுக்குத் தோன்றுதென்பது ஒரு பழமொழி. பின்னல் கெடுதிவருமென்று கருதாது ஆட்சிபுரியும் அரச வாழ்க்கையைக் கண்டித்தவாறு. பதி என்பதற்குத் தேகமெனப் பொருளுரைப்பினும் பொருந்தும். 14

எல்லாரும் பட்டகள மின்னவிட மென்றறியேன்
பொல்லாங்கு தீர்க்கும் பொறியிலியைக் கண்டேண்டி.

(பொ-ரை) தத்துவங்களெல்லாம் அழிந்த இடம் இன்ன இடம் எனறு தெரியவில்லை. தீமையை யொழிக்குஞ் சிவகுருநாதனைக்கண்டேன்.

(வி-ரை) தத்துவங்கள் ஒடுங்கினதும் ஆன்மாவிற்குப் புலனுவது சிவம் ஒன்றேயாகலான் "பொறியிலியைக் கண்டேண்டி" என்றார். சிவந்தோன்றப் பெறுவோர்க்கு உலகந்தோன்றுது என்பது சாததிரம். 15

உட்கோட்டைக் குள்ளிருந்தா ரொக்க மடிந்தார்கள்
அக்கோட்டைக் குள்ளிருந்தா ரறுபதுபேர் பட்டார்கள்.

(பொ-ரை) உடலினுள்ளே இருந்த தத்துவங்க ளெல்லாம் அழிந்தன. அந்த உடலினிடததிலேயுள்ள அறுபது தத்துவக்காரியங்களும் அழிந்தன.

(வி-ரை) தத்துவம் முப்பத்தாறும் காரணதத்துவம் எனப்படும். தததுவம் அறுபதும் காரியதத்துவமாம். ஆகத் தத்துவம்

தொண்ணூற்றாறுதல் காண்க. விரிவைத் தத்துவக்கட்டளைகளிற் காண்க. 16

ஒக்க மடிந்ததடி யூடுருவ வெந்ததடி
கற்கோட்டை யெல்லாங் கரிக்கோட்டை யாச்சுதடி.

(பொ-ரை) மேற்கூறிய இருவகைத் தத்துவங்களும் ஒருங்கே அழிந்தன. அவை நன்றாக வெந்து சாம்பராயின. கல்கோட்டை போன்ற உடல்முழுவதும் கரிக்கோட்டையாக முடிந்தது.

(வி-ரை) கல்கோட்டை-வச்சிரதேகம். கரிக்கோட்டை-வெந்து நீறான சாம்பர்த்துகள். 17

தொண்ணூற் றறுவரையுஞ் சுட்டான் றரிசரவே
கண்ணேறு பட்டதடி கருவே ரறுத்தாண்டி.

(பொ-ரை) துன்பங்கெடத் தொண்ணூற்றாறு தத்துவங்களையும் எரித்தான். பிறர் திருஷ்டிபட்டது. இனி அதத்துவங்கள் முளையாதபடி வேரறுத்துவிட்டான் (குருநாதன்.)

(வி-ரை) தத்துவகாரியமும் காரணமும் அழிநதபடியால் இனி உடல் வாராதென்றபடி. 18

ஓங்காரங் கெட்டதடி வுள்ளதெல்லாம் போசசுதடி
ஆங்காரங் கெட்டதடி யடியோ டறுததாண்டி.

(பொ-ரை) பிரணவமும் அழிந்தது. அதன் உள்ளிருந்த எல்லாத் தததுவங்களும் நசிததன. அதறகுமேல் ஆணவமுங் குன்றியது. இவை யாவையும் வேரறக் களைநதான் (குருநாதன்.)

(வி-ரை) எல்லாத தத்துவங்களுக்கும் பிறப்பிடமாயுள்ளது பிரணவம். அது கெடின் எல்லாத் தததுவங்களும் கெட்டபடியாம். பிரணவம்-சுத்தமாயை. அது நசித்தலும் ஆணவமலம் அகலும். 19

தரையாங் குடிலைமுதல் தட்டுருவ வெந்ததடி
இரையு மனத்திடும்பை யெல்லா மறுத்தாண்டி.

(பொ-ரை) நிலம்போல எல்லாவற்றிற்கும் தாரகமாக உள்ள குடிலை முதலிய தத்துவங்கள் நிலைகலங்கி வெந்து சாம்பராயின. (ஆகையால்) விவகாரஞ்செய்யும் மனத்துன்பங்கள் எல்லாவற்றையும் ஒழித்தான்.

(வி-ரை) குடிலை-சுத்தமாயை. இஃது எல்லாத தத்துவங்கட்கும் ஆதாரமாயிருத்தலான் "தரையாங் குடிலை" என்றார். 20

முன்னை வினையெல்லா முழுது மறுததாண்டி
தன்னை யறியவே தானொருத்தி யானேண்டி.

(பொ-ரை) பூர்வ கர்மங்க ளெல்லாவற்றையும் ஒழித்தான். அதனால் யான் என் சொரூபத்தை யறியத் தனியளாய் நிற்கலானேன்.

(வி-ரை) வினைப்பற்று அற்றதும் ஆதமதரிசனம் உண்டாம். அதுகாலை மலர் தோன்றுதென்க. 21

என்னையே நானறிய விருவினையு மீடழித்துத்
தன்னை யறியத் தலமெனக்குச் சொன்னாண்டி.

(பொ-ரை) இரண்டு வினைகளைக் கெடுத்து என்னை யானறிநது கொள்ளத தன்னை யறியும் பொருட்டுத் தானிருக்கும் இடத்தை யெனக்குச் சொன்னான்.

(வி-ரை) தன்னையறிந்தபின் தலைவனையறியும் உண்மையை விரித்தவாறும், 22

தன்னை யறிந்தேண்டி தனிக்குமரி யானேண்டி
தன்னந் தனியே தனியிருக்கும் பக்குவமோ.

(பொ-ரை) தன்னை யறிந்தேன். அறிந்து அவனோடு (தலைவ னோடு) கூடி அனுபவிக்கும் பக்குவப்பருவமடைந்தேன். இனித் தன்னந்தனியளாய் இருக்கும் பக்குவம்போலும்!

(வி-ரை) இனித் தத்துவங்களோடு கூடாது வாழ்வேன் என்ற படி. தன்னை யறிவதும் தலைவனை அறிவது மொன்றே. 23

வீட்டி லொருவரில்லை வெட்டவெளி யானேனடி
காட்டுக் கெறிததநிலா கனவாச்சே கண்டதெல்லாம்.

(பொ-ரை) நான் அடைந்தவீட்டில் ஒருவருமில்லை. அதைப் போல யானும் வெறும் வெளியாய் முடிந்தேன். ஆனபடியால் யான் பார்த்த விடயங்களெல்லாம் காட்டிற்குச் சந்திரிகை வீசிய நிலா வாகவும், சொப்பனமாகவும் முடிந்தன.

(வி-ரை) மோட்சத்தில் கருவி காண முதலிய தத்துவங்கள் ஒன்றுமில்லை. அத்தகைய தத்துவங்களை விவகாரத்தில் பொருளாக் கொண்டு அவைகளாலாய பயன்களை மெய்யாகக் கோடல் அறி யாமை என்றபடி. "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்" என்றார் ஔவையாரும். 24

நகையாரோ கண்டவர்கள் நாட்டுக்குப் பாட்டலவோ
பகையாரோ கண்டவர்கள் பார்த்தாருக் கேச்சலவோ.

(பொ-ரை) எல்லாவற்றையும் விடுத்துத் தன்னந்தனியளாய் வாழ்வதைப் பார்த்தவர்கள் என்னை நோக்கிச் சிரிக்கமாட்டார் களோ? அது தேசத்துக்கு ஒருபாட்டாக அன்றோ முடியும்? பார்த் தவர்களும் பகைக்கமாட்டார்களோ? கண்டவர்களுக்கு வசை யன்றோ?

(வி-ரை) ஆன்மாவின் இயல்பு சார்ந்ததன்வண்ணமா யிருத் தல். இப்பொழுது ஆன்மா தத்துவக்கூட்டங்களை விடுத்துத்

தனித்திருக்கும் நிலையைக் குறிப்பித்தவாறும். இனி ஆண்டவனோடு ஆன்மா கூடுதல் வேண்டுமென்பது. தத்துவ மொடுங்கினதும் குருபரன் திருவருள் பதிதல்வேண்டும். அதை நாடி "நகையாரோ ... ... " என்று கூறினர். 25

இந்நிலைமை கண்டாண்டி யெங்கு மிருந்தாண்டி
கன்னி யழித்தாண்டி கற்பைக் குலைத்தாண்டி.

(பொ-ரை) எங்கும் நிறைந்துள்ள தலைவன் இந்தத் தன்மையைக் கண்ணுற்றான். அவன் என் கன்னித்தன்மையைப் போக்கிக் கற்பை அழித்துவிட்டான்.

(வி-ரை) ஆன்மா தத்துவக்கூட்டங்களை விடுத்துத் தனித்து நிற்பதுகண்ட குருநாதன் ஆன்மாவை ஆட்கொண்டனன் என்க. 26

கற்புக் குலைத்தமையுங் கருவே ரறுத்தமையும்
பொற்புக் குலைத்தமையும் போத மிழந்தமையும்.

(பொ-ரை) கற்பழித்ததும், பிறவி வேரறுத்ததும், அழகு கெடுத்ததும், அறியாமை போக்கடித்ததும் (அன்றியும்.)

(வி-ரை) ஆன்மா ஆண்டவனோடு ஒன்றுபட்டு நுகர்ந்த இன்பத்தைக் குறிப்பித்தவாறும். 27

என்ன வினைவருமோ வின்னமெனக் கென்றறியேன்
சொன்னசொல் லெல்லாம் பலித்ததடி சோர்வறவே.

(பொ-ரை) இன்னும் எனக்கு என்ன வினைகள்வந்து சேருமோ என்பது எனக்குத் தெரியவில்லை, தளர்ச்சி நீங்க எனது குருநாதன் அருளிய உரைகள் எல்லாம் பலித்துவிட்டன. 28

கங்குல்பக லற்றிடத்தே காட்டிக் கொடுத்தாண்டி
பங்க மழித்தாண்டி பார்த்தானைப் பார்த்திருந்தேன்.

(பொ-ரை) இரவு பகல் இல்லாவிடத்தில் என்னைக் குறித்துக் காட்டினான், (அதனைக் கண்டதும்) எனது குற்றத்தைப் போக்கினான். அங்கு என்னை நோக்கிய ஒருவனை யான் நோக்கிக் கொண்டிருந்தேன். 29

சாதியிற் கூட்டுவரோ சாத்திரத்துக் குள்ளாமோ
ஓதி யுணர்ந்ததெல்லா முள்ளபடி யாச்சுதடி.

(பொ-ரை) என்னை யொருவன் இவ்வாறு கெடுத்தபடியால் இனி என்னைச் சாதியில் சேர்ப்பார்களா? இம்முறை நூல்வழிபட்டு நிற்குமோ? யான் ஓதித் தெரிந்துகொண்ட விடயங்களெல்லாம் உள்ளவாறு முடிந்தன.

(வி-ரை) சாதி யென்றது தத்துவத்தை. ஆண்டவனோடு கூடிய ஆன்மா மீண்டுந் தத்துவத்தில் தோய்வதில்லை. "கலந்தபின் பிரிவதில்லை" என்றார் அப்பர். 30

என்னகுற்றஞ் செய்தேனோ எல்லாருங் காணாமல்
அன்னை சுற்றமெல்லா மறியாரோ வம்புவியில்.

(பொ-ரை) எல்லாருங் காணாதிருக்க நான் என்ன தவறுதல் செய்தேனோ? யான் குற்றஞ் செய்ததும் செய்யாததும் அழகிய உலகத்தில் தாய் உறவினர் எல்லாரும் தெரிந்துகொள்ள மாட்டாரோ? 31

கொன்றாரைத் தின்றேனோ தின்றாரைக் கொன்றேனோ
எண்ணாதெல் லாமெண்ணு மிச்சை மறந்தேனோ.

(பொ-ரை) பல பிறவிகளில் என்னைக் கொன்றவர்களை யான் புசித்தேனோ? என்னைக் கொன்று புசித்தவர்களை யான் கொன்றேனோ? எண்ணாத விடயங்களை யெல்லாம் எண்ணும் விருப்பத்தை மறந்துவிட்டேனோ. 32

சாதியிற் கூட்டுவரோ சமயத்தோ ரெண்ணுவரோ
பேதித்து வாழ்ந்ததெல்லாம் பேச்சுக்கிட மாச்சுதடி.

(பொ-ரை) என்னைச் சாதியிற் சேர்ப்பார்களோ? சமயத்தவர்கள் என்னை நினைப்பார்களோ? எல்லாரையுங் கலங்கச்செய்து வாழ்ந்து வந்தது பேச்சுக்கிடமாக முடிந்தது. 33

கண்டார்க்குப் பெண்ணலவோ காணார்க்குக் காமமடி
உண்டார்க ளுண்டதெலா மூணல்லா துண்பர்களோ.

(பொ-ரை) பார்த்தவர்கட்குப் பெண்ணன்றோ? பாராதவர்கட்குக் காமமேயாம்; புசிப்பவர்கட்குப் புசிப்பன எல்லாம் உணவாகக் கொண்டன்றிப் புசிப்பார்களோ?. 34

கொண்டார்கள் கொண்டதெல்லாங் கொள்ளாதார் கொள்ளுவரோ
விண்டவர்கள் கண்டவரோ கண்டவர்கள் விண்டவரோ.

(பொ-ரை) அனுபவத்தில் அடைந்தவர்கள் அடைந்தனவெல்லாம் அவைகளை அடையாதவர்கள் அடைவார்களோ? அவ்வநுபவத்தைச் சொன்னவர்கள் அதைக்கண்டவர்களாவார்களோ? அதைக் கண்டவர்கள் சொன்னவர்கள் ஆவார்களோ?.

(வி-ரை) "கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்" என்பது ஆன்றோர் வாக்கு. 35

பண்டாய நான்மறைகள் பாடும் பரிசலவோ
தொண்டாய தொண்டருளந் தோற்றி யொடுங்குமதோ.

(பொ-ரை) அப்பரம்பொருள் பழைய நான்கு வேதங்களும் போற்றுந் தன்மையுடையதன்றோ? அடிமைப்பட்ட அடியவருள்ளத்தில் தோன்றி ஒடுங்குமல்லவோ?. 36

ஓத வரிதோ வொருவ ருணர்வரிதோ
பேத மறவெங்கும் விளங்கும் பெருமையன்காண்.

(பொ-ரை) அப்பொருள் சொல்லுவதற் கருமையானதோ? ஒருவரும் அறிவதற்கு அருமையானதோ? மாறின்றி யெங்கணும் விளங்கிக்கொண்டுள்ள பெருமை யுடையது. 37

வாக்கு மனமுங் கடந்த மனோலயன்காண்
நோக்க வரியதன்கா ணுண்ணரிய நுண்ணியன்காண்.

(பொ-ரை) வாக்கு மனங்கட்கு அப்பாற்பட்டுநிற்கும் மனோலயன். பார்க்கின்றதற்கு அருமையானவன். அதிநுட்பத்திற்கும் நுட்பமாக உள்ளவன்.

(வி-ரை) மனோலயன் - மனத்தில் லயப்படுகிறவன். மனோலயமடையாதவர்கள் பார்வைக்குத் தோன்றாதவன். மிக நுண்ணிய பொருளிலும் நுண்மையாய் வீற்றிருப்பவன் என்றபடி. 38

சொல்லுக் கடங்கான்காண் சொல்லிறந்து நின்றவன்காண்
கல்லு ளிருந்த கனலொளிபோ னின்றவன்காண்.

(பொ-ரை) சொல்லில் அடங்காதவன். சொற்கடந்து விளங்குபவன். கல்லுள்ளேயுள்ள நெருப்பொளிபோன்றவன்.

(வி-ரை) "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்"—தேவாரம். 39

சுட்டிறந்த பாழதனிற் சுகித்திருக்கச் சொன்னவன்காண்
வட்டி லெழுத்தோ எழுதினவன் கைப்பிழையோ.

(பொ-ரை) சுட்டி யுணர்தலைக் கடந்த வெட்டவெளியிலே இன்பவாழ்வைப் பெற்றிருக்க எனக்கு உபதேசித்தவன். அவன்

எனக்கு உரைத்த ஒருமொழி ஏட்டில் எழுதப்படும் எழுத்தாகுமோ?
அதை எழுதினவன் கைத்தவறோ?

(வி-ரை) சுட்டி யுணர்வன யாவும் அழிதன்மாலையன. சுட்டுணர்வு கடந்த ஒன்றே மோட்சமென்பது. அஃது எழுதமுடியாதது என்றபடி. 40

சும்மா விருக்கவைத்தான் சூத்திரத்தை நானறியேன்
அம்மா பொருளிதென வடைய விழுங்கினண்டி.

(பொ-ரை) என்னைச் சும்மாயிருக்கச் செய்தான். அதன் சூழ்ச்சியை நான் தெரிந்துகொள்ளவில்லை. ஆ! ஆ! சும்மா இருப்பதே பொருளென்று தெரிந்ததும் முற்றிலும் என்னை விழுங்கிவிட்டான்.

(வி-ரை) சும்மா யிருப்பதே சுகம் என்பது பழமொழி. தத்துவச் சார்பு உள்ளமட்டும் சும்மாயிருத்த லருமை. தத்துவங்கெட்டுக் குருமொழி பதிந்த உடன் சும்மா விருக்கும் நிலை கூடும்; தக்ஷிணாமூர்த்தியின் உண்மை தெளிக. சும்மா இருக்கும் நிலை பெற்றோர்க்கு உலகம் புலனாகாது. "சும்மா இருசொல்லற என்றலுமே - அம்மா பொருளொன்று மறிந்திலனே"—என்றார் அருணகிரியார். 41

பார்த்த விடமெல்லாம் பரமாகக் கண்டேண்டி
கோத்த நிலைகுலைத்த கொள்கை யறியேண்டி.

(பொ-ரை) கண்ட இடங்களெல்லாம் கடவுளாகக் கண்டேன். ஞானங் கைவாராத பெத்தகாலத்தில் உலகமுதலிய மாயாகாரியங்களை ஒழுங்குபடுத்திய முறையை இப்பொழுது கெடுத்து ஒன்றாகச் செய்த அவன் கொள்கையை யான் அறியேன்.

(வி-ரை) அத்துவிதநிலை அடைந்தேன் என்றபடி. 42

மஞ்சன மாட்டி மலர்பறித்துச் சாத்தாமல்
நெஞ்சுவெறும் பாழானே னின்றநிலை காணேண்டி.

(பொ - ரை) கடவுளுக்கு அபிஷேகஞ் செய்து பூக்களைக் கொய்து சூட்டாமல் மனதை வெறுஞ் சூந்நியமாக்கிவிட்டேன். அதனால் இறைவன் எழுந்தருளியுள்ள இடத்தைக் காணவில்லை.

(வி-ரை) ஆன்மா சிவமாக்கிவிட்டமையான் துவித பாவனையில்லை என்றபடி. துவித பாவனை யுள்ளமட்டும் சரியைத் தொண்டு செய்வது வழக்கு. அத்துவித நிலை யடைந்தோர்க்குச் சிவம் உருவமாக ஓரிடத்தில் தோன்றி விளங்கா தாகலின் "நின்றநிலை காணேண்டி" என்றார். 43

பாடிப் படித்திருந்தும் பன்மலர்கள் சாத்தாமல்
ஓடித் திரியாம லுருக்கெட்டு விட்டேண்டி.

(பொ-ரை) பல பாக்களை வாயினாற்பாடி நூல்களை வாசித்திருந்தாலும் பல பூக்களைக் கடவுளுக்குச் சூட்டாமலும், க்ஷேத்திர யாத்திரை செய்யாமலும், வீணே கெட்டுவிட்டேன்.

(வி-ரை) மலர் சூட்டல், பாராயணம், க்ஷேத்திரயாத்திரை முதலியன மோனநிலைக்குச் சோபானங்கள். இவைகளை முறையே செய்பவர்க்குக் குருநாதன் வாய்ப்பன். "மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாய் வயங்கினர்க்கு - வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றார் தாயுமானர். சிலவேளை சிவமும் சிலவேளை உலகமும் தோன்றப்பெறும் சீவன் முத்தர்களும் சரியைத் தொண்டு செய்வார்கள். என்னை? உலகம் தோன்றும்போது அவர் மனம் தத்துவத்தில் விழாதவாறு தடுக்கவேண்டி யென்க. முத்திநிலை யடைந்தவர்க்குத் தொண்டு வேண்டுவதில்லை. என்னை? அவர்க்கு உலகத் தோற்றமின்மையான் என்க. சிவமாந் தன்மை யெய்துதற்குச் சோபானங்களாகிய தொண்டுகளிலேயே கருத்தைப் பதியவைத்

திருப்போர் புண்ணியலோகங்களை அடைவான்றித் தேகமொழியும் பிறவாநிலை யெய்தார். தேகத்தை ஒழிக்க வேண்டுமானால் உருவவழிபாடு செய்தலாகாது. இவ்வுண்மையைச் சுவாமிகள் மேற்செய்யுளினும் இச்செய்யுளினும் விளக்கியவாறு காண்க. 44

மாணிக்கத் துள்ளொளிபோல் மருவி யிருந்தாண்டி
பேணித் தொழுமடியார் பேசாப் பெருமையன்காண்.

(பொ-ரை) மாணிக்கத்திலுள்ள ஒளியைப்போல விளங்கியிருந்தான். அவன் விரும்பி வணக்கஞ்செய்யு மடியார்களும் அறிவால் உணர்தலன்றி இன்ன தன்மையன் என்று எடுத்துச் சொல்லக் கூடாத சிறப்பினை யுடையவன். 45

அன்றுமுத லின்றளவு மறியாப் பருவமதில்
என்றும் பொதுவா யிருந்த நிராமயன்காண்.

(பொ-ரை) ஆதிகாலந்தொட்டு இற்றைக்காலம் வரையினும், அறிவு முதிராத வயதினும், எப்பொழுதும் பொதுவா யிருக்கின்ற நிராமயன்.

(வி-ரை) இறைவன் தனது விளக்கத்தை எல்லாரிடத்திலும் பொதுவாகவும், அடியார்களிடத்தில் சிறப்பாகவும் நிலைக்கச் செய்துள்ளான். அவனது சிறப்புவிளக்கத்தைப்பெறப் போதியபக்குவம் இன்னும் யான் வாய்க்கப் பெறவில்லை என்றபடி. 46

சித்தவி காரத்தாலே சின்மயனைக் காணாமல்
புத்தி கலங்கிப் புகுந்தேன் பொறிவழியே.

(பொ-ரை) மனவிகாரத்தால் அறிவு மயமான கடவுளைக் காணாமல் அறிவு திரிந்து ஐம்பொறி வழியாக உழன்றேன்.

(வி-ரை) ஐம்பொறி வழியாக உழலுமட்டும் ஆண்டவனைக் காண இயலாது என்றவாறு. 47

பத்தி யறியாமற் பாழிற் கவிழ்ந்தேனடி
ஒத்தவிட நித்திரையென் றொத்து மிருந்தேனடி.

(பொ-ரை) அன்பை யுணராமல் வீணான விடயங்களில் விழுந்தேன். பொருத்தமான இடங்களில் தூங்குவதே நல்லதென்று ஒருப்பட்டு மிருந்தேன். 48

செத்தாரை யொத்தேனடி சிந்தை தெளிந்தேனடி
மற்றுரு மில்லையடி மறுமாற்றங் காணேனடி.

(பொ-ரை) இறந்தவர்களைப் போன்றவனானேன். மனத்தெளிவடைந்தேன். மற்ற எவரும் என்னிடம் இல்லை. மறுமொழியுமில்லை.

(வி-ரை) புலன்களை யடக்கி அன்பின்வழி நின்றால் பிணத்தைப் போல் சும்மாவிருக்கும் ஒருநிலை கைகூடும். அதனால் சித்தசுத்தியும் ஞானத் தெளிவும் உண்டாகும். தெளிவு உண்டாகிய பின்னர் எப்பொருளுந் தோன்றமாட்டா. உரையைக் கேட்டுப் பதிலுரைக்க அந்நியர்களும் தோன்றமாட்டார்கள். 49

கலவியல்ல கேள்வியல்ல கைகாட்டுங் காரணங்காண்
எல்லையள வற்றதடி யெங்கு நிறைந்ததடி.

(பொ-ரை) ஞானமென்பது கல்வியால் வருவதன்று; கேள்வியால் வருவதன்று. அஃது இறைவன் சின்முத்திரையாகக் கைகாட்டுங் குறிப்பா லுணர்வது. அது வரம்பு கடந்தது; எங்கும் நீக்கமற விளங்குவது. 50

வாசா மகோசரத்தை மருவியிடங் கொண்டாண்டி
ஆசூச மில்லாண்டி யறிவுக் கறிவாண்டி.

(பொ-ரை) வாக்கு மனங்கட்கு எட்டாத ஓரிடத்தில் வீற்றிருந்து அதனையே தனக்குரிய இடமாக்கிக் கொண்டான். அவனுக்கு ஆகுசமில்லை. அவன் அறிவுக்கு அறிவாயிருப்பவன். 51

பத்துத் திசைக்கு மடங்காப் பருவமடி
எத்திசைக்கு மெங்கு மிடைவிடா தேகமடி.

(பொ-ரை) (இறைவன் வடிவம்) பத்துத்திசையிலுங் கொள்ளாதது. எத்திசையிலும் எங்கணும் இடையறாமல் நிற்கும் ஏக சொரூபன்.

(வி-ரை) ஒருவனே எங்கணும் வீற்றிருக்கின்றான் என்றபடி. 52

தித்திக்க வூறுமடி சித்த முடையார்க்குப்
பத்திக் கடலுட் பதித்தபாஞ் சோதியடி.

(பொ-ரை) அன்பாகிய சமுத்திரத்தில் அமிழ்ந்த மேலான சோதிசொரூபன். அவனை இடையறாது தியானஞ்செய்யும் மனமுடையவர்களுக்கு இனிமையாகச் சுவைக்கின்றவன்.

(வி-ரை) "தின்று கண்டோர்க்கு அது தித்தித்தவாறே"—திருமூலர். 53

உள்ளுணர்வாய் நின்றவர்த முணர்வுக் குணர்வாண்டி
எள்ளளவு முள்ளதிலே யேறிக் குறையாண்டி.

(பொ-ரை) அக உணர்வாக நிற்பவர்களுடைய அறிவிற்கு அறிவாக இருப்பவன். தனது பூரணத்துவத்தில் சிறிதும் ஏற்றத் தாழ்வடையாதவன்.

(வி-ரை) என்றும் எங்கணும் ஒரு தன்மையாய் விளங்குபவன் என்றபடி. 54

தூருந் தலையுமிலான் றோற்ற மொடுக்கமிலான்
ஆரு மறியாம லகண்டமாய் நின்றாண்டி.

(பொ-ரை) அடிமுடியில்லாதவன்; பிறப்பு இறப்பு இல்லாதவன். எவராலும் உணரப்படாமல் அகண்டாகாரமாய் வீற்றிருக்கின்றனன். 55

எத்தனையோ வண்டத் திருந்தவர்க ளெத்தனைபேர்
அத்தனைபே ருண்டாலும் அணுவுங் குறையாண்டி.

(பொ-ரை) எல்லா அண்டங்களிலுமுள்ள யாவரும் அவனது இன்பத்தை நுகர்ந்தாலும் சிறிதுங் குறைபாடின்றி விளங்குபவன். ()

வாக்கு மனமும் வடிவுமிலா வான்பொருள்காண்
போக்கு வரவுமிலான் பொருவரிய பூரணன்காண்.

(பொ-ரை) வாக்கு மனம் உருவம் இவையில்லாதவன். நித்திய வஸ்துவாக விருப்பவன். போக்கு வரவு இல்லாதவன். ஒப்புசொல்லுவதற்கு அருமையான பரிபூரணன். 57

காட்சிக் கெளியான்காண் கண்டாலுங் காணான்காண்
மாட்சிமனம் வைத்தார்க்கு மாணிக்கத் துள்ளொளிகாண்.

(பொ-ரை) திருவருள் பெற்றவர் தங்கண்ணுக்குச் சுலபமாகத் தோன்றுபவன். அங்ஙனம் கண்ணுக்குப் புலப்பட்டாலும் இத்தன்மையன் எனச் சொல்ல இடம்பெறாதவன். ஞானக்குறியில் உள்ளத்தை நாட்டினவர்க்கு மாணிக்கத்தினுள்ளே ஒளிரும் பிரகாசத்தைப் போன்றவனா யிருப்பன். 58

வாழ்த்தி யவனை வழிப்பட்டால் மன்னுயிர்கள்
தோற்ற வரியான்காண் சொல்லிறந்த சோதியன்காண்.

(பொ-ரை) நிலைபெற்ற ஆத்மகோடிகள் அவனைத் தோத்திரஞ் செய்து வணங்கினாலும் அவன் கண்ணுக்கு எதிராகத் தோன்றுபவனல்லன். உரைகடந்த பேரொளியன் (ஆகலான்.) 59

ஐய மறுததவனை யாராய்வா ருண்டானால்
வையகத்தே வந்து மலர்பாதம் வைத்திடுவான்.

(பொ-ரை) சந்தேக விபரீதங்களை யொழித்துப் பொருளுண்மை நிச்சயித்து, அவனை ஆராய்ச்சி செய்பவர் இருப்பாராயின் அப்பரமன் அவர்பொருட்டுக் குருமூர்த்தியாக உலகத்திலே வந்து திருவடித் தாமரைகளால் தீட்சை செய்வான். 60

அணுவுக்கு மேருவுக்கு மகம்புறமாய் நின்றான்காண்
கணுமுற்று ஞானக் கரும்பின் றெளிவான்காண்.

(பொ-ரை) மிக நுண்ணிய பொருளிலும் மிகப் பருப்பொருளிலும் உள்ளும் புறமுமாய் வீற்றிருப்பவன். ஞானமென்னுங் கணுமுற்றிய கரும்பில் ஒழுகும் தேனின் சுவைபோன்றவன். 61

எங்காளு மிங்காளு மிப்படியா மப்படியாய்ச் [ண்.
சொன்னாலுங் கேளான்காண் சோத்திரத்திற் கொள்ளான்கா

(பொ-ரை) எக்காலத்திலும் இக்காலததிலும் இப்படி அப்படி என்று சொன்னாலுங் காது கொடுத்துக் கேட்கமாட்டான். 62

ஆத்தாளுக் காத்தாளா மப்பனுக்கு மப்பனுமாம்
கோத்தார்க்குக் கோத்தநிலை கொண்ட குணக்கடல்காண்.

(பொ-ரை) தாய்க்குத் தாயாகவும் தந்தைக்குத் தந்தையாகவும் மற்ற உறவினர்கட்கு உறவினராகவும் நின்று அருள்செய்யும் திருவருட்கடல் (எமது கடவுள்.) 63

இப்போ புதிதோடி யெத்தனைநா ளுள்ளதடி
அப்போதைக் கப்போ தருளறிவுந் தந்தாண்டி.

(பொ-ரை) இன்று தோன்றிய புதிய பொருளோ? எத்தனையோ காலமாக இருப்பதன்றோ? (அநாதியாக இருப்பது) ஜீவர்கள் பரிபக்குவம் அடையும் அவ்வக்காலங்களில் திருவருளையும் ஞானத்தையுங் கொடுப்பது. 64

பற்றற்றார் பற்றாகப் பற்றி யிருந்தாண்டி
குற்ற மறுத்தாண்டி கூடி யிருந்தாண்டி.

(பொ-ரை) அகப்பற்று புறப்பற்றுக்களை விட்டவர்களைப் பற்றாகப் பற்றிக்கொண்டான்; எனது பாசத்தை யொழித்தான்; என்னோடு அத்துவிதமாகக் கலந்திருந்தான். 65

வெட்ட வெளியிலெனை மேவி யிருந்தாண்டி
பட்டப் பகலிலடி பார்த்திருந்தா ரெல்லோரும்.

(பொ-ரை) பட்டம் பகலிலே சிதாகாசத்திலே என்னில் பொருந்தி யிருந்தான். இதை எல்லாரும் பார்த்திருந்தார். 66

வாழ்வான வாழ்வெனக்கு வந்ததடி வாழாமல்
தாழாமற் றாழ்ந்தேனடி சற்றுங் குறையாமல்.

(பொ-ரை) என்றும் அழியாமல் வாழும்படியான திருவருள் வாழ்வு எனக்குக் கைகூடிற்று, அதில் யான் நிலைத்திராமலும் அதினின்றுங் கீழ்ப்படாமலும் சிறிதுங் குறையாமல் ஆனந்தநிலையில் தோய்ந்துவிட்டேன். 67

பொய்யான வாழ்வெனக்குப் போதுமெனக் காணேனடி
மெய்யான வாழ்வெனக்கு வெறும்பாழாய் விட்டதடி.

(பொ-ரை) நிலையுதலில்லாத உலக வாழ்வு எனக்குச் சாலு மென உள்ள நிறைவு கொண்டேனில்லை. உண்மையான வாழ்வு எனக்கு ஒன்றுமில்லா வெளியாக முடிந்தது. 68

கன்னி யழித்தவனைக் கண்ணாரக் கண்டேனடி
என்னியல்பு நானறியே னிதென்ன மாயமடி.

(பொ-ரை) எனது கன்னிப் பருவத்தைக் கெடுத்தவனைக் கண்ணாரக் கண்டேன். என்னுடைய தன்மையை யான் அறியாம லிருந்தேன். இஃதென்ன மாயம்?

(வி-ரை) கடவுளைப்போல ஆன்மாவும் சர்வவியாபகம் முதலிய குணங்களை உடையது என்பது சாத்திரக்கொள்கை. அத்தகைய ஆன்மாவைத் தேகமாகவும் கண்டப்பொருளாகவும் பெத்ததசையில் கொண்டிருப்பது அறியாமை என்றபடி. 69

சொல்லாலே சொல்லுதற்குச் சொல்லவா யில்லையடி
எல்லாருங் கண்டிருந்து மிப்போ தறியார்கள்.

(பொ-ரை) (இறைவன் என்னோடு கலந்திருப்பதையும் அக் கலப்பால் விளையும் இன்ப நலனையும்) வார்த்தையால் பிறர்க்கெடுத்து விளக்கவேண்டுவதற்கு வாயில்லை. அதனை எல்லாரும் நூலறிவால் அறிந்திருந்தும் இப்போது அறியமாட்டார்கள்.

(வி-ரை) உண்முகமாக அநுபவிக்கும் இன்பநிலையை விரித் துரைக்கப் புகுங்கால் மனச்சேட்டை உண்டாகும். அச்சேட்டையால் தோன்றிய இன்பங்கெடும். இன்பநலத்தை அநுபவித் தறியவேண்டு வதே யன்றி வாயினால் எடுத்து விளம்புந்தன்மைய தன்றென்பது வெளிப்படை. கடவுள் கலப்பையும் அதனால் தோன்றும் இன்பத் தையும் எல்லாரும் பகிர்முகமாக நூலறிவால் உணர்கின்றார்; ஆனால் பெத்த தசையில் மலமறைப்பால் அநுபவத்தில் அறியமாட்டார் என்றபடி. 70

கண்மாய மிட்டாண்டி கருத்து மிழந்தேண்டி
உண்மாய மிட்டவனை யுருவழியக் கண்டேண்டி.

(பொ-ரை) கண்சாடையால் வஞ்சனை செய்தான். அதனால் யான் மன உறுதியைக் கெடுத்துக்கொண்டேன். இவ்வாறு அந்தர்முகமாக வஞ்சனை செய்தவனை வடிவமில்லாதிருக்கக் கண்டேன். 71

என்னசொல்லப் போறேனே விந்த வதிசயத்தைக்
கன்னி யிளங்கமுகு காய்த்ததடி கண்ணூர.

(பொ-ரை) அவனை நோக்கிக்கொண் டிருந்தபோது என் கண் கவர ஓர் அழகிய இளையபாக்குமரமானது குலைசாய்த்தது. இந்த அற்புதத்தை என்னென்று சொல்லுவேன்? 72

ஆர்ந்தவிட மத்தனையு மருளா யிருக்குமடி
சார்ந்த விடமெல்லாஞ் சவ்வாது மணக்குதடி.

(பொ-ரை) இறைவனோடு கலந்த இடங்க ளெல்லாம் திருவருள் மயமாக இருக்கின்றன. சென்ற இடமுழுவதும் சவ்வாது வாசனை வீசுகிறது. 73

இந்த மணமெங்கு மியற்கைமண மென்றறிந்து
அந்தச் சுகாதீதத தருட்கடலில் மூழ்கினண்டி.

(பொ-ரை) இந்த வாசனை எங்கும் வீசும் இயற்கை வாசனை யென்று அறிந்து அந்த ஆனந்த அதீதமாகிய திருவருட் கடலில் திளைத்தேன். 74

இரும்பினுறை நீர்போல வெனைவிழுங்கிக் கொண்டாண்டி
அரும்பினுறை வாசனைபோ லன்றே யிருந்தாண்டி.

(பொ-ரை) காய்ச்சிய இரும்பு நீரை விழுங்குவதுபோல் என்னை விழுங்கிவிட்டான். பூவில் உள்ள வாசனைபோல என்னிற் பிரியாது இருந்தான். 75

அக்கினிகற் பூரத்தை யறவிழுங்கிக் கொண்டாப்போல்
மக்கினம் பட்டுள்ளே மருவி யிருந்தாண்டி.

(பொ-ரை) நெருப்பு கற்பூரத்தை எரித்து ஒன்றுமில்லாமல் செய்வதுபோல என்னையும் ஒருவருணராவண்ணம் உட்புகுந்து பொருந்தி மறையச் செய்தான். 76

கடல்நீரு மாறும்போற் கலந்துகரை காணேண்டி
உடலு முயிரும்போ லுட்கலந்து நின்றாண்டி.

(பொ-ரை) கடல்நீரில் ஆற்றுநீர் கலப்பதுபோல் யான் கடவுளிற் கலந்து கரைகாணாதிருக்கின்றேன். இறைவன் என்னிடத்தில் உடலில் உயிர் கலந்து இருப்பதுபோலக் கலந்து நிற்கின்றான்.

(வி-ரை) சிவஞானபோதம் இரண்டாஞ் சூத்திரம் பார்க்க. 77

பொன்னுமுரை மாற்றும்போற் பொருவரிய பூரணன்காண்
மன்னுமனு பூதியடி மாணிக்கத் துள்ளொளிபோல்.

(பொ-ரை) பொன்னில் அதன்மாற்றுப் பிரிவின்றியிருப்பது போலச் சீவர்களிடத்தில் நீக்கமின்றி நிறைந்து நிற்பன். ஒப்பற்ற பரிபூரணன். அவன் மாணிக்கத்தில் ஒளிபோல உயிர்களிடத் திருத்தலை யறிவது சிவாநுபூதியாம். 78

கரைகரை யில்லாண்டி கரைகாணாக் கப்பலடி
எங்குமள வில்லாண்டி யேகமாய் நின்றாண்டி.

(பொ-ரை) எல்லை அளவு முதலியன இல்லாதவன்; துறை காணாத கப்பலையன்; எங்கும் நிற்கின்றவன்; ஏகன். 79

தீவகம் போலென்னைச் சேர்ந்தபர சின்மயன்காண்
பாவமொன் றில்லாண்டி பார்த்தஇடமெல் லாம்பரங்காண்.

(பொ-ரை) மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல் தன்னை என் வடிவாகக் காட்டி என்னைப் பற்றக் கூடிய மேலான ஞானரூபன்; பாவமில்லாதவன்; கண்ட விடமெல்லாந் தோன்றும் மேலான பொருளா யிருப்பவன். 80

உள்ளார்க்கு முள்ளாண்டி யூருமில்லான் பேருமில்லான்
கள்ளப் புலனறுக்கக் காரணமாய் வந்தாண்டி.

(பொ-ரை) அவனையென்றும் உள்ளத்தில் வைத்துப் போற்று பவர்கட்கு அவர்கள் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டிருப்பன். அவனுக்கு ஊருமில்லை; பேருமில்லை; கொடிய ஐம்புலன்களை அழிக் குங் காரணமாகக் குருவடிவங் கொண்டு வந்தான். 81

அப்பிறப்புக் கெல்லாம் அருளா யமர்ந்தாண்டி
இப்பிறப்பில் வந்தா னிவனுகு மெய்ப்பொருள்காண்.

(பொ-ரை) முன்னைப் பிறவிகடோறும் திருவருளாக எனக்குத் துணைசெய்தான். இப்பிறப்பில் குருவாகவந்து ஆண்டுகொண்டான். இவனே உண்மைப் பொருள்.

(வி-ரை) பிறவிகடோறும் சிவசத்தியாகிய திருவருட்சத்தி திரோ தான சக்தியாக நின்று ஆத்மாக்களைப் பந்தநிவர்த்திசெய்து வருகின்ற தாகலானும், அவ்வருளுக்கு வேறாக இறைவன் பிரிந்து நிற்றலின் மையானும், அவ்வருளே அவன் வடிவம் ஆகலானும் "அருளா யமர்ந்தாண்டி" என்றார். 82

நீரொளி போலெங்கு நிறைந்த நிராமயன்காண்
பாரொளி போலெங்கும் பரந்த பராபரன்காண்.

(பொ-ரை) நீரொளிபோல் எங்கும் நிறைந்தவன். பூமியொளி போல எங்கும் பூரணமாக விளங்குபவன். 83

நூலா லுணர்வரிய நுண்மையினு நுண்மையன்காண்
பாலாறு சர்க்கரைபோற் பரந்தபரி பூரணன்காண்.

(பொ-ரை) கலைஞானத்தால் அறிகின்றதற்கு அருமையான மிக நுண்ணியபொருளினும் நுண்ணியதாக இருப்பவன். பாலிற் கலந்த சர்க்கரைபோல எங்கும் நிறைநத பரிபூரணன். 84

உளக்கண்ணுக் கல்லா தூன்கண்ணு லோருமதோ
விளக்குச் சுடரொளிபோல் மேவி யிருந்தாண்டி.

(பொ-ரை) ஞானக் கண்ணுக் கல்லாமல் ஊனக் கண்ணால் உணரப்படாதவன். தீப ஒளிபோல ஞானக்கண்ணுடையாரிடத்தில் பொருந்தியிருப்பன். 85

கல்லு ளிருந்த கனலொளிபோற் காரணமாய்ப்
புல்லி யிருந்தும் பொருவரிய பூரணன்காண்.

(பொ-ரை) எல்லாப்பொருள்களுக்குங் காரணமாகப் பாறையி லிருந்த நெருப்பொளிபோல் பொருந்தியிருந்தாலும் அவன் ஒப் பற்ற பரிபூரணப்பொருள். 86

பொற்பூவும் வாசனைபோற் போதம் பிறந்தார்க்குக்
கற்பூவும் வாசனைபோற் காணுக் கயவருக்கு.

(பொ-ரை) ஞானோதயம் உண்டானவர்கட்கு அழகிய பூவி லுள்ள வாசனைபோலவும், அஃதில்லார்க்குக் கற்பூவிலுள்ள வாசனை போலவும் எங்கடவுள் விளங்குவன்.

(வி-ரை) கற்பூவிற்கு வாசனை யின்மை வெளிப்படை. இல்பொருளுவமை. 87

மைக்குழம்பு முத்தும்போல் மருவிமற வாதவர்க்குக்
கைக்குட் கனியாகும் கருவறுத்த காரணர்க்கு.

(பொ-ரை) தன்னை மறவாதவர்களுக்கு மைக்குழம்பு முத்து இவைகள் போலவும் பிறவியை யொழித்த பெரியோர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோலவும் இருப்பன் (இறைவன்) 88

பளிங்கிற் பவளமடி பற்றற்ற பாவலர்க்குக்
கிளிஞ்சிலை வெள்ளியென்பார் கிட்டாதார் கிட்டுவரோ.

(பொ-ரை) அகப்பற்று புறப்பற்றுக்களை யொழித்தவர்கட்குக் கண்ணாடியிற் பவளத்தைப் போன்றிருப்பன். கிளிஞ்சலை வெள்ளியென்று மருளுகின்றவர் அவனை அடையாதவர். அத்தகையினர் அவனை அடைவரோ? 89

எட்டுக் கடங்காண்டி யெழுத்திற் பிறவாண்டி
நாட்டி னரிகளெல்லா நற்புரவி செய்தாண்டி.

(பொ-ரை) நூலிற் கட்டுப்படாதவன்; எழுத்தில் தோன்றாதவன் (எழுத்தால் அறியப்படாதவன்) நாட்டிலே யிருந்த நரிகளெல்லாவற்றையும் சிறந்த குதிரையாகச் செய்தவன்.

(வி-ரை) சொற்பொருள் கடந்தவனாயினும் அன்பர் பொருட்டு வடிவந் தாங்கிப் பல அருளாடல்கள் புரிவான் என்றவாறு. 90

பஞ்சப் பிரளயத்து மிஞ்சி யிருப்பாண்டி
நஞ்சு பொதிமிடற்று ணயனத் தழல்விழியான்.

(பொ-ரை) ஐந்துவகைப் பிரளயத்திலும் அழியாமல் நிற்பவன். அவன் விடம் பொருந்திய கண்டத்தை யுடையவன்; நெற்றியில் அக்கினிக்கண்ணை யுடையவன். 91

அகங்காக்கும் புறங்காக்கும் அளவிலா வண்டமுதல்
செகங்காக்குங் காணாத திசைபத்துங் காக்குமடி.

(பொ-ரை) அவன் உட்பொருளையுங் காப்பன்; புறப்பொருளை யுங் காப்பன்; கட்புலனுக் கெட்டாத எண்ணிறந்த அண்டங்களைக் காப்பன்; பத்துத் திசைகளையும் காப்பன். 92

பேசாப் பிரமமடி பேச்சிறந்த பேரொளிகாண்
ஆசா பாசங்கள் அணுகாத பேரொளிகாண்.

(பொ-ரை) (அவன்) பேசவொண்ணுப் பிரமம்; வார்த்தை கடந்த பேரொளி; ஆசையென்னும் பிசாசுகள் நெருங்கப்பெறாத பரஞ்சோதி. 93

தேச மிறந்தவன்காண் திசையிறந்த தென்கடல்காண்
ஊசி முனையூன்ற வில்லா வுறுபொருள்காண்.

(பொ-ரை) (அவன்) உலகங் கடந்தவன்; திக்குக் கடந்த தென்சமுத்திரம்; ஊசி முனையை யூன்றவும் இடமில்லாமல் எங்கும் வியாபகமாக விருக்கின்றான். 94

சிப்பியில் முத்தொளிகாண் சின்மய நோக்கில்லார்க்கு
அப்பி லொளிபோ லமர்ந்த வரும்பொருள்காண்.

(பொ-ரை) ஞான நாட்டம் உடையோருக்குச் சிப்பியில் முத்தொளி போன்றிருப்பன்; அஃதில்லார்க்கு நீரிலொளிபோன்றிருப்பன். அத்தகைய அரும்பொருள். 95

ஆலா விருட்சமடி அளவிலாச் சாகையடி
மேலாம் பதங்கள்விசும் பூடுருவு மெய்ப்பொருள்காண்.

(பொ-ரை) ஆலமரத்தைப்போன்றவன். அதன் கிளைகளைப் போல எண்ணிறந்த மூர்த்தபேதங்களை யுடையவன். உயர்ந்த பதங்களிலும், ஆகாசத்திலும் ஊடுருவிப்பாய்ந்துள்ள உண்மைப் பொருளாக இருப்பவன். 96

வங்கிஷமெல் லாங்கடந்து மருவுமா மலர்ப்பதங்காண்
அங்கிஷ மாயெங்கும் ஆய்ந்த வரும்பொருள்காண்.

(பொ-ரை) சாதி குலங்கள் எல்லாவற்றையுங் கடந்து சித்திக்கும் அப் பரம்பொருளின் திருவடித்தாமரைகள். அறிவுடையோர் கூறுகூறாக அளந்து ஆராய்ச்சி செய்த அருமையான பரம் பொருள். 97

நாமகட்ட மானதடி நவிலவிட மில்லையடி
காமனைக்கண் ணாலெரிக்கக் கனல்விழி தந்த காரணன்காண்.

(பொ-ரை) மன்மதனைக் கண்ணால் தகிக்க அக்கினிக் கண்ணைத் திறந்த முதல்வன். அவனது நடனம் புதியதாக முடிந்தது. அதைச் சொல்லவும் இடமில்லை. 98

கொட்டாத செம்பொனடி குளியாத் தரளமடி
எட்டாத கொம்பிலடி யீப்புகாத தேனமுதம்.

(பொ-ரை) கம்மியனால் தட்டாத செம்பொன்; முழுகி யெடாத முத்து, எட்டாத கொம்பிலே ஈநுழையாத தேனமிர்தம். 99

காணிப்பொன் னாணியுடன் கல்லுரைமாத தின்னதென்றே
ஆணி யுடன்கூட்டி யடங்கவிட்டுக் கொண்டாண்டி.

(பொ-ரை) உயர் பசும் பொன்துண்டைக் கல்லிலுரையாமலே அதன் தன்மையை யுணருமாபோல, எதையுஞ் சோதனைக்குட் படுத்தாது எல்லாவற்றையும் இயல்பாக அறிந்து கொண்டான்.

அளவிறந்த வண்டத்தா ரத்தனைபே ருண்டாலும்
பிளவளவுந் தான்சற்றும் பேசாப் பிரமமடி.

(பொ-ரை) எண்ணில்லாத அண்டங்களில் உள்ளார் எல்லாரும் ஒருங்கே பங்கிட்டு அனுபவித்தாலும் சிறிதும் பேசாதபிரமம். 101

கனனெஞ்சி னுள்ளே கழுநீலம் பூததாப்போல்
என்னெஞ்சி னுள்ளே யிணையடிகள் வைத்தாண்டி.

(பொ-ரை) கல்போன்ற என் நெஞ்சில் கழுநீலமலர் மலர்ந் தாற்போல் என் நெஞ்சிலே இரண்டு திருவடிகளையும் பதியவைத் தான். 102

வேதப் புரவியடி விரைந்தோடி யும்மறியார்
காதற்ற ஞானமடி காண்பார்க் கருத்துடையோர்.

(பொ-ரை) அவன் ஏறுவது வேதமாகிய குதிரை; அதனைப் பின்தொடர்ந்து வேகமாக ஓடியும் அவனை அறியமாட்டார்கள்; அவனை யறியும் ஞானம் காதினால் கேளாததாகும் (மௌன நிலை) அவன் தன்னை ஞானக்கண்ணால் தரிசிப்போருடைய மனதைவிட் டகலாதவன். 103

பாச வினையைப் படப்பார்த்த பார்வையுடன்
நேசத்தைக் காட்டியடி நில்லென்று சொன்னாண்டி.

(பொ-ரை) பாசவினை அழியச் சட்சுதீட்சை செய்த திரு நோக்கத்துடன் அன்பையுங் காட்டி நிட்டையிலிரு என்று அரு ளிச்செய்தான். 104

ஓசை யொடுங்குமிட மோங்காரத் துள்ளொளிகாண்
பேசா திருக்கும் பிரமமிது வென்றாண்டி.

16

(பொ-ரை) சப்தம் அடங்கும் ஸ்தானத்தைத் தனக்கிடமாகக் கொண்டவன்; பிரணவத்துள் ஒளியாயிருப்பவன்; பேசாத மௌனநிலையே பிரமநிலை என்று அருளிச்செய்தான். 105

சின்மய நன்னோக்காற் சிற்சொருபங் காட்டியெனைத்
தன்மயமா யாக்கியே தானவனாய் நின்றாண்டி.

(பொ-ரை) ஞானப் பார்வையால் (என் மலத்தைக் கெடுத்து) தனது ஞானவடிவத்தை எனக்குக் காண்பித்து, என்னைத் தன்மயமாக்கித் தான் அவனாக நின்றான்.

(வி-ரை) தத்வமசி அகம் பிரமாஸ்மி என்னும் மகாவாக்கியப் பொருளை விளம்பியவாறும். 106

தானென்னைப் பார்த்தாண்டி தன்னைத்தா னல்லாமல
நானென்ன சொல்லுவண்டி நவிலவிட மில்லையடி.

(பொ-ரை) அவன் என்னைப் பார்த்தான். அங்ஙனம் பார்த்து தன்னைத்தான் அல்லாமல் (வேறொருவரையல்ல) இதை நான் என்னவென்று சொல்லுவேன்? சொல்வதற்கும் இடமில்லை. 107

இன்றிருந்து நாளைக் கிறக்கிறபே ரெல்லோரும்
என்றுபரி பூரணத்தி லினிதிருக்கச் சொன்னாண்டி.

(பொ-ரை) இன்று உயிருடனிருந்து நாளை மரித்துப்போகும் உயிர்களெல்லாரையும் எப்பொழுதும் பரிபூரணத்திலே நிலைத்திருக்கும்படி (தட்சணாமூர்த்தமாக எழுந்தருளிச் சின்முத்திரைவாயிலாக) அருளிச்செய்தான. 108

பார்க்கி லெளிதலவோ பற்றற்ற பற்றலவோ
ஆர்க்கு மிடங்காட்ட வவனிதனில் வந்தாண்டி.

(பொ-ரை) எல்லா உயிர்கட்கும் உறுதி யிடத்தைக் காட்ட உலகத்தில் குருமூர்த்தியாக எழுந்தருளிவந்தான். ஞானவிழியாற்

பார்த்தால் எளிதாகத் தோன்றுவன். பாசப்பற்றை யழித்த திருவருட் பற்றாயிருப்பவன். 109

இத்தனை காலமடி யிறந்து பிறந்ததெல்லாம்
இத்தனையு மில்லையடி யிரும்பினுறை நீரானேன்.

(பொ-ரை) இத்தனை நாளாக இறந்து பிறந்த தொழில்கள் எல்லாம் இனியில்லை யெனும்படியாயின, நான் இரும்புண்ட நீரானேன். 110

எக்காலம் பட்டதடி யிறந்தது பிறந்ததெலலாம
அக்கால மெல்லாம் அழுந்தினே னரகில்.

(பொ-ரை) பிறப்பு இறப்புக்கள் எத்தனைகாலம் எனக்கு உண்டாயினவோ அத்தனைகாலமெல்லாம் நான் நரகத்தில் அழுந்தினவனானேன். 111

காலங் கழிந்ததடி கர்மமெல்லாம் போச்சுதடி
நாலு வகைக்கருவு நாமமற்ற மாச்சுதடி.

(பொ-ரை) காலமென்பது என்னை விட்டகன்றது, கர்மங்களெல்லாம் ஒழிந்தன; நால்வகைப் பிறப்பும் அறவே ஒழிந்தது. 112

முப்பாழுக் கப்பால் முதற்பாழ் முழுமுதலாய்
இப்போது வந்தான்காண் எனைவிழுங்கிக் கொண்டான்காண்.

(பொ-ரை) மூன்று பாழுக்கு மேலாக முற்பாழிலுள்ள கடவுளாய் இப்பொழுது என் எதிரில் எழுந்தருளினான். அவன் என்னை விழுங்கிக்கொண்டான். 113

பாலின்க ணெய்யிருந்தாற் போலப் பரஞ்சோதி
ஆலிங்க னஞ்செய் தறவிழுங்கிக் கொண்டாண்டி.

(பொ-ரை) பாலினிடத்திலே நெய்யிருந்தாற்போலப் பரஞ் சோதியாகிய கடவுள் என்னைத் தழுவி முழுவதும் விழுங்கிக் கொண்டான். 114

நெத்தபட மானேனண்டி தீயிரும்பி னீரானேன்
ஒத்தவிட நித்திரையென் றோது முணர்வறிந்தேன்.

(பொ-ரை) (நான் கடவுளோடு ஐக்கியப்பட்டேன்.) நெருப் பிற்பட்ட அணியானேன்; இரும்புண்ட ஜலமானேன். தகுந்த இடத்தில் யோக நித்திரை செய்யவேண்டுமென்று சொல்லும் அறிவை யுணர்ந்தேன். 115

ஒப்பு முவமையுமற் றோதவரி தாயபொருள்
இப்பூவி னிற்குருவே யென்னவந்தோன் றாள்வாழி.

(பொ-ரை) தாஷ்டாந்த திருஷ்டாந்தங்களைக் கடந்து சொல்ல முடியாத பரம்பொருள், இந்த உலகத்திலே குருமூர்த்தி யென்று சொல்லும்படியாக எழுந்தருளி வந்தவனுடைய திருவடிகள் வாழ்க. 116

ஒப்பாரி சொல்லிடினு முவமை பிழைத்திடினும்
முப்பாழுங் கற்றுணர்ந்தோர் முன்னோர் பொறுத்தருள்வார்.

(பொ-ரை) மூவகைப் பாழையும் ஓதியுணர்ந்த முதல்வர் ஒப்பாரி சொல்லி யழுதாலும் திருஷ்டாந்தம் பழுதுபட்டாலும் பொறுத்தருள்வார். 117

## இறந்தகாலத்திரங்கல்

வார்த்தைத் திறமில்லா மனிதருக்குப் புன்சொல்லாஞ்
சாத்திரங்கள் சொல்லிச் சதுரிழந்து கெட்டேனே.

(பொ-ரை) சொல்லுறுதியில்லாத மனிதருக்கு அற்பவார்த்தைகளாகிய சாத்திரங்களை எடுத்துச் சொல்லி அதனால் எனது தன்மையைப் போக்கிக் கெட்டுவிட்டேன். 1

மெத்தமெத்த செல்வாக்கில் வேறு மருளடுத்துத்
தத்தித் தலைகீழாய்த் தானடந்து கெட்டேனே.

(பொ-ரை) அதிக செல்வாக்கினால் பலவகை மயக்கங்கள் தொடர்ந்து செருக்கித் தாறுமாறாக நடந்து கெட்டேன். 2

வழக்கந் தலங்களினு மண்பெண்பொன் னாசையினும்
பழக்கந் தவிராமற் பதியிழந்து கெட்டேனே.

(பொ-ரை) நான் வசித்துப் பழகிய இடங்களிலும் மண் பெண் பொன் என்னும் மூவாசையிலும் மனதைப் பதித்துச் செய்து கொண்ட பழக்கத்தை ஒழித்துக்கொள்ளாமல் அடையவேண்டிய ஓரிடத்தைப் போக்கிக் கெட்டேன். 3

ஆணி பொருந்து மரும்பூமி யத்தனையுங்
காணி நமதென்று கனம்பேசிக் கெட்டேனே.

(பொ-ரை) உறுதியான வளங்களையுடைய அருமையான பூமி காணி முதலிய எல்லாவற்றையும் நம்முடையன வென்று பெருமை பேசிக் கெட்டேன். 4

ஆசார மில்லாத வரச ருடன்கூடிப்
பாசாங்கு பேசிப் பதியிழந்து கெட்டேனே.

(பொ - ரை) ஒழுக்கமில்லாத இராஜாக்களுடன் சேர்ந்து போலியுரைகளைப் பேசி அடையவேண்டிய பதியை அடையாமல் கெட்டேன். அசடருடன் என்றும் பாடம். 5

குருமார்க்க மில்லாக் குருட ருடன்கூடிக்
கருமார்க்கத் துள்ளே கருத்தழிந்து கெட்டேனே.

(பொ-ரை) குருநெறி யில்லாத குருடர்களுடன் சேர்ந்து பிறவி வழியில் விழுந்து மனங்கெட்டு அழிந்தேன். 6

ஆல மருந்து மான்பெருமை யெண்ணாமல்
பாலர்பெண்டீர் மெய்யென்று பதியிழந்து கெட்டேனே.

(பொ-ரை) விஷத்தைப் பானஞ்செய்த சிவபெருமான் பெருமையைத் தியானஞ் செய்யாமல் மக்கள் மனைவியரை உண்மையானவர்களென்று எண்ணி அடையவேண்டிய ஒரு நிலையை யிழந்து கெட்டேன். 7

பிணவாச முற்ற பெருங்காய மெய்யென்று
பணவாசை யாலே பதியிழந்து கெட்டேனே.

(பொ-ரை) பிணநாற்றம் வீசும் பெரிய தேகததை உண்மையென்று பொருளாசையால் வீடுபேற்றை யிழந்து கெட்டேன். 8

கண்ட புலவர் கனக்கவே தான்புகழ
உண்ட உடம்பெல்லா முப்பரித்துக் கெட்டேனே.

(பொ-ரை) என்னைப் பார்த்த வித்துவான்கள் பெருமிதமாகப் புகழ்ந்துரைக்க அதனால் நன்றாகச் சாப்பிட்டுக் கொழுத்துள்ள உடம்பு முழுவதும் பூரித்துக்கெட்டேன். 9

எண்ணிறந்த சென்ம மெடுத்துச் சிவபூசை
பண்ணிப் பிழையாமற் பதியிழந்து கெட்டேனே.

(பொ-ரை) அளவில்லாத பிறவிகளை யெடுத்துச் சிவபூசை செய்து உய்யாமல் (மோட்ச) வீட்டை யிழந்து கெட்டேன். 10

சிற்றெறும்பு சற்றுந் தீண்டப் பொறாவுடம்பை
உற்றுருக்க வுஞ்சுடவு மொப்பித்து மாண்டேனே.

(பொ-ரை) சிற்றெறும்பு சிறிது தீண்டினாலும் தாங்க முடியாத தேகததைச் (சுற்றத்தார்கள் சுடுகாட்டில்) வருத்தவும் சுடவும் ஒப்புவித்து அழிந்தேன். 11

தன்னுடம்பு தானே தனக்குப் பகையாமென்
றெண்ணுமுணர் வில்லாம லின்பமென்று மாண்டேனே.

(பொ-ரை) தன் தேகமே தனக்குப் பகையாம் என்று கருதும் அறிவில்லாமல் அதைச் சுகம் என்று எண்ணி அழிந்தேன். 12

தோலெலும்பு மாங்கிஷமுந் தொல்லன்னத் தால்வளரு
மேலெலும்புஞ் சுற்றமென்று வீறாப்பாய் மாண்டேனே.

(பொ-ரை) பழையசோற்றால் வளருந் தோல் எலும்பு மாமிசம் மேலெலும்பு ஆகிய இவைகளை உறவெனக் கொண்டு இறுமாந்து கெட்டேன். 13

போக்கு வரத்தும் பொருள்வரத்துங் காணுமல்
வாக்கழிவு சொல்லி மனமறுகிக் கெட்டேனே.

(பொ-ரை) இறப்பு பிறப்பு திருவருள் நிகழ்ச்சி இவைகளை யாய்ந்து உண்மை தெளியாமல் பயனில்லாச் சொற்களைப் பேசி மனமயங்கிக் கெட்டேன். 14

## நெஞ்சொடுபுலம்பல்



மண்காட்டிப் பொன்காட்டி மாய விருள்காட்டிச்
செங்காட்டி லாடுகின்ற தேசிகனைப் போற்றாமல்
கண்காட்டும் வேசியர்தங் கண்வலையிற் சிக்கிமிக
அங்காடி நாய்போ லலைந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! திருச்செங்காட்டிலே நடஞ்செய்கின்ற சிவகுருநாதனை வழிபடாமல் மண்ணைக்காட்டி, பொன்னைக்காட்டி, மருட்சியில் வீழ்த்தும் இருளைக்காட்டி, கண்சாடைகாட்டி மயக்கும் விலைமாதர்களுடைய நயன வலையிற் சிக்குண்டு கடைத்தெரு நாய் போல மிகவும் அலைந்து கெட்டனையே.

(வி-ரை) மண் பொன் பெண் என்னும் மூவாசையுங் குறிக்கப்பெற்றிருக்கின்றன. இம்மூன்றினுங் கொடியது பெண்ணாசை யாகலான் "மாய விருள்காட்டிக் கண்காட்டும் வேசியர்" என்றார். "மண்ணாசைதன்னில் பொன்னாசைதன்னில் பெண்ணாசை நீத்தல் அரிதே பெரியோர் தமக்கும்" என்பது திருவிளையாடற்புராணம். அக்கினி சாட்சியாகத் திருமணஞ் செய்யுங் குலமகளிரை வேறு பிரித்துக் காட்டுவான் "வேசியர்" என்றார். ஞானிகள் பெண்களை யிழித்துக்கூறும் இடங்கடோறும் விலைமகளிர்களையும், விலைமகளிர் களுடைய தீயொழுக்கம் வாய்ந்த குலமகளிர்களையுங் கொள்க. மூவாசை வயப்பட்டு நிற்போர் இறைவன் வயப்பட்டு நில்லாராகலான் "தேசிகனைப் போற்றாமல்" என்றார். "மூவாசை கொண்டு முயங்கு நெஞ்சே போரூரில்-தேவாசை கொள்ளத் தெரியாதோ" என்றார் சிதம்பரசுவாமிகளும். வேசி வயப்பட்டோர் நாயினுங் கடைய ரெனபார் "அங்காடி நாய்போல்" என்றார். அங்காடிநாய்-இழிவுக்குறிப்பு. 1

புட்பா சனவணையிற் பொற்பட்டு மெத்தையின்மேல்
ஒப்பா வணிந்தபணி யோடாணி நீங்காமல்
இப்பாய்க் கிடத்தி யியமனுயிர் கொள்ளுமுன்னே
முப்பாழைப் போற்றி முயங்கிலையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! மலர்கள் பரப்பிய அழகிய பட்டுமெத்தை யின்மேல், செப்பமாகத் தரித்திருந்த ஆபரணங்களோடு பெருமை நீங்காமல் இங்கே பாயிற் படுக்கச்செய்து யமன உயிரைக்கொண்டு போகுமுன்னே மூன்று பாழிற்குங் காரணமான முழுமுதற்பொருளைத் துதிசெய்ய முயற்சி செய்தாயில்லை.

(வி-ரை) இயமன் உயிரைக் கொண்டுபோகுமுன்னே இறைவனைத் துதிக்க வேண்டுமென்பது. "வெம்மை நமன்தமர் மிக்கு விரவி விழுப் பதன்முன் - இம்மையுன்றா ளென்றனெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில் - அம்மையடி யேற்கருளுதி யென்பதிங் காரறிவார்- செம்மைதரு சத்திமுற்றத் தூறையுஞ் சிவக்கொழுந்தே" என்றார் அப்பர்சுவாமிகளும். 2

முப்பாழும் பாழாய் முதற்பாழ் வெறும்பாழாய்
அப்பாழுக் கப்பாணின் றாடுமதைப் போற்றாமல்
இப்பாழாம் வாழ்வைநம்பி யேற்றவர்க் கொன்றீயாமல்
துப்பாழாம் வந்தவினை சூழ்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! (இப் பொய்யுலக வாழ்வை யுறுதியாகக் கொண்டு) மூவகைப் பாழும் பாழாக முதற்பாழும் வெளியாக அவ் வெளிக்கு மேலாகத் திருநடஞ்செய்யும் பரம்பொருளைத் துதி செய்யாமலும் இரப்பவர்க்கு ஒன்று கொடாமலும் வீணாக நேர்ந்த வினையை அடைந்தனையே.

(வி-ரை) முப்பாழ் - ஆதமதத்வம், வித்யாதத்வம், சிவதத்வம் எனபன. முதற்பாழ் - பரவெளி. தத்துவங்கள் யாவும் பாழான

விடமே இறைவன் திருநடம்புரியும் இடமென்க. தத்துவங்கடந்த தனிப்பொருளைப் போற்றுவோர் இன்பம்பெறுது தத்துவங்களைப் போலப் பாழ்படுவர் என்பதை அறிவித்தவாறும். இறைவனைப்போற் றற்கறிகுறி இரப்பவர்க் கீதலென்பதையுங் குறிப்பாக அறிவுறுத்திய வாறு காண்க. "நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்-இல்லெனி னும் ஈதலே நன்று"—குறள். 3.

அன்னம் பகிர்ந்திங் கலைந்தோர்க் குதவிசெயுஞ்
சென்ம மெடுத்துஞ் சிவனருளைப் போற்றுமல்
பொன்னு மனையுமெழிற் பூவையரும் வாழ்வுமிவை
இன்னுஞ் சதமாக வெண்ணினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! சோற்றைப் பங்கிட்டுப் பசியால் வருந்தித் திரியும் ஏழைகட்கு உபகாரஞ் செய்யும் மனிதப் பிறவியை யெடுத் துஞ் சிவபிரான் திருவருளை வழுத்தாமல் பொன் வீடு அழகிய பெண் உலகவாழ்வு ஆகிய இவைகளை இன்னமும் நிலைபேருகக் கருதினய்.

(வி-ரை) உலகத்தில் பிறவிகள் பல. அவையிற்றுள் சிறந்தது மக்கட்பிறவி. என்னை? ஆருவது அறிவு விளங்கப் பெறும் பிறவி யாகலின். "மக்கள் தாமே ஆறறி உயிரே" என்ருர் தொல்காப் பியனுரும். அவ்வாருவது அறிவின் குணம் இரக்க மென்பது அனுபவ சித்தாந்தம். அதுபற்றியே யீண்டு மக்கட் பிறவியை "அலைந்தோர்க்கு உதவி செய்யும் சென்மம்" என்ருர். மனிதப் பிறவி தாங்கியும் பிறர்க் குதவிசெய்யுங் கருணைக்குணம் பெருத வர் விலங்கு புள் மரம் போன்றவராவர். அத்தகைய விழுமிய பிறவியாலாயபயன் சிவபிரான் திருவருள் வழி நிற்றல் என்பார் "சிவனருளைப்போற்றுமல்" என்ருர். அருள்-இரக்கம். அருள்வழி யொழுகாமல் மருள்வழி யுழலல் அறியாமை யென்பார் "பொன் னும் மனையும் எழிற்பூவையரும் வாழ்வும் இவை-இன்னுஞ் சதமாக

எண்ணினையே" என்றார். மனிதப் பிறவியை யெடுத்தோர் பொன் முதலியவற்றைப் பொருளாகக் கொண்டு போற்றலாகா தென்ற படி. 4

முற்றொடர் பிற்செய்த முறைமையால் வந்தசெல்வம்
இற்றைநாட் போற்றோமென் றெண்ணுது பாழ்மனமே
அற்றவர்க்கு மீயாம லான்பூசை யோராமல்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறந்து விட்டனையே.

(பொ-ரை) கெடுமனமே! முற்பிறப்பிற் செய்த புண்ணியத்தாற் கிடைத்த செல்வத்தை இப்பிறவியில் (தமது முயற்சியால்) அடைந்தோம் என்று நினையாமலும் (அதை) ஏழைகளுக்குக் கொடாமலும், சிவபூசையைச் சிந்தியாமலும், படித்தவர்களுக்கு உதவாமலும் (அகங்காரத்தால் எல்லாவற்றையும்) மறந்தாய்.

(வி-ரை) பொருட்செல்வமுடையார் தஞ்செல்வத்தை நோக்கிச் செருக்குறுது "பூர்வ புண்ணியத்தின் பயனாக வந்தது இச்செல்வம்' என்று எண்ணி மேலும் மேலுந் தருமஞ்செய்ய வேண்டுமெனக் குறிப்பித்தவாரும். பொருளை அற்றவர்க்கும் கற்றவர்க்கும் உதவுதல் வேண்டுமென்றது கருதத்தக்கது. கண் மறந்து விடல்-செல்வச்செருக்கால் கண்மூடிக்கொள்ளல் எனினுமாம். 5

மாணிக்க முத்து வயிரப் பணிபூண்டு
ஆணிப்பொன் சிங்கா தனத்தி லிருந்தாலும்
காணித் துடலைநமன் கட்டியே கைப்பிடித்தால்
காணிப்பொன் கூடவரக் காணகிலமே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! இரத்தினம் முத்து வயிரம் இவற்றாலாகிய ஆபரணங்களைத் தரித்து, சிறந்த பொன்னாற்செய்யப்பட்ட சிங்காசனத்தி லிருந்தாலும், இயமன் உடலைக் கூறிட்டுக் கட்டிக் கையைப்

பிடித்தால் (அதுகாலே) ஒரு காணி யளவு பொன்னும் நம்மோடு வருதலைப் பார்த்தேமில்லை.

(வி-ரை) எத்துணைச்செல்வமுடையாராக வாழினும் அச்செல்வம் உயிர்போங்காலத்து உடன்வரமாட்டாதென்றபடி. "மததயானை யேறி மன்னர் சூழ வருவீர்காள்-செத்தபோதே யாருமில்லை சிந்தையில் வைம்மின்கள்-வைத்தஉள்ளம் மாற்றவேண்டாம் வம்மின் மனத்தீரே-அத்தர்கோயில் எதிர்கொள்பாடி யென்ப தடைவோமே" என்றார் சுந்தரமூர்த்திசுவாமிகளும். 6

கற்கட்டு மோதிரநற் கடுக்கனரை ஞாண்பூண்டு
திக்கெட்டும் போற்றத திசைக்கொருதத ராணுலும்
பற்கிட்ட வேமனுயிர் பந்தாடும் வேளையிலே
கைச்சட்டங் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! வயிரக் கல்லிழைத்த மோதிரம், அழகிய கடுக்கன், அரைஞாண், ஆகிய இவைகளைத் தரித்து எட்டுத்திக்குகளினின்றுந் தோத்திரஞ்செய்ய ஒவ்வொரு திசைக்கு ஒவ்வொருவராக நின்றிருந்தாலும், பல் கிட்டிக்கொள்ள இயமன் உயிரைப் பந்தாடுவது போலத் தன்னிஷ்டப்படி செலுத்துகின்ற காலத்தில் ஓர் எழுது ஓலையும் உடன் தொடர்ந்துவரப் பார்க்கின்றேமில்லை.

, (வி-ரை) திக்கெட்டும் போற்றத் திசைக்கொருத்தராஞலும்-திசைக்கொருவர் நின்று போற்றிப்புகழும் பெருவாழ்வைப் பெற்றிருந்தாலும் என்றபடி. 7

முன்னஞ் செய்ததவ முப்பாலுஞ் சேருமன்றிப்
பொன்னும் பணிதிகழும் பூவையுமங் கேவருமோ
தன்னைச் சதமாகச் சற்குருவைப் போற்ருமல்
கண்ணற்ற வந்தகன்போற் காட்சியற்ருய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! பூர்வஜென்மத்தில் நீ செய்ததவமானது மும்மையிலும் வந்து பொருந்துவ தல்லாமல், பொருளும், அணிகள் பொலியும் பெண்களும் அவ்விடத்தில் வந்து சேருமோ? தன்னை நிலையாகக்கருதி உண்மைக் குருநாதனைத் தோத்திரஞ் செய்யாமல் கண்ணழிந்த குருடனைப்போலப் பார்வை யிழந்தாய்.

(வி-ரை) மும்மை - இம்மை. அம்மை - உம்மை. தன்னை-தேகத்தை; பொன் முதலியவற்றை. காட்சி-ஞானக்காட்சி. 8

பையரவம் பூண்ட பரமர்திருப் பொற்றாளைத்
துய்ய மலர்பறித்துத தொழுது வணங்காமல்
கையி லணிவளையுங் காலிலிடும் பாடகமும்
மெய்யென் றிறுமாந்து விட்டனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! படத்தையுடைய பாம்பை ஆபரணமாக அணிந்த ஆண்டவன் அழகிய திருவடிகளைத் தூய்மையான பூக்களைக் கொய்து, அவைகளால் அருச்சித்துப் பணிந்து போற்றாமல், கரத்திற் றரிக்குங் காப்பினையும் காலிற் றரிக்கும் பாடகத்தினையும் சதம் என்று செருக்குற்றிருந்தாய்.

(வி-ரை) பொன்னாபரணங்களைப் பொருளாகக் கருதி யிறுமாந்து கிடப்பது அறியாமை. அவைகளைப் பொருட்படுததாது இறைவனை மலர்களால் அருச்சித்து அருளைப்பெற முயலவேண்டும் என்றபடி. "பூக்கைக் கொண்டான் பொன்னடி போற்றிலார்" என்றும், "பூமாலை புனைந்தேத்தி" யென்றும், "இட்டுக்கொள்வன பூவுள நீருள" என்றும், "பூமாலை புனைந்தேத்தேன்" என்றும், "நகமெலாந் தேயக்கையால் நாண்மலர் தொழுதுதூவி" யென்றும், "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" எனறும் பெரியோர்கள் அருளிச் செய்திருப்பது காண்க. 9

மாதுக் கொருபாகம் வைத்தவான் பொற்றாளைப்
போதுக் கொருபோதும் போற்றி வருந்தாமல்
வாதுக்குத் தேடியிந்த மண்ணிற் புதைத்துவைத்தே
ஏதுக்குப் போகநீ யெண்ணினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! உமாதேவியாருக்கு இடப்பாகத்தை உதவியருளிய சிவபெருமான் திருவடிகளை ஒருநாளைக்கு ஒருவேளை யாவது தோத்திரஞ்செய்து இரங்காமல் சண்டையின் பொருட்டுச் சம்பாதித்து இப்பூமியிலே புதைத்துவைதது எநத நிலையையடைய நினைந்தாய்?

(வி-ரை) வாதுக்கு-சண்டையிலே எனினுமாம். பொருளைப் பங்கிடும்போது பிள்ளைகள் ஒருவரோடொருவர் சண்டையிடுவது இயல்பாகலான் "வாதுக்குத் தேடி" என்றார். "மண்ணிற் புதைத்து வைத்து" என்பதை "பாடுபட்டுத் தேடிப் பணததைப் புதைதது வைதது" என ஔவையாருங் கூறியுள்ளார். 10

அஞ்சருளைப் போற்றி யைந்துபுல னைத்துறக்க
நெஞ்சே யுனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்
வஞ்சகத்தை நீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத் தாளைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! பஞ்சசத்திகளைப் பூசித்துப் பஞ்சேந்திரி யங்களை யடக்க உனக்கு நான் ஒரு ஞாபகம் ஊட்டுகிறேன். மனமே! சுரவை யொழித்து வேறு எண்ணம் நிகழாமல் சிவந்த திருவடிகளை யுடைய சிவபெருமானைத் தியானஞ்செய்வாய்.

(வி-ரை) அருள் - சத்தி. அஞ்சருள் - பஞ்சசத்தி. ஐம்புலச் சேட்டையை யொழிக்கின்றதற்கு வழி சிவபிரான் திருவடிகளைத் தியானஞ்செய்வது என்றவாறு. சுரவு முதலிய தீக்குணங்களை

வைத்துக்கொண்டு கடவுளைத் தியானிப்பதனுல் பயனில்லை யென்பார் "வஞ்சகதைநீக்கி" என்றார். பாவ முதலிய தீமைகளுக்கு வேருக உள்ள புண்ணிய முதலியவற்றையுஞ் செய்யலாகாதென்பார் "மறு நினைவு வாராமல்" என்றார். புண்ணியம் பொன் விலங்கு போன்றது; பாவம் இரும்பு விலங்கு போன்றது. 11

அற்புதமா யிந்தவுட லாவி யடங்குமுன்னே
சற்குருவைப் போற்றித் தவம்பெற்று வாழாமல்
உற்பத்தி செம்பொன் உடைமைபெரு வாழ்வைநம்பிச்
சர்ப்பத்தின் வாயிற் றவளைபோ லானேனே.

(பொ-ரை) ஆச்சரியமாக இந்தத் தேகத்தில் உயிரொடுங்குவதற்கு முன்னரே சற்குருநாதனைத் துதிசெய்து தவவாழ்க்கையைப் பெருமல் இயற்கையாகத் தோன்றுஞ் சிவந்த பொன் முதலிய உலகப் பெருவாழ்வை உறுதியாக நம்பிப் பாம்பின்வாயிலகப்பட்ட தவளை போன்றவனுனேன்.

(வி-ரை) ஆவி - உயிர்; பிராணன். உயிரொடுங்குவதற்குள் சற்குரு தரிசனம் பெற்றுத் தவமேற்கொண் டொழுகவேண்டும் என்றபடி. செம்பொன் உடைமை முதலியவற்றைப் பாம்பிற்கு உவமிக்கப் பட்டிருத்தல் கவனிக்கத்தக்கது. "பாம்பின்வாய்த் தேரைபோலப் பலபல நினைக்கின்றேனை" என்றார் அப்பரும். 12

உற்றாரார் பெற்றோரா ருடன்பிறப்பார் பிள்ளைகளார்
மற்று மிருந்தாலென் மாளும்போ துதவுவரோ
கற்று விழுந்தவிளங் கன்றதுபோ லேயுருகிச்
சிற்றுகிச் சிற்றின்பஞ் சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! பந்துக்கள் யார்? ஈன்றவர் யார்? உடன் தோன்றினவர் யார்? புத்திரர்களார்? மற்ற எவரிருந்தாலுமென்னே?

(அவர்கள்) இறக்கும்போது வந்து உதவிசெய்வார்களோ? பசுவை யிழந்த இளங்கன்றினைப்போல மனமுருகிச் சிறுமைப்பட்டுச் சிறு இன்பத்தை யடந்தாய்.

(வி-ரை) "எத்தாயார் எததந்தை எச்சுற்றத்தார் எம்மாடுஞ் சும் மாடாம் ஏவர்நல்லார்-செத்தால்வந்து உதவுவார் ஒருவரில்லை" என் றும், "தந்தையார் தாயார் தாரமார் புத்திரரார் தாந்தாமாரே-வந்தவா றெங்ஙனே போமாறேதோ மாயமாம் இதற்கேதும் மகிழவேண்டாம்" என்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்திருப்பது காண்க. சிற்றின்பத்தின்பொருட்டுப் பசுவைப் பிரிந்த கன்றைப்போல மன முருகுவது அறியாமை யென்றவாறு. பேரின்பததின் பொருட்டு உழைக்க வேண்டுமென்க. 13.

வீடிருக்கத் தாயிருக்க வேண்டுமனை யாளிருக்கப்
பீடிருக்க வூணிருக்கப் பிள்ளைகளுந் தாமிருக்க
மாடிருக்கக் கன்றிருக்க வைத்த பொருளிருக்கக்
கூடிருக்க நீபோன கோலமென்ன கோலமே.

(பொ-ரை) இல்லமிருக்கவும், அன்னையிருக்கவும், விரும்பும் மனைவியிருக்கவும், பெருமை யிருக்கவும், ஆகாரமிருக்கவும், புதல் வர்க ளிருக்கவும், மாடுகளிருக்கவும், கன்றுகளிருக்கவும், சேமித்து வைத்துள்ள செல்வமிருக்கவும், தேகமிருக்கவும் நீ சென்றவழி யெவ் வழியோ?

(வி-ரை) உயிர்ச்சார்பும் பொருட்சார்பும் உன்னை யிடைவிடாது பற்றியிருக்க நீ யெல்லாரையும் வஞ்சித்து ஒருவருக்கும் புலனாகாமல் சென்றது வியக்கததக்கது என்றபடி. எவையும் உயிர்போங்காலத்தில் உதவமாட்டா என்பது கருத்து. 14.

சந்தனமுங் குங்குமமுஞ் சாந்தும் பரிமளமும்
விந்தைகளாய்ப் பூசிமிகு வேடிக்கை யொய்யாரக்

கந்தமலர் சூடுகின்ற கன்னியருந் தாமிருக்க
எந்தவகை போனுயென் றெண்ணிலையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! சந்தனம் குங்குமம் சாந்து மற்றுமுள்ள வாசனைகள் இவைகளை அலங்காரமாகப் பூசி மிகச் சல்லாபமாக வாசனையுடைய பூக்களைத் தரிக்கும் பெண்மணிகளும் உடனிருக்க நீ யெப்படிச் சென்றாய் என்று நினைக்கவில்லை.

(வி-ரை) மேற்கூறிய பொருள்கள் எல்லாவற்றினும் உன்னால் பெரிதும் விரும்பப்படுவோர் மகளிர். அவர்களுக்குந் தெரியாமல் நீ சென்றது வியப்பினும் வியப்பு என்றபடி. இவ்வுலகத்தில் எவ்வகை யின்பத்தினும் பெண்ணின்பம் உயர்ந்ததாகலான் அவ்வின்பமுடையாரை வேறுபிரித்து இச்செய்யுளிற் கூறினர். நின் மாட்டுத் தணியாக் காதலுடைய பெண்களும் உடன் வரமாட்டாராகலான் நீ போகும் வழியை யுன்னி யெப்பொருண்மீதும் பற்று வையாமல் கடவுளிடத்துப் பற்றுவைக்க வேண்டுமென்பது. 15

காற்றுத் துருத்தி கடியவினைக் குள்ளான
ஊற்றைச் சடலத்தை யுண்டென் றிறுமாந்து
பார்த்திரங்கி யன்னம் பசித்தோருக் கீயாமல்
ஆற்றுவெள் ளம்போல வளாவினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! காற்று நிரம்பிய துருத்தியாகிய கொடிய வினைவாய்ப்பட்ட ஊற்றைச் சரீரத்தை நிலையாக உள்ளது என்று செருக்கிப் பசித்தோரைக் கண்டு இரக்கங் கொண்டு அவருக்குச் சோறிடாமல் நதியின் வெள்ளத்தைப்போல அளவளாவு கின்றாய்.

(வி-ரை) தன் உடலைப் பொருளாக மதித்து இறுமாந்து பிறரைக் கவனியாம விருப்பவர்கட்கு அறிவுறுத்தியவாறும். "ஆற்

றுவ ராற்றல் பசியாற்றல்"—திருவள்ளுவர். "அகர மாயிரம் அந் தணர்க் கீயிலென் - சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென் - பகரு ஞானி பகலூண்-பலத்துக்கு நிகரில்லை யென்பது நிச்சயந்தானே"— திருமூலர். ஆற்றுநீர் பயன்படுவதுபோல வெள்ளம் பயன்படுவ தில்லை. அதனால் கேடே விளைகிறது. 16

நீர்க்குமிழி வாழ்வைநம்பி நிச்சயமென் றேயெண்ணிப்
பாக்களவா மன்னம் பசித்தோர்க் களியாமல்
போர்க்குளம தூதன் பிடித்திழுக்கு மப்போது
ஆர்ப்படுவ ரென்றே யறிந்திலையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! நீரில் தோன்றுங் குமிழியைப்போன்ற வாழ்க்கையை மெய்யென்று நினைத்துப் பசித்தவர்களுக்குப் பாக் களவு சோறுங் கொடாமல் கோழைகட்டுந் துன்பத்தில் காலன் பற்றி வலிக்கின்ற காலத்தில் யார் துயருறுவார் என்று தெரிந்தா யில்லை.

(வி-ரை) உடலை நிலையாகக் கருதி ஏழைகளுக்கு அன்ன மிடாதவர் யமவாதனைக்குட்படுவர் என்பது திண்ணம். அவ்வாதனை யைத் தாங்க எவரும் முந்தார் என்பதைத் தெரிவித்தவாறும். உட லைப் போற்றாது அன்னதானஞ் செய்து யமனூர் புகாமல் இறைவ னடி யடையுமாறு அறிவுறுத்தியவாறும். 17

சின்னஞ் சிறுநுதலாள் செய்த பலவினையான்
முன்னந்த மார்பில் முளைத்த சிலந்திவிம்மி
வன்னந் தளதளப்ப மயங்கிவலைக் குள்ளாகி
அன்னம் பகிர்ந்துண்ண வறிந்திலையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! மிகச் சிறிய நெற்றியுடைய பெண்ணா னவள் முன்னர்ச் செய்த பல தீவினையால் அவளது அழகிய மார்பின் முன்னே கிளம்பிய கட்டிபோன்ற ஸ்தனங்களானவை

பருத்து அழகு ஒழுக; அதனால் மயங்கி அம்மாயவலையிற் சிக்கி ஏழைகளுக்குச் சோறு பங்கிட்டுப் பின்னர்ச் சாப்பிடத் தெரிந்தா யில்லை.

(வி-ரை) "சீறும் வினை" என்னும் பாட்டைப் பார்க்க. 18

ஓட்டைத் துருத்தியை யுடையும் புழுக்கூட்டை
ஆட்டுஞ் சிவசித்த ருளைமிகப் போற்றியே
வீட்டைத் திறந்து வெளியையொளி யாலழைத்துக்
காட்டும் பொருளிதென்று கருதிலையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! துவாரம் பொருந்திய தோற்பையும் உடைந்துபோகும் புழுக்கூடும்போன்ற உடலை ஆட்டுஞ் சிவபிரா னுடைய திருவருளைப் பெரிதும் எத்தி ஆணவ அறையைத் திறந்து சிவத்தைச் சத்தியால் கூப்பிட்டு எல்லாவற்றையுங் காண்பிக்கும் பொருள் இஃதென்று நினைக்கவில்லையே.

(வி-ரை) சிவபிரான் காட்ட உயிர்கள் காண்கின்றன என்பதை உணர்வோர் சீவன்முத்தர். உணராதார் பெத்தர். 19

ஊன்பொதிந்த காய முளைந்தபுழுக் கூட்டைத்
தான்சுமந்த தல்லால்நீ சற்குருவைப் போற்றாமல்
கான்பரந்த வெள்ளங் கரைபுரளக் கண்டோடி
மீன்பரந்தாற் போலே விசாரமுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! மாமிசம் நிறைந்த தேகத்தைக் கிண்டும் புழுக்கள் வசிக்கும் கூட்டை வீணாகத் தாங்கினதுமல்லாமல் நீ சற்குருநாதனைப் போற்றாமல் கானற்சலங் கரைபுரள அதைப்பார்த்துச் சென்று மீன்கள் (அதனை உண்மைச் சலமாகக் கருதி) பாய்ந்து வருந்தினதுபோல வருத்தமடைந்தாய்.

(வி-ரை) கானற்சலம் - பேய்த்தேர். 20.

உடைக்கை யொருக்கி யுயிரை யடைத்துவைத்த
சடக்கைச் சதமென்று சார்ந்தங் கிறுமாந்தை
உடக்கைத் தகர்த்தே யுயிரையமன் கொள்கையிலே
யடக்கமாய் வைத்தபொரு ளங்குவர மாட்டாதே.

(பொ-ரை) காற்றூகிய சுள்ளாணியை முறுக்கி உயிரொன்னும் பொருளே அடைத்துவைத்த தேகத்தைப் பொருளென்று எண்ணி அதிற்றங்கிச் செருக்குற்றிருந்தாய். அச்சுள்ளாணியை யுடைத்துப் பிராணனை இயமன் பிடித்துக்கொண்டுபோகையில், யாருக்குந் தெரியாமல், அடக்கமாக வைத்திருந்தபொருள் இயமலோகத்துக்கு வாராது. 21

தித்திக்குந் தேனைத் தெவிட்டாத தெள்ளமுதை
முத்திக்கு வித்தான முப்பாழைப் போற்றுமல்
பற்றிப் பிடித்தியமன் பாசததாற் கட்டும்வண்ணம்
சுற்றி யிருக்கும்வினை சூழ்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! இனிக்குந் தேனை உண்ணத் தெவிட்டாத தெள்ளிய அமிழ்தை, மோட்சத்துக்குக் காரணமான மூன்றுபாழை வணங்காமல் இயமன் கெட்டியாகப் பிடித்துக் கயிற்றூற் கட்டும்படி உன்னைச் சூழ்ந்துள்ள (உயிர்ச்சார்பு பொருட்சார்புகளாகிய) வினையில் அழுந்தினுய்.

(வி-ரை) தேனை - தேன்போன்றவனை. அமுதை - அமுதத்தை யொத்தவனை. முப்பாழை - மூவகைத்தததுவங்கட்கும் அதிபதியை. சுற்றியிருக்கும் வினையில் விழுந்து அழுந்தினுல் யமன் பாசத்தாற் கட்டுப்பட நேரும் என்றபடி. 22

அஞ்செழுத்தா யெட்டெழுத்தா யைம்பத்தோ ரட்சரமாய்ப்
பிஞ்செழுத் தாய்நின்ற பெருமானைப் போற்றுமல்

வஞ்சகமா யுற்றுழலை மாதர்வலைக் குள்ளாகிப்
பஞ்சரித்துத் தேடிப் பாழுக் கிறைத்தோமே.

(பொ-ரை) ஸ்ரீ பஞ்சாட்சரமாகவும், ஸ்ரீ அஷ்டாட்சரமாகவும், ஐம்பத்தோரட்சரமாகவும், சக்தியட்சரமாகவும் விளங்கியுள்ள கடவுளைத் துதிசெய்யாமல் காவாகப் பொருந்திய தனங்களையுடைய ஸ்திரீகள் மாயவலையிற்சிக்கி, அவர்களைக் கெஞ்சிக்கெஞ்சி அடைந்து அரியகாலத்தைப் பாழாக்கிவிட்டோம்.

(வி-ரை) "ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம், பாழுக்கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே" என்றார் மாணிக்கவாசகரும். 23

அக்கறுகு கொன்றைதும்பை யம்புலியுஞ் சூடுகின்ற
சொக்கர் திருத்தாளைத் தொழுது வணங்காமல்
மக்கள்பெண்டீர் சுற்றமுடன் வாழ்வைமிக நம்பியன்பாய்
எக்கா லமுமுண்டென் றெண்ணினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! கண்டிகையையும் கொன்றை மலரையும் தும்பைப்பூவையும் சந்திரனையும் தரிக்கின்ற சிவபிரான் திருவடிகளைப் பணிந்து துதிசெய்யாமல், புத்திரர்களையும் மனைவிமார்களையும் பந்துக்களோடு வாழ்வையும் மிக அன்பாக நம்பி (அவைகள்) எந்தக் காலமுஞ் சதமென்று எண்ணினாய். 24

ஆண்ட குருவி னருளை மிகப்போற்றி
வேண்டுங் கயிலாய வீட்டுவழி பாராமல்
பூண்டகுழன் மாதுநல்லார் பொய்மாய்கைக் குள்ளாகித்
தூண்டி லகப்பட்டுத் துடிகெண்டை யானேனே.

(பொ-ரை) ஆட்கொண்ட குருநாதன் திருவருளை மிகவுந் துதிசெய்து விரும்பப்படுந் திருக்கயிலாய மோக்ஷமார்க்கத்தை

நோக்காமல் பூச்சூடிய கூந்தலுடைய மாதர்களின் பொய்யாகிய மாயைக் குள்ளாகித் தூண்டிலிலே அகப்பட்டுத் துடிக்கின்ற கெண்டைபோன்றவனுனேன். 25

ஏணிப் பழுவா மிருளையறுத் தாளமுற்றும்
பேணித் தொழுங்கயிலை பேறுபெற மாட்டாமல்
காண வரும்பொருளாய்க் கண்கலக்கப் பட்டடியேன்
ஆணியற்ற மாமரம்போ லாகினனே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! ஏணிப் பழுமரத்தைப்போன்ற ஆணவ மலத்தை யொழித்து இறைவனுக்கு முற்றிலும் அடிமைப்பட விரும்பி வணங்கும் திருக்கயிலாய கதியை அடைய ஒட்டாமல் (உயிர்ச்சார்பு பொருட்சார்புகளை) அரிய உறுதிப் பொருளாகக் காணும்பொருட்டுக் கண்கலங்கிச் சிறியேன் ஆணிவேர் அறுந்த மாமரத்தை யொத்தவனுனேன்.

(வி-ரை) இருள் - ஆணவமலம். உயிர்ச்சார்பு பொருட்சார்புகளை உறுதிப்பொருளாகக் கோடல் கண்கலக்கத்துக்கே யிடமென்க. அவ் வாறு கருதுவோர் ஆணிவேர் அறுந்தமரத்துக்கு ஒப்பிடப்பட்டிருத்தல் காண்க. ஆன்மாவிற்கு உறுதியளிப்பதும் ஆணியாக நிற்பதும் கயி லைப்பேறென்க. அதைப் பெருமை குறித்து இச்செய்யுளில் இரங் கியவாரும். 26

கோத்துப் பிரகாசங் கொண்டுருகி யண்டமெல்லாம்
காத்த படியே கயிலாயஞ் சேராமல்
வேற்றுருவப் பட்டடியேன் வெள்ளம்போ லுள்ளுருகி
ஏற்றுங் கழுவி லிருந்தபிண மானேனே.

(பொ-ரை) எல்லா உயிர்களிடத்திலுங் கலந்து இரக்கம் வைத்து அவைகளை இரட்சித்தபடியே திருக்கயிலாயம் அடையாமல் வேறுவகையான மருளுருவந்தாங்கி (இரக்கமில்லாமல்) எளியேன்

சலத்தைப்போலப் பலவாறு கலங்கி யேற்றப்படுங் கழுவிற்றொங்கிய பிணத்தை யொத்தவனானேன்.

(வி-ரை) அண்ட மெலாம் - உயிர்கள் எல்லாம்; ஆகுபெயர். பிரகாசம் - அருட்பிரகாசம்; இரக்கம். எல்லா உயிர்களிடத்தும் இரக்கங் கொள்வதே கயிலாயநெறி என்றபடி. "எவ்வுயிரும் நீங்காதுறையும் இறை சிவனென்று - எவ்வுயிர்க்கும் அன்பா யிரு"—என மறைஞான தேசிகரும், "எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின் - தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே" எனத் தாயுமானரும், "தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல் - மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமின்" எனத் திருத்தக்க தேவருங் கூறியிருத்தல்காண்க. திருக்குறள் அருள் அதிகாரத்தையும் நோக்க. வேற்றுருவப்பட்டு என்றது அருளுருவல்லாப் பிறவுருவை. பிறவுரு-இரக்கமில்லா வுருவை. இரக்கமில்லாதவர் உயிர்களைக் கொன்று புலாலுண்ணலால் "வேற்றுருவப் பட்டு....................பிணமானேன்" என்றார். 27

நிலைவிட் டுடலையுயிர் நீங்கி யகலுமுன்னே
நிலைதொட்ட வேடனெச்சிற் றின்றானைச் சேராமல்
வலைபட் டுழலுகின்ற மான்போற் பரதவித்துத்
தலைகெட்ட நூலதுபோற் றட்டழிந்தாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! உயிர் தனக்கிருப்பிடமாகிய உடலை விடுத்து நீங்கிப் பிரிவதற்கு முன்னரே வில்லேந்திய வேடனாகிய கண்ணப்பநாயனாருடைய எச்சிலைச்சாப்பிட்ட சிவபிரானை அடையாமல், வலையிற் சிக்கி அலைகின்ற மானைப்போல வருந்தி நுனிகெட்ட நூலைப்போலக் கலங்கி யொழிந்தாய்.

(வி-ரை) வேடன் - கண்ணப்பன். எச்சில் தின்றானை என்பது ஆண்டவன் அன்பிற் கெளியன என்பதைக் குறிப்பிடுவது. நூல் நுனிகெட்டால் அஃதூசியில் நுழையாது பயனழிந்து நிற்றல்போல

யானும் அறிவுகெட்டுப் பெறும்பயனை யிழந்து நிற்கின்றேன் என்றவாறு. 28

முடிக்கு மயிர்ப்பொல்லா முழுக்குரம்பை மின்னாரின்
இடைக்கு நடைக்கு மிதங்கொண்ட வார்த்தைசொல்லி
அடிக்கொண்ட தில்லைவனத் தையனே நாயனேயேன்
விடக்கை யிழந்த மிருகமது வானேனே.

(பொ-ரை) என்னை அடிமைகொண்ட சிதம்பரநாதனே! நாய் போன்ற யான், கொடிய புழுக்கள் நிறைந்த அற்பக் குடிசையொத்த பெண்பாலாரின் மயிர் முடியைக் குறித்தும், இடையைக் குறித்தும், நடையைக் குறித்தும், நல்ல இனிய வார்த்தைகள் பேசி மாமிசத்தை யிழந்த விலங்காகி நின்றேன்.

(வி-ரை) "எல்லாப் படியாலும் எண்ணினு லிவ்வுடம்பு, பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை" என்றார் ஔவையார். இடையும் நடையும் காமக்கிளர்ச்சியை எழுப்புவன. 29

பூவாணர் போற்றும் புகழ்மதுரை சொக்கரது
சீபாதம் போற்றிச் சிவலோகஞ் சேராமல்
தாவாரந் தோறுந் தலைபுகுந்த நாய்போல
ஆகாத நெஞ்சமே யலைந்து திரிந்தாயே.

(பொ-ரை) ஞானத்துக்கு உதவியாகாத மனமே! மண்ணிற் பிறந்தோர் தோத்திரஞ் செய்யுங் கீர்த்திவாய்ந்த மதுரையம்பதிக்கண் வீற்றிருந்தருளும் ஸ்ரீசொக்கநாதரது ஸ்ரீபாதமலரை வணங்கிச் சிவலோகமடையாமல், வீடுகள்தோறும் திரிந்தலையும் நாய்போல உழன்று வருந்தினாய்.

(வி-ரை) வாழ்நர் - வாணர். 30

பத்தெட்டா யோரைந்தாய்ப் பதின்மூன் றையுங்கடந்த
ஒத்திட்டு நின்றதோ ரோவியத்தைப் போற்றாமல்

தெத்திட்டு நின்ற திரிகண்ணிக் குள்ளாகி
வித்திட்டாய் நெஞ்சே விடவு மறியாயே.

(பொ-ரை) மனமே! முப்பத்தாறு தத்துவங்களையும் பொருந்தி மேலாக ஒளிருஞ் சொரூபத்தை வணங்காமல், விளையாட்டில் அழுந்திய கட்புலன் வாய்ப்பட்டு, உலகவின்பத்தில் அறிவாகிய விதையை விதைத்துவிட்டாய். அதனை விடுத்து விலகவும் தெரிந்துகொள்ள மாட்டாய்.

(வி-ரை) பத்து எட்டு ஐந்து பதின்மூன்று-முப்பத்தாறு (தத்துவம்) முப்பத்தாறு தத்துவத்தையுங் கடந்தொளிரும் செம்பொருள் யாண்டும் நீக்கமற நிரம்பி எழுதப்பட்ட சித்திரம்போல் அசைவற்று நிற்றலால் "நின்றதோர் ஓவியத்தை" என்றார். திரிகண்-வினைத்தொகை. 31

அஞ்சுடனேழாகி யைமூன்று மெட்டுமொன்றாய்
மிஞ்சி யிருந்த விளக்கொளியைப் போற்றாமல்
பஞ்சிலிடு வன்னியைப்போற் பற்றிப் பிடியாமல்
நஞ்சுண்ட கெண்டையைப்போல் நானலைந்து கெட்டேனே.

(பொ-ரை) முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து விளங்கும் சுடர் விளக்கை வணங்காமல் பஞ்சில் வைதத நெருப்பைப்போல விரைவில் பற்றிக்கொள்ளாமல் விடம் உண்ட கெண்டைமீனைப் போல நான் உழன்று கெட்டேன்.

(வி-ரை) பஞ்சிலிடும் நெருப்பைப்போல, அதி விரைவில் இறைவனோடு கலவாமல் என்றபடி. 32

ஊன முடனே யடையும் புழுக்கூட்டை
மானமுட னேசுமந்து மண்ணுலகில் மாளாமல்
ஆனதொரு பஞ்சவர்க ளாண்டிருந்த தேசம்விட்டுப்
போனதுபோ லேநாம் போய்ப்பிழைத்தோ மில்லையே.

(பொ-ரை) குற்றத்தோடு நசிக்கும் புழு நிரம்பிய கூடாகிய உடலை மானத்தோடு தாங்கிப் பூமியில் செத்துப்போகாமல், பஞ்ச பாண்டவர்கள் தாங்கள் ஆண்டுகொண்டிருந்த நாட்டை விட்டுக் காட்டிற்குப் போனதுபோல நாமுங் காடடைந்து பிழைத்தோமில்லை.

(வி-ரை) துறவு மேற்கொள்ள வேண்டுமென்றபடி. மானுபி மானத்தை உடலிற் புகுத்தி வாழ்வது வீண் என்றபடி. 33

ஊறை யிறைக்கின்ற வுப்பிருந்த பாண்டத்தை
நாறுமல் நாறி நழுவும் புழுக்கூட்டை
வீறும் புரதத்தை விரும்புகின்ற தெப்படியென்
றூறுத நாட்டி லகன்றிருந்தே னில்லையே.

(பொ-ரை) மலசலங்களை இறைக்கின்ற உப்பிருந்த பாத்திரத்தை; நாற்றம் அடையாமல் நாறி ஒழியும் புழுக்கூட்டை; செருக்கு நிறைந்த உடலைக் காதலிப்பது எவ்வாறு; அதினின்றும் விலகி என்றும் அழியாத பதியில் போந்திருந்தேனில்லை.

(வி-ரை) ஆறுதநாடு-சிவபூமி. 34

அரிய வரிதேடி யறியா வொருமுதலைப்
பரிவுட னேபோற்றும் பரஞ்சுடரைப் போற்றாமல்
கரியபெரு வாழ்வைநம்பிக் காமத் தழுந்தியே
அரிவாயிற் பட்ட கரியதுபோ லானேனே.

(பொ-ரை) அருமையான நாராயணமூர்த்தியுந் தேடி அரிய இயலாத ஒப்பற்ற தலைவனும், அம்மூர்த்தி விருப்பத்தோடு வணங்கும் பரஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை வணங்காமல், அழிந்து போகும் சிறிய வாழ்வை உறுதியெனக் கொண்டு காம இன்பத்தில் விழுந்து நிலைத்துச் சிங்கத்தின் வாயில் அகப்பட்ட யானைபோன்றவனானேன். 35

தந்திரத்தை யுன்னித் தவத்தை மிகநிறுத்தி
மந்திரத்தை யுன்னி மயங்கித் தடுமாறி

விந்துருகி நாதமா மேலொளியைக் காணுமல்
அந்தரத்தே கோலெறிந்த அந்தகன்போ லானேனே.

(பொ-ரை) ஆகமங்களைக்கருதி யோதி அதனுல் பயனில்லை என்று தவத்தை முற்றும் நிறுத்தி, வேதமந்திரத்தையே சொல்லி மயங்கி மனமலைந்து விந்துநாதங் கடந்து மேலொளிருஞ் சிவபாஞ் சுடரைத் தரிசியாமல் ஆகாயத்திலே ஊன்றுகோலை யெறிந்த குருடனைப் போன்றவனுனேன்.

(வி-ரை) தந்திரம் - ஆகமம், மந்திரம் - வேதம். ஆகமநெறி விடுத்து வேதநெறி நிற்போர் விரைவில் ஞானம் பெறுமல் தடுமாறுளத்தினராய் வருந்துவர் என்பது. என்னை? வேதத்தில் பல கடவுளர் பல நெறிகள் பேசப்படலான் அதனை ஆராய்வார்க்கு உள்ளம் விரைவில் ஒருமைப்பட்டுத் தவநெறி கூடாதாகலானென்க. இதனுல் வேதமார்க்கத்தை யிழித்துக் கூறவேண்டுமென்பது ஆசிரியர் கருத்தன்று. ஆகமத்துணையின்றி வேத உண்மை விளங்காதென்று விளக்கியவாறு காண்க. (விரிக்கில் பெருகும்.) 36

விலையாகிப் பாணனுக்கு வீறடிமைப் பட்டதுபின்
சிலையார்கை வேடனெச்சிற் றின்றூனைப் போற்றுமல்
அலைவாய்த் துரும்பதுபோ லாணவத்தி லைழுந்தி
உலைவாய் மெழுகதுபோ லுருகினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! பாணபத்திரனுக்குப் பெருமைபொருந்திய ஆளாகிப் பின்னொருகால் வில்லையேந்திய கண்ணப்பநாயனுர் எச்சிற் புசித்தவனை வணங்காமல், ஆணவத்தில் அழுந்தி அலையில் அகப்பட்ட துரும்பைப்போலவும், உலையிற்பட்ட மெழுகைப்போலவும் வருந்தி யிடர்ப்பட்டாய்.

(வி-ரை) பாணபத்திரன் வரலாற்றைத் திருவிளையாடற் புராணத்திற் காண்க. 37

## பூ ர ண மா லை



மூலத் துதித்தெழுந்த முக்கோண சக்கரத்துள்
வாலை தனைப்போற்றாமல் மதிமறந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கும் நிறைந்துள்ள பொருளே! மூலாதாரத்தில் முளைத்துத் தோன்றிய மூன்று கோணமாக விருக்கின்ற சக்கரத்திலே வாலை யென்னுஞ் சத்தியை நிறுததி வழிபடாமல் அறிவிழந்தேன்.

(வி-ரை) பூரணம்-எங்கும் நிறைந்துள்ள பொருள். மூலாதாரம்-குய்யத்துக்குங் குதத்துக்கும் இடையிலிருப்பது; அதன் மத்தியிலே நான்கு இதழ்களுடைய ஒரு மலர் வடிவமிருக்கும். அது கடப்ப மலரை யொத்திருக்கும். அம்மலரினிடையில் ஓங்கார அட்சரம் விளங்கும். அதன் நடுவண் கணபதியும் வாலையும் வீற்றிருப்பர். 1

உந்திக் கமலத் துதித்துநின்ற பிர்மாவைச்
சந்தித்துக் காணாமற் றட்டழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! உந்திக்கமலத்தில் வெளிப்பட்டுநின்ற பிரமதேவனை எதிர்கொண்டு தரிசியாமல் கெட்டுப்போனேன்.

(வி-ரை) உந்திக்கமலம் - சுவாதிஷ்டானம். இது மூலாதாரத்துக்கு இரண்டு விரற்கடைமேல் விளங்குவது; சதுரவடிவாக விருப்பது. அதனிடையிலே ஆறிதழுடைய ஒரு புட்பவட்டம் பொலிகின்றது. அதன் நடுவண் நகர அட்சரம் துலங்கும். அதில் பிரமதேவனும் சரஸ்வதியுமிருப்பர். 2

நாவிக் கமல நடுநெடுமால் காணாமல்
ஆவிகெட்டு யானு மறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நாபிக்கமல மத்தியிலேயுள்ள நாராயணமூர்த்தியைத தரிசியாமல் உயிர்கெட்டு யானும் அறிவிழந்தவனானேன்.

(வி-ரை) நாபிக்கமலம் - மணிபூரகம். இது சுவாதிஷ்டானத்துக்கு எட்டு விரற்கடைமேலிருப்பது; இஃதண்டவடிவாக விருக்கும். இதன் நடுவில் பத்து இதழுடைய ஒரு புட்பவட்ட மிருக்கின்றது. அதனிடையில் மகர அட்சரம் விளங்கிக்கொண்டிருக்கும். அவ்வட்சரத்தில் விஷ்ணுமூர்த்தியும் இலட்சுமியும் வீற்றிருப்பர். 3

உருத்திரனை யிருதயத்தி லுண்மையுடன் பாராமல்
கருததழிந்து நானுங் கலங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! உருத்திரனை இதயகமலததில் வைத்து உண்மையுடன் காணுமல் மனமழிந்து நான் கலக்கமடைந்தேன்.

(வி-ரை) இதயகமலம்-அநாகதம். இது மணிபூரகத்துக்குமேல் பத்து விரற்கடைமே லிருப்பது. முக்கோண வடிவமாய் விளங்கும். அக்கோணத்தில் பன்னிரண்டிதழுடைய ஒரு புட்ப வடிவமிருக்கும். அதில் சிகர அட்சரம் ஒளிரும். அவ்வட்சரத்தில் உருத்திரமூர்த்தியும் உமாதேவியும் வீற்றிருப்பர். 4

விசுத்தி மயேசுரனை விழிதிறந்து பாராமல்
பசித்துருகி நெஞ்சம் பதறினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! விசுத்தியிலே மகேசுரனைக் கண்திறந்து நோக்காமல் பசியால் மெலிந்து மனம் வருந்தினேன்.

(வி-ரை) இஃது அநாகதத்துக்குப் பத்து விரற்கடைமே லிருப்பது; கண்டஸ்தானத்திலுள்ளது. அறுகோணவடிவா யொளிரும். அக்கோணத்தில் பதினறிதழுடைய ஒரு புட்பவடிவமிருக்கும். அதில் வகர அட்சரம் விளங்கும். அவ்வட்சரத்தில் மகேசுவரனும் மகேசுவரியும் வீற்றிருப்பர். 5

நெற்றி விழியுடைய நிர்மலச தாசிவத்தைப்
புத்தியுடன் பாராமற் பொறியழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! (ஆஞ்ஞையில்) நெற்றிக்கண்ணையுடைய நின்மலப் பொருளாகிய சதாசிவத்தை அறிவோடு நோக்காமல் புத்தியைக் கெடுத்துக்கொண்டேன்.

(வி-ரை) ஆஞ்ஞை: இது விசுத்திக்குப் பன்னிரண்டு விரற்கடைமே லிருப்பது. புருவமத்தியில் விளங்குவது. அதில் மூன்றிதழுடைய ஒரு புட்பவடிவமிருக்கும். அதில் யகர அட்சரமிருக்கும். அதன்கண் சதாசிவனும் மனோன்மணியும் வீற்றிருப்பர். 6

நாத விந்துதன்னை நயமுடனே பாராமல்
போத மயங்கிப் பொறியழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) நாதவிந்துக்களை விருப்பத்துடனே நோக்காமல் அறிவு மயங்கிப் பொறிகலங்கினேன்.

(வி-ரை) நாதம் விந்து - சத்திதத்வம், சிவதத்வம். இவ்விரு தத்துவங்களுஞ் சிவத்திற்குரியன. சிவம் பிறதத்துவங்களை அதிட்டான வாயிலாகவும் நாத விந்து என்னும் இருதத்துவங்களையும் தானே நேராகவும் இயக்குகின்றதென்பது சித்தாந்தம். 7

உச்சி வெளியை யுறுதியுடன் பாராமல்
அச்சமுட னனு மறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சிதாகாசத்தை உறுதியாக நோக்காமல் பயத்தால் யான் புத்தி கெடுத்துக்கொண்டேன்.

(வி-ரை) உச்சிவெளி-நாதவிந்து கடந்த சிதாகாசம். 8

மூக்கு முனையை விழித்திருந்து பாராமல்
ஆக்கைகெட்டு நானு மறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மூக்கு நுனியைத் தூக்கமின்றி நோக்காமல் உடல் நொந்து யான் அறிவழிந்தேன். 9

இடபிங் கலைபி னியல்பறிய மாட்டாமல்
தடையுட னேயானுந் தயங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சந்திர சூரிய கலைகளின் தன்மை யறியமாட்டாமல் தடையுடனே யான் மயங்கினேன். 10

ஊனுக்கு ளீனின் றுலாவினதைக் காணாமல்
நானென் றிருந்து நலமழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! உடலிலே தேவரீர் எழுந்தருளியிருப்பதைப்பாராமல் அதையேநான் என்றுகொண்டு பெறும் பயனைக் கெடுத்துக்கொண்டேன்.

(வி-ரை) தேகத்தைப் பொருளாகக் கொள்வது அறியாமையென்றபடி. 11

மெய்வாழ்வை நம்பி விரும்பிமிக வாழாமல்
பொய்வாழ்வை நம்பிப் புலம்பினேன் பூரணமே.

(பொ-ரை) சத்திய வாழ்வை நம்பி விரும்பிப் பெருமையாக வாழாமல், அசத்திய வாழ்வை நம்பி அழுதேன்.

(வி-ரை) மெய்வாழ்வு - தோற்றக் கேடின்றி யென்றும் ஒரு பெற்றியாய் வாழும் வாழ்வு. பொய்வாழ்வு - தோன்றி நின்றழியும் உலகவாழ்வு. 12

பெண்டுபிள்ளை தந்தைதாய் பிறவியுடன் சுற்றமிவை
உண்டென்று நம்பி யுடலழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மனைவி மக்கள் பிதா மாதா உடன்பிறந்தவர் பந்துக்கள் எல்லாரையுஞ் சதமென்று நம்பித் தேகம் நீங்கப்பெற்றேன். 13

தண்டிகைப்பல் லாக்குடனே சகலசம் பத்துகளும்
உண்டென்று நம்பி யுணர்வழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தண்டிகை, பல்லக்கு இவைகளோடு சகல செல்வங்களும் மெய்யென்று நம்பி அறிவைக் கெடுத்துக்கொண்டேன். 14

இந்த வுடலுயிரை யெப்போதுந் தான்சதமாய்ப்
பந்தமுற்று நாளும் பதமழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! இந்தத் தேகத்தையும் ஆன்மாவையும் பொருளாக்கொண்டு நான் அஞ்ஞானத்தாற் கட்டுப்பட்டு அடையவேண்டிய பயனைக் கெடுத்துக்கொண்டேன். 15

மாதர் பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்து
போத மயங்கிப் பொறியழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பெண்ணென்னும் உலகமயக்கத்திலே விழுந்து அறிவு மயங்கிப் பொறிகளைக் கெடுத்துக்கொண்டேன். 16

சரியைகிரி யாயோகந் தான்ஞானம் பாராமல்
பரிதிகண்ட மதியதுபோற் பயனழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சரியை கிரியை யோகம் ஞானம் இவைகளை நாடாமல் சூரியனைக்கண்ட சந்திரனைப் போல அடையவேண்டிய பிரயோசனத்தை யிழந்தேன். 17

மண்பெண்பொன் னாசை மயக்கத்தி லேவிழுந்து
கண்கெட்ட மாடதுபோற் கலங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மண் பொன் பெண் என்னும் மூவாசை மயக்கத்திலே விழுந்து குருட்டு மாடு போலக் கலங்கிநின்றேன்.

(வி-ரை) மூவாசையால் ஞானக்கண் மறைக்கப்படும். 18

தனிமுதலைப் பார்த்துத் தனித்திருந்து வாழாமல்
அநியாய மாய்ப்பிறந்திங் கலைந்துநின்றேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! ஒப்பற்ற தலைவனைக் கண்டு ஏகாந்தமாகவிருந்து வாழாமல் அநியாயமாகப் பிறந்து இங்கு உழன்று வருந்தினேன். 19

ஈராறு தன்கலைக்கு ளிருந்துகூத் தாடினதை
ஆராய்ந்து பாராம லறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பதினாறுகலைக்குள் நின்று திருநடஞ் செய்ததை ஆராய்ச்சிசெய்து யோசியாமல் புத்தியைக் கெடுத்துக்கொண்டேன். 20

வாசி தனைப்பார்த்து மகிழ்ந்துனைத்தான் போற்றாமல்
காசிவரை போய்த்திரிந்து காலலுத்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! வாசியைக்கண்டு களித்துத் தேவரீரைத் தோத்திரஞ்செய்யாமல் காசிமட்டுஞ்சென்று கால்கள் ஓயப்பெற்றேன். 21

கருவிகடொண் ணூற்றாறிற் கலந்துவிளை யாடினதை
இருவிழியாற் பாராம லிட்டழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தொண்ணூற்றாறு தத்துவங்களிலும் விரவித் தேவரீர் திருவிளையாடல் செய்வதை இருவிழிகளாலுங் காணாமல் கெட்டுப்போனேன். 22

உடலுக்குள் நீநின் றுலாவினதைக் காணாமல்
கடமலைதோ றுந்திரிந்து காலலுத்தேன் பூரணமே.

(வி-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேகத்துக்குள்ளே தேவரீர் உலவுவதைப் பாராமல் காடு மலைகள்தோறும் அலைந்து கால்கள் ஓயப்பெற்றேன். 23

எத்தேச காலமுநா மிறவா திருப்பமென்று
உற்றுனைதான் பாராம லுருவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எந்த தேசத்திலும் எந்தக்காலததிலும் நாம் சாவாதிருப்போமென்று தேவரீரை உற்று நோக்காமல் என்னைக் கெடுத்துக்கொண்டேன். 24

எத்தனைதாய் தந்தை யிவர்களிடத் தேயிருந்து
பித்தனு யானும் பிறந்திறந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எத்தனை மாதா பிதாக்கள் கருவிலே தங்கி அறிவு கெட்டவனாய்ப் பிறந்திறந்தேன்.

பெற்றலுத்தாள் தாயார் பிறந்தலுத்தேன் யானுமுன்றன்
பொற்றுணைத்தாள் தந்து புசலருள்வாய் பூரணமே.

(பொ-ரை) என்னைப் பெற்றுப் பல தாய்மார்கள் அலுத்து விட்டார்கள். யானும் அவர்கள் வயிற்றிலே பிறந்துபிறந்து இளைத்தேன். (ஆனபடியால்) தேவரீருடைய பொன்போன்ற இரு திருவடிகளைச் சரண்புகக் கொடுத்தருள்வாய். 26

உற்றா ரழுதலுத்தா ருறவின்முறைபார் சுட்டலுத்தார்
பெற்றலுத்தாள் தாயார் பிறந்தலுத்தேன பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பந்துக்கள் அழுது அழுது அலுத்தார்கள். உறவின்முறையார் சுட்டு சுட்டு அலுத்து விட்டார். எனது அன்னை என்னைப் பெற்றுப் பெற்று அலுத்து விட்டாள். யானும் பிறந்து பிறந்து அலுத்துப்போனேன்.

(வி-ரை) உற்றார் - தாய் தந்தை மனைவி மக்கள் முதலியவர். உறவின்முறையார் - ஏனைய பந்துக்கள். 27

பிரமன் படைத்தலுத்தான் பிறந்திறந்து நானலுத்தேன்
உரமுடைய வக்கினிதா னுண்டலுத்தான் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நான்முகன் சிருஷ்டித்து அலுத்துவிட்டான். நான் பிறந்தும் இறந்தும் அலுத்துவிட்டேன். பலமுடைய அக்கினிதேவன் என்னைத் தின்று தின்று அலுத்துப்போனான். 28

எண்பத்து நான்குநூ றுபிரஞ்செனன முஞ்செனித்துப்
புண்பட்டு நானும் புலம்பினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நான் எண்பத்துநான்கு நூறாயிரம் பிறவிகளை யெடுத்து வருத்தப்பட்டு அழுதேன். 29

என்னை யறியாம லெனக்குள்ளே நீயிருக்க
உன்னை யறியாம லுடலிழந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எனக்குத் தெரியாமல் அத்துவிதமாக என்னில் தேவரீர் கலந்திருக்க, யான் தேவரீரைத் தெரிந்துகொள்ளாமல் மரித்துப்போனேன்.

(வி-ரை) இறைவன் ஆன்மாக்களிடத்துப் பிரிவின்றிக் கலந்து நிற்றலை யறியாதிருப்பதே அஞ்ஞானம். அக்கலப்பை யறிந்து அவனோடு ஒன்றுபடுவதே ஞானம். "உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியெனும் - கள்ளத்தை யறியமாட்டேன்" என்றார் அப்பர் சுவாமிகள். 30

கருவா யுருவாய்க் கலந்துல கெலாநீயாய்
அருவாகி நின்ற தறிகிலேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! கருவாகவும், உருவாகவும், (அவைகளிற்) கலந்து உலகமெல்லாந் தாமேயாகியும் அருவாக நிற்கின்ற உண்மையைத் தெரிந்துகொண்டிலேன்.

(வி-ரை) கருவாய் - கருவாக இருந்த காலத்திலும், உருவாய் - உடல்தாங்கிய காலத்திலும், எங்கும் நீக்கமற நிறைந்துள்ள தேவரீரை அறியாதிருப்பது என்ன அறியாமை என்றபடி. 31

செம்பொற் கமலத் திருவடியைப் போற்றாமல்
பம்பைகொட்ட வாடும் பசாசானேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சிவந்த பொன் போன்ற திருவடித் தாமரைகளை வணங்காமல் உடுக்கை யடிக்கத் தலைவிரித்தாடும் பிசாசை யொத்தவனானேன். 32

எனக்குள்ளே நீயிருக்க வுனக்குள்ளே நானிருக்க
மனக்கவலை தீர வரமருள்வாய் பூரணமே.

(பொ-ரை) என்னில் தேவரீர் எழுந்தருளியிருக்கத் தேவரீரில் யான் இருக்க (இத்தகை நெருக்கமுடைய தேவரீர் என்னுடைய) உள்ளத துன்ப மொழிய வரமருளல்வேண்டும். 33

எழுவகைத் தோற்றத் திருந்துவிளை யாடினதைப்
பழுதறவே பாராமற் பயனழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீர் எழுவகைப் பிறவிகளிலும் நின்று திருவிளையாடல் புரிந்ததைக் குற்ற நீங்கக் காணாமல் அடைய வேண்டிய பிரயோசனத்தை யிழந்தேன்.

(வி-ரை) எழுவகைத் தோற்றம்-தேவர் மக்கள் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம். எழுவகைப் பிறவி யான் எடுத்த காலத்திலும தேவரீர் எனனை விடுத்துப் பிரிந்ததில்லை யென்றபடி. 34

சாதிபே தங்கள் தனையறிய மாட்டாமல்
வாதனையா னின்று மயங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைகின்ற பொருளே! சாதி வித்தியாசங் களின் தன்மையைத் தெரிந்துகொள்ள முடியாமல் அவ்வேதனைக் குட்பட்டு மயங்கிக் கிடந்தேன்.

(வி-ரை) சாதி பேதங்களைக் கண்டித்தவாறும். "சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்-கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்

வீர்-பாத்திரஞ் சிவமென்று பணிதீரேல்-மாத்திரைக் குள்ளருளுமாற் பேறரே" எனத் திருநாவுக்கரசரும், "மலமில்லை மாசில்லை மாணுபி மானக்-குலமில்லை" எனத் திருமூலரும் அருளிச்செய்திருத்தல் காண்க. 35

குலமொன்றாய் நீபடைத்த குறிப்பை யறியாமல்யான்
மலபாண்டத் துள்ளிருந்து மயங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! குலமொன்று கத் தேவரீர் உண்டாக்கியிருக்கும் நோக்கத்தைத் தெரிந்துகொள் ளாமல் யான் மலபாத்திரமாகிய தேகததி லிருந்து மயங்கினேன்.

(வி-ரை) அறிவைப் பொருளாகக்கொள்ளாது தேகத்தைப் பொருளாகக் கொண்டு வாழ்ந்தமையான் சாதி முதலிய மயக்கங் களில் விழ நேர்ந்தது என்றவாறு. 36

அண்டபிண்ட மெல்லா மணுவுக் கணுவாகநீ
கொண்ட வடிவின் குறிப்பறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! அண்டபிண்ட மெல்லாவற்றிலும் அணுவுக்கு அணுவாகத் தேவரீர் கலந்துகொண் டிருக்கும் திருமேனியின் குறிப்பை உணரேன். 37

சகத்திரத்தின் மேலிருக்குஞ் சற்குருவைப் போற்றாமல்
அகத்திணுடை யாணவத்தா லறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! ஆயிரம் இத ழுடைய தாமரைபோன்ற இதயத்தில் மேவியுள்ள சற்குருநாதனை வழிபடாமல் உள்ளத்திலுள்ள ஆணவமலத்தால் அறிவைப் போக் கிக்கொண்டேன். 38

ஐந்து பொறியை யடக்கியுனைப் போற்றாமல்
நைந்துருகி நெஞ்ச நடுங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பஞ்சேந்திரியங்களை அடக்கித் தேவரீரை வணங்காமல் மனங் கசிந்து கசிந்து வருந்திக் கலக்கமடைந்தேன். 39

என்னைத் திருக்கூத்தா லிப்படிநீ யாட்டுவித்தாய்
உன்னை யறியா துடலழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! அடியேனை (ஊழிற்குத் தக்கவாறு) திருவருள் நோக்கத்தின்படி மாயையால் இவ்வண்ணம் ஆட்டுவித்தாய். ஆட்டுவித்துந் தேவரீரை அறியாமல் மரணமடைந்தேன். 40

நரம்புதசை தோலெலும்பு நாற்றத்துக் குள்ளிருந்து
வரம்பறிய மாட்டாமல் மயங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நரம்பு தசை தோல் எலும்பு என்னுந் துர்வாசனையிற்றங்கியிருந்து திருவருள் எல்லையை உணரமுடியாமல் கலக்கமடைந்தேன். 41

சிலந்தியிடை நூல்போற் சிவசெந்துக் குள்ளிருந்த
நலந்தனைத்தான் பாராமல் நலமழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சிலந்திப்பூச்சியில் நூலிருப்பதுபோலச் சீவர்களிடத்துத் தேவரீர் எழுந்தருளியிருந்த சிறப்பை உற்றுநோக்காமல் பயனைப் போக்கிக்கொண்டேன். 42

குருவாய்ப் பரமாகிக் குடிலைசத்தி நாதவிந்தாய்
அருவா யுருவான தறிகிலேன பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! குருவாகியும் கடவுளாகியும், பிரணவமாகியும், சத்தியாகியும், நாதமாகியும், விந்துவாகியும், அரூபமாகியும், ரூபமாகியும் விளங்கிக்கொண்டுள்ள உண்மையைத் தெரிந்துகொள்ளவில்லை. 43

ஒளியாய்க் கதிர்மதியா யுள்ளிருளா யக்கினியாய்
வெளியாகி நின்ற வியனறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பரஞ்சோதியாய், சூரிய சந்திரராய், ஆணவ விருளாய், அக்கினியாய், ஆகாசமாகி நின்ற திறத்தைத் தெரிந்துகொள்ளேன். 44

இடையாகிப் பிங்கலையா யெழுந்த சுழுமுனையாய்
உடலுயிராய் நீயிருந்த வுளவறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! இடைகலையாய், பிங்கலையாய், மேலே கிளம்பிய சுழுமுனையாய், உடலில் ஆத்மாவாய்த் தேவரீர் எழுந்தருளி யிருந்த சூழ்ச்சியைத தெரிந்து கொள்ளவில்லை. 45

மூலவித் தாய்நின்று முளைத்துடல்தோ றுமிருந்து
கால னெனவழிக்குங் கணக்கறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எல்லாவற்றிற்கும் காரணமாக இருந்து தோன்றித் தேகந்தோறும் ஆத்மவடிவமாக நிலைத்து இயமனைப்போல அழிக்குங் குறிப்பைத் தெரிந்துகொண்டேனில்லை. 46

உள்ளும் புறம்புமா யுடலுக்குள் நீயிருந்த
தெள்ளளவு நானறியா திருந்தேனே பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேகத்தின் அகத்திலும் புறததிலுந் தேவரீ ரெழுந்தருளியிருந்ததைச் சிறிதும் நான் உணர்ந்தேனில்லை. 47

தாயாகித் தந்தையாய்த் தமர்கிளைஞர் சுற்றமெல்லாம்
நீயாகி நின்ற நிலையறியேன பூரணமே.

(பொ - ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! அன்னையாய் அப்பனாய் உறவினர் பந்துக்கள் எல்லாம் தேவரீராக விளங்குகின்ற அதநுவித நிலையைத் தெரிந்துகொண்டேனில்லை. 48

விலங்குபுள் ளூர்வனவசரம் விண்ணவர் நீர்ச் சாதிமனுக்
குலங்களெழு வகையில்நின்ற குறிப்பறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மிருகம் பறவை நகர்வன தாவரம் தேவர் நீர்வாழ்வன மனிதர்கள் என்னும் எழு வகைப் பிறப்புக்களில் தேவரீர் எழுந்தருளியிருக்கின்ற கருத்தை அறிந்தேனில்லை. 49

ஆணாகிப் பெண்ணா யலியாகி வேற்றுருவாய்
மாணாகி நின்ற வகையறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! ஆணாகியும் பெண்ணாகியும் அலியாகியும் பல வேறு வடிவமாகியும், பெருமையோடு நின்ற தன்மையைத தெரிந்தேனில்லை. 50

வாலையாய்ப் பக்குவமாய் வளர்ந்துகிழந் தானாகும்
பாலையாய் நின்ற பயனறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைநதுள்ள பொருளே! பாலைப்பருவமாகியும், யௌவனப் பருவமாகியும், சிறந்த முதுமைப் பருவமாகியும் சத்தியமாகியும் நின்ற பயனை அறிந்தேனில்லை. 51

பொய்யாய்ப் புவியாய்ப் புகழ்வா ரிதியாகி
மெய்யாகி நின்ற வியனறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பொய்யாகியும், உலகமாகியும், புகழப்படுகின்ற கடலாகியும், உண்மையாகியும் விளங்கு கின்ற பெருமையை யறியேன். 52

பூவாய் மணமாகிப் பொன்னாகி மாற்றாகி
நாவாய்ச் சொல்லான நயமறியேன் பூரணமே.

(பொ - ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மலராகியும், வாசனையாகியும், பொன்னாகியும், அதன் நிறமாகியும், நாவாகியும், அதிற் பிறக்கின்ற சொல்லாகியும் நிற்கின்ற சிறப்பை அறியேன். 53

முதலாய் நடுவாகி முப்பொருளாய் மூன்றுலகாய்
இதமாகி நின்ற வியலறியேன பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! ஆதியாய், இடையாய், மூன்று பொருளாய், மூன்று உலகாய், நல்லதாய் நின்ற தன்மையை யான் தெரிந்துகொண்டேனில்லை. 54

ஊனா யுடலுயிரா யுண்ணிறைந்த கண்ணொளியாய்த்
தேனாய் ருசியான திறமறியேன் பூரணமே.

(பொ - ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மாமிசமாய், (மாமிசத்தாலாய) தேகமாய், தேகத்தில் ஆன்மாவாய், ஆன்மாவில் நிறைந்த கண்ணொளி போன்றதாய், தேனாய், சுவையாய் நின்ற உண்மை உணரேன். 55

வித்தாய் மரமாய் விளைந்தகனி யாய்ப்பூவாய்
சித்தாகி நின்ற திறமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! விதையாகியும், விருட்சமாகியும், பழுத்த பழமாகியும், பூவாகியும், அறிவாகியும் நின்ற உண்மை உணரேன். 56

ஐவகையும் பெற்றுலக வண்டபகி ரண்டமெல்லாந்
தெய்வ மெனநின்ற திறமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பஞ்ச பூதங்களைத் தந்து அவற்றின் காரியமாய் அண்டபகிரண்டங்க ளெல்லாவற்றிற் குங் கடவுளென்று விளங்குகின்ற உறுதி யான் அறியேன். 57

மனமாய்க் கனவாகி மாய்கையா யுள்ளிருந்து
நினைவாகி நின்ற நிலையறியேன் பூரணமே.

(பொ - ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! உள்ளமாய் சொப்பனமாய், மாயமாய், மனதிலிருந்து நினைவாய் விளங்கின தன்மை யான் உணரேன். 58

சததி சிவமிரண்டாய்த நான்முடிவி லொன்றாகிச்
சித்திரமாய் நின்ற திறமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சத்தி சிவம் என்னும் இரண்டு பொருளாகியும், முடிவில் ஒரு பொருளாகியும், அத்தகைச் சித்திரமாகியும் விளங்கின பெருமை தெரிந்தேனில்லை. 59

பொறியாய்ப் புலனாகிப் பூதபே தப்பிரிவாய்
அறிவாகி நின்ற வளவறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பொறியாய், புலனாய், பூதமாய், அவற்றின் பேதமாய், அறிவாய் நின்ற அளவினை அறிந்தேனில்லை. 60

வானிற் கதிர்மதியாய் வளர்ந்துபின் ஒன்றான துபோல்
ஊனுடலுக் குள்ளிருந்த வுயிர்ப்பறியேன் பூரணமே.

(பொ-ரை) ஆகாயத்தில் சூரிய சந்திரராய் வளர்ந்து பிறகு ஓரொளியாதல்போல மாமிசத்தாலாகிய உடலுக்குள்ளிருந்த பிராணனைத் தெரிந்துகொண்டேனில்லை. 61

பொய்யும் புலையுமிகப் பொருந்திவீண் பேசலன்றி
ஐயோ வுனைவுரைக்க வறிகிலேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பொய்மையையும் புலாலுண்ணலையும் மிகவுங் கொண்டு வீணாகப் பேசுதல் அல்லாமல் அந்தோ! தேவரீரை வழுத்தத் தெரிந்துகொள்ள வில்லையே. 62

நிரந்தரமா யெங்கு நின் றுவிளை யாடினதைப்
பரமதுவே யென்னப் பதமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எப்பொழுதும் எங்கும் நீக்கமற நிறைந்து ஐந்தொழிலாகிய ஆடலைச் செய்யும் ஒன்றையே மேலான பொருளாகக் கொள்ளுந் தன்மை யறிந்தேனில்லை. 63

கொல்வாய் பிறப்பிப்பாய் கூடவிருந் தேசுகிப்பாய்
செல்வாய் பிறர்க்குட் செயலறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! அழிப்பாய், படைப்பாய், உடனிருந்தே அளிப்பாய், பிறருள் செல்வாய், இத தகை அருட்செயல்களை அறியேன். 64

வாரிதியாய் வையமெல்லா மன்னுமண்ட பிண்டமெல்லாஞ்
சாரதியாய் நின்ற தலமறியேன் பூரணமே.

(பொ-ரை) கடலாய், உலகம் யாவும் நிலைபெற்ற அண்டபிண் டங்க ளெல்லாவற்றையுஞ் செலுத்துபவனாய் நின்ற இடத்தைத் தெரிந்துகொண்டேனில்லை. 65

வித்தாய் மரமாய் வெளியா யொளியாய்நீ
சத்தா யிருந்த தரமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீர் விதை யாய், மரமாய், வெளியாய், ஒளியாய், உண்மைப் பொருளாயிருந்த தன்மை யான் அறியேன். 66

தத்துவத்தைப் பார்த்துமிகத் தன்னை யறிந்தறிவால்
உய்த்துனைத்தான் பாராம லுய்வாரோ பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தத்துவ தரிசனஞ் செய்து அதற்குமேல் மிகுதியுந் தன்னைத்தானறிந்து அந்த அறிவால் தேவரீரை ஆராய்ந்து நோக்காமல் பிழைப்பார்களோ?. 67

ஒன்று யுயிரா யுடல்தோறு நீயிருந்தும்
என்று மறியார்க ளேழைகள்தாம் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீர் ஏகமாய் ஆன்மாவாய்த் தேகந்தோறும் எழுந்தருளியிருந்தும் அறிவில்லாத வர்கள் தேவரீரை எப்பொழுதும் அறியமாட்டார்கள். 68

நேற்றென்று நாளையென்று நினைப்புமறப் பாய்ப்படைத்து
மாற்றமாய் நின்ற வளமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நேற்று என்றும் நாளை யென்றும் நினைப்பு மறப்பு உடையவர்களாக உயிர்களைச் சிருஷ்டித்துத் தேவரீர் அவைகளுக்கு வேறாக உள்ள சிறப்பை அறியமாட்டேன். 69

மனம்புத்தி சித்த மகிழறிவாங் காரமதாய்
நினைவாந் தலமான நிலையறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மனம் புத்தி சித்தம் இறுமாப்புடைய அறிவாகிய ஆங்காரமாய், அவைகளைக் கருதும் இடமாக உள்ள ஒருநிலை உணரேன். 70

உருப்பேத மின்றி யுயர்ந்தசத்த பேதமதாய்க்
குருப்பேத மாய்வந்த குணமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! வடிவத்தில் வேற்றுமையின்றி மேலான ஓசையில் வேற்றுமையுடையதாய் நிறபேதமாக எழுந்தருளிய தன்மை உணரேன். 71

சட்சமய பேதங்கள் தான்வகுத்துப் பின்னுமொரு
உட்சமய முண்டென் றுரைத்தனையே பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! அறுவகைச் சமய பேதங்களை உண்டாக்கி மேலும் ஓர் அகச்சமயம் உண்டென்று அருளிச்செய்தாய். 72

முப்பத் திரண்டுறுப்பாய் முனைந்துபடைத் துள்ளிருந்த
செப்படி வித்தை திறமறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்த பொருளே! முப்பத்திரண்டு அங்கங்களாக உடலை விரைந்து சிருஷ்டித்தருளிய தேவரீர் அதனுள்ளே எழுந்தருளியுள்ள சாலவித்தையின் ஆற்றலை உணரேன். 73

என்னதான் கற்றாலென் னெப்பொருளும் பெற்றாலென்
உன்னை யறியாதா ருய்வரோ பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எத்தனை நூல்களைப்படித்தா லென்னபயன்? எவ்வளவு செல்வமடைந்தாலென்ன பயன்? தேவரீரை உணராமல் யார்தான் பிழைப்பர்?. 74

கற்றறிவோ மென்பார் காணார்க ளுன்பதத்தைப்
பெற்றறியார் தங்களுக்குப் பிறப்பறுமோ பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! எல்லா நூல்களையும் படித்துவிட்டோம் என்று சொல்பவர்களே தேவரீர் திருவடியைக் காணமாட்டார்கள். அதைப்பெறாதவர்களுடைய பிறவி யெங்ஙனம் ஒழியும்?.

(வி-ரை) கல்வியாலாயபயன் கடவுளை வணங்குதல் என்றவாறு. "கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்" என்று திருமூலதேவரும், "கற்றதனா லாயபய னென்கொல் வாலறிவன் - நற்றாடொழாஅ ரெனின்" என்று திருவள்ளுவருங் கூறியிருத்தல் காண்க. 75

வானென்பா ரண்டமென்பார் வாய்ஞான மேபேசித்
தானென்பார் வீணர் தனையறியார் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! (தேவரீரை) ஆகாசம் என்று சொல்லுவார்கள்; அண்டமென்று சொல்லுவார்கள்; வாசாஞானம்பேசித் தாங்களென்று சொல்லுவார்கள். இவர்

கள் வீணர்கள்; தாங்கள் வந்த ஆரம்ப வரலாற்றை அறியாத வர்கள். 76

ஆதியென்பா ரந்தமென்பா ரதற்குண்டு வாயிருந்த
சோதியென்பார் நாதத் தொழிலறியார் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! முதலென்று சொல்லுவார்கள்; முடிவென்று சொல்லுவார்கள்; அவ்விரண்டிற்கும் இடையிலுள்ள சோதியென்று சொல்லுவார்கள். இவர்கள் நாத தத்துவத்தின் செயலை அறியாதவர்கள். 77

மூச்சென்பா ருள்ளமென்பார் மோனமெனு மோட்சமென்பா
பேச்சென்பா ருன்னுடைய பேரறியார் பூரணமே. [ர்

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! உயிர்ப்பு என்று சொல்லுவார்கள்; மனமென்று சொல்லுவார்கள்; மௌனம் என்னும் முத்தியென்று சொல்லுவார்கள்; ஒளிவடிவமென்று சொல்லுவார்கள்; அவர்கள் தேவரீரது திருப்பெயரை உணராதவர்கள். 78

பரமென்பார் பானுவென்பார் பாழ்வெளி யாய்நின்ற
வரவென்பா ருன்றன் வழியறியார் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீரை மேலான பொருளென்று சொல்லுவார்கள்; சூரியனென்று சொல்லு வார்கள்; சூந்யமாகவுள்ள நிலையென்று சொல்வார்கள்; அவர்கள தேவரீரது அருள்வழியை யறியாதவர்கள். 79

எத்தனைபே ரோவெடுத் தெடுத்துத் தானுரைத்தார்
அத்தனைபேர்க் கொன்றுன தறிகிலேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பலபேர் தேவ ரீர் நிலையைப் பலவாறு பன்முறையெடுத்துக் கூறியுள்ளார். அவர்

கருத்துக்கெல்லாம் தேவரீர் ஒரு பொருளாக விளங்கினதை உணர்ந்தேனில்லை. 80

நகார மகாரமென்பார் நடுவே சிகாரமென்பார்
வகார யகாரமென்பார் வகையறியார் பூரணமே.

(பொ-ரை) நகர மகரமென்று சொல்வார்கள்; இடையிலே சிகரத்தை அமைத்துக் கூறுவார்கள்; வகர யகரங்களையும் புகல்வார்கள். அவர்கள் ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் உண்மை வழியை அறியாதவர்கள். 81

மகத்துவமாய்க் காம மயக்கத்துக் குள்ளிருந்து
பகுத்தறிய மாட்டாமற் பயனழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பெருமையாகக் காம மயக்கத்தி லழுந்தி நன்மை தீமை பகுத்தறிய முடியாமல் பெறும் பிரயோசனத்தைக் கெடுத்துக்கொண்டேன். 82

உண்மைப் பொருளை யுகந்திருந்து பாராமற்
பெண்மயக்கத் தாலே பிறந்திறந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சத்திய வஸ்துவை விரும்பி ஓரிடத்தில் தனித்திருந்து நோக்காமல் மாதர் மயக்கத்தில் விழுந்து ஜனன மரண துன்பங்களை யேற்றேன். 83

வாயார வாழ்த்தி மகிழ்ந்துனைத்தான் போற்றாமல்
காய மெடுத்துக் கலங்கினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீரை வாய் நிரம்பத் தோத்திரஞ் செய்து வணங்காமல் வீணாகத் தேகத்தைச் சுமந்து கலக்கமடைந்து கெட்டேன். 84

சந்திரனை மேகமது தான்மறைத்த வாறதுபோற்
பந்தமுற யானுமுனைப் பார்க்கிலேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சந்திரனை மேக மானது மறைந்தவிதம்போல என்னிற் பாசம் பொருந்த அதனால் யான் தேவரீரைத் தரிசிக்கிலேன். 85

செந்தா மரைத்தாளைத் தினந்தினமும் போற்றாமல்
அந்தரமாய் நின்றங் கலைந்தேனே பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! செந்தாமரை மலர் போன்ற தேவரீர் திருவடிகளை நாடோறுந் தோத்திரஞ் செய்யாமல் ஒரு பற்றுக்கோடுமின்றி நின்று திரிந்து கெட்டேன். 86

நீர்மேற் குமிழிபோல் நிலையற்ற காயமிதைத்
தாரகமென் றெண்ணிநான் தட்டழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நீரின்மீதுதோன்றி நின்று அழியும் நிலையில்லாத குமிழிபோன்ற தேகமாகிய இதனை ஆதாரமாக நினைத்து நான் நிலைகுலைந்து கெட்டேன். 87

நெஞ்ச முருகி நினைந்துனைத்தான் போற்றிநெடு
வஞ்சகத்தைப் போக்க வகையறியேன பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீரை மன முருகித் தியானித்து வணங்கிப் பெரிய காவினையொழிக்க வழி யுணர்ந்தேனில்லை. 88

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்திருந்த
துள்ள மறியா தருகினேன் பூரணமே.

(பொ-ரை) எங்கும் நிறைந்துள்ள பொருளே! எள்ளுக்குள் எண்ணெய்போல எவ்விடத்திலும் வியாபித்திருப்பதை எனதுள்ளம் அறியப்பெருமையால் இடர்ப்பட்டேன். 89

மாயா பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்தே
ஓயாச் சனன மொழித்திலேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மாயையின் காரிய மாகிய உலக மயக்கத்திலே மூழ்கித் தணியாத பிறவியை ஒழித்துக்கொண்டேனில்லை. 90

பூசை யுடன்புவன போகமெனும் போக்கியததால்
ஆசையுற்றே நானு மறிவழிந்தேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பிறர் தோத்திரஞ் செய்தலோடு உலக போகபாக்கியங்களில் விருப்பம்வைத்து நான் உணர்வு கெடப்பெற்றேன். 91

படைத்து மழித்திடுவாய் பார்க்கிற்பிர மாவெழுத்தைத்
துடைத்துச் சிரஞ்சீவியாய்த் துலக்குவிப்பாய் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சிருஷ்டித்துச் சம்மாரஞ் செய்வாய் (அதை உற்று) நோக்கின் பிரமன் எழுதும் எழுத்தாகிய தலைவிதியையும் அழித்து என்றும் இறவாது வாழுஞ் சிரஞ்சீவிபதத்திலும் விளங்கச் செய்வாய். 92

மந்திரமாய்ச் சாத்திரமாய் மறைநான்காய் நீயிருந்த
தந்திரத்தை நானறியத் தருமோதான் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தேவரீர் மந்திர வடிவமாகவும் ஆகம வடிவமாகவும் நான்கு வேத வடிவமாகவும் வீற்றிருந்த சூழ்ச்சியை நான் உணருந் தரத்ததோ?. 93

அல்லாய்ப் பகலா யனவரத காலமெனுஞ்
சொல்லாய்ப் பகுத்த தொடர்பறியேன் பூரணமே.

(பொ-ரை) இரவாய் பகலாய் எல்லாக்காலம் என்னப்படுஞ் சொல்லாய்ப் பகுத்தறியஞ் சம்பந்தத்தை யுய்த்துணரேன். 94

நரகஞ் சுவர்க்கமென நண்ணு மிரண்டாயும்
அரகரா வென்ப தறிகிலேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நரகலோகம் சுவர்க்கலோகம் என்று ஆன்மாக்கள் அடையத்தகுந்த இரண்டு லோகங்கள் ஏற்பட்டும் ஹர ஹரா என்றுசொல்ல அறிந்தேனில்லை.

பாவபுண் ணியமென்னும் பகுப்பாய் படைத்தழித்திங்
காவலையுண் டாக்கிவைத்த வருளறியேன் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பாவம் புண்ணியம் என்னும் பகுப்பாக உண்டாக்கி அவைகளைக் கெடுத்து ஆசையையும் உண்டாக்கிவைத்த திருவருட்டிறத்தை அறியேன். 96

சாந்தமென்றுங் கோபமென்றுஞ் சாதிபே தங்களென்றும்
பாந்தமென்றும் புத்தியென்றும் படைத்தனையே பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! சாந்தமென்றும் கோபமென்றும் சாதி வேற்றுமைகளென்றும் பந்தமென்றும் புத்தியென்றும் உண்டாக்கினாய். 97

பாச முடலாய்ப் பசுவதுவுந் தானுயிராய்
நேசமுட னீபொருளாய் நின்றனையே பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பாசமே தேகமாகவும் பசுவே உயிராகவும் விருப்பத்துடன் தேவரீர் பதிப்பொருளாகவும் எழுந்தருளி யிருக்கின்றீர். 89

ரதி லடியா ரிரங்கியிகத் திவ்வந்துன்
பாத மதில்தாழப் பரிந்தருள்வாய் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! மாசில்லாத அடியவர்கள் மனமுருகி யிங்கே தேவரீரை யடைந்து தேவரீர் திருவடிகளில் வணங்க அன்போடு திருவருள் செய்வாய். 99

நானேநீ நீயேநா னுமிரண்டு மொன்றானால்
தேனின் ருசியதுபோற் றெவிட்டாய்நீ பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! நானே நீயாகவும் நீயே நானாகவும் இரண்டற்று ஒன்றானால் தேனினது சுவைபோலத் தித்திப்பாக விருப்பாய். 100

முடிவிலொரு சூனியத்தை முடிந்துநின்று பாராமல்
அடியிலொரு சூனியத்தி லலைந்தேனே பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! தத்துவ முடிவிலேயுள்ள நிராதாரவஸ்துவை யென்னுட்படுத்தி நிலைத்து நில்லாமல் கீழுள்ள மாயையில் நிலைதளர்க் கெட்டேன். 101

பூரண மாலைதனைப் புத்தியுட னோதினர்க்குத்
தாரணியில ஞானந் தழைப்பிப்பாய் பூரணமே.

(பொ-ரை) எங்கு நிறைந்துள்ள பொருளே! பூரணமாலையென்னும் இதனை அறிவோடு (பொருளுணர்ந்து) பாராயணஞ்செய்பவர்கட்கு உலகத்திலே ஞானத்தைப் பெருகச் செய்வாய். 102

---

## நெஞ்சொடுமகிழ்தல்



அன்றுமுத லின்றளவு மாக்கையொடு சூழ்ச்சியுமாய்
நின்ற நிலையறிய நேசமுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! பிறந்த நாள்முதல் இந்நாள்மட்டும் உடலோடு தந்திரமாக நிலைத்துள்ள உண்மையை உணர விருப்பங் கொண்டாய். 1

அங்கங் குணர்வா யறிவாகி நீடநிரம்பி
எங்கெங்கு மானதிலே யேகரித்தாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! அவ்வவ் விடங்கடோறும் உணர்வாகியும் அறிவாகியும் நிரம்பி எவ்வெவ்விடங்களிலுங் கலந்து நிற்கின்றாய். 2

அலையாத பேரின்ப வானந்த வெள்ளத்தில்
நிலையா யுருவிறந்து நின்றனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! மாறாத பேரானந்த வாரிதியில் நிலையாக உருவக்கெட்டு நின்றாய். 3

பாராமற் பதையாமற் பருகாமல் யாதொன்றும்
ஓரா துணர்வுடனே யொன்றினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனபே! ஒன்றையும் பாராமலும், பார்த்துப் பதை பதையாமலும், அநுபவியாமலும், ஆராயாமலும் அறிவுடனே இறைவனோடு கலந்தாய். 4

களவிறந்து கொலையிறந்து காண்பனவுங் காட்சியும்போய்
அளவிறந்து நின்றநிலை யன்புற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! களவைநீக்கிக் கொலையைநீக்கிக் காட்டப் படும் பொருளும் அதைக்காணுங் காட்சியும் ஒழிந்து அளவு கடந்து நின்ற ஒன்றிலே விருப்பம் வைத்தாய். 5

பேச்சிறந்து சுட்டிறந்து பின்னிறந்து முன்னிறந்து
நீச்சிறந்து நின்றதிலே நேசமுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! உரைகடந்து சுட்டுணர்வைத் தாண்டி வருங்கால மழிந்து சென்றகால மொழிந்து (போக்குவரவில்லா) ஒன்றிலே நீ பெரிதும் விருப்பம் வைத்தாய். 6

விண்ணிறந்து மண்ணிறந்து வெளியிறந்து வொளியிறந்து
எண்ணிறந்து நின்றதிலே யேகரித்தாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! ஆகாயத்தைக் கடந்து, நிலத்தைக் கடந்து, வெளி குன்றி, ஒளி மங்கி, எண்ணைத் தாண்டி நின்ற ஒன்றிலே கலந்தாய். 7

பார்த்த விடமெங்கும் பரமெனவே யுட்புறம்புங்
கோத்தபடி யுண்மையெனக் கொண்டனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! கண்ட விடமெல்லாங் கடவுள் என்று சொல்லும்படி அகத்திலும் புறத்திலுங் கலந்துள்ள தன்மையை உண்மை யென்று கொண்டாய். 8

ஊரிறந்து பேரிறந்து வொளியிறந்து வெளியிறந்து
சீரிறந்து நின்றதிலே சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! ஊரைக் கடந்து பேரைக்கடந்து ஒளி குன்றி வெளி நீங்கி புகழ்கெட்டு நின்ற ஒன்றிலே நிலைத்தாய். 9

ஆண்பெண் ணலியென் றழைக்கவரி தாய்நிறைந்து
காண்பவரி தாயவிடங் கண்ணுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! ஆணென்றும் பெண்ணென்றும் அலி யென்றும் பகுத்துக் கூப்பிட முடியாமல் எங்கணும் ஒரு பெற்றி யாய் நின்று பார்த்தற்கரிய ஓரிடத்தைப் பார்த்தாய். 10

ஆங்கார மச்ச மகற்றி யறிவினொடு
தூங்காமற் றூங்கிச் சுகமபெற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! கர்வம் பயம் இவைகளை நீக்கி அறி வுடனே தூங்காமல் தூங்கி இன்பம் அடைந்தாய். 11

ஆதியாய் நின்ற வகண் டபரி பூரணத்தைச்
சாதியா நின்றவிடஞ் சார்வுற்றாய நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! எல்லாவற்றிற்குங் காரணமாக விருக்கின்ற அகண்டாகார வத்துவைத் தெரியத்தகக இடதகில் சேர்ந்தாய். 12

விருப்புவெறுப் பில்லாத வெட்ட வெளியதனில்
இருப்பே சுகமென் றிருந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! விருப்பு வெறுப்பில்லாத சிதாகாசத்தில் இருக்கின்றதே இன்பம் என்று கருதி அவ்விடத்திலேயே தங் கினாய். 13

ஆருமுறாப் பேரண்டத் தப்புறதது மிப்புறத்தும்
நீரு முப்புமென்ன நிலைபெற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! எவரும் அணுகாத பெரிய அண்டததிலே அப்பக்கத்திலும் இப்பக்கத்திலுஞ் சலமும் உப்பும்போல நின்று விட்டாய். 14

உடனாக வேயிருந்து முணரா வரி யானேடு
கடனீரு மாறும்போற் கலந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! என்னுடன் அத்துவிதமாகக் கலந்திருந்தும் அறிகின்றதற்கு அரியவனுயிருப்பவனேடு சமுத்திர சலமும் நதியும்போலக் கலநதுவிட்டாய். 15

நெடியகததைப் போக்கி நின்ற சழக்கறுததுப்
படிகததுக் குடபம்போற் பற்றினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! மிக்க அகங்காரததை அழித்து அதனுல் நிலைததுள்ள குற்றத்தை யொழித்துப் படிகத்தாற் செய்யப்பட்ட குடத்தைப்போலாகி இறைவனைப் பற்றிக்கொண்டாய். 16

மேலாகி யெஙகும் விளங்கும் பரமபொருளிற்
பாலூறு மென்சுவைபோற் பற்றினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! எல்லாவற்றிற்கும் மேற்பட்டதாய் எவ்விடத்திலும் ஒளிருங கடவுளிடத்தில்பாலிலுள்ள மெல்லிய சுவைபோலக் கலந்தாய். 17

நீரொடுதண் ணுலிவிண்டு நீரான வாறேபோல்
ஊரொடுபே ரிலலானே டொன்றினையே நெஞ்சமே

(பொ-ரை) மனமே! சலததோடுதோன்றுங் குளிர்ந்த ஆலங்கட்டி யுடைந்து சலமாவதுபோல ஊர்பேரில்லாத கடவுளோடு கடவுளாகக் கலந்தாய். 18

இப்பிறப்பைப் பாழ்ப்படுததி யிருந்தபடி யேயிருக்கச்
செப்பவரி தாயவிடஞ் சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! இப்பிறவியைக் கெடுத்து என்றும் ஒருபடித்தாயிருப்பச் சொல்லுதற்கரிய விடத்தில் சேர்ந்தாய். 19

மேலாம் பதஙகளெலலாம் விட்டுவிட் டாராய்ந்து
நாலாம் பததி னடந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! மேலாகிய பதவிகளெல்லாவற்றையும் விட்டுவிட்டு ஆராய்ச்சிசெய்து நான்காம் பதவியில் சென்றாய்.

(வி-ரை) நான்காம் பதவி-சாயுச்சியம். 20

கடங்கடங்க டோறுங் கதிரவ னூடாடி
அடங்குமிடம் தானறிந் தன்புற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! ஒவ்வொரு பாண்டத்திலும் சூரிய பிம்பந் தோன்றிப் பாண்டம் உடைந்த வழிச் சூரியப் பிரதிபிம்பஞ் சூரியனில் அடங்குமிடத்தைத் தெரிந்துகொண்டு அன்பு செலுத்தினாய்.

(வி-ரை) கடம்-தேகம். சூரியன்-பிரமம். 21

கற்றவனாய்க் கேட்டவனாய்க் காணானாய்க் காண்பவனாய
உற்றவனாய் நின்றநிலை யொன்றுபட்டாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! கற்றவனாகவும் கேட்டவனாகவும் காணாதவனாகவுங் காண்பவனாகவும் நண்ணினவனாகவும் நிலைத்துள்ள ஒன்றிலே கலந்தாய். 22

நாலு வகைக்கரண நலகுபுல னைந்துமொன்றாய்ச்
சீலமுற்று நின்றதிலே சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! நான்குவிதகாணங்களும் விடயங்களில் தாக்குவிக்கும் ஐம்புலன்களும் ஒன்றாகத் தூய்மைபொருந்தி நின்ற ஒன்றிலே கலந்தாய். 23

விட்டிடமும் தொட்டிடமும் விண்ணிடமு மண்ணிடமுங்
கட்டுமொரு தன்மையெனக் கண்ணுற்றாய நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! விட்ட விடம் தொட்ட விடம் தேவலோகம் பூலோகம் இவை இறைவன் ஆணையால் கட்டுப்பட்டுள்ள ஒற்றுமை கண்டாய். 24

எங்கெந்த நாளு மிருந்தபடி யேயிருக்க
அந்தச் சுகாதீத மாக்கினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! எப்பொழுதும் மாறுதலின்றி ஒருபடித்தாய் விளங்க மேலான ஆனந்தமயமாய் விட்டாய். 25

வாக்கிறந்து நின்ற மனோகோ சரந்தனிலே
தாக்கறவே நின்றதிலே தலைசெய்தாய் நெஞ்சமே.

(பொ-ரை) வாக்கு மனங்கட்கு எட்டாத அகண்ட நிலையில் காணத் தாக்குதல் இல்லாமல் மேன்மை பெற்றாய். 26

எத்தேச முநிறைந்தே யெக்கால முஞ்சிறந்து
சித்தாய சித்தினிடஞ் சேர்ந்தனையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! எந்நாட்டிலும் நிரம்பி எக்காலத்திலும் சிறந்து விளங்கும் அறிவுப் பொருளினிடத்துச் சேர்ந்தாய். 27

தாழாதே நீளாதே தன்மயமா தாய்நிறைந்து
வாழாதே வாழ மருவினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! குறுகாமலும் பெருகாமலும் என்றும் ஒரு பெற்றியாயுள்ள தன்வயமாக வியாபித்து வாழாமல் வாழச் சென்றாய். 28

உள்ளும் புறம்பு முவட்டாத வானந்தக்
கள்ளருந்தி நின்றதிலே கண்ணுற்றாய் நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! அகமும் புறமுந் தெவிட்டாத பேரானந்தக் கள்ளைக் குடித்து நின்று அதிலே நோக்குஞ் செலுத்தினாய். 29

வாதனைபோய் நிட்டையும்போய் மாமௌன ராச்சியம்போய்ப்
பேதமற நின்றவிடம் பெற்றனையே நெஞ்சமே

(பொ-ரை) மனமே! உலக வாசனை யழிந்து, நிஷ்டையு மொழிந்து, பெரிய மோன ராஜ்ஜியமுஞ் சென்று நீ நான் என்னும் வேற்றுமைகெட நின்ற விடத்தை யடைந்தாய். 30

இரதம் பிரிந்துகலந் தேகமாம் வாறேபோல்
விரகந் தவிர்ந்தனைப்பால் மேவினையே நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! இரசம் பிரிந்து உடனே கலந்து ஒன்று மாறுபோல அவாக்களை யொழித்துச் சிவத்தோடு ஒன்றுபடக் கலந்தாய். 31

சோதியான் சூழுபனிநீர் சூறைகொளு மாறேபோல்
நீதிகுரு வின்றிருத்தாள் நீபெற்றாய நெஞ்சமே.

(பொ-ரை) மனமே! சூரியன் தன்னைச் சூழ்ந்துள்ள பனிச் சலத்தை அழிப்பதுபோல உனது அஞ்ஞானத்தை ஒழித்த சத்குருவின் திருவடிகளை அடைந்தாய் 32



திருவொற்றியூரில் பட்டினத்தார் தம்மைச் சிவலிங்கமாகக்காட்டியது

உ

சிவமயம்

# பத்திரகிரியார் வரலாறு

பத்திரகிரியார் அரச குலத்தில் தோன்றினவர்; சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்தவர்; அறநெறி வழாது உஞ்சேனை மாகாளம் என்னும் பதியை யாண்டவர். அவரது அரசாட்சி காலத்தில் ஒருநாள் திருடர் பலர் ஒன்றுகூடி நகர்ப்புறத்திலேயுள்ள ஒரு குறுங்காட்டிலே திருக்கோயில் கொண்டு வீற்றிருந்தருளும் விநாயகக்கடவுள் திருச்சந்நிதியடைந்து "பெருமானே! நாங்கள் இன்றிரவு அரசமாளிகை புகுந்து களவிடப்போகிறோம். தேவரீர் திருவருள் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்து, ஊரை யடைந்து, நள்ளிரவில் அரண்மனை புகுந்து, தாம் விரும்பியவாறு பட்டாடைகளையும், பொன்னாபரணங்களையும், மாணிக்கப் பதக்கங்களையும், பிறபொருள்களையுந் திருடிக்கொண்டு சென்றார். அன்னார் செல்லுங்கால் தமக்குத் திருவருள் புரிந்த கணபதி ஆலயமடைந்து ஒரு மாணிக்க மாலையை அக்கடவுளுக்குச் சூட்டி வழியே போய்விட்டனர். அதுபோழ்து அர்த்தராத்திரியாகையால் அம்மாணிக்கமாலை விநாயகர் திருக்கழுத்தில் விழாமல் அங்கு நிஷ்டைகூடியிருந்த பட்டினத்தடிகள் திருக்கழுத்தில் விழுந்தது.

பொழுது விடிந்ததும் அரசமாளிகையில் களவு நிகழ்ந்த செய்தி ஊரெங்கணும் பரவிற்று. அரசன் ஆணைப்படி வேவுகாரர்கள் திருடர்களைத் தேடத்தொடங்கினார்கள். ஊரப்புறத்தேயுள்ள குறுங்காட்டுவழிச் சென்ற வேவுகாரர்களிற் சிலர் விநாயகராலயத்துள் நிஷ்டை செய்துகொண்டிருந்த பட்டினத்தடிகள் கழுத்தில் வேந்தன மாணிக்கமாலை பொலிதலைக் கண்டு அவரைப்பற்றிப் பலவாறு துன்புறுத்தினார். சுவாமிகள் நிஷ்டைகலைந்து வேவுகாரர்களைத் திருநோக்கஞ் செய்தருளினார். அவர்கள் அடிகளைப் பிடித்

ரைச் தள்ளிக்கொண்டுபோய் அரசன் முன்னிலையில் நிறுத்தினர் கள். பத்திரகிரி மன்னர் தீர விசாரியாது பட்டினத்தாரைச் கழுவேற்றுமாறு கட்டளையிடத் தண்டவினைஞர்கள் சுவாமிகளைக் கழுமரத்தருகே அழைத்துச் சென்றார்கள். பெருமான் கழுமரத் தைத் திருநோக்கஞ் செய்தருளி "என்செய லாவதொன்று மில்லை" என்னுந் திருப்பாசுரத்தைத திருவாய்மலர்ந்தருளினார். உடனே கழு மரம் அக்கினியால் எரியுண்டு சாம்பராயிற்று. இச்செய்தி கேள்வி யுற்ற அரசர்பெருமான் விரைந்து ஓடிவந்து சுவாமிகள் திருவடிக் கமலங்களில் அடியற்ற பனைபோல் விழுந்து தங்குற்றத்தை மன் னித்தருளுமாறு வேண்டினார். பட்டினத்தடிகள் ஞானதிருஷ்டி யால் பத்திரகிரியாரது சத்திநிபாதநிலையை யுணர்ந்து "நாய்க் கொரு சூலும்" என்னுந் திருச்செய்யுளை யருளிச்செய்து ஞான தீட்சை செய்தருளினார். பத்திரகிரியாரும் உள்ளத்துறவடைந்து ஞானகிரியராகிய பட்டினத்தார் ஆணைவழி நிற்பாராயினர். பட் டினத்துச் சுவாமிகள் பத்திரகிரியாரை நோக்கி "திருவிடைமரு தூருக்குச் செல்க" என்று கட்டளையிட்டுத் தாம் க்ஷேத்திர யாத் திரை செய்யச் சென்றுவிட்டனர்.

பத்திரகிரியார் குருவாணைப்படி திருவிடைமருதூரை யடைந்து சிவயோகத்தி லமர்ந்திருந்தனர். பட்டினத்தார் பல தலங்களைத் தரிசித்துப் பலவகைப் பாக்களைப் பாடித் திருவிடைமருதூர் சேர்ந் தனர். பத்திரகிரியார் வீடுகடோறுஞ் சென்று பிச்சை யேற் றுக் குருராயனை உண்பித்துச் சேடத்தைத் தாமுண்டு குரு வின் திருவுள்ளக் குறிப்பின்படி மேலைக்கோபுர வாயிலி லிருந்து குருநாதனை வழிபட்டு வந்தனர். வருநாளில் ஒருநாள் பத்திர கிரியார் பிச்சையேற்று ஆசாரியருக்கு நிவேதித்துத் தாஞ் சேடத்தை யுண்ணப்புகுங்கால், ஒரு பெட்டைநாய் பசியால் மெலி வுற்று வாலைக் குழைத்துக்கொண்டு வந்தது. அதனைக் கண்ட

றும் பத்திரகிரியார் இரக்கமுற்று அதற்குச் சிறிது அமுதிட்டனர். அன்றுதொட்டு அந்நாய் அவரை விட்டுப் பிரியாமல் அவ்விடத்திலேயே தங்கிவிட்டது.

அந்நாய் முற்பிறப்பிலே அங்கதேயத்திலே விலைமாது வடிவந்தாங்கி யிருந்தது. அவ்விலைமாது இளையர் முதியர் என்னும் வேற்றுமையின்றிக் கூடிக் கலந்து பொருளீட்டி மது உண்டு தீயொழுக்கத்தில் தலைசிறந்து விளங்கினள். ஒருநாள் ஒரு பிரமசாரி குருவாணைப்படி அமுதுநாடி அத்தாசி இல்லம் போந்தான். அவள் தான் தூர்த்தர்களோடு உண்டு மிகுந்த சேடத்தை அப் பிரமசாரிக்கு அன்பின்றி விளையாட்டாகத் தந்தாள். பிரமசாரி அதை யுண்டு சென்றான். அவ்விலைமாது தான்புரிந்த பாவச்செயல்களின் காரணமாகப் பெட்டைநாயாகப் பிறந்தாள். அவள் பிரமசாரிக்குச் சேடமீந்ததன் பயனாகப் பத்திரிகிரியார்பா லுறைந்து அவர் அளிக்குஞ் சேடத்தை யுண்ணும் பேறுபெற்றாள்.

பத்திரகிரியார் அந்நாயைப் பாதுகாத்து வந்தனர். வருங்கால் ஒருதினம் மருதவாணர் ஓரேழை வடிவந்தாங்கிப் பட்டினத்தடிகளிடஞ் சென்று "ஐயா! பசிபால் வருந்துகிறேன்; அன்னமிடும்" என்று கேட்டார். அதற்குச் சுவாமிகள் "மேலைக் கோபுர வாயிலில் ஒரு குடும்பி யிருக்கின்றான்; அங்குச் செல்க" என்றார். ஏழைக் கோலந் தாங்கிவந்த ஏழைபங்காளன் அங்ஙனே மேலைக்கோபுர வாயிலை யடைந்து அங்கிருந்த பத்திரகிரியாரைக் கண்டு "ஐயா! கீழைக் கோபுரவாயிலில் ஒருவரிருக்கின்றார். அவரை யென் பசிக்கு அன்னமிடுமாறு கேட்டேன். அவர் 'மேலைக் கோபுரவாயிலில் ஒரு குடும்பி யிருக்கின்றான்; அங்கே செல்க' என்று சொன்னார். அவர் சொற்படி யான் இங்கு வந்தேன். என் பசியை யாற்றும் என்றார். அதுகேட்ட பத்திரகிரியார் "அந்தோ! பிச்சை யேற்கும் இந்த வோடும், எச்சில் தின்னும் இந்த நாயுமோ என்னைக் குடும்பி யாக்கின" என்று கையிலிருந்த ஓட்டை யெறிந்தார். அது நாயின்

தலையிற் பட்டது. படவே ஓடுமுடைந்தது. நாயு மாண்டது. மருத வாணரும் மறைந்தனர்.

மாண்டநாய் ஞானி யெச்சிலுண்ட விசேடததால் காசிமகா ராஜனுக்குப் பெண்ணுகப் பிறந்தது. அரசன் பேரன்போடு மகவிற்கு ஞானவல்லி யென்னு நாமஞ் சூட்டி வளர்த்து வந்தான். ஞான வல்லி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து திருமணப்பருவம் அடைந்தாள். அரசன ஞானவல்லியின் அறிவு குணஞ் செயலுக் கேற்ற ஒரு நாயகனைத் தேட முயற்சி செய்து கொண்டிருந்தான். அதனை யறிந்த ஞானவல்லி ஒருநாள் தந்தைபால் சென்று "ஐயனே! யான் யாருடைய வாழ்க்கைக்கும் உரியவளல்ல; திருவிடைமருதூரிலே மேலைக்கோபுர வாயிலிலே எழுந்தருளியுள்ள தவசிரேஷ்டருக்கே யுரியவள்" என்று கூறினள். மன்னவன் பெண்ணின் மன உறுதியைக் கண்டு தெளிந்து அவள் விரும்பியவாறே அவளைத் திருவிடைமருதூருக்கு அழைத்துச் சென்றுன். அங்கே ஞானவல்லி பத்திரகிரியாரைக் கண்டு வணங்கி "அடிநாய் மீண்டுந் திருவடி நாடி வந்தது" என்றுள். பத்திரகிரியார் அவளது பக்குவ நிலையை யறிந்து அவளது கையைப் பற்றிக்கொண்டு சென்று கீழைக் கோபுரவாயிலில் வீற்றிருந்தருளுந் தமது ஞானகுருவள்ளல் திருமுன் நிறுத்தி "சுவாமி! தேவரீர் எச்சிலுண்ட நாயினுக்கு இவ் விழி "பிறவி யெய்தலாமோ" என்று விண்ணப்பித்தார். பட்டினத் தடிகள் "எல்லாஞ் சிவன் செயல்" என்று திருவருளைத தியானஞ் செய்ய, ஆண்டு ஒரு பெருஞ் சோதி தோன்றிற்று. அதில் பததிர கிரியார் அப்பெண்ணுடன் புகுந்து இரண்டறக் கலநதார்.

**பத்திரகிரியார் திருநக்ஷத்திர தினம்**

பத்ர கிரிமன்னன் பால்வண்ண ஞயதினஞ்
சித்திரை மாமகமாஞ் செப்பு.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்


SRI VENKATESWARA ORIENTAL INSTITUTE
LIBRARY
TIRUPATI.

பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப்புலம்பலும்

## விருத்தியுரையும்



### விநாயகர் வணக்கம்

*முத்தி தருஞான மொழியாம் புலம்பல்சொல்ல*
*அத்தி முகவன்றன் அருள்பெறுவ தெக்காலம்.*

(பொ-ரை) மோட்சத்தை யளிக்கும் ஞானமொழியாகிய புலம்பலை யான் பாட யானைமுகக் கடவுளுடைய திருவருளைப் பெறுவது எந்தக்காலம்?.

(வி-ரை) எடுத்துக் கொண்ட காரியம் இடையூறின்றி யினிது முற்றுப் பெறற்பொருட்டு விநாயகக் கடவுளை முதற்கண் வழுத்துதல் தொன்றுதொட்ட மரபாதலின், ஈண்டு ஆசிரியரும் இம் முதற்பாவால் யானைமுகக் கடவுளை வழுததுவா ராயினர். "என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதல் - முன்னரே புனைதாள் முடிவுறப் பணிவரேல்-அன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதுனை-உன்னலார் செய்கையை யூறுசெய் திடுதி" - கந்தபுராணம். முத்தி - பந்தம் விட்டவிடம்; வீடு - முத்தி. ஞானத்தாற் கைகூடுவ தொன்றாகலான் "முத்திதரு ஞானமொழி" என்றார். "ஞானத்தால் வீடெனறே நான்மறைகள் புராணநல்ல வாகமஞ் சொல்லவல்ல

வாமென்னும், ஊனத்தா ரென்கடவ ரஞ்ஞானத்தா லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞானந்தான், ஆனத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போலஞ் ஞானம்விடப் பந்தமறு முத்தியாகும், ஈனத்தார் ஞானங்க ளல்லாஞான மிறைவனடி ஞானமே ஞானமென்பார்" "ஞானத்தா லரனை யருச்சிப்பர் வீடெய்த அறிந்தோ ரெல்லாம்" "ஞானநெறி யறிந்தடைவர் சிவனை"—சிவஞானசித்தி. ஞான மொழியாம் புலம்பல்-ஞானமொழிகளால் ஆக்கப்படும் புலம்பல். ஞானிகள் தாம்பெற்ற இன்பத்தைப் பிறரும் பெறுவான் வேண்டிக் கைம்மாறற்ற பெருங் கருணையானே தங்கள் அநுபவத்தை வெளியிடுவ தியல்பாகலின் "புலம்பல் சொல்ல" என்றார். "யான் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" என்றார் திருமூலர். அத்திமுகம்-யானைமுகம் - பிரணவ சொரூபம். "முத்திதரும் வேத மொழிந்து புலம்பல் சொல்ல" என்றும் பாடம்.

## நூல்

ஆங்கார முள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை) ஆணவத்தை அடங்கச்செய்து பஞ்சேந்திரியங்களை யெரித் தொழித்துத தூங்காமல் தூங்கி ஆனந்தமடைவது எந்தக் காலம்?.

(வி-ரை) ஆங்காரம் - ஆணவம்; அறியாமை அஞ்ஞானம் எனவும்படும். அஃது ஆன்மாக்களை அநாதியாக பந்தித்து நிற்பது. அதன் முனைப்பைக் கெடுத்துச் சத்தி குன்றச்செய்வதே முத்தியாகலாம் "அடக்கி" என்றார். ஐம்புலன் புறப்பொருட்கண் பதிந்து அவற்றாலாகும் இன்பததை நுகருமாறு ஆசை யெழுப்பி ஆன்மாக்களின் சொரூபநிலையைக் கெடுப்பனவாகலின் "சுட்டறுத்து" என்றார். தூங்காமல் தூங்கல் - யோகநித்திரை; அறிதுயில் "தூங்கிக்

கண்டார் சிவலோகமுந் தம்முள்ளே-தூங்கிக் கண்டார் சிவயோகமுந் தம்முள்ளே-தூங்கிக் கண்டார் சிவபோகமுந் தம்முள்ளே-தூங்கிக் கண்டார் நிலைசொல்வ தெவ்வாறே" திருமூலர். 1

நீங்காச் சிவயோக நித்திரைகொண் டேயிருந்து
தேங்காக் கருணைவெள்ளந் தேக்குவது மெக்காலம்.

(பொ-ரை) இடையறாத சிவயோக நித்திரை செய்துகொண்டேயிருந்து, தெவிட்டாத அருள் வெள்ளம் பெருக்கெடுப்பது எந்தக் காலம்?.

(வி-ரை) இடையறாது கடவுளைத் தியானிப்பதே சிவயோகமாம். அதனால் உண்டாகுந் துயில் அறிதுயிலாம். அத்துயில் கைவந்த பெரியோர்கள் கருவி காணங்களுடன் கூடாமல் திருவருளிற் றிளைத்து நிற்பாராகலான் "தேங்காக் கருணைவெள்ளம் தேக்குவது மெக்காலம்" என்றார். 2

தேங்காக் கருணைவெள்ளந் தேக்கியிருந் துண்பதற்கு
வாங்காமல் விட்டகுறை வந்தடுப்ப தெக்காலம்.

(பொ-ரை) தெவிட்டாத அருள் வெள்ளம் பெருக்கெடுத்திருப்ப அதில் நிலைத்துப் புசிப்புதற்குப் புசியாமல் விட்டகுறை வந்து சேர்வது எந்தக்காலம்?.

(வி-ரை) உண்பதற்கு - அநுபவிப்பதற்கு. வாங்காமல் - அநுபவியாமல், விட்டகுறை - அநுபவியாமல் விடப்பட்டுக் குறைவாகவுள்ள விடயங்கள்; சஞ்சிதம். இது நசித்துவிடுமாயின் திருவருள் பெறுவது திண்ணம் என்றபடி. 3

ஓயாக் கவலையினு ளுள்ளுடைந்து வாடாமல்
மாயாப் பிறவி மயக்கறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) நீங்காத துன்பத்தினுல் மனந்தளர்ந்து வாட்ட முருமல் ஒழியாத பிறவித் துன்பத்தை அழிப்பது எந்தக்காலம்?.

(வி-ரை) உலகத துன்பம் உள்ளமட்டும் மனத்தளிர்ச்சி யொழியாது. மனத்தளர்ச்சியுள்ளமட்டும் பிறவித்துன்பம் நீங்காது என்றபடி. பிறவித்துன்பத்தை யொழிக்க முயல்வதே மக்கள் கடமை. அதனை யொழிக்க மனதை உலகத்துன்பத்தில் பதியா திருக்குமாறு சரியையாதி திருத்தொண்டுகள் செய்ய வேண்டு மென்க. 4

மாயாப் பிறவி மயக்கத்தை யூடறுத்துக்
காயா புரிக்கோட்டை கைக்கொள்வ தெக்காலம்.

(பொ-ரை) ஒழியாத பிறவி மயக்கத்தைக் கெடுத்துத் தேக மென்னுங் கோட்டையை வசப்படுத்துவது எந்தக்காலம்?.

(வி-ரை) பிறவாவாழ்வைப் பெறவேண்டியவாறு. காயாபுரிக் கோட்டை கைக்கொள்வது-சரீரசித்தி. 5

காயா புரிக்கோட்டை கைவசமாய்க் கொள்வதற்கு
மாயா வனுபூதி வந்தடுப்ப தெக்காலம்.

(பொ-ரை) சரீரசித்தி யடைவதற்குக் கெடாத சுவாநுபூதி கூடுவது எந்தக்காலம்?

(வி-ரை) சுவாநுபூதியால் சரீரசிதத்தி கைகூடும் என்றபடி. "மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள-வேன்ற வியந்திரம் பன்னிரண் டங்குல-நான்றவிழ் முட்டை யிரண்டையுங் கட்டியிட்- டூன்றி யிருக்க வுடலழி யாதே"—திருமூலர். 6

சேயாய்ச் சமைந்து செவிடூமைபோற் றிரிந்து
பேய்போ லிருந்துன் பிரமைகொள்வ தெக்காலம்.

(பொ-ரை) ஒரு பிள்ளையாகப் பிறந்து செவிடரைப் போலவும் ஊமைகளைப்போலவுந் திரிந்து பேய்பிடித்தவரைப்போல வாழ்ந்து தேவரீர் பயித்தியம் பிடிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) புலனறிவில்லாச் சடங்களாகத் தோன்றுதலால் அறிவு விளக்கமுறு தாகலான் "சேயாய்ச் சமைந்து" என்றார். மக்கள் பிறவிதாங்கிப் புலன்களைப் புறப்பொருள் வழிவிடாமல் அவைகளை உள்முகமாக அடக்கவேண்டுமென்பார் "செவிடூமை போற்றிரிந்து" என்றார். இந்திரியங்களை விடயங்களிற் செலுத்தாதிருக்க வேண்டு மெனக் கூறியவாறு. பேய் பிடிக்கப்பட்டான். செயல்கள் யாவும் பேயின் செயல்களாமாறுபோலச் சீவன் செயல்கள் சிவன் செயல் களாக வேண்டுமென்பார் "பேய்போ லிருந்து உன்பிரமை கொள் வது" என்றார். உன் பிரமைகொள்வது - சிவத்தையே நினைத்துச் சிவமயமாவது. 7

பேய்போற் றிரிந்து பிணம்போற்கிடந்து பெண்ணைத்
தாய்போ னினைத்துத் தவமுடிப்ப தெக்காலம்.

(பொ-ரை) பேயைப்போலத் திரிந்தும், பிணத்தைப்போல ஓரிடத்திலிருந்தும், பெண்களைத் தாய்மார்கள்போலக் கருதித் தபத்தை முடித்துக்கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) பேய்போல் திரிவதும் பிணம்போல் கிடப்பதும் பெண்களைத தாய்போல் நினைப்பதுந் தவமென்க. 8

கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகங்காட்டி
மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) காலைக்காட்டி, கையைக்காட்டி, கண்கள் முகம் இவைகளைக்காட்டி, மயக்கத்தைக்காட்டும் பெண்களை மறந்திருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஈண்டு மங்கையரென்றது வேசிகளை. பெண்ணாசையை யொழிக்கவேண்டு மென்றபடி. "மண்ணாசை தன்னிற் பொன்னாசை தன்னிற் பெண்ணாசை நீத்தலரிதே பெரியோர் தமக்கும்" என்றார் பரஞ்சோதியாரும். "வேலங்காடு தடங்கண்ணார் வலையுட்பட்டுன் னெறிமறந்து - மாலங்காடி மறந்தொழிந்தேன் மணியேமுத்தே மரகதமே"—சுந்தரர். 9

பெண்ணினல் லாராசைப் பிரமையினை விட்டொழிந்து
கண்ணிரண்டு மூடிக் கலந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) அழகிய மகளிராசையென்னும் பித்தை யொழித்து இரண்டு கண்களையும் மூடித் தேவரீரோடு அத்துவிதபாவனை யுற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) பெண்ணாசை யுள்ளமட்டுஞ் சிவயோகங் கைகூடாதென்றவாறு. "மையரி மதர்த்த வொண்கண் மாதரார் வலையிற் பட்டுக்-கையெரி சூல மேந்துங் கடவுளை நினையமாட்டேன்-ஐநெறித் தகமி டெற்றே யடைக்கும்போ தாவியார்தாம்-செய்வதொன்றறிய மாட்டேன் றிருப்புக லூரனீரே"—திருநாவுக்கரசர். 10

வெட்டுண்ட புண்போல் விரிந்தவல்குற் பைதனிலே
தட்டுண்டு நிற்றல் தவிர்வதுவு மெக்காலம்.

(பொ-ரை) வெட்டுப்பட்ட புண்ணைப்போல பிளவுபட்டுள்ள அல்குற் பையிலே விழுந்து சிக்குப்பட்டு நிற்பதை யொழிப்பது எந்தக்காலம்? 11

ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம்.

(பொ-ரை) என்றும் ஆறாத புண்ணில் அழுந்தி யிராமல் தெளிவுறாத சிந்தையைத் தெளிவுறச்செய்வது எந்தக்காலம்? 12

தந்தைதாய் மக்கள் சகோதரரும் பொய்யெனவே
சிந்தை தனிற்கண்டு சிக்கறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) அப்பன் அன்னை பிள்ளைகள் உடன்பிறந்தவர்கள் ஆகிய இவர்களெல்லாரும் பொய்யென்று மனதில் உறுதியாகக் கொண்டு அச்சிக்கை யறுப்பது எந்தக்காலம்?

(வி-ரை) தந்தை தாய் மனைவி முதலியோரையே பொருளாகக் கொண்டு அவர்கள்நிமித்தம் பாடுபட்டுழைத்துக் கடவுளைக் கருதா திருப்பது அறியாமை யென்றபடி. "மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்றமென்னும்-வினையுளே விழுந்தழுந்தி வேதனைக் கிடமா காதே" என்றும், "எத்தாயார் எத்தந்தை எச்சுற்றத்தார் எம்மாடுஞ் சும்மாடாம் ஏவர்நல்லார் - செத்தால்வந்து உதவுவார் ஒருவரில்லை" என்றும், "தந்தையார் தாயார் தாரமார் புத்திரரார் தாந்தா மாரே" வந்தவா றெங்ஙனே போமாறேதோ மாயமாம் இதற்கேது மகிழ வேண்டாம்" என்றுந் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய் திருத்தலைக் காண்க. 13

மன்னுயிரைக் கொன்று வதைத்துண் டுழலாமல்
தன்னுயிர்போ லெண்ணித் தவமுடிப்ப தெக்காலம்.

(பொ-ரை) பிறவுயிர்களைக் கொன்று வதைத்து அவைகளைத் தின்று திரியாமல் அவைகளைத் தன்னுயிர்போல் எண்ணித் தவத்தைப் பூர்த்திசெய்து கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) எல்லா வுயிர்களையுந் தன்னுயிர்போல் கருதி அவைகளுக்குத் தீங்கு செய்யாதிருப்பதே தவமென்க. "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை - அற்றே தவத்திற் குரு" "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி - எல்லா உயிருந் தொழும்"—திருக்குறள். "கொல்லா விரதங் குவலயமெல் லாம் ஓங்க-எல்லார்க்குஞ் சொல்லுவது என்னிச்சை பராபரமே" "கொல்லா

விரதங் கொண்டோரே நல்லோர்மற்-றல்லாதார்யாரோ அறியேன் பராபரமே"—தாயுமானுர். 14

பாவியென்றே பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்
ஆவிநின்ற சூத்திரத்தை யறிவதினி யெக்காலம்.

(பொ-ரை) பாவியென்கிற பெயரைத் தாங்கிக் கொடிய நரகத்தில் வீழாமல் ஆன்மா நிற்கின்ற சூழ்ச்சியைத் தெரிந்துகொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) "ஆவியொடு காயம் அழிந்தாலும் மேதினியில் பாவியென்ற நாமம் படையாதே" என்றுர் பட்டினத்தடிகள். ஆவிநின்ற சூத்திரம்-ஆன்மா நிற்கின்ற சூழ்ச்சி; ஆன்மா உடலில் கலந்துள்ள உண்மையை அறிவது; ஆன்மாவைத் தேகமாகக்காணுமல் ஆன்மாவாகவேகாணுதல்; தன்னைத்தானறிதல். ஆன்மாவைத் தேகமாகக் கொண்டுள்ளமட்டும் பாவியென்னும் பழிப்புக்கு இடமுண்டென்பது கருத்து. 15

உளியிட்ட கல்லு முருப்பிடித்த செஞ்சாந்தும்
புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்.

(பொ - ரை) உளியால் செதுக்கப்பட்ட கல்லும், உருவாக அமைத்த செவ்விய சாந்தும், புளியினுல் துலக்கப்பட்ட செம்பும் பொருளாகத் தோன்றுவது எந்தக்காலம்?

(வி-ரை) கல்லினுலுஞ் சாந்தினுலுஞ் செம்பினுலுஞ் செய்யப்பட்ட உருவங்களையே ஆலயங்களில் அமைத்து மக்கள் வழிபடுகின்றார்கள்; அவைகளைக் கல்லாகவுஞ் சாந்தாகவுஞ் செம்பாகவுங் கொண்டு வழிபடுவோர் மேலும் மேலும் அஞ்ஞானத் தழுந்துவர். கல் சாந்து செம்பு என்னும் பாவனையையின்றி அவைகளைச் சிவமாகப் பாவித்து வழிபடுவோர் விரைவில் ஞானம்பெற் றின்புறுவர். அதுபற்றியே யீண்டு "உளியிட்ட கல்லும் உருப்பிடித்த

செஞ்சாந்தும்-புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்" என்றார். "பொருள்-சிவம். சிவாபாவனை யுள்ளமட்டுஞ் சிவபாவனை தோன்றா தென்பது கருத்து. "திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவனங்கே-உருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கும் உளனெங்கும் இலனிங்கு உளனென் பார்க்கும்-விருப்பாய வடிவாகி யிந்தனத்தின் எரிபோல் மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கும்-உருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல் வெளிப்பட் டருளுவ னன்பர்க்கே"—சிவஞானசித்தியார். 16

வேடிக்கை யுஞ்சொகுசு மெய்ப்பகட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை யெல்லா மறந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) உல்லாசத்திலும் அலங்காரத்திலும் பசட்டிலும் காலத்தைச் செலவழிக்கும் வழக்கங்களையெல்லாம் மறந்திருப்பது எந்தக்காலம்? 17

பட்டுடை பொற்பணியும் பாவனையுந் தீவினையும்
விட்டுவிட் டுன்பாதம் விரும்புவது மெக்காலம்.

(பொ-ரை) பட்டாடைகளையும், பொன்னுபரணங்களையும் போலி நடிப்பையும், கொடிய பாவங்களையும் விட்டொழித்துத் தேவரீர் திருவடிகளை விரும்புவது எந்தக்காலம்? 18

ஆமைவரு மாட்கண் டைந்தடக்கஞ் செய்தாற்போல்
ஊமை யுருக்கொண் டொடுங்குவது மெக்காலம்.

(பொ-ரை) ஆமையானது தன்னை நெருங்கிவரும் மனிதரைப் பார்த்துத் தன் ஐந்துறுப்புக்களையும் ஒடுக்கிக்கொள்வதுபோல மோனநிலையை யடைந்து ஐம்புலன்களையும் ஒடுக்கிக்கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) ஆமை ஐந்துறுப்புக்களையும் நினைத்தபோது அடக்கிக்கொள்ளும் இயல்புடைமையான், "ஐந்துறுப்படக்கி" என்னும் ஒருபெயர் பெற்றிருக்கிறது. "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின் எழுமையும் ஏமாப்புடைத்து"—திருவள்ளுவர். 19

தண்டிகையுஞ் சாவடியுஞ் சாளிகையு மாளிகையுங்
கண்டு களிக்குங் கருத்தொழிவ தெக்காலம்.

(பொ-ரை) பல்லக்கு சத்திரம் பணப்பை வீடு இவைகளைக் கண்டின்புற வேண்டுமென்னும் எண்ணம் ஒழிவது எந்தக்காலம்? 20

அத்த னிருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்துநிதஞ்
செத்த சவம்போற் றிரிவதினி யெக்காலம்.

(பொ-ரை) சிவபிரான் எழுந்தருளியுள்ள ஸ்தானத்தை ஆராய்ச்சிசெய்து கண்டு நாடோறும் இறந்த பிணத்தைப்போலத் திரிவது எந்தக்காலம்?

(வி-ரை) அத்தனிருப்பிடம்-தத்துவங் கடந்தவிடம். ஆராய்ச்சி செய்வது - தத்துவத்தை யாய்வது. பிணத்திற்கு எவர் என்ன செய்யினும் விருப்பு வெறுப்புத்தோன்றமாட்டா. அதுபோல உலகத்தார் இகழ்ச்சி புகழ்ச்சிகளை நாடாது தேகப்பற்றின்றி யிருக்க வேண்டுமென்பது. தேகப்பற்றில்லா ஞானிகள் பிணம்போன்று செய்கையின்றி உலவுவாராகலான் "சவம்போற் றிரிதல்" என்றார். "செத்தாரைப்போலே திரி" என்றார் பட்டினத்தடிகளும். பிறவற்றை யூகித்துக்கொள்க. 21

ஒழிந்ததரு மத்தினைவைத் துள்ளெலும்பு வெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம்.

(பொ-ரை) பாவமில்லாத பதி புண்ணியத்தை உறுதியாக வைத்துக்கொண்டு உள்ளே யிருக்கின்ற எலும்பு வெள்ளெலும்

பாகித் தசை கழிந்த சலம்போலக்கிடந்து தேவரீரை யினிக் காண்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஒழிந்த-பாவத்தினின்றும் விலகிய. ஈண்டுத் தருமம் புண்ணியத்தின் மேற்று. உள்ளெலும்பு வெள்ளெலும்பாய் - உடல் வற்றி. ஒழிந்த கருத்தினை என்றும் பாடம். 22

அற்ப சுகமறந்தே யறிவையறி வாலறிந்து
கொப்பத்தில் வீழ்ந்துகொண்டு கோளறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) உலகமென்னும் படுகுழியில் வீழ்ந்துகொண்டு, சிறு இன்பத்தை மறந்து, அறிவை அறிவா லறிந்து, அஞ்ஞானத்தை யொழிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) கொர்ப்பம் என்றும் பாடம். கொப்பம் - படுகுழி. கோள்-குற்றம்; அஞ்ஞானம் அற்பசுகம் - தோன்றி நின்றழியுஞ் சிற்றின்பம். அறிவை-சிவத்தை. "அறிவு சிவமிரண் டென்ப ரறிவிலார்-அறிவு சிவமாவ தாரு மறிகிலார்-அறிவு சிவமாவ தாரு மறிந்தபின்-அறிவே சிவமா யமர்ந்திருப் பாரே"—திருமூலர். அறிவை யறிவால் அறிவதே யழியா வின்பம். "அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே" என அருணகிரிநாதர் திருவாய்மலர்ந்திருத்தல் காண்க. 23

கருப்படுத்தி என்னையமன் கைப்பிடித்துக் கொள்ளாமுன்
உருப்படுத்தி யாள வுடன்படுவ தெக்காலம்.

(பொ-ரை) என்னை மனிதனைப் பிறப்பித்தபின்னர் யமன் என் கையைப் பற்றிக்கொள்ளாமுன்னர் சிவரூபந்தந்து ஆண்டருளத் திருவுளங்கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) கருப்படுத்தி - பிறப்பித்து. மனிதப்பிறவி யெடுத்தவர்கள் யமன்கையிலகப்படாமல் சிவலோகமடைய முயற்சிசெய்ய

வேண்டுமென்பது. யமபயமின்றிச் சிவனடி சேரவேண்டுமாயின் அவனடிக்குத் தொண்டுசெய்ய வேண்டுமென்க. "கற்றுக் கொள்வன வாயுளநாவுள-இட்டுக் கொள்வன பூவுள நீருள-கற்றைச்செஞ்சடையானுளன் - நாமுளோம்-எற்றுக்கோநம னால்முனியுண்பதே"-அப்பர் சுவாமிகள். 24

தூண்டு விளக்கணையத் தொடர்ந்திருள்முன் சூழ்ந்தாற்போல்
மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவ தெக்காலம்.

(பொ-ரை) தூண்டு விளக்கு அவிந்துவிட இருள் தொடர்ந்து மூடிக்கொண்டாற்போல இறந்தும் பிறந்தும் வந்தவழியைத் தெரிந்து கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) வெளிச்சமும் இருளும்போலப் பிறப்பும் இறப்பும் நிகழ்கின்றன என்றபடி. 25

தூரியின் மீன்போற் சுழன்றுமனம் வாடாமல்
ஆரியனைத் தேடி யடிபணிவ தெக்காலம்.

(பொ-ரை) வலையிற் சிக்கிய மீனைப்போல மனமலைந்து வருந்தாமல் குருநாதனைத்தேடி அவனுடைய திருவடியை வணங்குவது எந்தக்காலம்? 26

எண்ணூ றுகமிருந்து மெய்தாத வீடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவது மெக்காலம்.

(பொ - ரை) எண்ணூறு யுகம் உலகத்தில் வாழ்ந்தாலும் அடையமுடியாத மோட்சத்தையடைய வெள்ளிய விபூதியணிந்து ஒளிர்வது எந்தக்காலம்?

(வி-ரை) எத்தனைநாள் உலகத்தி லிருந்தாலும் விபூதி நெறியாகிய சைவசமயத்தை யடைந்தே முத்திபெற வேண்டுமென்பது. விபூதி-அருட்சத்திக்குறி. "பராவண மாவது நீறு" என்றார் ஞான

சம்பந்தரும். நீறு மாசில்லா மானத்தைக் காட்டுங் குறியென்பது ஆன்றோர் கொள்கை. "பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்" என்றார் சேக்கிழார்பெருமான். உள்ளே மாசினைப் பொதியவைத்து வெளியே நீறிடுவதால் பயன் சிறிது மில்லையென்க. வெளியேமாத்திரம் வெண்ணிற விபூதிதரித்துப் பாவகாரியங்களைச் செய்வோர் சைவராகமாட்டார். 27

அவவேடம் பூண்டிங் கலைந்து திரியாமற்
சிவவேடம் பூண்டு சிறந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) போலி வேடங்களைத் தரித்து இங்கு அலைந்து உழலாமல், சிவவேடங்களைத் தரித்துப் பெருமை பெற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) அவவேடம் - போலிவேடம்; (வெளியே மாத்திரம் விபூதி ருத்திராட்சங்களைத்தரித்து மனத்தூய்மையின்றி அதிக்கிரமச் செயல்களைப் பழி பாவத்துக்கு அஞ்சாமல் செய்வோர் அவவேடக்காரரெனப்படுவர்.) 'வேடநெறி நில்லார் வேடம்பூண்டென் பயன்-வேடநெறி நிறபோர் வேடமெய் வேடம்"—திருமந்திரம். சிவவேடம்-விபூதி ருத்திராட்சதாரணம். விபூதி-தூய்மைக்குறி. ருத்திராட்சம் - ஜீவகாருண்ணியக் குறி. (மனந்தூயராய் ஜீவர்கள்மாட்டு இரக்கமுடையார் சிவவேடக்காரராவர்.) "செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங் கழீஇயன்றொடுமரீஇ-மாலற நேயமு மலிந்தவர் வேடமும்-ஆலயந்தானும் அரனெனத் தொழுமே"—மெய்கண்டார். 28

அண்டருக்கா நஞ்சருந்தி அம்பலத்தி லாடுசிவன்
தொண்டருக்குத் தொண்டனெனத் தொண்டுசெய்வ தெக்காலம்.

(பொ-ரை) தேவர்கள் பொருட்டு விஷத்தைப் பானஞ்செய்து சிற்சபையில் நடம்புரியுஞ் சிவபெருமானுடைய அடிய

வர்க்கு அடியவனென்று அவர்கட்குத் தொண்டுசெய்வது எந்தக் காலம்?

(வி-ரை) தேவர்கள் பொருட்டுச் சிவபெருமான் நஞ்சுண்ட வரலாற்றைக் கந்தபுராணமுதலிய புராணங்களிற்காண்க. சிவனடியார்க்கு அடியவரை வழிபடுவது பெரும்பேருகலான் "தொண்டருக்குத் தொண்டனெனத் தொண்டுசெய்வது" என்றார். "அடியார்க்குமடியேன்" "அடியார்க்குமடியேன்" என்று திருத்தொண்டத் தொகையில் வன்றொண்டர் பெருந்தகையாரும், "அன்பர்பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால்-இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" எனத் தாயுமானாரும் அருளிச்செய்திருத்தல் காண்க. 29

பன்றி வடிவெடுத்துப் பாரிடந்து மால்காணுக்
குன்றில் விளக்கொளியைக் கூறுவது மெக்காலம்.

(பொ-ரை) நாராயணமூர்த்தி வராக உருக்கொண்டு பூமியை அகழ்ந்துசென்றுங் காணாத மலைமேலுள்ள விளக்கொளிபோன்ற சிவபெருமானைத் தோத்திரஞ்செய்வது எந்தக்காலம்?

(வி-ரை) "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத திருவடியை" என்றார் மாணிக்கவாசகரும் குன்றில் என்பது திருவண்ணாமலையை யுணர்த்துங் குறிப்பு. 30

தித்திக்குந் தெள்ளமிர்தைச் சித்தாந்தத் துட்பொருளை
முத்திக்கு வித்தை முதனினைப்ப தெக்காலம்.

(பொ-ரை) இனிக்குந் தெள்ளிய அமிர்தமும், சித்தாந்தத்திற் போந்த இரகசியப் பொருளும், மோட்சத்துக்கு வித்துமாகிய சிவபரஞ்சுடரை முன்னந் தியானஞ் செய்வது எந்தக்காலம்?

(வி-ரை) கருவிகரணங்களைக் கடந்து சிவத்தில் உள்ளத்தைப் பதியச்செய்த அன்பர்கட்கு அச்சிவந் தேவாமிர்தம்போன்று இனிமை பயக்குமென்க. "சட்டோநினைக்குமனத் தமுதாஞ் சங்கரனை"

என்றார் வாதவூரடிகளும். உலகிலுள்ள பலகோடி சமயங்கள் பொருளாகக் கொண்டுள்ள யாவும் தத்துவங்களேயாம். சைவ சித்தாந்த மொன்றே தத்துவங் கடந்தொளிருஞ் சிவத்தைப் பொருளாகக் கொண்டுளது. அதுபற்றியே "சித்தாந்தத்துட்பொருளை" என்றார். "சித்தாந்தத்தே சிவன்முத்தி சித்தித்தலாற் - சித்தாந்தத்தே நிற்பர் முத்திசித்தித்தவர்-சித்தாந்த வேதாந்தஞ் செம்பொருளாதலால்-சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே"—திருமூலர். "புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும் புகன் மிருதிவழி யுழன்றும் புகலு மாச்சிரம - அறத்துறைகளவை யடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும் அருங்கலைகள் பல தெரிந்தும் ஆரணங்கள் படித்துஞ் - சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதச்சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற்சைவத் - திறத்தடைவ ரதிற்சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" "சித்தாந்தத்தே சிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனனமொன்றிலே சீவன்முத்தராக — வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி மடுத்தானந்தம் பொழிந்துவரும் பிறப்பை யறுத்து—முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பனென்று மொழிந்திடவும் உலகரெலா மூர்க்கராகிப் — பித்தாந்தப் பெரும்பிதற்றிப் பாவப் பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி"—அருணந்தி சிவாசாரியர். "புறச்சமயத தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப் புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப் - பிறப்பிலதாய் இருள் வெளிபோற் பேதமுஞ் சொற்பொருள்போற் பேதாபேதமின்றிப் பெருநூல் சொன்ன - அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன் அறிவொளிபோல் பிறிவரும் அத்துவிதமாகுஞ் - சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்." உமாபதி சிவாசாரியர். "முத்தாந்த வீதிமுளரித்தொழும் அன்பருக்கே-சித்தாந்தவீதிவருந் தேவேபராபரமே"—தாயுமானார்.

வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே நிஷ்டையிலே
ஏகாந்த மாக விருப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) வாயினால் வேதவேதாந்தங்களை யெல்லாம் பேசுதலை அறவே யொழித்து ஏகாந்தமாக நிஷ்டை கூடியிருப்பது எந்தக் காலம்? 32

மற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி யுறங்குவது மெக்காலம்.

(பொ-ரை) பயனில்லா வேறு இடங்களைத் தேடி எனது ஜீவியகாலத்தை வீணாகக்கழியாமல், ஆன்மாக்களுக்கென்று ஏற்பட்டுள்ள அருளிடத்தைத்தேடி அதில் யோகநித்திரை செய்வது எந்தக் காலம்? 33

இன்றுளோர் நாளை யிருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவ தெக்காலம்.

(பொ-ரை) இன்றைக்கு உயிரோடிருப்பவர்கள் நாளைக்கு உயிரோடு வாழ்வது பொய்யென்று நியாயசபையிலுள்ள அறிஞர்கள் கூறுந்தன்மையை அறிவது எந்தக்காலம்?

(வி-ரை) "இன்றுளேன் நாளை யில்லேன்" "இன்றுளார் நாளை யில்லை யெனும் பொருள் - ஒன்றுமோரா துழிதரும் ஊமர்காள்- அன்று வானவர்க் காகி விடம்உண்ட - கண்டனார் காட்டுப் பள்ளி கண் டுய்மினே"—திருநாவுக்கரசர். "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும் - பெருமை யுடைத்திவ் வுலகு"—திருவள்ளுவர் "இன்றைக் கிருப்பாரை நாளைக் கிருப்பரென் றெண்ணவோ திடமில்லை"—தாயுமானுர். 34

கஞ்சா வபினியுடன் கள்ளுண்டு வாடாமற்
பஞ்சா வமிர்தம் பருகுவது மெக்காலம்.

(பொ-ரை) கஞ்சா அபினியோடு கள்ளைக்குடித்துக் கெடாமல் பஞ்சாமிர்தத்தை உண்பது எந்தக்காலம்?

(வி-ரை) புறப்பூசைப் பஞ்சாமிர்தம்: பால் தயிர் நெய் சர்க்கரை பழம். அகப்பூசை பஞ்சாமிர்தம்: சந்திரமண்டலத்தினின்று பொழியும் அமிர்ததாரை. 35

செஞ்சலத்தி லூற்றிரண்ட சென்னமோட் சம்பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம்.

(பொ-ரை) செந்நீரால் வடிவங்கொண்ட பிறப்பானது அன்பத்தினின்றும் மோட்சமடைய உலகக்கவலைகளை விடுத்துத் தேவரீர் திருவடிகளை யடைவது எந்தக்காலம்? 36

கும்பிக் கிரைதேடிக் கொடுப்பா ரிடந்தோறும்
வெம்பி திரிகை விடுப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) வயிற்றுக்கு ஆகாரந் தேடும்பொருட்டுப் பொருள் கொடுப்பவர்கள் வீடுகடோறும் வருந்தி யுழலுவதைத் தவிர்ப்பது இனி எந்தக்காலம்?

(வி-ரை) வயிற்றின் பொருட்டு உலகத்தில் வாழ்வது அறியாமை யென்றபடி. 37

ஆடுகின்ற சூத்திரந்தா னறுமளவு மேதிரிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவது மெக்காலம்.

(பொ-ரை) நடமாடுகின்ற தேகமானது சாகுமட்டு முழன்று சாகுநாள் வருவதற்கு முன்னரே தேவரீரைத் தோத்திரஞ் செய்வது எந்தக்காலம்?

(வி-ரை) ஆடுகின்ற சூத்திரம் - தேகம்; சூத்திரக்கயிறுள்ள மட்டும் ஆடும் பாவைபோன்றலின் "நடமாடுங் கோயில்" என்றார்

திருமூலர். அறுமளவும்-சூத்திரக்கயிறு அறுமட்டும். உடலினின்றும் உயிர் பிரியுமட்டும்; தளருமட்டு மெனலுமாம். 38

நவசூத திரவீட்டை நானென் றலையாமல்
சிவசூத் திரத்தைத தெரிந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) ஒன்பது துவாரமுடைய தேகத்தை நான் என்று சொல்லித் திரியாமல் சிவசூத்திரத்தைத தெரிந்து உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) தேகத்தை நான் எனக் கொள்வோர் தேகான்மவாதிகள், நாத்திகர். அவர்கள் தேகத்தையே பொருளாகக் கொள்ளலால் மீண்டுமீண்டுந் தேகத்தையே தாங்கும் இழிபிறவியடைவார்களென்க. தேகத்துக்கு வேறாக ஆன்மா என்பதொன்றுள தென்றும் அவ்வான்மாவை உடலுட்படுத்தி யியக்குஞ் சூத்திரதாரி சிவபிரான் என்றும் அநுபவத்தில் அறிவதே அறிவாகலான் "சிவசூத்திரத்தைத் தெரிந்தறிவ தெக்காலம்" என்றார். "நவசூத்திரம்போட்டு நானல நீயென் றிருந்த" எனவும் பாடம். 39

மறந்து மலசலங்கள் மாயும்புழுக் கூட்டைவிட்டுக்
கரந்து னடியிணைக்கீழ்க் கலந்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) மறப்புண்டாகி மலசலங்கள் தாமே யொழுக இறக்குங் கிருமிகள் நிறைந்த உடலை விடுத்து நீங்கித் திருவருளில் ஒளித்துத் தேவரீர் இரண்டு திருவடிகளின்கீழ் இரண்டறக் கலந்து நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) மறந்து - அறிவுகெட்டு. கூட்டைவிட்டு - தன்னைத தேகமாகக் கருதும் அறியாமையினின்றும் நீங்கி. கரந்து - ஆன்மாவிற்குத் தாரகமாயுள்ள திருவருளில் மறைந்து தாயாகிய திருவருட்டுணையால் தந்தையாகிய சிவபிரானிடஞ் சேரவேண்டு மென்பது சித்தாந்தம். "மாயாட் போரையும் மாயாமலமென்னு மாதரை

யும்-வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்-தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்-தேயுமதேவிட்டை யென்று னெழிற்கச்சி யேகம்பனே"—பட்டினத்தார். "ஊனறியா தொன்று முயிரறியா தொன்றுமிவை - தானறியா தாரறிவார் தாம்"—உமாபதிசிவம். 40

இம்மைதனிற் பாதகனு யிருவினைக்கி டாயெடுத்த
பொம்மைதனைப் போட்டுன்னைப் போற்றிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) இப்பிறவியில் பாவத்தைச் செய்தவனுய், இருவினைக்குத் தகுந்தபடி யெடுதத பொம்மையாகிய உடலை நீககித் தேவரீரைத் துதிசெய்து நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) இப்பிறவியில் செய்யும் பாவமே மறுபிறப்புக்கு வித்தாக வருதலின் "இம்மையில் பாதகனுய் இருவினைக் கீடா யெடுதத" என்றூர். இப்பிறவியிற் பாவஞ் செய்யாமல் இறை பணி செய்து காலங்கழிக்க வேண்டுமென்றபடி. "நாளவமே போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே-ஆளாய செய்துய்வோம்" என்றூர் ஞான சம்பந்தர். 41

உப்பிட்ட பாண்ட முடைந்துகருக் கொள்ளுமுன்னே
அப்பிட்ட வேணியனுக் காட்படுவ தெக்காலம்.

(பொ-ரை) உப்புப்பானைபோன்ற தேகம் அழிந்து மறுபிறவி யெடுப்பதற்கு முன்னர்க் கங்கை தரித்த சடாபாரத்தை யுடைய சிவபிரானுக்கு அடிமைப்படுவது எந்தக்காலம்?

(வி-ரை) தேக மழிவதற்கு முன் கடவுளுக்கு அடிமைப்பட வேண்டுமென்பது. "முன்னே யுரைத்தான் முகமனே யொக்கு மிம்மூவுலகு, அன்னையும் அத்தனும் ஆவாய் அழல்வணு நீயலையோ-உன்னை நினைந்தே கழியும் என்னுவி கழிந்ததற்பின்-என்னை-மறக்

கப்பெறுய் எம்பிரான் உன்னை வேண்டியதே" "நேர்ந்தொருத்தி யொருபாகத் தடங்கக்கண்டு நிலைதளர ஆயிரமா முகத்திேைடு பாய்ந் தொருத்தி படர்சடைமேற் பயிலக்கண்டு பட அரவும் பனிமதியும் வைத்தசெல்வர்-தாந்திருத்தித் தம்மனத்தை யொருக்காத்தொண்டர் தனித்தொருதண் டுன்றிமெய் தளராமுன்னம்-பூந்துருத்தி பூந் துருத்தி யென்பீராகில் பொல்லாப் புலால்துருத்தி போக்க லாமே"—தேவாரம். 42

சேவை புரிந்து சிவரூபக் காட்சிகண்டு
பாவை தனைக்கழித்துப் பயனடைவ தெக்காலம்.

(பொ-ரை) வழிபாடுசெய்து சிவ சொரூபங்கண்டு பெண்ணா சையை யொழித்து அடையவேண்டிய பயனை அடைவது எந்தக் காலம்.

(வி-ரை) ஆசை யறுப்பதற்கு வழி சிவசேவையுஞ் சிவதரி சனமுமென்பது. பாவை-தேகமுமாம். கிழித்து என்றும் பாடம். 43

காண்டத்தை வாங்கிக் கருமேக மீண்டதுபோல்
பாண்டத்தை நீக்கிப் பரமடைவ தெக்காலம்.

(பொ-ரை) கரியமேகமானது கடல்நீரைக் குடித்துத் திரும் பினதுபோலத் தேகத்தை யொழித்துச் சிவத்தை யடைவது எந் தக்காலம்? 44

சோற்றுத் துருத்திதனைச் சுமந்தலைந்து வாடாமல்
ஊற்றைச் சடம்போட் டுனையடைவ தெக்காலம்.

(பொ-ரை) சோற்றுத் துருத்தியாகிய உடலைச் சுமந்து திரிந்து வருந்தாமல், அவ்வூத்தைத் தேகத்தை யொழித்துவிட்டுத் தேவ ரீரை அடைவது எந்தக்காலம்? 45

தொடக்கைச் சதமெனவே சுமந்தலைந்து வாடாமல்
உடுக்கைக் கழற்றி உனையறிவ தெக்காலம்.

(பொ-ரை) தேகத்தையே நிலையுள்ள பொருளாகக்கொண்டு சுமந்து உழன்று வருந்தாமல், தத்துவங்களைக் களைந்து தேவரீரை உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) தொடக்கை - தேகத்தை; தொடக்கு-கட்டு, சிக்கு. உடுக்கை-உடுப்பு. ஆன்மாவிற்கு உடுக்கை தத்துவங்கள். தத்துவங் களைக் களைந்தே சிவத்தை யறியவேண்டு மாகலான் "உடுக்கைக் கழற்றி உனையறிவ தெக்காலம்" என்றார். "ஆறாறு முப்பதும் அங்கே அடங்கிடில்-கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்"—திருமந் திரம். 46

ஆசை வலைப்பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) ஆசை யென்னும் வலையிற் சிக்கிக் கெடாமல் நாத மயமான மணிவிளக்கில் இரண்டறக் கலந்து நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஓசை-நாதம். மணித்தீபம்-சிவசோதி. 47

கூறரிய நால்வேதங் கூப்பிட்டுங் காணாத
பார ரகசியத்தைப் பார்த்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) சொல்லுதற்கரிய நான்கு வேதங்களும் அழைத் தும் காணாத பெரிய இரகசியப் பொருளைக் காண்பது எந்தக்காலம்?

(வி-ரை) "அல்லையீ தல்லையீதென மறைகளும் அன்மைச் சொல்லினால் துதிதிளைக்குமிச் சுந்தரன்" என்றார் பரஞ்சோதி முனிவரும். "மறைக ளீறுமுன் தொடரொணாதநீ" என்பது திரு வாசகம். 48

புல்லாய் விலங்காய்ப் புழுவாய் நரவடிவாய்
எல்லாப் பிறப்பி னிருளகல்வ தெக்காலம்.

(பொ-ரை) புல்லாகவும், மிருகமாகவும், புழுவாகவும், மனிதனாகவும் பிறந்த பிறப்புக்களின் பந்தத்தைப் போக்குவது எந்தக் காலம்?

(வி-ரை) பிறவிக்கு மூலவித்தா யிருப்பது ஆணவமலமாகலான் "பிறப்பின் இருள்" என்றார். இருள்-ஆணவம். 49

தக்கும்வகைக் கோர்பொருளும் சாராம லேகினைவில்
பக்குவம்வந் துன்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) எனது உள்ளத்தில் மாயாகாரிய விஷயங்கள் தங்கும் வழியில் சேராமல் மலபரிபாகமுற்றுத் தேவரீர் திருவருளையே நோக்கி யிருப்பது எந்தக்காலம்? 50

பருவத் தலைவரொடும் பல்கியின்பங் கொள்வதற்குத்
தெரிவைப் பருவம்வந்து சிக்குவது மெக்காலம்.

(பொ-ரை) பரிபக்குவ காலத்தில் ஆட்கொள்ளும் முதல்வராகிய சிவபிரானுடன்கூடி யானந்தமடைவதற்குத தெரிவைப் பருவமடைந்து அவரிடத்தில் அகப்படுவது எந்தக்காலம்?

(வி-ரை) தெரிவை-இருபத்தாறுவது வயது. இவ்வயதில் தலைவிமார் தலைவர்களோடு அச்சம் நாணமின்றிக் கலந்து கூடிச் சுகிப்பர். ஈண்டுத் தெரிவை யென்றது ஆன்மாவை. 'பருவத் தலைவரொடும் புல்கி யின்பங்கொள்வதற்கு" என்றும் பாடம். 51

தெரிவையுறும் பக்குவத்தின் சீராட்டெல் லாமறிந்து
குருவையறிந் தேகினைதலுக் கும்பிடுவ தெக்காலம்.

(பொ-ரை) தெரிவைப் பருவத்தை யடையும் பக்குவகாலத்தில் எல்லாச்சிறப்புகளையுமறிந்து, ஞானகுருவையுணர்ந்து தியானித்து நமஸ்காரஞ் செய்வது எந்தக்காலம்? 52

வம்படிக்கு மாதருடன் வாழ்ந்தாலு மன்னுபுளி
யம்பழமு மோடும்போ லாவதினி யெக்காலம்.

(பொ-ரை) பலவகை லீலைகளால் கெடுதல்செய்யும் பெண்களுடன் கூடியிருந்தாலும் (அவர்களிடத்தில்) புளியம்பழமும் ஓடும் போல நிலைத்திருப்பது இனி எந்தக்காலம்?

(வி-ரை) பெண்களிடத்தில் கலந்துங் கலவாமலிருப்பது எந்தக் காலமென்றபடி? 53

பற்றற்று நீரிற் படர்தா மரையிலைபோல்
சுற்றத்தை நீக்கமனந் தூரநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) உலகப்பற்றை யொழித்து ஜலத்தில் படருந்தாமரை யிலைபோலப் பந்துக்களை யொழிக்க மனம் விலகி நிற்பது எந்தக் காலம்?

(வி-ரை) தாமரை நீரிலிருப்பினும் அந்நீரைத் தன்னிடத்தில் பற்றச் செய்யாம லிருப்பதுபோலப் பந்து மித்திரர்களோடு வாழ்ந் தாலும் அவர்கள் பற்று மனதில் தாக்காவண்ணம் வாழ்தல் வேண்டு மென்பது. உடல் தூரநிற்பதென உரையாமல் "மனந்தூர நிற்பது" என்றுரைத்தது கவனிக்கத்தக்கது. இல்லறத்தி லிருந்துகொண்டே விடய இன்பங்களில் உள்ளம் அழுந்தாதபடி வாழவேண்டுமென்பது கருத்து. 54

சல்லாப லீலையிலே தன்மனைவி செய்தசுகம்
சொல்லாரக் கண்டெனக்குச் சொல்வதினி யெக்காலம்.

(பொ-ரை) சரசசல்லாபலீலையிலே ஒருவன் மனைவி கண்ட இன்பத்தைச் சொல்லுதல்போல யான்கண்ட இன்பத்தையெனக்கு சொல்வது இனி யெந்தக்காலம்?

(வி-ரை) செய்த - தந்த எனினுமாம். ஆர-போல. மனைவி-ஆன்மா. நாயகன்-சிவபெருமான். 55.

மருவ வயற்புருடன் வருநேரங் காணுமல்
உருகுமனம் போலெனுள முருகுவது மெக்காலம்.

(பொ-ரை) சோரநாயகன் தன்னைப் புணரவருங் காலத்தில் உருவதைக்காணுமல் உருகும் (ஒருத்தியினுடைய) மனதைப்போல என்மனம் உருகுவது எந்தக்காலம்?

(வி-ரை) ஈண்டு உவமம் உருகுதன் மேற்று. 56.

தன்கணவன் றன்சுகத்திற் றன்மனம்வே ருனதுபோல்
என்சருதி லுன்பதத்தை யேற்றுவது மெக்காலம்.

(பொ-ரை) (ஒருத்தி) தன் நாயகனிடத்திற்கூடி யின்பத்தை யநுபவிக்குங்கால் அவள் மனம் (பிற நாயகனை நாடி) வேறுபட்டிருப்பதுபோல, என் சிந்தையைத் தேவரீர் திருவடியில் பதியவைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஒழுக்கமில்லாப் பெண்மக்கள் தங்கள் உரிமை நாயகன்மாட்டுப் புணருங்காலத்து, தங்கள் மனதைச் சோரநாயகனிடத்தில் பதியவைப்பது வழக்கம். அதுபோலப் பிரபஞ்ச வாசனையில் அடியேன் வீழும்போதும், எனது மனம் தேவரீர் திருவடியைப்பற்றி நிற்கவேண்டும் என்றபடி. எந்நிலையில் நின்றாலும் எவ்வேடங் கொண்டாலும் ஆண்டவன் நினைவு இடையறாதிருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்தல் காண்க. பிரபஞ்சக்களியாடல்களில் முன்வினையால் வீழநேரினும், அவைகளின்பால் பற்றுக்சொள்

ளாது ஆண்டவனைப் போற்றிநின்ருல், பின்வினை தொடராது-ஈண்டுப் பிரார்த்த நுகர்வும் ஆகாமியத்தடுப்பும் கூறியவாறு காண்க.

கூடிப் பிரிந்துவிட்ட கொம்பனையைக் காணுமல்
தேடித் தவிப்பவன்போல் சிந்தைவைப்ப தெக்காலம்.

(பொ-ரை) (நீண்ட காலம்) தன்னுடன் உறைந்து (காரண மின்றித் தன்னை) விட்டு நீங்கிய நாயகியைக் காணுது அவளைத் தேடித தேடித் தவிக்கும் நாயகனைப்போல, தேவரீரை நாடிச் சிந்தை செலுத்துவது எந்தக்காலம்.

(வி-ரை) கூடிப் பிரிந்துவிட்ட - புணர்ந்த உடனே பிரிந்து மறைந்த என்றுங் கொள்ளலாம். தன் விருப்பப்படி வாழ்ந்து பிரியும் மனைவியைத்தேடும் ஒருவன் மனேநிலையைப்போலத் தேவரீரை நாடுவதில் யானும் அததகை மனேநிலையைப் பெறுதல் வேண்டுமென்றபடி. 58

எவ்வனததின் மோகம் எப்படியுண் டப்படிபோல்
சவ்வனத தியானம் கருத்துவைப்ப தெக்காலம்.

(பொ-ரை) இளமைப்பருவமுடைய காதலியாரிடத்து எப்படி மோகம் உண்டாகிறதோ அப்படித் தேவரீர் திருவடித் தியானத்தில் உள்ளத்தைப் பதியவைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) மோகநிகழ்ச்சி பெரிதும் இளமையினிடத் துண்மையால் "எவ்வனததின் மோகம்" என்ருர். பேரின்பததுக்குச் சிற்றின்பம் சோபானமாதலால் ஆசிரியர் சிற்றின்ப உதாரணங்களையே எடுததுக் காட்டுகிருர். 59

கண்ணு லருவி கசிந்துமுத்துப் போலுதிரச்
சொன்ன பரம்பொருளைத தொகுததறிவ தெக்காலம்.

(பொ-ரை) கண்களினின்றும் ஆனந்தநீர் கசிந்து கசிந்து முத்துப்போல ஒழுக ஞானோபதேசஞ் செய்த மேலான பொருளை ஆராய்ந்து உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) அன்பின்றி ஆண்டவனுண்மையை ஆராய்ந் தறிதல் அரிதாகலான் "கண்ணூ லருவிக் கசிந்து கசிந்து ........" என்றார். கண்களினின்றும் ஆனந்தநீர் பெருகுதல் அன்பிற்கு அறிகுறியாகும். "முகமெல்லாங் கண்ணீர்மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்" என்பது அப்பர் திருவாக்கு. "கையுந் தலைமிசை பொழியஞ் சலியனகண்ணும் பொழிமழை யொழியாதே" என்பது சேக்கிழார் திருமொழி. 60

ஆக மிகவுருக வன்புருக வென்புருகப்
போக வனுபூதி பொருந்துவது மெக்காலம்.

(பொ-ரை) உடல் மிக உருக, அன்பு பொங்க, என்பு நெக்கு விடச் சிவபோக அனுபூதியில் திளைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) சீவன முத்த நிலையில் ஆவிக்கும் யாக்கைக்கும் தொடர்புண்மையால் ஆவியானந்தத்தில் தோயும்போது யாக்கை முதலியனவும் உருகிக் கசியும். இதுபற்றியே மாணிக்கவாசகனார் "ஆவியோ டாக்கை ஆனந்தமாய்க் கசிந்துருக" என்றருளிச்செய்தார். "நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே - புக்குநிற் கும்பொன் னார்சடைப் புண்ணியன்" என்றார் அப்பரும். 61

நீரிற் குமிழிபோ னிலையற்ற வாழ்வைவிட்டுன்
பேரிற் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்.

(பொ-ரை) நீரினின்றும் எழும் குமிழிபோல நிலையுதலில்லாத இப்பொய்வாழ்வை விடுத்துத தேவரீரிடத்தில் அருள்வெள்ளம் என்பால் பெருக்கெடுத்து ஓடுவது எந்தக்காலம்?

(வி-ரை) வாழ்வின் சிறுமை நோக்கி "நீரிற் குமிழிபோல்" என்றார். நிலையுதலில்லாத வாழ்வை நிலையாகக்கொண்டு இடர்ப்பட ாது அதை ஆண்டவன் திருவடிக்கு அர்ப்பணஞ் செய்யவேண்டு மென்று குறிப்பிட்டவாறும். தம்மால் விரும்பப்பட்ட பொருளைக் காணுமிடத்து அருள் நிகழ்தல் இயல்பு. இறுதியாகப் பெறவேண் டிய பேறு கடவுள் பேறாகலான், அவரைக் காணும்போது ஆன்மா வினிடத்து இயல்பாக உள்ள அருள் வெள்ளம்போல் பெருக்கெடுத் தோடு மென்றபடி. 62

அன்பை யுருக்கி யறிவையதன் மேற்புகட்டித்
துன்ப வலைப்பாசத் தொடக்கறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) பக்தியைச் செறியச்செய்து அதன்மீது ஞானத் தைச் செலுத்தித் துன்ப வலையாகிய பாசக்கட்டை அறுத்தெறிவது எந்தக்காலம்?

(வி-ரை) அன்பை யுருக்குதலாவது அன்பைக கட்டின்றிச் செறியச் செய்வது. "அன்புக்கு முண்டோ அடைக்குந் தாழ்" என்றார் பெருநாவலர். மெய்யன்பு நிகழும்போது அஞ்ஞானம் அகன்று ஞானம் விளங்குதலால் "அறிவையதன் மேற்புகட்டி" என்றார். ஞானமில்லாப் பக்தி மூடபக்தி யென்க. அன்பெழுந்து அறிவை விளக்கும்போது பாசத் தொடக்குத் தானே கழன்று போமாதலான் "துன்ப வலைப்பாசத் தொடக்கறுப்ப தெக்காலம்" என்றார். "உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால்" என்றார் அப்ப ரும். 63

கருவின் வழியறிந்து கருததைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய அன்புவைப்ப தெக்காலம்.

(பொ-ரை) கருவிலூறிப் பிறக்குஞ் சிறுநெறி சிந்தியாது, கண் களில் ஆனந்தநீர் அருவிபோல் பெருக்கெடுப்பத் தேவரீர்பால் அன்புவைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) பிறவிநெறிபேணாது இறைநெறி விரும்பியவாறும். என்னை? பிறவி துன்ப மளிப்பதாகலானும், இறை யன்பு இன்ப மளிப்பதாகலானு மென்க. ஈண்டு அன்பு என்றது இடையறாத அன்பை யென்க. 64

தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) (தத்துவங்களை ஆராய்ந்து ஆராய்ந்து) உண்மை தெளியத் தெளிய (எவ்வித தத்துவமுங் கலவாது) தெளிந்த சிவா னந்த மெனனும் தேன் பொழியப் பொழிய (அதனை) ஏற்கும் மனத்தைப் பெறுவது எந்தக்காலம்?

(வி-ரை) தெளியத் தெளியத் தெளிந்த சிவானந்தத்தேன்- ஆன்ம தத்துவ ஆராய்ச்சியால் வித்தியா தத்துவம் தெளிய, அத தத்துவ ஆராய்ச்சியால் சிவதத்துவம் தெளிய, அததத்துவ ஆராய்ச்சியால் சிவானந்தத்தேன் தெளிவாகப்பொழியும் என்றபடி, "தினைத் தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே-நினைத்தொறுங் காண் டொறும் பேசுந்தொறும் எப்போதும் - அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும் - குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என வரூஉம் மாணிக்கவாசகர் திருவாக்கு ஈண்டுக் கருதற்பாற்று. 65

ஆதார மூலத் தடியிற் கணபதியைப்
பாதார விந்தம் பணிந்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) மூலாதாரத்தடியில் வீற்றிருந்தருளும் விநாயகக் கடவுளின் திருவடித் தாமரைகளைத் தொழுது நிற்பது எந்தக் காலம்?

(வி-ரை) இச்செய்யுள்முதல் ஆறுசெய்யுட்கண் ஆருதாரங்களை யும், அவைகளின் அதிதேவதைகளும் ஓதப்படுதல் காண்க. விரி வைத தத்துவக்கட்டளைகளிற் காண்க. 66

மண்வளைந்த நற்கீற்றில் வனைந்திருந்த வேதாவைக்
கண்வளைந்து பார்த்துள்ளே கண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) பிருதிவி தத்துவகோளத்தில் அதாவது சுவாதிஷ் டானததில் அழகோடு எழுந்தருளியுள்ள நான்முகனை உண்முகமாக நோக்கிக்கொண்டிருப்பது எக்தக்காலம்? 67

அப்புப் பிறைநடுவே யமர்ந்திருந்த விட்டுணுவை
உப்புக் குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) அப்புத் தத்துவத்தின் கூறுகியதும் பிறைவடிவ மாயிருப்பதுமாகிய மணிபூரகத்தில் அமர்ந்துள்ள நாராயணமூர்த் தியை உப்புக்குடுக்கைபோன்ற உடலுள்ளே அறிந்து தெளிவது எந்தக்காலம்? 68

மூன்று வளையமிட்டு முளைத்தெழுந்த கோணத்தில்
தோன்று முருத்திரனைத தொழுதுநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) முக்கோடாக முளைத்தெழுந்த கோணத்தில் அதா வது அநாகதத்திலே உதயமாகும் உருத்திரக் கடவுளை வணங்கி நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) அநாகதம்-தேயு சம்பநதம். 69

வாயுவறு கோணமதில் வாழுமகேச ரனைத்
தேயும் வகைகேட்கத் தொடங்குவது மெக்காலம்.

(பொ-ரை) வாயுவின் அமிசமாகியதும் அறுகோணங்களை யுடையதுமாகிய விசுத்தியில் வாழும் மகேசுரனோடு கலக்கும் விதத்தைக் கேட்கத் தொடங்குவது எந்தக்காலம்? 70

வட்ட வழிக்குள்ளே மருவுஞ்சதா சிவத்தைக்
கிட்ட வழிதேடக் கிருபைசெய்வ தெக்காலம்.

(பொ-ரை) வட்டமாக உள்ள ஆஞ்ஞையில் விளங்குஞ் சதா சிவத்தை அடையும் வழி தேடத் திருவருள் செய்வது எந்தக் காலம்?

(வி-ரை) ஆஞ்ஞை ஆகாய சம்பந்தமுடையது. 71

உச்சிக் கிடைநடுவே யோங்கு குருபதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நேர்வதினி யெக்காலம்.

(பொ-ரை) உச்சிமத்தியில் பொலியும் குருமூர்த்தியின் திருவடியை உறுதியாகக் கொண்டு தியானயோகஞ் செய்யும் பேறு பெறுவது எந்தக்காலம்?

(வி-ரை) ஆறுதாரங்களுக்கு மேலுள்ள உச்சியிலிருக்கிற குருவின் திருவடியே பேற்றை யளிப்பதென்க. ஆறுதாரநிலைக்காட்சியும் ஞானத்தை நல்காதென்க. குருதரிசனத்தில் நிச்சய மேற்பட வேண்டுமாதலால் "நிச்சயித்து" என்றும், என்றும் இடையறாது தியானஞ்செய்ய வேண்டுமாதலால் "கொண்டிருந்து" என்றுங் கூறியது காண்க. 72

பாராகிப் பார்மீதிற் பஞ்சவர்ணந் தானாகி
வேராகி நீமுளைத்த வித்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) பூமியாகி, பூமிமீது ஐந்து பூதமாகி எல்லாவற்றிற்கும் வேறாக நின்று தேவரீர் தோன்றிய மூலத்தை அறிவது எந்தக் காலம்?

(வி-ரை) பாராகிப் பார்மீதில் பஞ்சவர்ணந் தானாகி என்றது மண் முதல் ஐந்து பூதமாகி என்றபடி. ஆண்டவன் எல்லாவற்றிற்கும் வேர்போன்றிருத்தலின் வேராகி என்றார். "ஒன்றாநீ யல்லை

யனறியொன் றில்லை" என்றார் மாணிக்கவாசகர். ஆண்டவன் மூல மும் முடிவுமின்றி அநாதியாகவிருப்பவன் என்பதைக் குறிப்பிட வேண்டி "நீமுளைத்த வித்தறிவ தெக்காலம்" என்றார். 73

கட்டறுக்க வொண்ணாக் கருவிகா ணாதியெல்லாஞ்
சுட்டறுத்து நிட்டையிலே தூங்குவது மெக்காலம்.

(பொ-ரை) அறுக்கமுடியாத கட்டுகளால் கட்டப்பட்டுள்ள கருவி காரணங்க ளெல்லாவற்றையும் ஞானக்கினியால் எரித்து ஒழித்து நிஷ்டை கூடியிருப்பது எந்தக்காலம்?

(வி - ரை) அநாதியாகக் கட்டப்பட்ட கட்டுகளை யென்க. கருவி காரணங்க ளுள்ளமட்டும் நிட்டை கூடுதல் அரிதாகலான் "கருவிகா ணாதியெல்லாம் சுட்டறுத்து" என்றார். நிட்டையிலே தூங்குவதாவது யோகநித்திரை செய்வது. 74

கள்ளக் கருத்தையெல்லாங் கட்டோடு வேரறுத்திங்
குள்ளக் கருத்தை யுணர்ந்திருப்ப தெக்காலம்.

(பொ - ரை) திருட்டு எண்ணங்களை யெல்லாம் அறவே வேரோடு களைந்து, ஈண்டு உண்மை நோக்கத்தை அறிந்திருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) கள்ளக்கருத்து - உண்மைக்கு மாறுபட்ட கருத்து. தோன்றி நின்றழியும் போலிஞானம். உள்ளக்கருத்து - என்றும் மாறுதலின்றி அழியாத கருத்து. 75

அட்டகா சஞ்செலுத்து மலத்தைச்சட லத்துடனே
பட்டபா டத்தனையும் பகுத்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) போலிப் புகழ் குறித்து வாசம்செய்வதற்கு ஏது வாயுள்ள துன்பத்தையுடைய உடலோடுகூடி அநுபவித்த கஷ்டங் களை யெல்லாம் பகுத்துணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) தேகத்தைப் பொருளாக்கொண்டு, அதற்குப் பெருமைநாடி அட்டகாசஞ் செய்ததை இன்பமாகக்கருதிய அறியாமை குறித்து இரங்கியவாறும். துன்பத்தை இன்பமாகக் கருதினமையால் "அவத்தை" என்றார். அட்டகாசங்களால் நேர்ந்த கஷ்டங்கள் போதும் போதும் என்று அவைகளில் வெறுப்புக்கொண்டு கூறியவாறு காண்க. 76

அறிவுக் கருவியுட னவத்தைபடும் பாட்டையெல்லாம்
பிரிவு படநிறுத்திப் பெலப்படுவ தெக்காலம்.

(பொ-ரை) பசுஞானத்தோடு பாசஞானத்தால் படுங் கஷ்டங்களை என்னினின்றும் வேறுபட நிறுத்திப் பதிஞானத்தைப் பலப்படுத்துவது எந்தக்காலம்?

(வி-ரை) அறிவு கருவியுடன் என்பதற்கு அறிவென்னுங் கருவியோடு எனினுமாம். அறிவு தத்துவங்களில் வீழ்ந்து வருந்து நிலையை விளக்கியவாறும். பிரிவுபட நிறுத்துவதாவது அறிவை வேறாகவும் தத்துவங்களை வேறாகவும் நிறுத்துவதென்க. 77

பூதம் பொறிகரணம் போந்தவிந்து நாதமுமாய்ப்
பேதம் பலவிதமும் பிரிந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) பூதம் பொறிகரணம் முதலியனவாகப் புகுந்து சத்தி சிவமாய் நிற்கும் பலதிற பேதங்களினின்றும் வேறுபட்டு உண்மை உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) பூதம் ஐந்து; பொறி ஐந்து; கரணம் நான்கு. பிருதிவிமுதல் நாதமீறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களின பேதங்களினின்றும் நீங்கித் தன்னை யறிவதெக்காலம் என்றபடி. 78

தோன்றுசை மூன்றுந் தொடர்ந்துவந்து சுற்றாமல்
ஊன்றுசை வேரையடி யூடறுப்ப தெக்காலம்.

(பொ - ரை) கிளர்ந்தெழும் மூன்று ஆசைகள் என்னைத் தொடர்ந்து சூழாமல், மாயையில் ஊன்றச்செய்யும் ஆசையின் வேரைக்கல்லி அறுப்பது எந்தக்காலம்?

(வி-ரை) மூன்று ஆசை-மண் பொன் பெண்ணாசைகள். ஆத்மாவை ஆசையிலழுத்துவது அராகதத்துவம். அதை ஒடுக்கினுல் மூவாசை படுமென்க. 79

புன்சனனம் போற்றுமுன்னே புரிவட்டம் போகிலினி
என்சனன மீடேறு மென்றறிவ தெக்காலம்.

(பொ-ரை) இழிவான இப்பிறப்பில் ஆண்டவனை வழிபடுவதற்குள் சூக்கும உடல் பிரிந்துவிட்டால் எனது ஆன்மா எப்பிறப்பில் ஈடேறும் என்பதை அறிவது எந்தக்காலம்? 80

நட்ட நடுவினின்று நற்றிரோ தாயியருள
கிட்ட வழிகாட்டிக் கிருபைசெய்வ தெக்காலம்.

(பொ - ரை) ஆன்மாவிற்கும் இறைவனுக்கு மிடையிலுள்ள நல்ல திரோதாயி என்னுந் திருவருட்சக்தி இறைவனிடத்து (என்னை) அணுக வழிகாட்டிக் கருணை பொழிவது எந்தக்காலம்?

(வி-ரை) திருவருட்சக்தியே திரோதான சக்தியாய்ப் பெத்த காலததில் ஆன்மாவிற்கு மலத்தைப் புசிப்பித்துப் பின்னர் மலபரிபாககாலத்தில் அது திருவருட் சக்தியாய் இறையின்பத்தை யூட்டுமென்க. திருவருட் சக்தியே பெததகாலததில் திரோதாயி சக்தியாக நிற்றலால் "நல்ல அருள் திரோதாயி" என்றார். பெத்தகாலத்தில் திருவருட்சக்தி திரோதானசக்தியாய் ஆன்மாவிற்கும் மலத்துக்கும் இடைநின்று ஆன்மாவிறகு மலத்தை நுகர்விததலானும், பின்னர் அச்சக்தியே முததகாலததில் ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் இடைநின்று இன்பத்தை யூட்டலானும் "நட்ட நடுவினினறு" என்றார். திருவருட் சக்தியே திரோதாயியாக ஆன்மாவின் நன்மை

கருதி அதைச் சிவமாக்கவேண்டி மலத்தில் கூட்டுவதால் "நற்றிரோ தாயி" என்றார். மலத்தில் கிடக்கும் ஆன்மாவை ஆண்டவ னிடத் துக் கூட்டுமியல்புடைமை திரோதாயி சக்திக்குண்மையான் "அருள் கிட்ட வழிகாட்டிக் கிருபைசெய்வ தெக்காலம்" என்றார். அருள் சிங்க நோக்காக நிற்குஞ் சொல். 81

நானேநா னென்றிருந்தேன் நடுவினிற் கட்டழகி
தானே வெளிப்படுத்தித் தருவனென்ப தெக்காலம்.

(பொ-ரை) ஆன்மாவே பொருளென் றிருந்தேன். இடையில் பேரழகுவாய்ந்த திருவருட்சக்தி தானே தலைவனுண்மையை வெளிப் படுத்தி அவன் திருவடியை உனக்கு நல்குவேன் என்று மொழிவது எந்தக்காலம்?

(வி-ரை) ஒருவன் முறையாகத் தத்துவ ஆராய்ச்சி செய்து வருவானாயின், அவன் தத்துவங்களைச் சடமென்றுணர்ந்து அவை கட்கு வேறாக உள்ள ஆன்மாவைக் காண்பன். அவ்வான்ம ஆராய்ச்சி செய்யுங்காலத்து அதையே பொருளாகக் கொள்ளுதலுமுண்டு. அதற்கு மேலாராயின், ஆண்டவ னுண்மை பெறலாம். ஆன்மா உண்மைகண்டு அதுவே பொருளென்று மயங்கும்போது ஆன்மா விற்கு வேறுபட்டு நில்லாத திருவருட்சக்தி விளங்கித் தலைவனுண் மையை உணர்த்தும். தன்னையறிந்தவன் தலைவனை யுணர முயல வேண்டுவதின்மையானும், அதைத் திருவருட்சக்தி செய்யுமாதலா னும் "தானே வெளிப்படுத்தி" என்றார். திருவருட்சக்தி அழகின் பூரணமாதலால் கட்டழகி என்றார். திருவருளைப் பெண்ணாகக் கூறு தல் சம்பிரதாயம். "நானே நினைவிருந்தால்" என்ற பாடபேதமு முண்டு. ஆன்மாவே பொருள் என்ற நினைவிருந்தால் என்று அதற் குப் பொருள்கூறுக. 82

அடர்ந்த மனக்காட்டை யஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்துவெட்டிச் சுடுவதினி யெக்காலம்.

(பொ-ரை) மனமென்னும் அடர்ந்த காட்டைப் பஞ்சாட்சர மென்னும் வாளாயுதத்தால், இடைவிடாது தொடர்ந்து தொடர்ந்து வெட்டி எரிப்பது இனி எந்தக்காலம்?

(வி-ரை) எல்லா மாயாத்தோற்றமும், அஞ்ஞானமும் தோன்று மிடம் மனமாதலால் "அடர்ந்த மனக்காட்டை" என்றார். மனதி னின்றும் தோன்றும் எண்ணங்கள் ஒன்றினின்றும் ஒன்று பிறந்து பலவாய்ப் பெருகிப் பெருகி வளர்தலால் மனதைக் காடு என்றார். பஞ்சாட்சர செபத்தால் மனமடங்கலால் "அஞ்செழுத்தாம் வாளால்" என்றார். "காடு" என்றதற்கேற்ப "வாள்" என்றார். தொடர்ந்து தொடர்ந்து என்னும் அடுக்கு இடைவிடாது பஞ்சாட்சரமோதுதல் வேண்டுமென்பதைக் குறிப்பது. 83

ஐந்து பொறிவழிபோ யலைபுமிந்த பாழ்மனதை
வெந்து விழப்பார்த்து விழிப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) பஞ்சேந்திரியங்கள் வாயிலாகச்சென்று உழலும் இந்தப் பாழானமனதை எரிந்துவிழக்கண்டு, இனி ஞானக்கண் திறக்கப்பெறுவது எந்தக்காலம்?

(வி-ரை) மனமொடுங்கினால் அகக்கண் திறக்குமென்றபடி. 84

இனமாண்டு சேர்ந்திருந்தோ ரெல்லாருந் தான்மாண்டு
சினமாண்டு போகவருள் சேர்ந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) தத்துவக்கூட்டமழிந்து, அதன்காரியமாக உள்ள காம குரோத முதலிய சத்துருக்கள் தொலைந்து, கோபம் நாசமா யொழியத் திருவருளில் சேர்ந்திருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) எல்லாவற்றினுங் கொடியது சினமாகலான் சினத் தைத தனியாகப் பிரித்துக் கூறியுள்ளார். சினமுள்ளமட்டும் சிவ னைக் காண்டலரிது. "சினத்தை நிந்தனை செயுமுனி வார்தொழ"

என்றார் அருணகிரியார். "அறஞ்செய விரும்பு" என்று கூறிய ஒளவையார் உடனே "ஆறுவது சினம்" என்று அருளியது கவனிக்கத்தக்கது. சினமுடையோர் அறவோராகார். 85

அலையா மனதலையு மானந்த வீடுகண்டால்
இலையாம னோக்கி யிருப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) எவ்வழியிலும் சாந்தியடையாத மனம் இன்ப வீடு கண்டால் சாந்தியடையும். (ஆதலால்) இடையறாது திருவருளை நோக்கி யிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) பரத்தையே பார்த்திருப்பின் மனம் ஐம்பொறி வாயிலாக அலையாது ஒடுங்கிவிடுமாதலால், "இமையால் நோக்கியிருப்பது" என்றார். 86

கூண்டுவிடுஞ் சீவன்மெள்ளக் கொட்டாவி கொண்டாற்போல்
மாண்டுவிடு முன்னேநான் மாண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) மெதுவாகக் கொட்டாவி விடுதல்போல உடல் விடுஞ் சீவன் உடல்விட்டுப் பிரிதற்கு முன்னர் "நான்" என்பது கெட்டிருப்ப தெந்தக்காலம்?

(வி-ரை) சீவனதியல்பு உடல்விட்டுப் பிரிவதாகலான் "கூண்டு விடுஞ் சீவன்" என்றார். சீவன் பிரியும் எளிமையை "கொட்டாவி கொண்டாற்போல்" என்றார். சீவன் உடல் விட்டு நீங்குதற்கு முன்னர் "நான்" என்பதை அழித்துச் சிவமாதல் வேண்டும். இல்லையேல் பிறவி வளரும். பிறவிக்கு வித்து 'நான்' என்பது. "நான் கெட்ட வாபாடி" என்றார் மணிவாசகரும். 87

ஊனிறைந்த காய முயிரிழந்து போகுமுன்னம்
நானிறந்து போகவினி நாள்வருவ தெக்காலம்.

(பொ-ரை) புலால்நிரம்பிய உடலைவிடுத்து உயிர் நீங்குதற்கு முன்னர், 'நான்' என்னும் முனைப்புக் கெட்டுப்போகும் நாள் கூடுவது எந்தக்காலம்? 88

கெட்டு விடுமாந்தர் கெர்விதங்கள் பேசிவந்து
சுட்டுவிடு முன்னென்னைச் சுட்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) (உலக வழிபேணி) கெட்டழியும் மனிதர்கள் செருக்கு மொழிகள் பகன்றுபோந்து எனது உடலைச் சுட்டெரிப்பதற்கு முன்னர் என்னை (முனைப்பை-சீவபோதத்தை) சுட்டிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) மாயா உடல் சுடப்படுவதற்குள் சீவபோத மழியப் பெறின் பிறவித்துன்ப மணுகாது வீட்டின்பங் கைகூடுமென்க. 89

தோலேணி வைத்தேறித் தூரநடந் தெய்க்காமல்
நூலேணி வைத்தேறி நோக்குவது மெக்காலம்.

(பொ-ரை) தோலாகிய (தேகமாகிய) ஏணிகொண்டு பல க்ஷேத்திரங்கள் யாத்திரைசெய்து சலிப்புறாமல், சாஸ்திரங்களாகிய ஏணி கொண்டு உண்மை உணர்ந்து தேவரீரையே கண்டு மகிழ்ந்துகொண்டிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) தெய்வ உண்மை உணர்ந்து தொழுதலுக்கு க்ஷேத்திர யாத்திரையினும், நூலாராய்ச்சி இன்றியமையாதது என்றபடி. 90

வாயோடு கண்மூடி மயக்கமுற்று நில்லாமல்
தாயோடு கண்மூடித் தழுவிநிற்ப தெக்காலம்.

(பொ - ரை) வாயையும் கண்ணையும் மூடி (மனமொடுங்காமல்) யோகஞ்செய்து மயக்கமுற்று அலையாது, திருவருட் சக்தி

யோடு யோகநித்திரை செய்து சிவத்தைத் தழுவி நிற்பது எந்தக் காலம்?

(வி-ரை) போக யோகங்களைக் கண்டித்தவாறும். 91

**காசினி யெலாநடந்து காலோய்ந்து போகாமல்**
**வாசிதனி லேறி வருவதினி யெக்காலம்.**

(பொ-ரை) உலகமெல்லாம் சுற்றிச் சுற்றிக் கால்கள் ஓய்ந்து போகாமல், வாசியை என் வழிப்படுத்தி அதை நடத்துவது இனி எந்தக்காலம்?

(வி-ரை) க்ஷேத்திர யாத்திரையே உய்யுநெறி என்று கொண்டு திரிவோரை நோக்கி எழுந்த திருவாக்கு இது. க்ஷேத்திர யாத்திரை ஒரு சாதனமே யாகும். 92

ஒலிபடருங் குண்டலியை யுன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் றாள்திறந்து தூண்டுவது மெக்காலம்.

(பொ-ரை) நாதமயமாக உள்ள குண்டலிசக்தியை மூலாதா ரத்தில் போற்றி ¡ஆண்டிருநது அதை ஞானக்கினியால் கிளப்பிச் சுழுமுனையின் தாளைத் திறந்து திருவருள் முயற்சியில் தூண்டுவது எந்தக்காலம்? 93

இடைபிங் கலைநடுவே யிபங்குஞ் சுழுமுனையில்
தடையறவே நின்று சலிப்பறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) இடகலைக்கும் பின்கலைக்கும் இடையே விளங்கும் சுழிமுனையில் கட்டு நீங்கவிருந்து சலிப்பை ஒழிப்பது எந்தக் காலம்?

(வி-ரை) பிராணனை இரேசகபூரகத்தால் முறைப்படி கும்பித் தால் சலிப்பு முதலியன ஒழியும் என்றபடி. சலிதறிருப்பதெக்கா

லம் என்ற பாடபேதமுமுண்டு. அது பொருந்தாது. இச்செய்யுள் முதலாகக் கூறப்படும் யோகநிலைகளின் விளக்கத்தைத் திருமூலர் திருமந்திரமுதலிய நூல்களில் காண்க. தக்க ஆசிரியர்மூலம் கேட்டுத் தெளிவுறுவது நலம். ஈண்டு விரிக்கிற் பெருகும். எம்போன்ரூர் விரித்துக்கூறுவதும் அநாவசியம். 94

மூல நெருப்பைவிட்டு மூட்டிநிலா மண்டபத்தில்
பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம்.

(பொ-ரை) மூலாதாரத்திலுள்ள கனலை (காற்றால்) எழுப்பி, அதைச் சந்திர மண்டலத்தில் முட்டுறச் செய்து, ஆண்டிருந்து, பொழியும் அமிழ்தை உண்டு பசி தணிவிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) பால்-ஞானப்பால்; ஞானக்கள் என்றும் பெரியோர் கூறுப. இப் பாலருந்துவோர்க்குச் சாக்காடு பிணி மூப்பணுகா. "மூலா தாரத்து மூண்டெழு கனலை - காலா லெழுப்புங் கருத்தறிவித்து... ... ... ..." என வரூஉம் ஔவையார் திருவாக்கை உற்று நோக்குக. 95

ஆக வெளிக்குள்ளே யடங்காப் புரவிசெல்ல
ஏக வெளியி லிருப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) (வியவகாரதசையில்) உடலிலுள்ள ஆகாசத்தில் அடங்காதவாசி, அதனுள்ளேபோக, (பாரமார்த்திகத்தில்) ஏகாம்பரத்தில் வாழ்வது எந்தக்காலம்?

(வி-ரை) ஆகவெளி - வியவகாரகாலத்தில் உடலிலுள்ள மற்றத் தத்துவங்களோடு விரவிய ஆகாயம். அதனுள் வாசி யடங்காது வெளியே வந்தும் நுழைந்தும் உழன்றுகொண்டிருக்கும் அதன் போக்கு வரவு குறையக்குறையத் தேகநிலை குன்றி மரண முண்டாகும். வாசியைப் பிராணாயாமத்தாலும், வேறு பல யோகங்களாலும் உள்ள அடக்கும் பயிற்சி முதிர்ந்தால் ஏக சொரூபமாக உள்ள

சிதாகாசத்தில் உயிர் ஒன்று மென்க. ஏகவெளி-ஏக அம்பரம். அம்பரம்-ஆகாயம்; சூன்யம். 96

பஞ்சரித்துப் பேசும் பலகலைக்கெட் டாப்பொருளில்
சஞ்சரித்து வாழ்ந்து தவம்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை) பலவாறு விரித்தும் திரித்துங்கூறும் பலவகைப்பட்ட சாஸ்திரங்களுக்கெட்டாது விளங்கும் துரியாதீதப் பொருளினிடத்தில் உலவி வாழ்ந்து தவநிலை அடைவது எந்தக்காலம்?

(வி-ரை) அபர ஞானத்தால் காணப்படாத பொருள் கடவுள் என்றபடி. சாஸ்திரங்கள் கடவுள் இலக்கணங்களை விரித்துக் கூறுமன்றிக் கடவுளை உணர்த்துதலரிது. பரஞானத்தால் திருவருள்வழிக் கடவுளை அடைதல்வேண்டும். 97

மலமுஞ் சலமுமற்று மாயையற்று மானமற்று
நலமுங் குலமுமற்று நானிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) மல சல உபாதிகள் நீங்கி, மாயை யொழிந்து, மானமழிந்து, நலமற்று, குலமற்று நான் (ஆன்மா) தனித்து வாழ்வது எந்தக்காலம்? 98

ஓடாம லோடி யுலகைவலம் வந்துசுற்றித
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம்

(பொ - ரை) வேண்டுமென்று போகாமல் விளையாட்டாகத் திரிந்து, பூதலத்தைப் பிரதட்சணம்வந்து கடவுள் எங்கே எங்கே என்று தேடி அலையாமல் கடவுளை என்னிடத்திலேயே காண்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஓடாமல்-கடவுளை நாடி ஓடாமல். ஓடி - காமியங் கருதி ஓடி. விளையாட்டாக உலகை வலம் வந்தாலும் பல தீர்த்தங்கள் படிந்தாலும் கடவுளை அறிய முடியாது. கடவுள் காயத்

த்தையே கோயிலாகக் கொண்டிருக்கிறூர். "காயமே கோயிலாக" என்றூர் அப்பர். "உடலிடங் கொண்டாய்" என்றூர் வாதவூரர். "தேயமு நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்-காயமிந் நாட்டிடைக் கண்டுகொண் டேனே" என்றூர் திருமூலர். 99

அஞ்ஞானம் விட்டே யருண்ஞானத் தெல்லைதொட்டு
மெய்ஞ்ஞான வீடுபெற்று வெளிப்படுவ தெக்காலம்.

(பொ-ரை) அறியாமை நீங்கித் திருவருள் ஞானம்பற்றி உண்மை ஞான வீடுபெற்று (பெத்த நிலையினின்றும்) வெளிப்படுவது எந்தக்காலம்?

(வி-ரை) அஞ்ஞானம்-அறியாமை. இது நீங்கினதும் சத்தி பதியும். அருள்ஞானம்-சத்தி பதிதல். மெய்ஞ்ஞானவீடு-சிவப்பேறு. வெளிப்படுவது-அஞ்ஞான நித்திரையிலிருந்து எழுவது. 100

வெலலுமட்டும் பார்த்து வெருளியெல்லாம் விட்டகன்று
செல்லுமட் டுஞ்சிந்தை செலுத்துவது மெக்காலம்.

(பொ-ரை) தத்துவ சேட்டைகளைச் செயிக்கும்வரை முயன்று, கோபங்க ளெல்லாவற்றையும் ஒழித்து நீக்கி மௌன நிலைக்குச் சிந்தை செல்லுமட்டுஞ் செலுத்துவது எந்தக்காலம்? 101

மேலாம் பதந்தேடி மெய்ப்பொருளை யுள்ளிருத்தி
நாலாம் பதந்தேடி நான்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை) உயர் பதவி குறித்து ஆராய்ந்து, உண்மைப் பொருளை அகத்தே நிறுத்திச் சாயுச்சிய பதவி நாடி, அதை நான் அடைவது எந்தக்காலம்? 102

எண்ணாத தூரமெல்லா மெண்ணியெண்ணிப் பாராமல்
கண்ணாடிக் குள்ளொளிபோற் கண்டறிவ தெக்காலம்

(பொ-ரை) எண்ணத்துக்கு எட்டாத தூரம் எண்ணி எண்ணிக் கடவுளைக் காணுமல் கண்ணுடியிலேயே உள்ள ஒளிபோல அகத்தே யுள்ள சோதியை நான் பார்த்துணர்வது எந்தக்காலம்? 103

என்னை யறிந்து கொண்டே னெங்கோமா னோடிருக்கும்
தன்மை யறிந்து சமைந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) தன்னை யுணருந் தன்மை உணர்ந்தேன்; இனி என் தலைவனோடு கூடி யிருக்குந் தன்மை உணர்ந்து இரண்டறக் கலந்திருப்பது எந்தக்காலம்? 104

ஆறுதா ரங்கடந்த வானந்தப் பேரொளியைப்
பேறுகக் கண்டுநான் பெற்றிருப்ப தெக்காலம்

(பொ-ரை) ஆறு ஆதாரங்களையுங் கடந்து ஆனந்தமயமாக ஒளிரும் பரஞ்சோதியை நான் பெறும் பேறுகக்கண்டு அதை அடைவது எந்தக்காலம்? 105

ஆணவ மாயத்தா லழிந்துடலம் போகாமுன்
காணுதலா லின்பமற்றுக் கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை) ஆணவத்தின் மாயததினுல் உடலழிந்து போகாமுன் சிவக்காட்சியால் ஆனந்தம் பெற்று உண்மை கண்டறிவது எந்தக்காலம்? 106

மும்மலமுஞ் சேர்ந்து முளைதெழுந்த காயமிதை
நிர்மலமாய்க் கணடுவினை நீங்கிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) மூன்று மலச்சேர்க்கையால் உண்டாகும் உடலைத் தூய்மைப்படுத்திச் (செம்பொருள்) கண்டு செயலின்றிக் கிடப்பது எநதக்காலம்?

(வி ரை) மும்மலச் சேர்க்கையால் உடல் உண்டாதலால் "மும் மலமுஞ் சேர்ந்து முளைத்தெழுந்த காயமிதை" என்றூர். தேகத்தை

நின்மலப்படுத்துவதாவது கருவி காண விடய போகங்களை ஒடுக்கு வது. செயலற் றிருப்போர்க்கு மீண்டும் தேகம் வாராது. 107

முன்னை வினைகெடவே மூன்றுவகை காட்சியினால்
உனனை வெளிப்படுதநி யுறுவதினி யெக்காலம்.

(பொ-ரை) பிரார்தத வினை நசிக்க மூன்றுவித காட்சியால் தேவரீரை வெளிப்படுத்தித் தேவரீரை அடைவது எந்தக்காலம்?

(வி-ரை) மூன்றுவகை காட்சி-ஸ்தூல சூக்கும காரண சரீர காட்சி அல்லது ஆன்ம வித்யா சிவதத்துவ காட்சி யெனினுமாம். ஆன்மாவிலுள்ள கடவுள் மூன்றுவித காட்சிக்குப் பின்னர்க காட்சி வழங்கலால் "உன்னை வெளிப்படுத்தி" என்றார். தன்னிடத்திலுள்ள கடவுளைத் தானே நியதிகளாந்து வெளிப்படுத்த வேண்டுமென்பது. வெளிப்படுத்தல் மூர்த்தி தரிசனம்; உறுவது அமூர்த்தி தரிசனம். ()

கண்ணினொளி பாய்ந்ததுவுங் கருத்தறிந்து கொண்டதுவும்
விண்ணினொளி கண்டதுவும் வெளிப்படுவ தெக்காலம்.

(பொரை) கண்ணினிடத்தில் ஒளிபாய்ந்திருப்பதும், கருத்துப் பொருளை ஆராய்ந்து உணர்ந்துகொண்டதும், விண்ணினிடத்தில் ஒளிகண்டதும் எனக்கு விளங்குவது எந்தக்காலம்?

(வி-ரை) கண்ணொளி உண்மை உணர்தலாவது உயிரினிடத்து இறைவன் கலந்திருப்பதை உணர்வது. கருத்தறிந்துகொள்வது மனம் உயிரின் சேர்க்கையால் விடயங்களை உணர்வதுபோல உயிர் கடவுள் உதவியால் பொருளை உணர்வது. விண்ணில் ஒளிகாண்பது சத்தியில் சிவத்தைக் காண்பது. 109

கனவுகண்டாற் போலெனக்குக் காட்டிமறைந் தேயிருந்த
நினைவைப் பரவெளிமேல் நிறுத்துவது மெக்காலம்.

(பொ-ரை) சொப்பனங் கண்டாற்போல் என்று சொல்லும்படி ஒளிகாட்டிப் பின்னர் அதை மறைத்திருந்த எனது நினைவை என்றும் பரவெளியில் நிறுத்திவைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) சொப்பனத்தில் காண்பனபல பின்னர் சாக்கிரதையில் மறக்கப்படுவதுபோலத் தேவரீர் திருவுருவைக் கண்டு பின்னர் அதை மறந்தவாகாதென்றபடி. நினைவை மறைப்பது அஞ்ஞானம். நினைவு அஞ்ஞானத்தால் மறைக்கப்படாதவாறு என்றுஞ் சிதாகாயத்தில் பதிந்திருக்கவேண்டு மென்றபடி. 110

ஆரென்று கேட்டதுவு மறிவுவந்து கண்டதுவும்
பாரென்று சொன்னதுவும் பகுத்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) பொருளுண்மை காணத் தத்துவங்களை ஆராய்ந்து செல்லும்பொழுது, தததுவங்கள் "ஆராய்ச்சிசெய்வது யார்" என்று வினவினதும், அதற்குப் பதிலாக ஆன்மா போந்து தத்துவங்களைப் பார்த்ததும், "நான்தான் பார்" என்று ஆன்மா சொற்றதும் ஆகிய இவைகளைப் பகுத்து ஆராய்ந்து உண்மை உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) தத்துவ காரியமாக உள்ள தேகம் நான் அல்ல என்பதும், நான் என்பது ஆன்மாவே என்பதும் விளக்கியவாறு காண்க. 111

நினைக்கு நினைவுதொறும் நிறைந்தபரி பூரணத்தை
முனைக்குமேற் கண்டுகண்ணில் முத்துதிர்ப்ப தெக்காலம்.

(பொ-ரை) ஒவ்வொரு நினைவிலும் நீக்கமற நிறைந்துள்ள பரிபூரண சொரூபத்தைச் சுழுமுனைக்குமேலே கண்டு கண்ணில் ஆனந்த நீர் முத்துப்போலச் சொரிவது எந்தக்காலம்?

(வி-ரை) நினைவிலும் ஆண்டவன் விரவியிருப்பது அவனது பரிபூரணத்துவமென்று குறிப்பிட்டவாறும். 112

முப்பாழும் பாழாய் முதற்பாழுஞ் சூனியமாய்
அப்பாழும் பாழா யன்புசெய்வ தெக்காலம்.

(பொ-ரை) மாயா காரியமாகிய ஆன்ம தத்துவம் வித்தியா தத்துவம் சிவதத்துவம் மூன்றும் பாழாகி, அதன் சேர்க்கைக்குக் காரணமான ஆணவமும் பாழாகி, அதுவும் கெட்டொழிய இவைக ளெல்லாவற்றையுங் கடந்தொளிரும் சிவத்தினிடத்தில் அன்பு செய் வது எந்தக்காலம்? 113

சீயென் றெழுந்து தெளிந்துநின்ற வான்பொருளை
நீயென்று கண்டு நிலைபெறுவ தெக்காலம்

(பொ-ரை) உலகம் பீடை சீ என்று அதனின்றும் நீங்கித் தெளிவாக நின்ற பரம்பொருளைத் தேவரீர் என்று கண்டு தேவரீ ரோடு நிலைபெற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) தத்துவங்கடந்த ஒன்றையே பொருளெனக் கொள் ளல் வேண்டுமென்பதை அறிவுறுத்தியவாறும். 114

வவ்வெழுத்து மவ்வெழுததும் வாளாகுஞ் சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தி னுள்ளே யடங்கிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) வகாரமும் மகாரமும் வாளனைய சிகாரமும் யகாரத்தில் அடங்கி நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) சி - சிவம்; வ - சக்தி; ய - ஆன்மா; ந - திரோதானம்; ம மலம். (சி-வ-ய-ந-ம) ஆன்மாவினிடததில் சததி சிவம் பொருந்த வேண்டுமென்பது. சிகரம் அறியாமையைக் களைவதாகலான் "வாளா குஞ்சிவ்வெழுத்து" என்றார். மகர ஒடுக்கத்தைக் குறிப்பிட்டவாறு. ()

எழுத்தெல்லா மாண்டிறந்த வேகமாய் நின்றதிலே
அழுத்தமாய்ச் சிந்தைவைத் தன்புகொள்வ தெக்காலம்.

(பொ-ரை) எல்லா எழுத்துக்களும் செத்தொழிந்து ஒன்றாக நின்று, அவ்வொன்றிலே உறுதியாக மனதைப் பதியவைத்து அன்பு பெறுவது எந்தக்காலம்?

(வி-ரை) எழுத்தெல்லாம் - அட்சரங்களெல்லாம்; கலைஞானங்களெல்லாம். ஏக-எல்லா மழிந்தவிடம். ஏகத்தில் மனம் பதிவதன் அருமை நோக்கி "அழுத்தமாய்ச் சிந்தைவைத்து" என்றார். 116

அருவாகி யுருவாகி ஆதியந்த மாகிநின்ற
குருவாகி வந்தெனையாட் கொண்டருள்வ தெக்காலம்.

(பொ-ரை) அருவமும் உருவமும் முதலும் முடிவுமாகி நிலை பெற்ற குருவாகிப்போந்து சிறியேனைப் பாசக்கடலில வீழ ஒண்ணாதவாறு தடுத்தாண்டருள்வது எந்தக்காலம்?

(வி-ரை) குருவாகவரும் பொருள் அருவாய் உருவாய் ஆதியந்தமாய் விளங்குவதென்க. குரு உதவியின்றி மலபரிபாகம் நிகழாதாகலின் "குருவாகிவந்து" என்றார். 117

நானென் றறிந்தவனை நானறியாக் காலமெல்லாம்
தானென்று நீயிருந்த தனுவறிவ தெக்காலம்.

(பொ - ரை) நான்தான் ஆன்மா என்று உணர்ந்த என்னை (ஆன்மாவை) நான் உணராதகாலமெல்லாம் நானே தான் என்று தேவரீர் வீற்றிருந்த உடல் உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) நான் என்பது உடலன்று கடவுளன்று என்பதை உணர்த்தியவாறும். இதை "நானறியாக் காலமெல்லாம்" என்னுங் குறிப்பு வலியுறுத்துதல் காண்க. தானென்று நீயிருந்த என்பதற்கு ஆன்மா கடவுளென்றிருந்த என்று பொருள் கோடல் வேண்டும். நீயிருந்ததனு என்றது ஆண்டவனுக்குச் சரீரமாயுள்ள ஆன்மாவினை, தனக்குள் ளிருப்பவன் தலைவன் என்று அறிவது எந்தக்காலம் என்றபடி. 118

தன்மயமாய்க் கண்டதெல்லா மெண்ணிஎண்ணிப் பார்த்தபின்பு
தன்மயமாய்க் கொண்டநிலை சார்ந்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) சிவபோதமயமாய்க்கண்ட எல்லாவற்றையும் சிந்தித்துச் சிந்தித்துக் கண்டபிறகு சிவபோதமயமாய்க்கொண்டு அதன் கண்ணே ஒன்றி நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) தன்மயமாய்க் காண்பது - சிவபோதநிலை; எல்லாம் சிவான்மா என்று கூறும் ஏகாத்மவாதநிலை. இந்நிலை பெற்ற பின்னர் ஆராய்ச்சியால் பெறப்படுவது பரமான்மா என்க. அந்நிலையே ஈண்டுத் தன்மயமாய் என்று குறிக்கப்பட்டது. 119

ஒளியி லொளியா முருப்பிறந்த வாறதுபோல்
வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம்.

(பொ-ரை) நிலையாக உள்ள ஒளியினின்றும் ஒளிவடிவங்கள் உண்டாவதுபோலப் பரவெளியினின்றும் திருவருள் வெளி புலனான தன்மையை உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) ஒளியில் ஒளியாம் எனபதற்குப் பூத ஒளியினின்றும் திருவருள் ஒளி என்றும், வெளியில் வெளியான என்பதற்குப் பூதாகாயத்தினின்றும் சிதாகாசமாகிய என்றும் பொருள் கூறுவோரு முளர். ஒளியினின்றும் ஒளி தோன்றுதலாவது எங்குமுள்ள நெருப்பினின்றும் நமது முயற்சியால் ஆங்காங்கே கண்டங் கண்டமாக வர்த்தி வாயிலாகவோ பிறவாயிலாகவோ நெருப்பு உண்டாவதுபோல் என்க. வெளியில் வெளி-எங்கு நிறைந்துள்ள பரவெளியினின்றும் ஆன்மாக்கள்பொருட்டுக் குருவடிவங்கொள்ளும் சத்தி சொரூபம். 120

ஒளியிட்ட மெய்ப்பொருளை யுள்வழியி லேயடைத்து
வெளியிட்டுச் சாத்திவைத்து வீடுறுவ தெக்காலம்.

(பொ-ரை) அருட்சோதிப் பிழம்பான உண்மைப்பொருளை, அகத்தில் நிறுத்தி, வெளியமைத்து, மூடி மோட்சமடைவது எந்தக் காலம்?

(வி-ரை) ஆன்மாவில் கடவுளுண்மைகண்டு அது மற்றவிடங்களிலிருப்பதையு முணர்ந்து மோனநிலை பெறுவதைக் குறித்துக் கூறியவாறும். 121

காந்தம் வலித்திரும்பைக் காந்திழுத்துக் கொண்டதுபோல்
பாய்ந்து பிடித்திழுத்துன் பதத்தில்வைப்ப தெக்காலம்

(பொ-ரை) காந்தம் உருக்காட்டாமல் மறைந்து இரும்பைத் தானே வலிந்து இழுத்துக்கொள்வதுபோல அடியேனைத தேவரீரும் விரைந்து வலிந்து பிடித்து இழுத்துத் தேவரீர் திருவடியில் சேர்ப்பது எந்தக்காலம்?

(வி-ரை) காத்திழுத்து என்றும் பாடம். கொண்டது விரைவு பற்றி இறந்தகாலமாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. 122

பிததாயங் கொண்டு பிரணவத்தை யூடறுத்துச்
செததாரைப் போலே திரிவதினி யெக்காலம்.

(பொ-ரை) ஞானப்பித்துக்கொண்டு பிரணவங்கடந்து செத்தவர்களைப்போலத் திரிவது இனி எந்தக்காலம்?

(வி-ரை) பிரணவம்-சுததமாயை. அது கடந்தநிலை; செததாரைப்போன்ற நிலை; அந்நிலை விருப்பு வெறுப்பில்லா நிலை; நான் தேகமல்ல என்னுநிலை. பிரணவ சமாதியிலும் காரண சரீரப்பற்றுண்டு என்பது ஈண்டுக் கவனிக்கத்தக்கது. 123

ஒழிந்த கருத்தினைவைத் துள்ளொளும்பு வெள்ளொளும்பாய்க்
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம்.

(பொ-ரை) எல்லாப் பற்றுமற்ற உள்ளங்கொண்டு உள்ள எலும்புகளெல்லாம் வெள்ளெலும்புகளாகி ஒழிந்த பிணம்போலிருந்து தேவரீரைத் தரிசிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) பிணம்போலிருந்து-யோகநித்திரைசெய்து. 124

ஆதி கபிலர்சொன்ன வாகமத்தின் சொற்படியே
சாதிவகை யில்லாமற் சஞ்சரிப்ப தெக்காலம்.

(பொ-ரை) முன்னே கபிலர் அருளிச்செய்த சாஸ்திரத்தின்படி சாதிபேதமில்லாமல் வாழ்வது எந்தக்காலம்?

வி-ரை) கபிலர் அருளிச்செய்தது கபிலர் அகவல். அதன்கண் சாதிபேதம் மறுக்கப்பட்டிருக்கிறது. அதை உலகத்துக்கு வினை யூட்டியவாறும். சாதிவரை ஞானநிலைக்குப் பெருந் தடையென்க.

சூதுங் களவுந் தொடர்வினையுஞ் சுட்டிடக்கால்
ஊதுந் துருத்தியைப்போட் டுனையடைவ தெக்காலம்.

(பொ-ரை) சூது, திருடு, பற்றிவரும் வினைகள் என்னும் இவைகள் சேர்ந்து சுட, காற்று ஊதுந் துருத்திபோன்ற உடலை ஒழித்துத் தேவரீரை யடைவது எநதக்காலம்?

(வி-ரை) சூது முதலியவைகளின் சேர்க்கையே தேகமாதலால் "சூது களவு தொடர்வினையுஞ் சுட்டிட" என்றார். இவை நெருப்பினுங் கொடுமையாகத் தாக்குதலால் "சுட்டிட" என்றார். 126

ஆசைவலைப் பாசத தகபபட்டு மாயாமல்
ஓசைமணித தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம்.

(பொ - ரை) ஆசைவலையென்னுந் தொடக்கில் சிக்குற்றுக் கெடாமல், ஓசையுடைய இரத்தினத் தீபத்தில் சேர்ந்து நிற்பது எநதக்காலம்?

(வி-ரை) ஓசை மணி தீபம்-நாதம், மணியில் ஒளி என்று மழியா திருத்தலின "மணித்தீப" மென்றார். 127

கல்லாய் மரமாய்க் கயலாய்ப் பறவைகளாய்ப்
புல்லாய்ப் பிறந்தசென்மம் போதுமென்ப தெக்காலம்.

(பொ-ரை) கல் மரம் மீன் பறவை புல் முதலிய பிறப்புக்கள் தாங்கி வருந்தியது போதும் போதும் என்று கூவுவது எந்தக் காலம்? 128

தக்கும்வகைக் கோர்பொருளும் சாராம லேனிஜைவில
பக்குவம்வந் துன்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) திருவருள் கிட்டித் தங்கும் வழியைப் பெறுவதற்கு வேறு எப்பொருளிலும் ஒன்றாமல் எனது எண்ணத்தில் பக்குவமுற்றுத் தேவரீர் திருவருளை நோக்கி யிருப்பது எந்தக் காலம்?

(வி-ரை) ஆன்மா சார்ந்ததன் வண்ணமாகுந் தன்மையதாகவின் அது திருவருளில் பதியவேண்டுமாயின் பிற பொருளில் தோயாதிருக்க வேண்டுமென்க. பிறபொருளில் தோயாதிருக்க ஆன்மாவிற்குப் போதியவன்மை யின்மையால் ஆண்டவன் அருளை நோக்கி யிருக்கவேண்டுமென்க. என்னை? அதுகாலை ஆன்மா வேறுபொருளில் தோயாதிருக்குமாதலின். 129

தாரோ டிசைந்து சுழன்றுவருந் தத்துவத்தை
வேரோ டறுத்து விழுங்குவது மெக்காலம்.

(பொ-ரை) மாயை என்னும் புதரோடு அசைந்து சுழன்று நின்று அதன் காரியமாகிய தத்துவத்தை வேரோடு களைந்து அதை விழுங்குவது எந்தக்காலம்?

(வி-ரை) ஈண்டுத் தூறு என்றது மாயையை. மாயையைப் புதருக்கு ஒப்பிடுவது வழக்கம். சேற்றிற்கும் கூறுவதுமுண்டு. மாயையினின்றும் பிறக்குந் தத்துவ வேர் அறுத்து என்றபடி. மாயையைப் புதராகவும் தத்துவத்தை வோராகவுங் கொள்ளுதல் பொருந்தாது. தத்துவ வேர் என்றது தத்துவமூலத்தை; தத்துவ காரணத்தை; மாயையை என்க. 130

பாச நடுவேறிப் பாய்ந்தெழுந்த சித்திரத்தை
ஏச நடுமூலந் திருத்துவது மெக்காலம்.

(பொ-ரை) பாசத்தின் இடையிலே புகுந்து பதிந்து கிளம்பிய (ஆன்மாவோடுகூடிய) உடலை உலகத்தார் ஏச அதன் தோற்றத்துக்கு ஆதாரமாக உள்ளதை ஒழுங்குபடுத்துவது எந்தக்காலம்?

(வி-ரை) சித்திரத்தை-மாயையால் சித்திரிக்கப்படும் உடலை. 131

ஓரின்பங் காட்டு முயர்ஞான வீதிசென்று
பேரின்ப வீடுகண்டு பெற்றிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) ஒப்பற்ற ஆனந்தத்தைக் குறிக்கும் மேலான ஞான வீதியில்போய் (ஆங்குள்ள) பேரானந்த வீட்டைக் கண்டு ஆங்கே (நித்தியானந்தவாழ்வு) பெற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஞானத்தை வீதியாகவும் இன்பத்தை அதன்கணுள்ள வீடாகவும் கூறியிருத்தல் காண்க. 132

காரணமாய் வந்தென் கருத்தி னுரைத்ததெல்லாம்
பூரணமாக் கண்டு புகழ்ந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) காரண குருவாக எழுந்தருளி எனது உள்ளத்தில் செவ்வனே பதியுமாறு உபதேசித்தவைகளெல்லாம் குறைவிலா நிறைவாகக்கண்டு புகழ்ந்து இருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) அழிவில்லாத் திருவருள் திருமேனிதாங்கி ஞானகுரு வருவதால் "காரணமாய்" என்றார். காரணம் அழிவற்றதாகலின். புகழ்ந்திருப்பது-பிறிதொன்றைக் கருதாது ஆண்டவன் அருட்டிறத்தைப் புகழ்ந்துரைத்தல். 133

ஆயுங் கலைகளெல்லா மாராய்ந்து பார்த்ததற்பின்
நீயன்றி யொன்றுமில்லா நிசங்காண்ப தெக்காலம்.

(பொ-ரை) ஆராயுங் கலைக ளெல்லாவற்றையும் ஆராய்ச்சி செய்து பார்த்தபின்னர் அவைகளில் தேவரீரையல்லாது வேறொன்று மில்லாத சிறந்த உண்மையைக் காண்பது எந்தக்காலம்? 134

குறியாகக் கொண்டு குலமளித்த நாயகனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) என்னை யாட்கொள்ளுவதைத் தனக்குரிய குறியாகக்கொண்டு அடியார் திருக்கூட்டத்தை எனக்கு நல்கிய தலைவனை எனறும் பிரியாமல் கூடிப் பிறப்பை ஒழிப்பது எநதக்காலம்?

(வி - ரை) அடியார் கூட்டுறவு இன்றியமையாததாகலின் "குலமளித்த" என்றார். "தொண்டரொடு கூட்டுகண்டாய்" என்றார் தாயுமானாரும். 135

மத்தடுத்து நின்று மருளாடு வார்போலே
பித்தடுத்து நின்னருளைப் பெற்றிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) மயக்குற்று மருள்கொண்டு ஆடுவார்போல ஞான மயக்குற்றுத் தேவரீர் திருவருளைப் பெற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) மருள்கொண்டு குறிசொல்வோர்க்கு உடலுணர் வின்மைபோல என்றபடி. 136

சாவாமல் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேவாமல் வெந்திருக்க வேண்டுவது மெக்காலம்.

(பொ-ரை) இறவாமல் இறந்து சற்குருவின் திருவடிக்கீழ் வேகாமல் வெந்து வாழவேண்டுவது எந்தக்காலம்?

(வி-ரை) சாகாமல் சாவது - மரணமடையாமல் நான் என்ற சீவபோத மழியப்பெறுவது. வேகாமல் வேவது-பூத அக்கினியால் வேகாமல் ஞான அக்கினியால் சீவபோதம் வேகப்பெறுவது. 137

என்னை யறியாம லிருந்தாட்டுஞ் சூத்திரனின்
தன்னை யறிந்து தவம்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை) சிறியேனுக்குத் தெரியாமல் சிறியேனிடமிருந்து சிறியேனை ஆட்டுஞ் சூத்திரமுடைய தேவரீரை உணர்ந்து தவம் பெறுவது எந்தக்காலம்? 138

உள்ள மறியா தொளித்திருந்த நாயகனைக்
கள்ள மனந்தெளிந்து காண்பதினி யெக்காலம்.

(பொ-ரை) எனது மனமறியாமல் என்பால் மறைந்திருந்த தலைவனை எனது திருட்டுமனம் தெளிவுற்றுக் காண்பது இனி எந்தக்காலம்? 139

வாசித்துங் காணாமல் வாய்விட்டுப் பேசாமல்
பூசித்துந் தோன்றாப் பொருள்காண்ப தெக்காலம்.

(பொ-ரை) நூல்களைப் படித்துப் படித்துங் காணாமலும், வாய்விட்டுப் பேசாத மௌனநிலையில் வெளிப்படாமலும், பூசனையால் தோன்றாமலுமுள்ள செம்பொருளைக் காண்பது எந்தக்காலம்? 140

பன்னிரண்டு காற்புரவி பாய்ந்துசெல்லத் தப்பாமல்
பின்னிரண்டு சங்கிலிக்குள் பிணைப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) பன்னிரண்டங்குலம் பாயும் காற்ருகிய வாசியை விருப்பப்படி ஓடவிடாது பின்னேயுள்ள இரேசக பூரகங்கள் என்னும் சங்கிலியால் கட்டுவது இனி எந்தக்காலம்?

(வி-ரை) இடைகலைவழியாகவும் பிங்கலைவழியாகவும் புகுந்தும் வெளிவந்தும் திரிகின்ற காற்றைக் குதிரையென்று கூறுவது மரபு. அதுபற்றியே ஈண்டுப் புரவி என்ருர் ஆசிரியர். "ஆரிய னல்லன் குதிரை யிரண்டுள" என்ருர் திருமூலரும். அக்காற்றுப் பன்னிரண்டு அங்குலம் ஓடும் மீளும். "கூடமெடுத்துக் குடிபுக்க மங்கையர்-ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்" என்பது திருமூலர் திருவாக்கு. அக்காற்றைக் கண்டவாறு ஓடவிடாது, இரேசக பூரகத்தால் அளவாகக் கட்டவேண்டுமாதலால் "பின்னிரண்டு சங்கிலிக்குள்" என்ருர். "ஆரிய னல்லன் குதிரை யிரண்டுள - வீசிப்பிடிக்கும் விரகறிவாரில்லை-கூரிய நாதன் குருவி னருள்பெற்ருல்-வாரிப் பிடிக்க வசப்படுந் தானே"—திருமூலர். 141

நாட்டுக்கா லிரண்டும்விட்டு நடுவக்கா லூடேபோய்
ஆட்டுக்கா லிரண்டினுள்ளே யமர்ந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) நாட்டும் வாயு இரண்டையும் விடுத்து, நடுவிலுள்ள வாயுவிலே சென்று, ஆங்கே நடம்புரியும் ஆண்டவன் இரண்டு திருவடிகளின்கீழ் வீற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) நாட்டுக்கால் இரண்டு - இரேசக பூரகம். நடுவுக்கால்-கும்பகம். "மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்-பாயா மிரேசகத்தா லுட்பதி வித்து - மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே-ஆலால முண்டா னருள்பெற லாமே"—திருமூலர். 142

பாற்பசுவைப் பூட்டிப் பதியில்வைத்துச் சீராட்டிக்
காற்பசுவை யோட்டியதிற் கட்டிவைப்ப தெக்காலம்.

(பொ-ரை) ஆனந்த அமுதஞ்சொரியும் ஆன்மாவைச் சிவ போதத்தில் இருத்திச் சிறப்புச்செய்து, காற்றாகிய (இரேசக பூரக) மென்னும் பசுவை (பிராணனை) அதனிடைச் செலுத்தி, அக்காற்றால் (ஆன்மாவை) க்கட்டிவைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) ஆன்மாவைக் காற்றால்கட்டல்-கும்பித்தல். "இட்ட தவ் வீடுள காதிரே சித்துப் - புட்டி படத்தச நாடியும் பூரித்துக் - கொட்டிய பிராணன் பானனுங் கும்பித்து - நட்டமிருக்க நமனில்லை தானே"—திருமூலர். 143

பலவிடத்தே தீனைதைப் பாயவிட்டுப் பாராமல்
நிலவறையி னூடேபோய் நேர்படுவ தெக்காலம்.

(பொ-ரை) மனதைப் பல விடங்களில் செலுத்தி நோக்காமல், குகையில் போய்த் தங்கித் தேவரீர் திருவருளுக்கு நேர்படுவது எந்தக்காலம்?

(வி-ரை) நில அறை - குகை. இயற்கையாகக் கடவுளால் கட்டப்பட்ட அறை. ஈண்டு ஹிருதய குகையைக் குறிப்பிட்டவாறு காண்க. குகையில் ஆண்டவன் வீற்றிருத்தலால் குகன் என்னும் ஒரு பெயர் அவன் பெற்றிருக்கிறான். குகை வாசத்தால் மனிதன் உடல் உரம் பெறுமென்க. உடல் உரம் யோகத்துக்கு உறுகருவி என்க. புறகுகை வாசம் அககுகை தரிசனத்துக்குச் சாதனமாவது கருதற்பாலது. 144

காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல்வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) காமமென்னுங் கடல் கடந்து திருவருள் கரை யேறிச் செல்வதற்கு ஞானக்கினியை எழுப்பித் தேவரீர் திருவருள் விலாசத்துள் வீற்றிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) காமக்கட்டை அழிக்கவல்லது ஞானக்கினி என்க. மூலாதாரத்தினின்றும் ஞானக்கினியை வாயுவால் எழுப்பினால், அது காமத்தைத தகித்து மனதை ஒடுக்குமென்க. 145

உதயச் சுடர்மூன்று முள்வீட்டி லேகொளுத்தி
இதயத் திருநடன மினிக்காண்ப தெக்காலம்.

(பொ-ரை) தோன்று மூன்று சுடர்களையும் அகமுகத்தில் எழுப்பி, அதன்பயனாக இதய குகையில் ஆண்டவன் திருநடனத்தை இனிக் காண்பது எந்தக்காலம்?

(வி-ரை) முச்சுடர்-சோமன் சூரியன் அக்கினி. பிண்டத்துள்ள மூன்றும் இருளை அழிப்பதுபோல அண்டததுள்ள அம்மூன்றும் அஞ்ஞான இருளை அழிக்குமென்க. இடகலை பிங்கலை சுழிமுனை இம்மூன்றும் முச்சுடர் என்னப்பட்டன. சுழிமுனைநாடியால்-கும்ப கததால்-மூலாக்கினி எழும்புவதியல்பு. "எல்லாக்கலையு மிடைபிங் கலைநடுச்-சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலஞ்-செல்லாவெழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்-நல்லோர் திருவடி நண்ணிநிற்பாரே" "அங்கி யெழுப்பி யருங்கதி ரூட்டத்துத்-தங்குஞ் சசியாற் றமமைந் தைந்தா கிப்-பொங்கிய தாரகை யாம்புலன் போக்கறத-திஙகள் கதிரங்கி சேர் கின்ற யோகமே" "ஈராறு பெண்கலை யெண்ணிரண் டாண்கலை-பேர்மா புச்குப் பிடிதனுக் கொடுவந்து நோாகத தோன்று நெருப் புறவே பெய்யில்-ஆராத ஆனந்த மானந்த மானதே"—திருமூலர். ()

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறி யேகடந்து
நாதாந்த மூல நடுவிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) வேத வேதாந்த கலைகளை யெல்லாம் விடுத்து அவைகளைக் கடந்து நாதாந்த மூலத்திடை யிருப்பது எந்தக் காலம்?

(வி-ரை) நாததத்துவமுடிவிலிருப்பது பரம்பொருள் என்க. அது வேதவேதாந்தங்களால் அறிய ஒண்ணாதது. "ஞானத்தி னன்னெறி நாதாந்த நன்னெறி" என்றார் திருமூலர். 147

பட்ட மற்றுக்காற்றிற் பறந்தாடுஞ் சூத்திரம்போல்
விட்டு வெளியாக விசுவசித்த தெக்காலம்.

(பொ-ரை) காற்றுடியையிழந்து காற்றில் பறந்து அசையும் நூலைப்போலப் பாசத் தொடர்பை அறுத்துச் சிதாகாசத்தில் நிலவுவது எந்தக்காலம்? 148

அட்டாங்க யோகமதற் கப்பாலுக் கப்பாலாய்க்
கிட்டாப் பொருளதனைக் கிட்டுவது மெக்காலம்.

(பொ-ரை) அட்டாங்க யோகத்துக்கும் அதற்கப்பாலு மப்பாலாகி, அதற்கு மேலுங் கிட்டாத பரம்பொருளை அடைவது எந்தக்காலம்?

(வி-ரை) அட்டாங்கயோகம் - இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி. சீவபோதமற்ற ஞானத்தால் சிவத்தை அறியக்கூடும். 149

ஒட்டாம லொட்டிநிற்கு முடலுமுயிரும் பிரித்தே
எட்டாப் பழம்பதிக்கிங் கேணிவைப்ப தெக்காலம்.

(பொ-ரை) பற்றுமல் பற்றிநிற்கும் உடலையும் உயிரையும் பிரித்துப் பசு பாச ஞானங்களால் அறிய ஒண்ணாத பழம் பதியாகிய

சிவத்தையுடைய இவ்விடத்தில் திருவருள் என்னும் ஏணியை நாட்டு வது எந்தக்காலம்? 150

பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்விட்டு
நேசத்தி னுள்ளே நினைந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) ஆணவம் கர்மம் மாயை யென்னும் பாசத்தை விலக்கி அவைகளால் பந்திக்கப்பட்டிருந்த ஆன்மாவைச் சிவத்தில் விடுத்து ஆங்கே சுரக்கும் அன்பிலே உறைந்து தேவரீரைத் தியானிப்பது எந்தக்காலம்? 151

ஆசார நேய வனுட்டான மும்மறந்து
பேசாமெஞ் ஞானநிலை பெற்றிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) புற ஆசார நேய அனுஷ்டானங்களை மறந்து பேசாத உண்மை ஞானநிலை அடைந்திருப்பது எந்தக்காலம்? 152

பல்லாயிரக் கோடிப் பகிரண் டமும் படைப்பே
அல்லாது வேறில்லையென் றறிவதினி யெக்காலம்.

(பொ-ரை) பல ஆயிர கோடிக் கணக்காக உள்ள பகிரண்டங்களெல்லாம் ஆண்டவன் சிருஷ்டியே அல்லாமல் வேறில்லையென்று அறிவது எந்தக்காலம்?

(வி-ரை) பல்லாயிரகோடி - பல அண்டங்கள் யாவும் ஆண்டவன் படைப்புக்கு உட்படும விகாரமெய்துந தன்மையன என்பது குறிப்பித்தவாறும். படைப்புக்குட்படாத பொருளைப் பெற்றால் படைப்புக் குட்படுவதொழியுமென்க. 153

ஆதிமுத லாகிநின்ற அரியென்ற வட்சரத்தை
ஓதியறிந் துள்ளே யுணர்வதினி யெக்காலம்.

(பொ-ரை) முதல் முடிவாகி நின்ற அரி என்ற எழுத்தை ஓதி புணர்ந்து மனதில் தெளிவடைவது இனி எந்தக்காலம்?

(வி-ரை) அரி என்பது ஆதிமுதல் அந்தம்வரை எல்லாவற் றிற்கு மாதாரமாயிருப்பது. 154

சாத்திரத்தைக் கட்டிச் சதுமறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு துயரறுப்ப தெக்காலம்.

(பொ-ரை) சாத்திரத்தைக் கட்டிச் சுருட்டி ஒழித்து நான்கு வேதங்களைப் பொய்ப்படுத்தி ஞான சூத்திரத்தைக் கண்டு துன்பத்தை ஒழிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) கலைஞானங்களெல்லாம் பொய்யென்றபடி. 155

அல்லும் பகலுமென்ற வறிவையறிவா லறிந்து
சொல்லு முறைமறந்து தூங்குவது மெக்காலம்.

(பொ-ரை) இரவு பகல் என்பாலுள்ள அறிவுப் பொருளைத் திருவருளால் உணர்ந்து அஃது இத்தன்மையது என்று சொல்லும் வகை மறந்து அறிதுயில் செய்வது எந்தக்காலம்?

(வி-ரை) இத்தன்மைத்து என்று சொல்லொணா நிலையே மௌனநிலை உணர்ந்ததைச் சொல்வது கலைஞானமன்றி மெய்ஞ் ஞானமாகாது. 156

இயங்குஞ் சராசரத்தி லெள்ளுமெண்ணெயும்போல்
முயங்கு மந்தவேத முடிவறிவ தெக்காலம்.

(பொ-ரை) இயங்குஞ் சரப்பொருளிலும், அசரப்பொருளிலும் எள்ளிடத்து எண்ணெயிருப்பதுபோல விருக்கும் அந்த வேதாந்த உண்மையை உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) சராசரத்திடை என்ளுக்குள் எண்ணெய்போல் கலந்துள்ள நிலை அத்துவிதநிலை என்க. "உலகெலா மாகி வேருயுடனுமாய்' என்று மெய்கண்ட சாத்திரங் கூறுவது காண்க. வேதாந்த வுண்மை அததுவிதத்தை யுணர்த்தலால் "வேதமுடி வறிவ தெக்காலம்" என்ருர். 157

ஊனுகி யூனி லுயிராகி யெவ்வுலகுந்
தானுகி நின்ற தனையறிவ தெக்காலம்.

(பொ-ரை) ஊனுகியும், ஊனில் உயிராகியும், எந்த உலகும் தானேயாகியும் நிற்கின்ற அத்துவித உண்மையை உணர்வது எந்தக் காலம்?

(வி-ரை) எல்லாவற்றிலும் ஆண்டவனிருப்பையும், எல்லாவற்றையும் ஆண்டவனுகக் காண்டல் மெய்ஞ்ஞானநிலை என்க. 'ஊனுயுயி ரானுயுட லானுயுல கானுய்" என்ருர் வன்ருெண்டர். "ஒன்று நீயல்லை அன்றி யொன்றில்லை" என்ருர் மாணிக்கவாசகர். விரிவைப் பிரமசூத்திரம் சிவஞானபோதம் முதலிய நூல்களிலும் அவைகட்கு ஆன்ருேர் வரைந்துள்ள பாடியங்களிலும் காண்க. 158

என்னைவிட்டு நீங்காம லென்னிடத்தில் நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம்.

(பொ-ரை) தேவரீர் என்னை விடுதது சிறிதுநேரமும் நீங்காமல் எப்பொழுதும் என்னுடனிருக்க, (அதுபோல) தேவரீரை விடுதது நீங்காது அடியேன் தேவரீருடனிருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) சிவன் சீவனை விடுத்து நீங்கி யிருப்பதே யில்லை. அவ்வுண்மையைச் சீவன் தன் அறியாமையால் காணுதிருக்கிருன். சிவன் தன்னை விடுதது நீங்காதிருப்பதைச் சீவன் உணர்வதே மெய்ஞ்ஞானம். சிவன்செயலைத் தன்செயலாகக் கொண்டு சீவன்

இடர்ப்படுநிலை அஞ்ஞானநிலை என்க. தன்செயலைச் சிவன்செயலாக் கொள்வது ஞானநிலை என்க. 159

இன்னதென்று சொல்லவொண்ணு வெல்லைபற்ற வான்பொருளைச்
சொன்னதென்று நானறிந்து சொல்வதினி யெக்காலம்.

(பொ-ரை) இன்னதென்று சொல்லமுடியாத அளவிறந்த உயர் பொருளை அடியேனுக்குக் குருநாதன் உபதேசித்தானென்று சிறி யேன உணர்ந்து சொல்வது எந்தக்காலம்? 160

மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
எனதறிவை யம்பாக்கி யெய்வதினி யெக்காலம்.

(பொ-ரை) சிறியேன் மனதை வில்லாக்கி, ஆன்றனைய பொறிகளை நாணாக்கி, எனது போதத்தை அம்பாக்கி எய்வது எந்தக்காலம்? 161

என்னை யிறக்கவெய்தே யென்பதியை யீடழித்த
உன்னை வெளியில் வைத்தே யொளித்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) என்னை மாளும்படி அம்பு எய்து எனது இருப் பிடத்தை யழித்த தேவரீரை, பரவெளியில் இருத்தி அதன்கண் நான் மறைந்து நிற்பதெந்தக்காலம்?

(வி-ரை) எய்யப்பட்ட அம்பு பாசக்காட்டில் பாய்ந்து ஆங்குள்ள காம குரோத முதலிய துஷ்ட மிருகங்களைக் கொன்றமை நோக்கி "என்னை யிறக்க வெய்தே" என்றார். தான் இறத்தலாவது தன்பா லுள்ள சீவ சேஷ்டைகள் ஒடுங்குவதாம். பதி என்றது காமக் குரோதங்களுக்கு நிலைக்களமாக உள்ள முனைப்பை என்க. சிதாகாசத் தோடு மறைவது சாயுச்சியபதவி யென்க. 162

கடத்துகின்ற தோணிதனைக் கழைகள்குத்தி விட்டாற்போல்
நடத்துகின்ற சித்திரத்தை நானறிவ தெக்காலம்.

(பொ-ரை) மீகாமன் ஓட்டுகின்ற தோணியை மூங்கில் கொம்பு கள் குத்திவிட்டதுபோல, எனது உடலை நடத்துகின்ற சித்தி ரதைதை நான் அறிவது எந்தக்காலம்?

(வி-ரை) திருவருள் என்னை யறியாது என்னை நடத்துஞ் சித்திரத்தை யென்னென்பேன் என்றவாறு. 163

நின்றநிலை பேராமல் நினைவிலொன்றுஞ் சாராமல்
சென்றநிலை முத்தியென்று சேர்ந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) சமாதிநிலை குலையாமலும், அச்சமாதியிலுள்ள ஒன்றிய நினைவில் வேறு எண்ணங்கள் நுழையாமலும், இவ்வாறு பெற்ற நிலை மோட்சமென்று தேவரீரைச் சேர்ந்து உணர்வது எந்தக் காலம்?

(வி-ரை) நின்றநிலை பேராமலும் நினைவிலொன்றும் வாராம லும் சென்றநிலை முத்திநிலை என்றபடி. 164

பொன்னும் வெள்ளியும்பூண்டு பொற்பதத்தை யுள்ளமைத்து
மின்னு மொளிவெளியே விட்டடைப்ப தெக்காலம்.

(பொ-ரை) பொன்னையும் வெள்ளியையும் தரித்த அழகிய ஸ்ரீபாதங்களை மனதிலே அமைதது பிரகாசிக்கின்ற சோதிமய மான பரவெளியிலே என்னைவிட்டு மீண்டும் பூதவொளியில் வர வொண்ணாதவாறு அடைப்பது எந்தக்காலம்?

(வி-ரை) பொன் வெள்ளி என்றது நெருப்பையும் நீற்றையும் என்க. வேதாகமங்கள் எனினுமாம். பொன்மலை வெள்ளிமலை என் போருமுளர். 165

கூட்டிலடைப் பட்டபுழு குளவியுருக் கொண்டதுபோல்
வீட்டிலடைப் பட்டருளை வேண்டுவது மெக்காலம்.

(பொ-ரை) குளவிக்கூட்டி லடைபட்ட கீடமானது குளவி உருவம் பெற்றதுபோல, மோட்சவீட்டிலடைபட்டுத் திருவருளை விரும்புவது எந்தக்காலம்?

(வி - ரை) குளவி புழுக்களை உணவுக்காகக் கூட்டுக்கெடுத்துக்கொண்டுபோய் அவைகளைக் கொடுக்கால் கொட்டி உணர்வழித்துக் குஞ்சுகளோடு அரிது அரித்துத் தின்பது வழக்கம். கூட்டினுள்ளே புழுக்கள் காணப்படாமல் குஞ்சுகள் மாத்திரங் காணப்படலால் புழுக்களே குளவியாக மாறுதல் அடைகின்றன என்று கொள்ளப்பட்டது. புழு குளவியாகின்றதெனக் கொண்டு அதை ஆன்மா கடவுளாதற்கு உவமையாகக் கொள்ளப்பட்டு வருகிறது. பிரமரகீட நியாயமென்றொரு நியாயமும் வகுக்கப்பட்டிருக்கிறது. இந்நியாயம் உபநிடதங்களிலும் வேறு பல ஞானநூல்களிலும் ஆளப்பட்டிருக்கிறது. புழு குளவியாதலில்லை என்பது தற்கால சாத்திரிகள் கொள்கை. 166

கடலி லொளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்
உடலி லொளித்தசிவ மொளிசெய்வ தெக்காலம்.

(பொ-ரை) கடலில் மறைந்திருந்த அக்கினி கிளம்பி வெளி வந்தாற்போல, உடலினிடத்தில் மறைந்துள்ள சிவம் பிரகாசிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) அக்கினி-வடவாமுகாக்கினி 167

அருணப் பிரகாச மண்டமெங்கும் போர்த்ததுபோல்
கருணைத் திருவடியிற் கலந்துநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) சூரிய ஒளியானது உலகமுழுவதும் மூடினது போல, திருவருள்மயமான தேவரீர் ஸ்ரீபாதங்களில் படர்ந்து நிற்பது எந்தக்காலம்? 168

பொன்னிற் பலவிதமாய்ப் பூஷண முண் டானதுபோல்
உன்னிற் பிறந்துன்னி லொடுங்குவது மெக்காலம்.

(பொ-ரை) பொன்னினின்றும் பலதிறமான அணிகலன்கள் காரிப்பப்படுவதுபோலத் தேவரீரிடத்தினின்றும் தோன்றித தேவரீரிடத்தில் ஒடுங்குவது எந்தக்காலம்? 169

நாயிற் கடைப்பிறப்பாம் நான்பிறந்த துன்பமற
வேயிற் கனலொளிபோல விளங்குவது மெக்காலம்.

(பொ-ரை) நாயினுங் கடைப்பட்ட இழிபிறவிதாங்கிய துயரம் என்னைவிட்டொழிய மூங்கிலினிடததில் நெருப்பொளி விளங்குவதுபோல என்னிடத்துச் சிவவொளி விளங்குவது எந்தக் காலம்? 170

சூரிய காந்திவெளி சூழ்ந்துபஞ்சைச் சுட்டதுபோல்
ஆரியன் றேற்றத் தருள்பெறுவ தெக்காலம்.

(பொ-ரை) சூரியகாந்தியானது கண்ணுடியிற்படிந்து, அதன் வாயிலாகச் சூழ்ந்து பஞ்சை யெரிப்பதுபோல, குருதரிசனத்தால் பாசம் எரிக்கப்பட்டுத் திருவருளபெறுவது எந்தக்காலம்? 171

இருமபிற் கனன்மூட்டி யிவ்விரும்பே யவ்வுருவாய்க
கருமபிற் சுவைரசதகைக் கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை) ஆன்மா என்னு மிரும்பில் திருவருளென்னும் நெருப்பு மூட்ட (மூட்டப் பெற்ற) இரும்பே நெருப்புருவாதல்போல ஆனமா திருவருள்மயமாய்த் திருவருள் கரும்பினிடத்துள் இனிய சாற்றைக் கண்டறிவது எந்தக்காலம்? 172

கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தானினைக்க
உருக்கொண்ட வாறதுபோ லுனையடைவ தெக்காலம்.

(பொ-ரை) கடலிலுள்ள ஆமையானது தானீன்ற முட்டையைத் தான் நினைக்க அதுபொறிந்து ஆமை உருப்பெற்றதுபோலக் குருநினைவால் நான் சிவமாவது எந்தக்காலம்? 173

வீடுவிட்டுப் பாய்ந்து வெளியில் வருவார்போல்
கூடுவிட்டுப் பாயுங் குறிப்பறிவ தெக்காலம்.

(பொ-ரை) ஒருவர் தாம் வாழும் இல்லம் விடுத்து வெளிவருவதுபோல உடலினின்றும் பிரியுங் குறிப்பை உணர்வது எந்தக் காலம்? 174

கடைந்தவெண் ணெய்மோரிற் கலவாத வாறதுபோல்
உடைந்து தமியே னுனைக்காண்ப தெக்காலம்.

(பொ-ரை) கடைந்த வெண்ணெய் மீண்டும் மோரினிடத்தில் கலவாதவாறுபோலப் பாசத்தினின்றும் வெளிவந்த நான் (மீண்டும் அதன்கண் வீழாது) தேவரீரைக் காண்பது எந்தக்காலம்? 175

இருளை வெளிவிழுங்கி யேகவுருக் கொண்டாற்போல்
அருளை விழுங்குமிரு ளகன்றுநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) இருளை வெளிவிழுங்கி ஒரே வெளிமயமாகச் செய்வதுபோலத் திருவருளை விழுங்கியுள்ள இருள் ஒழிந்து நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) வெளிச்சத்தின் அபாவமே இருள் என்பது தர்க்கம். வெளிச்சம் இருளை விழுங்குவதுபோல இருள்மயமான ஆணவம் திருவருளை (விழுங்கி) மறைத்திருக்கிறது என்றபடி. விழுங்குந் தன்மை குறிப்பிட்டவாறும். இருளை வெளிவிழுங்குவதுபோல இருள்மயமாகிய திருவருள் விழுங்குதல் என்று பொருள் கூறுவது மூலத்தோடு முரண்படுவதாகும். ஈண்டு விழுங்குதலாகிய

வினை யுவமை ஒன்றே கவனிக்கற்பாலது. முற்றுவமையாகக் கொள்ளலாகாது. முத்திக்காலத்திலும் ஆணவம் தன்வலிகுன்றிக் கிடத்தலால் "அகன்று நிற்பது" என்று கூறினார். 176

மின்னெழுந்து மின்னொடுங்கி விண்ணி லுறைந்தாற்போல்
என்னுணின்ற தென்னுள்ளே யானறிவ தெக்காலம்.

(பொ-ரை) மின்னல் விண்ணில்தோன்றி விண்ணில் மறை வதுபோல என்னிடததில் தோன்றி என்னிலே அடங்கும்பொருளை நான் அறிவது எந்தக்காலம்? 177

கண்ட புனற்குடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்
கொண்ட சொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) குடததில் கண்டமாக உள்ளநீரில் சூரிய கிரணங் கள் பாய்ந்தாற்போல, எனது உடலில் நுழைநது அதனை யிடமாகக் கொண்ட பிரமசொரூபததின் அமிசத்தை உணர்வது எந்தக் காலம்? 178

பூணுகின்ற பொன்னணிந்தாற் பொன்சுமக்கு மோவுடலைக்
காணுகின்ற வென்கருத்திற் கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை) தரிக்கின்ற பொன்னுபரணங்களைத தரித்தால் அவைகளைப் பொன்சுமக்குமோ? சுமப்பது உடலே. (அதுபோல) என் சிந்தையில் புலனாகின்ற உடலை நான் காணுது அதனுள் நில வும் பொருளைக் கண்டறிவது எந்தக்காலம்? 179

செப்பிற் களிம்புபோற் சிவத்தை விழுங்குமிக
வெப்பிநின்ற மும்மலத்தை வேறுசெய்வ தெக்காலம்.

(பொ-ரை) செம்பினிடத்தில் களிம்பிருப்பதுபோலச் சிவத்தை மறைத்துள்ள மிகவும் இடர்ப்படுததுகின்ற மூன்று மலங்களையும் என்னிடத்தினின்றும் பிரிப்பது எந்தக்காலம்? 180

ஆவியுங் காயமும்போ லாத்துமத்து நின்றதனைப்
பாவி யறிந்துமனம் பற்றிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) உயிரும் உடலும் ஒன்றை விடுத்தொன்று பிரிந்து நில்லாது கலந்திருப்பதுபோல ஆன்மாவைவிட்டுப் பிரியாது நிற்கும் பரமான்மாவைப் பாவியேன் உணர்ந்து அதன்கண் மனம்பற்றி நிற்பது எந்தக்காலம்? 181

ஊமைக் கனுக்கண் டுரைக்கறியா வின்பமதை
நாமறிந்து கொள்வதற்கு நாள்வருவ தெக்காலம்.

(பொ-ரை) ஊமையானவன் கனவுகண்டு அதைப் பிறர்க்குரைக்க முடியாதிருப்பதுபோல, நாம் பெறும் இன்பம் இத்தகைதென்று கூறவொண்ணாத மௌன இன்பத்தை நாம் உணர்ந்து கொள்வதற்கு நன்னாள் பிறப்பது எந்தக்காலம்? 182

சாகாச் சிவனடியைத் தப்பாம லெப்போதும்
போகா வுடலகன்று போவதென்ப தெக்காலம்.

(பொ-ரை) அழியாத சிவபிரான் திருவடியைப் பிழையாது என்றும் போற்றுவோர் நீங்கா உடல்நீங்கி வீட்டைவர் என்பதை அறிவது எந்தக்காலம்?

(வி-ரை) வினைபால் என்றும் உடல் நீங்காது தொடர்ந்து வருதலால் "போகா உடல்" என்றார். வினையை யொழிப்பது சிவனடி தியானமாதலால் அதனைச் சிந்திப்போர் வினையால் நீங்காது தொடரும் உடல் நீங்கப்பெற்று வீடுபேறெய்துவர் என்பதை வலியுறுத்தவாறு காண்க. 183

நிட்டை தனைவிட்டு நினைவறிவு தப்பவிட்டு
வெட்ட வெளியில் விரவிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) நிஷ்டை விடுத்து, நினைப்பை ஒழித்து ஒன்று மில்லா ஆகாசத்தில் கலந்து நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) மனதைக் கட்டுவது நிஷ்டை. அது கூடின் ஒன்றை நினைப்பது ஒழியும். அந்நிலை வாக்கு மனங்கட்கெட்டாத சிதாகாசநிலை. இத்திருப்பாட்டால் நிஷ்டைக்கு மேலாக ஒரு நிலை யுண்மையை அறிவுறுத்தியவாறும். "நினைப்பற நினைந்தேன்" என்றார் மணிவாசகரும். "நினைப்பும் மறப்பும் அற்றவர் நெஞ்சில்-வினைப்பற் றறுக்கும் விமல னிருப்பன்" என்றார் திருமூலரும். 184

வெட்ட வெளிதன்னில் விளைந்தவெறும் பாழைத்
திட்ட முடன்கண்டு தெளிவதினி யெக்காலம்.

(பொ - ரை) வெட்டவெளியிலே சேர்ந்த ஒன்றுமில்லாத சூந்யத்தை முறைப்படி பார்த்து (உண்மை) தெளிவது இனி எந்தக்காலம்?

(வி - ரை) வெறும் பாழென்றது சிதாகாசத்தை என்க. 'வெம் பாசத்தை' என்றும் பாடம். 185

எங்கும் பரவடிவா யென்வடிவு நின்வடிவாய்க்
கங்குல் பகலின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) அடியேன் உருவம் தேவரீர் உருவமாகி எல்விடத்தும் (இரண்டற்ற மேலான) ஒரே வடிவாய், இரவு பகல் பேத மின்றித் தேவரீரைத் தரிசித்திருப்பது எந்தக்காலம்?

(வி-ரை) என் வடிவு - சீவன். உன் வடிவு-சிவம். சிவசீவபேத மின்றியிருப்பது எங்குமுள்ள பரவடிவம் என்றபடி. கங்குல்பகல் கேவல சகலம் - இரவுபகலில்லாவிடம் - இறப்புப்பிறப்பில்லாவிடம்- சிருஷ்டி சம்மாரமற்றவிடம். 186

உண்டதுவு மாதருடன் கூடிச்சேர்ந் தின்பங்
கண்டதுவு நீயெனவே கண்டுகொள்வ தெக்காலம்.

(பொ-ரை) உலகத்திலுள்ள பல இன்பங்களை நுகர்ந்ததும் பெண்களோடு கூடி இன்பம் பெற்றதும் (ஆக இரண்டும்) தேவரீரே என்று கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) பொதுப்பட எல்லா இன்பங்களையுங் குறிப்பிட வேண்டி "உண்டதுவும்" என்றார். மாதரின்பம் சிற்றின்பங்களிற் றலையாயதாகலான், அதனைத் தனியே வேறு பிரித்து "மாதருடன் கூடிச் சேர்ந்தின்பம் கண்டதுவும்" என்றார். உலகத்திலுள்ள பல வகை இன்பங்களை ஆண்டவன் சொரூப இன்பம் என்று நுகர வேண்டுமென்றபடி. வேறுவழிச் சீவபோதத்தால் நுகர்வது பாவத்துக்குக் கால்கொள்வதாகும். 187

ஈமென்று கேட்டதுவு மென்னுள்ளே நின்றதுவும்
ஓமென்று சொன்னதுவு முற்றறிவ தெக்காலம்.

(பொ-ரை) "ஈம்" என்ற ஒலி என்செவியிலுற்றதும், என்னுள்ளத்துள்ளே நின்றதும், "ஓம்" என்று எனக்கு அறிவுறுத்தியதுமாகிய இவற்றை உற்று ஆராய்ந்து உண்மை தெளிவது எந்தக் காலம்?

(வி-ரை) "ஈம்" என்று ஒலிப்பதும் "ஓம்" என்று உபதேசிப்பதும் என்னுள்ளத்துள்ள ஒன்றே என்றபடி. 188

சத்தம் பிறந்தவிடந் தன்மயமாய் நின்றவிடஞ்
சித்தம் பிறந்தவிடந் தேர்ந்தறிவ தெக்காலம்.

(பொ-ரை) சத்தம் பிறந்தவிடத்தையும் தன்மயமாய் நின்ற விடத்தையும், சித்தம் பிறந்த விடத்தையும் ஆராய்ந்து உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) சத்தம் - நாதம். தன்மயம் - சிவமயம். சித்தம் - மனம். மனம் பிறக்குமிடதததையும் நாதம் பிறக்குமிடத்தையும் ஆராய்ந்தால் தன்மயம் விளங்கு மென்பதை அறிவுறுத்தியவாறும். 189

போக்கும் வரவும் புறம்புள்ளு மாகிநின்றும்
தாக்கு மொருபொருளைச் சந்திப்ப தெக்காலம்.

(பொ-ரை) போக்காலும் வரவாலும், புறமும் அகமுமாய் நிற்ற லாலும் தன் தொழிலைச் செய்யும் ஒரு பரம்பொருளைக் காண்பது எந்தக்காலம்?

(வி-ரை) போக்கு வரவு என்றது கடவுளின் சகள வடிவைக் குறிப்பது. புறமு முள்ளு மென்றது கடவுளின் நிஷ்கள வடிவைக் குறிப்பது. இறைவன் இரண்டு வடிவததானும் உலகை நடாத்த லால் "தாக்கும் ஒருபொருளை" என்றார். 190

நானெனவு நீயெனவு நாமிரண்டு மற்றொன்றும்
நீயெனவே சிந்தைதனி னேர்படுவ தெக்காலம்.

(பொ-ரை) நான் நீ என்று பேதமாக உள்ள இரண்டு மொழிந்து அவை ஒன்றுதற்கு ஏதுவாயுள்ள தேவரீரே எல்லாம் என்ற எண்ணம் மனதிலுதிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) நான் நீ என்ற பேதபுத்தி பிறவிக்கு ஏதுவானது. நான் நீ என்ற பேதமொழிந்து எல்லாம் ஒன்று என்னும் அபேத நிலை பிறவியை ஒழிப்பது. 191

அறிவையறி வாலறிந்தே யறிவு மறிவுதனில்
பிறிவுபட நில்லாமல் பிடிப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) பசு ஞானத்தைப் பதிஞானத்தா லுணர்ந்து, அவ் வாறு உணரும் பதி ஞானத்தில் வேறுபட்டு நில்லாமல் ஒன்றுபட்டு நிற்பது இனி எந்தக்காலம்? 192

நீடும் புவனமெல்லாம் நிறைந்து சித்திரமாய்
ஆடுந் திருக்கூத்தை யறிவதினி யெக்காலம்.

(பொ-ரை) பரந்த புவனங்க ளெல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்துநின்ற சிததிரமாய் நடம்புரியும் அழகிய நடத்தை இனி உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) சராசர முழுவதும் ஆண்டவன் நீக்கமற நிறைந்து ஆங்காங்கே நடம்புரிதலால், அவை யாவும் தத்தங் காரியங்களைச் செய்து இயங்குகின்றமையால் "நீடும் புவனமெல்லாம் நிறைந்து நின்ற சித்திரமாய் ஆடுந் திருக்கூத்தை" என்றார். "காளியோடாடிக் கனகா சலத்தாடிக்-கூளியோ டாடிக் குவலயத்தே யாடி-நீடிய நீர் தீகால் நீள்வானிடை யாடி-நாளுற அம்பலத் தேயாடு நாதனே" என்றார் திருமூலரும். நீக்கமற நிறைந்து புரியும் ஆடலைச் "சித்திரமா" யென்றார். "சிந்தூரமதாய்" என்றும் பாடம். திருக்கூத்தைக் காண்டலால் பிறவி நாசமாகுதலால் "அறிவதினி யெக்காலம்" என்றார். 193

தித்தியென்ற கூத்துந் திருச்சிலம்பி னோசைகளும்
பத்தியுட னேகேட்டுப் பணிவதினி யெக்காலம்.

(பொ-ரை) "தித்தி" என்ற தாளத்துக் கேற்ப ஆடும் திருநடனத்தையும், அதனால் எழும் அழகிய சிலம்பி னோசையையும் அன்போடு செவி மடுத்து இனி வணக்கஞ் செய்வது எந்தக் காலம்? 194

நடனத் திடைவெளிபோய் நண்ணும் பரவெளியில்
சயனித் திருந்து சலிப்படுவ தெக்காலம்.

(பொ-ரை) கண்களுக்கு நடுவினின்றும் வெளி சென்று சேரும் பரவெளியில் உறங்கியிருந்து தேவரீரோடு கலப்பது எந்தக்காலம்?

(வி-ரை) புருவமத்தியில் ஐயன் நடம்புரிவது யோகிகள் அறியக்கூடியது. அந்நடனத்தைச் சிதாகாசத்தில் கண்டு அறிதுயில் செய்வதனால் ஆனந்தம் விளையுமென்க. 195

அருவி மலைநடுவே யாயிரக்கால் மண்டபத்தில்
திருவிளை யாடற்கண்டு தெரிசிப்ப தெக்காலம்.

(பொ-ரை) அருவி பாயும் மலை நடுயிலேயுள்ள ஆயிரக்கால் மண்டபத்திலே தேவரீர் புரியும் திருவிளையாடல் கண்டு இன்புறுவது எந்தக்காலம்?

(வி-ரை) அருவி-அமிர்ததாரை. மலை-நந்தி ஆயிரக்கால்மண்டபம்-ஹிருதயகமலம். 196

மீனிரம்ப வுண்டுசுக்கி விக்கிநின்ற கொக்கதுபோல்
தேனிரம்ப வுண்டு தெவிட்டிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) மச்சங்களை ஏராளமாக உண்டு நக்கியும் விக்கியும் நின்ற கொக்கைப்போலப் பேரின்பத் தேனை நிரம்ப உண்டு தெவிட்டி நிற்பது எந்தக்காலம்? 197

பொல்லாத காடமதைப் போட்டு விடுக்குமுன்னே
கல்லாவின் பால்கறப்பக் கற்பதினி யெக்காலம்.

(பொ-ரை) கொடிய உடலைக் கீழே தள்ளுமுன்னே அதாவது இறப்பதற்குமுன்னே கல்லை ஒத்த பசுப்போன்ற ஆன்மாவினின்றும் ஞானப்பாலைக் கறப்பது இனி எந்தக்காலம்?

(வி-ரை) இறப்பதற்கு முன்னே ஞானம் பெறவேண்டும் என்றபடி. ஆன்மா ஞானம்பெறும் அருமை நோக்கி "கல்லா" என்றார். 198

வெட்ட வெளிக்குள்ளே விளங்குஞ் சதாசிவத்தை
கிட்ட வரத்தேடக் கிருபைசெய்வ தெக்காலம்.

(பொ-ரை) வெட்ட வெளியிலே விளங்குஞ் சிதசொரூபமாகிய சதாசிவத்தைச் சிறியேன்பால் நெருங்கிவரத் தேடத் திருவருள் செய்வது எந்தக்காலம்?

(வி-ரை) சதாசிவத்தைத் தேட எனக்கொள்க. தேடி என்னும் பாடம் பொருத்தமன்று. 199

பேரறிவி லேமனதை பேராம லேயிருத்தி
ஓரறிவி லென்றுநின்று நிற்ப தெக்காலம்.

(பொ-ரை) பேரறிவென்னும் சிவத்தினிடத்திலே மனதை நீங்காமல் நிறுத்திப் பேரறிவு சிற்றறிவு என்னும் பேதமற்ற நிலையாகிய ஓரறிவினிடத்தில் என்றும் பதிந்து கிடப்பது எந்தக் காலம்? 200

அத்துவிதம் போலுமென்ற னாத்துமத்தி னுள்ளிருந்து
முத்தி தரநின்ற முறையறிவ தெக்காலம்.

(பொ-ரை) அத்துவிதம்போல என் ஆன்மாவினுள்ளிருந்து எனக்கு வீடுபேற்றை அளிக்கநின்ற முறைமையை உணர்வது எந்தக்காலம்?

(வி-ரை) சிவனும் சீவனும் தனித்தனியாகப் பிரிந்து நில்லாது, இரண்டும் பிரியாது ஒன்றுபட்டு நிற்கும் நிலை அத்துவிதம் என்பது. அத்துவிதம் என்பதிலுள்ள அகாரத்துக்கு அன்மை இன்மை மறுமை முதலிய பொருள்கூறுவர் தத்துவ ஆராய்ச்சி யுடையார். அநுபவ ஞானிகளுக்கு எல்லாப்பொருளும் ஒன்றாகவே தோன்றும். அதை ஈண்டு விரிக்கிற் பெருகும். ஆசாரியர்கள் எழுதிய மாபாடியங்களில் விரிவு காண்க. சிவனும் சீவனும் ஒன்று பட்டுள்ள உண்மை நிலை யுணர்வதே பந்த நீக்கமாதலால் "முத்திதா னின்றமுறை" என்றார். 201

நானின்ற பாசமதி லுனிருந்து மாளாமல
நீநின்ற கோலமதில் நிரப்பிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) எனது நிலைக்களமான பாசத்தில் நானிருந்து கெடாமல் தேவரீர் திருவருள்கோலத்தில் கலந்து நிற்பது எந்தக் காலம்?

(வி-ரை) நான் மலத்தோடு வாழ்வதை விடுத்துத் திருவருளோடு வாழ்வது எப்பொழுது என்றபடி. "ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞான தாணுவினோ டத்துவித மாகுநா ளெந்நாளோ" என்றார் தாயுமானாரும். 202

எள்ளுங் கரும்பு மெழின்மலருங் காயமும்போல்
உள்ளும் புறம்புநின்ற துற்றறிவ தெக்காலம்.

(பொ-ரை) எள்ளுள் எண்ணெய்போலவும், கரும்பினுள் சுவைபோலவும், அழகிய மலருள் மணம்போலவும், உடலுள் உயிர்போலவும் சராசரங்களினுள்ளும் புறமும் தேவரீர் வீற்றிருப்பதை உற்றறிவது எந்தக்காலம்?

(வி-ரை) அத்துவித நிலைக்கு உதாரணங்கள் காட்டியவாறு காண்க. 203

அன்னம் புனலைவருத் தமிர்தத்தை யுண்டதுபோல்
என்னை வருத்துன்னை யினிக்காண்ப தெக்காலம்.

(பொ-ரை) அன்னப்பறவையானது நீரை வேறாகவும் பாலை வேறாகவும் பிரித்துப் பாலைக்கொள்வதுபோல என்மாட்டுள்ள யான் எனது என்னுஞ் செருக்கை விலக்கித் தேவரீரைக் காண்பது இனி எந்தக்காலம்? 204

அந்தரத்தி னிற்பூத தலர்ந்தெழுந்த தாமரைபோல்
சிந்தை வைத்துக்கண்டு தெரிசிப்ப தெக்காலம்.

(பொ-ரை) ஆகாயத்தில் மலர்ந்தெழுந்த தாமரைமீது மனம் வைத்துத் தெரிசிப்பது எந்தக்காலம்?

(வி-ரை) சிதாகாசத்தில் மலர்வது சிவம். "அந்தரத்தி னீர்பூத் தலர்ந்தெழுந்த தாமரைபோல்" என்றும் பாடம். 205

பிறப்பு மிறப்புமற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று
மறப்பு நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம்.

(பொ-ரை) ஜனன மரண மொழிந்து, பேச்சு மூச்சழிந்து, மறப்பு நினைப்பு கெட்டுச் சீவபோத மற்றுக் கிடப்பது எந்தக் காலம்? 206

மன்னும் பரவெளியை மனவெளியி லடைத்தறிவை
என்னு மொருநினைவை யெழுப்பிநிற்ப தெக்காலம்.

(பொ-ரை) நிலைபெற்ற பரவெளியை மனவெளியில் பெற்று அறிவு என்னும் ஒரு நினைவோடு நிற்பது எந்தக்காலம்?

(வி-ரை) பரவெளி-சிதாகாசம். அதை மனதில் கொணர்வது யோகநிலை. யோக நிலையால் பெறுவது ஞானநிலை. ஞானநிலையாவது எல்லாவற்றையும் அறிவாக உணர்வது. 207

ஆசை கொண்ட மாத ரடைகனவு நீக்கியுன்மேல்
ஓசைகொண்டு நானு மொடுங்குவது மெக்காலம்.

(பொ-ரை) ஆசைதாங்கியுள்ள பெண்கள் தொடர்பாங் கனவை யொழித்துத் தேவரீர்மீது விருப்பங்கொண்டு நான் என்னும் போதம் அடங்குவது எந்தக்காலம்?

(வி - ரை) மாத ராசையைக் கனவாகக் கொள்ளவேண்டு மென்றவாறு. 208

தன்னுயி ரைக்கொண்டு தான்றிரிந்த வாறதுபோல்
உன்னுயி ரைக்கொண்டிங் கொடுங்குவது மெக்காலம்.

(பொ-ரை) மனிதன் தனது உயிரைக்கொண்டு தான் உலகத்தில் நடமாடுவதுபோல, பரமான்மாவாகிய தேவரீரைக் கொண்டு இங்குச் சீவன்முத்தனாக நடமாடுவது எந்தக்காலம்?

(வி-ரை) பரமான்மாவால் எல்லாம் நடக்கின்றன என்ற உணர்வின்றி எல்லாம் என்னால் நடக்கின்றன என்று இறுமாந்து கிடப்பது பெத்தநிலை. பரமான்மா ஆட்ட நான் ஆடுகின்றேன் என்ற உணர்வுபெற்று உலகில் வாழ்வது சீவன்முத்தநிலை. உலகமே தோன்றாது சிவமாந்தன்மை யெய்திச் சிவமொன்றே தோன்றப் பெறுவது முத்தநிலை. ஈண்டுச் சீவன்முத்தநிலையை விளக்கியவாறு காண்க. 209

சேற்றிற் கிளைநாட்டுந் திடமா முடலையினிக்
காற்றிலுழல் சூத்திரமாய்க் காண்பதினி யெக்காலம்.

(பொ-ரை) சேற்றில் நாட்டப்பட்ட கிளைக்குள்ள திடத்தைப் போன்ற திடமுடைய இவ்வுடலைக் காற்றில் அலவும் கயிறாகப் பார்ப்பது எந்தக்காலம்?

(வி-ரை) சேற்றில் நடப்பட்ட கம்பம்போன்றது உடல் என்றபடி. அதன் நிலையாமையை உணர்ந்து உலகில் வாழவேண்டுமென்பார் "காற்றிலுழல் சூத்திரமாய்" என்றார். 210

என்வசமுங் கெட்டிங் கிருந்தவசமும் மழிந்து
தன்வசமுங் கெட்டருளைச் சார்ந்திருப்ப தெக்காலம்.

(பொ - ரை) சீவபோதமழிந்து, அங்கிருந்தற் கேதுவாகிய தேகவுணர்வுமழிந்து, ஆன்ம உணர்வு மழிந்து, திருவருளை அடைந் திருப்பது எந்தக்காலம்? 211

தன்னை மறந்து தலத்து நிலைமறந்து
கன்ம மறந்து கதிபெறுவ தெக்காலம்.

(பொ-ரை) தன்னை மறந்து, தான் வாழும் இடம் முதலியவற்றை மறந்து, தன்னால் செய்யப்படுங் கர்மங்களை மறந்து சிவகதி அடைவது எந்தக்காலம்? 212

என்னையென்னி லேமறைந்தே யிருந்தபதி யும்மறந்து
தன்னையுந்தா னேமறந்து தனித்திருப்ப தெக்காலம்.

(பொ - ரை) சீவனைச் சீவனிடத்துள்ள அஞ்ஞானத்தால் மறைத்திருந்த பதிப்பொருளையு மறந்து ஆன்மாவையு மறந்து ஏகனாகவிருப்பது எந்தக்காலம்? 213

தன்னையுந்தா னேமறந்து தலைவாசற் றாழ்போட்டே
உன்னை நினைந்துள்ளே யுறங்குவது மெக்காலம்.

(பொ-ரை) தன்னைத்தானே மறந்து, தன்னை எழுப்பும் மனதுக்குத் தாளிட்டு அடைத்து, தேவரீரை நினைந்து அகத்தே உறங்குவது எந்தக்காலம்? 214

இணைப்பிரிந்த போதலறி யின்பமுறு மன்றிலைப்போல்
துணைபிரிந்த போதருளூல் தொடர்ந்துகொள்வ தெக்காலம்.

(பொ-ரை) ஒன்றற்கொன்று உற்ற துணையாகவுள்ள அன்றில் பறவைகள் ஒன்றைவிட்டு ஒன்று பிரியுமாயின், பிரிவு தாங்காது மீண்டும் பிரிந்த ஒன்றைத்தேடி யினபமுறும் அப்பறவைகளைப் போல, தோன்றாத துணையாகவிருந்த குருநாதன் எனனை விட்டுப் பிரிந்தபோது திருவருளையூட்டும் நூல்களைத தொடர்ந்து ஆராய்வது எந்தக்காலம்? 215

ஆட்ட மொன்றுமில்லாம லசைவுசற்றுங் காணுமல்
தேட்டமற்ற வான்பொருளை தேடுவது மெக்காலம்.

(பொ-ரை) ஆட்டமாதல் அசைவாதல் சிறிது மில்லாமல், சலனமில்லாத பரம்பொருளைத் தேடுவது எந்தக்காலம? 216

முன்னை வினையாலறிவு முற்றுமற் பின்மறைந்தால்
அன்னை தனைதடேடி யமுதுண்ப தெக்காலம்.

(பொ-ரை) முன்னை யூழால் அறிவு முதிர்ச்சி யடையாமல் அதாவது சிவமாகாமல் பின் திரோதானத்தால் மறைவுற்றால், திருவருளாகிய தாயைத் தேடி ஞானமூர்தம் உண்பது எந்தக் காலம்? 217

கள்ளுண் டவர்போற் களிதருமா னந்தமதாற்
றள்ளுண்டு நின்றாடித் தடைபடுவ தெக்காலம்.

(பொ-ரை) மதுபானஞ் செய்தவர்களைப்போல மயக்கமூட்டும் பேரின்பத்தில் மயக்குண்டு, ஆனந்தக் கூத்தாடி மாயையினின்றுந் தடைபடுவது எந்தக்காலம்? 218

தானென்ற வாணவமுந் தத்துவமுங் கெட்டொழிந்தே
ஏனென்ற பேச்சுமிலா திலங்குவது மெக்காலம்.

(பொ-ரை) தான் என்று எழும் ஆணவமும், மற்ற மாயா காரியமான தத்துவங்களும் அழிந்து ஏன் என்ற பேச்சு மூச்சு மின்றி யிருப்பது எந்தக்காலம்? 219

நானவனைக் காண்பதெல்லா ஞானவிழி யாலறிந்து
தானவனாய் நின்று சரணடைவ தெக்காலம்.

(பொ-ரை) நான் அவனாகக் காண்ப தெல்லாவற்றையும் ஞானக்கண்ணா லுணர்ந்து நான் அவனாக நின்று சரணம் புகுவது எந்தக்காலம்?

(வி-ரை) நான் அவனாதல்-சிவமாதல். சரணம் புகுவது-முத்தியிலும் ஆண்டான் அடிமைத்திறங் காட்டுவது. 220

தானந்த மில்லாத தற்பரத்தி னூடுருவி
ஆனந்தங் கண்டே யமர்ந்திருப்ப தெக்காலம்.

(பொ-ரை) சீவன் முடிவில்லாத தற்பர சிவத்தோடு கலந்து, பேரின்பநுகர்ந்து பொருந்தியிருப்பது எந்தக்காலம்? 221

உற்ற வெளிதனிலே உற்றுப்பார்த் தந்தரத்தே
மற்ற மறமாய்கை மாள்வதினி யெக்காலம்.

(பொ-ரை) சீவன் அடைந்த சிதாகாசத்திலே உற்று நோக்கி அதன்கண் போதமழிய மாயை யொழிப்பது இனி எந்தக் காலம்? 222

கூடலர்ந்த பங்கயமு மிருகருணை நேத்திரமுந்
தோடணிந்த குண்டலமுந் தோன்றுவது மெக்காலம்.

(பொ-ரை) இதழ் விரிந்த தாமரை முகமும், இரண்டு அருட் கண்களும், தோடு அணியப்பெற்ற குண்டலமும் புலனாவது எந்தக் காலம்?

(வி-ரை) தோடு - பெண்கள் காதணி, குண்டலம் - ஆண்கள் காதணி. ஈண்டுச் சத்தி சிவத்தின் அபேதத்தை விளக்கியவாறு காண்க. சிவபெருமானைத் "தோடுடைய செவியன்" என்றார் திரு ஞானசம்பந்தர். "அருள்தோடும் குண்டலமும்" என்றார் வாதவூரடி களும். 223

ஐபாறு மாறு மகன்றுவெறு வெளியில்
மையிருளில் நின்றமன மாள்வதினி யெக்காலம்.

(பொ-ரை) முப்பத்தாறு தத்துவங்களையும் விலக்கி வெட்ட வெளியிலே யிருந்து, ஆணவத்தில் தோய்ந்த மனவுணர்வுபட்டொழி வது இனி எந்தக்காலம்? 224

காட்டு மருண்ஞானக் கடலிலன்பு கப்பல்விட்டு
மூட்டுங்கருணைக்கடலின் மூழ்குவது மெக்காலம்.

(பொ-ரை) சிவமென்னுங் கரைகாட்டும் திருவருள் ஞானக் கடலில் அன்பென்னுங் கப்பல் செலுத்திச் சிவநேசத்தை மூட்டும் அத்திருவருட்கடலில் திளைப்பது எந்தக்காலம்? 225

நானாரோ நீயாரோ நன்றாம் பரமான
தானாரோ வென்றுணர்ந்து தவமுடிப்ப தெக்காலம்.

(பொ-ரை) நான் யார்? நீ யார்? இரண்டையுங் கடந்து நன்றாகிய மேலான தான் யார்? என்னு முண்மை யுணர்ந்து தவத்தை முடித்துக்கொள்வது எந்தக்காலம்?

(வி-ரை) நான் நீ என்பது பேத வுணர்வைக் குறிப்பது. தான் என்பது அபேத வுணர்வைக் குறிப்பது. 226

எவரெவர்க ளெப்படிகண் டெந்தப்படி நினைத்தார்
அவரவர்க் கப்படிநின் றாயென்ப தெக்காலம்.

(பொ-ரை) எவரெவர் எவ்வாறு கண்டு எவ்வாறு நினைத்தாரோ அவர் அவர்க்கு அவ்வாறு ஆண்டவன் நின்றான் என்னுஞ் சமரச உணர்வு பெறுவது எந்தக்காலம்? 227

உற்றுற்றுப் பார்க்க வொளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி யெக்காலம்.

(பொ-ரை) உற்று உற்று நோக்க ஒளிவீசும் பேரின்பத்தை நெற்றிக்குநேரே பார்த்து அவ்வின்பத்தில் நிலைத்திருப்பது இனி எந்தக்காலம்?

(வி-ரை) இக்கருத்தடங்கிய பாக்கள் பல மேலே போந்துள்ளன. அவைகட்கு வரைந்துள்ள விசேடங் காண்க. 228

விளங்குகின்ற தாரகையை வெய்யோன் மறைத்தாற்போல்
களங்கமற வுன்காட்சி கண்டறிவ தெக்காலம்.

(பொ-ரை) மின்னுகின்ற நட்சத்திர ஒளியைச் சூரிய ஒளி மறைத்தற்போல, மாசகல தேவரீர் திருக்காட்சியைக் கண்டுணர்வது இனி எந்தக்காலம்? 229

என்னையே நானறியே னிந்தவண்ணஞ் சொன்னதெல்லா
முன்னையோர் கைக்கொள்ள முன்பணிவ தெக்காலம்.

(பொ-ரை) 'என்னை நான் அறியேன்'' என்று இவ்வாறு கூறிய எல்லாவற்றையும் ஆன்றோர் கைக்கொள்ள அடியேன் தேவரீர்முன் தொழுவது எந்தக்காலம்?

(வி-ரை) சிறியேன் வேண்டுவது இறை பணி யொன்றே என்றபடி. 230

ஐங்கர கரத்தானை யடியிணையைப் போற்றிசெய்து
நெஞ்சிற் பொருந்தி நிலைபெறுவ தெக்காலம்.

(பொ-ரை) ஐந்துகரங்களையுடைய கணபதியின் இரண்டு திருவடிகளைப்போற்றி அவைகளை மனதில் இருத்தி அருள்நிலை பெறுவது எந்தக்காலம்? 231


SRI VENKATESWARA ORIENTAL INSTITUTE
LIBRARY
TIRUPATI.

சிவமயம்

# நூலினுட்பிரிவு



உ

சிவமயம்

## பட்டினத்துப்பிள்ளையார்

# திருப்பாடலகராதி

உ

சிவமயம்

பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப் புலம்பலகராதி




பூமகள்விலாச அச்சுக்கூடம், சென்னை:—1940.